## சிற்பச் செந்நூல்

தமிழக சிற்பக்கலை மரபின்
சிறப்பியல்புகளை ஒருங்கே
கொண்டு, அம்மரபு வழுவாமல்,
அம்மரபிற்கு
மேலும் ஆக்கம் அளித்திடும்
வகையில் எளிய நடையில், இனிய
தமிழில், இயற்றப்பட்ட முதல் நூல்.

339 பக்கங்களையும், 316 விளக்கப்
படங்களையும், கொண்ட இந்நூல்,
சிற்ப-ஆகம வழி நின்று
இலக்கணங்களை விரித்துரைக்கும்,
ஒப்பற்ற கலை நூல்.

கல், மரம், சுதை, உலோகம்,
வண்ணம் ஆகிய பொருள்களால்
சிற்ப் வடிவங்கள் செய்து வரும்
அனைத்துச் சிற்பிகள் யாண்டும்
பின்பற்றவல்ல சிறந்ததொரு
குறிப்பு நூல்.

கலைபயில் மாணாக்கர்கள்,
பரம்பரைச் சிற்பக் கலைஞர்கள்,
கைவினைஞர்கள், சிற்பக்கலைத்
துறை ஆராய்ச்சியாளர்கள்,
தொல்பொருள்துறை ஆய்வாளர்கள்,
சிவாச்சாரியார்கள், வைணவ
அர்ச்சகர்கள், ஆகம விற்பன்னர்கள்,
திருக்கோயில் அதிகாரிகள்
மற்றும் கலைக்காவலர்கள்
போன்றோர்க்குப் பெரிதும்
பயன் தரும் நூல்.




# சிற்பச் செந்நூல்

## இறை வணக்கம்

முழுமுதல் இறைவன் திருவடி மலரும்
பழுதற ஓதிய பருணிதர் கழலும்
விழுமிய கலைவலன் விசுவ கருமன்
செழுமதி மயன் நளன் சேவடிக் கமலமும்
தொழுது, விளங்கும் தொன்னூல் அவை வழி
எழுதுவம் "சிற்பச் செந்நூல்" இனிதே!

2240-1—1

# சிற்பச் செந்நூல்

மேற்பார்வையும், துணையும்
**கம்பன் அடிப்பொடி (சா. கணேசன்)**
கம்பன் அறநிலை, காரைக்குடி

ஆசிரியர்
சில்பகலாரத்னம்-சில்பகலாநிதி
**வை. கணபதி ஸ்தபதி**
மேலவர், தமிழ்நாட்டுக் கட்டட-சிற்பக்கலைப் பயிலகம்
மாமல்லபுரம்

உதவி
**தி. குமரேச ஸ்தபதி**
ஓய்வு பெற்ற சிற்பக்கலை விரிவுரையாளர்

**செள. ஸ்ரீனிவாச ராகவன்**
சமஸ்கிருத ஆசிரியர்
தமிழ்நாட்டுக் கட்டட-சிற்பக்கலைப் பயிலகம்
மாமல்லபுரம்



வெளியீடு
**தொழில் நுட்பக் கல்வி இயக்ககம்**
தமிழ்நாடு, சென்னை - 600 025

விலை ரூ. 440/-

முதல் வெளியீடு ஆகஸ்டு, 1978
இரண்டாம் வெளியீடு மே, 1994
மூன்றாம் வெளியீடு—2001



அச்சிட்டோர்
அரசு மைய அச்சகம்,
சென்னை - 600 079.

# அணிந்துரை

நமது தமிழ்நாடு சிற்பக் கலை வளம் கொழிக்கும் நாடு. நாடெங்கணும் பல்லாயிரக் கணக்கான திருக்கோயில் கட்டடங்களையும், எண்ணற்ற சிற்பங்களையும் நாம் இன்றும் காணலாம். அவை எல்லாம் நமது தமிழ்ச் சமுதாயத்தின் உயர்ந்த லட்சிய வாழ்க்கையை, பண்பாட்டுச் சிறப்புகளை, கலை நுட்பங்களைப் புலனாக்குகின்றன.

மேலும், அவை ஒவ்வொன்றும் தமிழகத்தில் செங்கோலோச்சிய பண்டைப் பேரரசர்களின் வரலாறு கூறும் காலப் பெட்டகங்களாகவும் விளங்குகின்றன.

அத்தகைய அரிய கலைச் செல்வங்களை இந் நாட்டிற்கு வழங்கியவர்கள் இந்தத் தமிழ் மண்ணிலே தோன்றி, மதி நுட்பமும், செயலாற்றும் திறனும் வாய்க்கப் பெற்ற சிற்பக் கலைஞர்கள் ஆவார்கள்.

இரண்டாயிரம் ஆண்டு வரலாறு கண்ட இக் கலை, தென்னகப் பேரரசர்களின் அரவணைப்பில் வளர்ந்தோங்கியது. இராசராசப் பெருந்தச்சன் போன்ற சிற்பக் கலைப் பேறிஞர் கைகளில் வளர்ந்து மெருகேறிய சிற்பக் கலை இடைக்காலத்தில் அரசு ஆதரவு குன்றியதின் காரணமாக தொய்வுற்றது. இம் மரபின் சிறப்புகளும் படிப்படியாகக் குன்றி வெறும் தொழிலாகவே நின்றுவிட்டது.

இந்தச் சூழ்நிலையில் நம்நாடு விடுதலை பெற்றதற்குப் பிறகு, பல்வேறு பண்டைக் கலைகளை மீண்டும் வீறு பெறச் செய்யும் நோக்கம் அரசுக்கு ஏற்பட்டது. உலகப் புகழ் வாய்ந்த நமது சிற்பக்கலை மரபினை உயிர்ப்பித்து மேலும் வளர்ந்தோங்கச் செய்ய தமிழ்நாடு அரசு மேற்கொண்ட முதல் முயற்சி, 1957-ல் மாமல்லபுரத்தில் சிற்பக் கலைப் பயிற்சி நிலையத்தை, நிறுவியதாகும். விருப்பமும் தகுதியும் உள்ள இளந் தலைமுறையினர் எவரும் இக் கலையில் முறையான பயிற்சி பெற இதன் மூலம் அரசு நல்ல வாய்ப்பினை அளித்திருக்கிறது. இதனால் சிறந்த கலைஞர்கள் நாட்டுக்குக் கிடைத்திருக்கிறார்கள்.

இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழுக்கு இலக்கணம் கண்ட தமிழர்கள் சிற்பக் கலைக்கும், கட்டடக் கலைக்கும் இலக்கணம் வகுத்துள்ளார்கள். பண்டைக் காலத்தில் முப்பத்திரண்டு சிற்பக்கலைஞர்கள் தந்தம் பெயர்களில் சிற்பக் கலை-கட்டடக்கலை இலக்கண நூல்களை இயற்றி அவை வழக்கில் இருந்த செய்திகளை நாம் ஓரளவு அறிய முடிகின்றது. அவற்றுள் இன்று சிற்பிகளிடையே இருப்பவை சுமார் பத்து நூல்களே. அவை அனைத்தும், சமஸ்கிருத மொழி அறிவும், தொழில் அனுபவமும் பெற்றோரே அவற்றைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் தமிழ் மட்டும் தெரிந்த, கலை பயில் மாணாக்கருக்கும்

ஆராய்ச்சியாளர்களுக்கும் பயன் தரும் நோக்கோடு நூல்களைத் தமிழிலே இயற்றிட தமிழ்நாடு அரசு வாய்ப்பளித்தது. தமிழ்நாடு அரசு இத்துறையில் மேற்கொண்ட முயற்சியின் வடிவே இச் சிற்பச் செந்நூல். மேலும் மூன்று நூல்கள் வெளிவரவிருக்கின்றன.

தமிழகச் சிற்பக் கலை மரபின் சிறப்பியல்புகளை தன்னகத்தே கொண்டு அம் மரபு வழுவாமல், மரபிற்கு மேலும் ஆக்கம் அளிக்கும் வகையில் எளிய நடையில் இனிய தமிழில் இயற்றப்பட்ட இந்நூல் தமிழணங்கிற்குச் சூட்டிய ஒரு சிறப்பு அணியாகும் என்றால் மிகையன்று.

இந் நூலை இயற்றிய திரு. வை. கணபதி ஸ்தபதி அவர்களையும் இந் நூல் இயற்றுவதற்கு உறுதுணையாக இருந்த திரு. சா. கணேசன் போன்ற பெரியவர்களையும் பெரிதும் பாராட்டி மகிழ்கிறேன்.

இந்நூலைச் சிற்பக் கலை உலகில் பணியாற்றும் சிற்பிகள்-பயிலும் மாணவர்கள் அனைவரும் ஏற்று, ஒழுகி, நமது ஒப்பற்ற கலை மரபினைக் காப்பாற்றி, மேலும் மேலும் தமிழகத்துக்குப் புகழ் சேர்ப்பர் என்று நம்புகிறேன்.

நாள்: 17.7.1978,
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை-600 009.

(ஒப்பம்) **எம்.ஜி. இராமச்சந்திரன்**
முதலமைச்சர், தமிழ்நாடு.

# முகவுரை



**சிற்பச் செந்நூல்** இஃது, இறைவன் அருளாலும், தமிழக அரசின் ஆதரவாலும், செந்தமிழ் மொழியில் வெளிவருகிறது. இதைத் தமிழ் மொழிப் பற்றும் சிற்பக் கலை வளர்ச்சியில் ஆர்வமும் உள்ள அன்பர்கள் வரவேற்பார்கள் என்று நம்புகிறேன்.

தமிழர்கள், கலையுணர்வில் எவருக்கும் பின்தங்காதவர்கள். எத்தனையோ கலைகளில் ஈடும் எடுப்பும் இல்லாமல் ஓங்கி நிற்கும் தமிழகம் சிற்பக் கலையிலும் தன்னேர் இல்லாத் தனிப் பெருமை படைத்து விளங்குகிறது. தமிழகத்தில் உள்ள கோவில்களின் பெருக்கமும், அங்கெல்லாம் காணப்பெறும் சிற்ப வளங்களும், தமிழர்களின் கலையுணர்விற்குக் கட்டியங் கூறிக் கொண்டிருக்கின்றன.

எத்துணைத் தத்துவ ஞானம் முற்றிய மெய்யுணர்வினரும் உருவ வழிபாட்டை உவந்து பாராட்டி வந்திருப்பது தமிழகத்தில் கண்கூடு. மலரைவிட மலர் ஓவியத்தை மதிப்பதைப் போலவே தமிழர்கள் கடவுளைவிட கடவுள் உருவத்தை-மூர்த்தியைப் பாடிப் பரவி வழிபட்டு மகிழ்ந்துள்ளனர்.

கடவுளை மட்டுமா? அறத்தை, சத்தியத்தை, கருணையை, அழகை எல்லாம் மூர்த்தியாக்கிக் கண்டு அவற்றிலே மனத்தைப் பறிகொடுத்து மகிழ்பவர்களன்றோ தமிழர்கள்! இந்த ஈடுபாட்டின் முதிர்ச்சியே தமிழக வைணவப் பெருமக்களை 'இறைவனே உருவமாய் எழுந்தருளியுள்ளான்' (அர்ச்சாவதாரம்) என்னும் அளவுக்கு உயர்த்தியுள்ளது எனலாம்.

இப்படியாகத் தமிழர் உள்ளத்தில் அரும்பிய கலையுணர்வுதான் இறைவனுக்கு எத்தனை எத்தனையோ உருவங்களைப் படைக்கலாயிற்று. அப்படிப் படைக்கப்பெற்ற திருவுருவங்களுக்கு ஆயிரம் ஆயிரம் திருக்கோயில்கள் எழுப்பப் பெற்றன. அங்ஙனம் எழும்பிய கோயில்களின் சுவர்கள், தூண்கள், மாடங்கள், மண்டபங்கள், கோபுரங்கள் முதலிய எல்லா இடங்களிலும் எண்ணற்ற சிற்பங்கள் கல்லால், மண்ணால், சுதையால், உலோகத்தால், வண்ணத்தால் எல்லாம் மலர்ந்தன.

இங்ஙனம் மலர்ந்த சிற்பங்கள், கட்டுமானங்கள் ஆகியவற்றையெல்லாம் கணித்து அளந்து அவற்றிற்கெல்லாம் இலக்கணங்கள் வகுத்தனர். அவ் இலக்கணங்களிலே சிறு வேறுபாடுகள் இருப்பினும் மாறுபாடுகள் ஏதுமில்லை. குறைந்தபட்சம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாகவே நமது சிற்பக்கலை வளரத் தொடங்கிவிட்டது எனலாம்.

சிற்ப நூல்கள் பெரும்பாலும் சம்ஸ்கிருதத்திலேயே உள்ளன. ஆனால் அவையாவும் கிரந்த லிபியிலேயே எழுதப்பட்டுள்ளமை நோக்கத் தக்கது. தமிழ்மொழிச் சொற்கள் பல கலைச் சொற்களாகப் பயிலப்பட்டிருப்பதும் குறிப்பிடத் தக்கது. இவற்றால் இந்நூல்கள் சம்ஸ்கிருத மொழியில் இருப்பினும் தமிழ்நாட்டுக் கலைதான் இவற்றில் விளக்கப்படுகின்றது என்பது தெள்ளிதிற் புலனாகும்.

சிற்பக்கலை. தொன்றுதொட்டுத் தந்தை மகனுக்கும், பின்னவன் தன் மகனுக்குமாக-வழி வழியாக-கற்பிக்கப்பட்டுப் பயின்று வரப்பெற்ற கலை.

தந்தையின் தொழிற்கூடமே மகனின் கலைபயில் சாலை. பகலில் தொழிற்பயிற்சியும், இரவில் நூற்பயிற்சியும் நிகழும். பயிற்சியும், படிப்பும் இணைந்தே செல்லும்.

ஓவியம் என்பது வெண்மையும் வண்ணமும் சேர்ந்மைந்த தோற்றமாகும் எனலாம். அங்ஙனமே சிற்பம் என்பது கல்லிலே செதுக்கி அமைத்த மேடு பள்ளங்களால் ஏற்படும் தோற்றமேயாகும். கருவிகளைக் கொண்டு பல வகை அமைதிகளை உருவாக்குவதையே தொழில் என்றும், கைவினை என்றும் சொல்கின்றோம். பொருளின் தன்மையறிந்து, கருவிகளை முறைப்படி பயன்படுத்தி அப்பொருளில் ஓர் உருவைச் சமைப்பதையே இஃது உணர்த்தும். இது கைப்பழக்கம் பற்றியதாம்.

எண்ணுவதற்கும், எண்ணத்திற்கு உருவளிப்பதற்கும், தன்னம்பிக்கையுடன் செயல்படுவதற்கும், செய்த பொருளைப் பிறர் புரிந்து கொள்வதற்கும் மனதிற்குக் கருவியாகப் பயன்படுவது நூலறிவேயாகும்.

ஆனால் தொழிற் திறன், கலைத் திறனாக மலர பல்துறை நூலறிவும், பல்கலை ரசனையும் வாழ்க்கை அனுபவமும் மிகுதியாக ஏற்பட வேண்டும். இக்கருத்தின் அடியாகவே கலை நூல்கள் கலைஞனின் தகுதிகளைக் கூறுமிடத்து கீழ்க்கண்டவாறு பேசுகின்றன.

கலைஞன் என்பான்-கைதேர்ந்த கை வினைஞனாகவும், கணித அறிவு பெற்றவனாகவும், அளவிலக்கணம் அறிந்தவனாகவும், கலைவளம் தெரிந்தவனாகவும், ஓவியனாகவும், பல்வேறு கலை மரபுகளை உணர்ந்தவனாகவும், வரலாற்று இலக்கியங்களைக் கற்றவனாகவும், பிரபஞ்ச தத்துவ அறிவு வாய்க்கப் பெற்றவனாகவும், இருத்தல் வேண்டும். மானசாரம் என்ற கட்டடக்கலை நூல் மேலும் ஒருபடி சென்று வேதவித்தகனாகவும் இருத்தல் வேண்டுமென்று கூறும்.

அங்ஙனம் ஒரு கலைஞன் பல்துறை அறிஞனாகத் திகழ வேண்டுமென்பது இலட்சியம் மட்டுமல்ல. அதற்கேற்ற பயிற்சி முறையும் பண்டைக் காலத்தில் இருந்திருக்கிறது என்பதற்குப் பண்டைக் கலைஞர்கள் நமது தமிழகத்தில் படைத்துள்ள கலைக் கட்டடங்களும் சிற்பச் செல்வங்களுமே போதிய சான்று பகர்ந்து கொண்டிருக்கின்றன. இத்தகைய இலக்கணம் பொதுவாக எல்லாக் கலைகளுக்கும், எல்லாக் கலைஞர்களுக்கும் பொருந்தும்.

ஆனால் நம் நாட்டுக் கலை மரபு இதை விடுத்து ஒருபடி மேற்சென்று புதியதொரு தகுதியையும் கலைஞனிடம் எதிர்பார்க்கின்றது; கலைஞனிடம் இருத்தல் வேண்டுமென்று வற்புறுத்துகின்றது. இது கலையினால் ஏற்பட வேண்டிய பயன் கருதி விரும்பப்படுவதாகும். கலை, கலைக்காகவன்றி, கலை, வாழ்க்கைக்காகவே என்பது நமது கொள்கையன்றோ!

கலைஞன் உணர்ச்சி மயமானவன், குண வடிவினன். எனவே, அவனது குணங்களே அவனது எல்லாச் செயல்களிலும் சிறப்பாக அவனது கலைப்படைப்புகளில் பிரதிபலிக்கும். சுருங்கக்கூறின் உணர்ந்து ரசித்து அவனால் இயற்றப்படும் கலைப்படைப்புகளில் அவனது ஆன்மாவே ஒளிரும். இதனையே ஆன்மாவின் பிரதிபலிப்பு என்பர். இஃது அனைத்துக் கலைகளுக்கும் நுண்கலைகளுக்கும் பொருந்தும் சிறந்த ஆன்மா சிறந்த படைப்புகளுக்கு அடிப்படையாகும். எனவே, கலைஞன் தன் ஆன்மாவைத் தூய்மையுடன் வளர்த்தல் வேண்டும்.

உடலை வளர்ப்பது உணவு, அறிவை வளர்ப்பது நூல்கள். ஆன்மாவை வளர்ப்பது ஒழுக்கம். எனவே ஒழுக்க சீலனாகக் கலைஞன் இருத்தல் இன்றியமையாததாம். ஒழுக்க சீலனின் படைப்புகளில் தெய்விக அழகு மிளிரும்.

நமது நாட்டுச் சிற்பங்கள் வெறும் கலைப் படைப்புகளோ காட்சிப் பொருள்களோ அல்ல. கண்ணால் காணமுடியாத ஒரு பொருளை அறிவால் உணர்ந்து அவ் உணர்வினைக் கலை வடிவாய் நம் கண் முன் கொணர்வது நம் நாட்டுச் சிற்பக் கலையின் சிறப்பியல்பு. அவை ஆன்மாவையே ஈர்க்கும் ஆற்றல் பெற்ற திருவுருங்கள். எனவே அத்தன்மையில் வழிபடு படிமங்களை இயற்றவேண்டிய கலைஞர்கள் ஒழுக்க சீலர்களாக இருத்தல் வேண்டுமென்பது இன்றியமையாததன்றோ! எனவே இதனைப் பெரிதாகக் கருதி சிற்பக்கலை நூல்கள் கலைஞனின் தகுதிகள் பற்றிப் பேசும்போது குணநலன்களைப் பற்றி-ஒழுக்க நெறி பற்றி-மிகவும் வற்புறுத்திப் பின்வருமாறு கூறுகின்றன. கலைஞன் என்பான்-அறவுணர்வு மிக்கவனாகவும், இரக்க முள்ளவனாகவும், பொறாமையற்றவனாகவும், சினமில்லாதவனாகவும், கவலை இல்லாதவனாகவும், எப்பொழுதும் மகிழ்ச்சி நிரம்பிய உள்ளமுடைய வனாகவும் பேராசையற்றவனாகவும், ஐம்புலன்களை வென்றவனாகவும், உண்மை பேசுபவனாகவும், பொறுப்புணர்ச்சி மிகுந்தவனாகவும், நல்ல பரம்பரையில் தோன்றியவனாகவும், நோயற்றவ னாகவும், கூடுதல் குறைவில்லா உடலுறுப்புகளைப் பெற்று நல்ல பெயருடையவனாகவும் இருத்தல் வேண்டும் என்று கூறும்.

ஆன்மாத் தூய்மையுடைய ஒரு கலைஞனால் உருவாக்கப்படும் கடவுட் படிமங்களில் இறைத் தன்மை தோன்றி, வழிபடுவோர்க்கு நன்மைகளை நல்கும்.

இத்தகைய கலைஞர்களைத் தோற்றுவிக்கவே பண்டையப் பயிற்சி முறையும், கல்வி முறையும், ஒழுக்கக் கோட்பாடுகளும் உதவின.

அத்தகைய கல்வி முறையில் வளர்ந்தோங்கிய தலைசிறந்த கலைஞர்கள் தங்களுடைய செய்முறை அனுபவங்களையும், உணர்வுகளையும் அவ்வப்பொழுது ஏடுகளில் பதிந்து முன்னோர் அளித்த செய்திகளையும் அவற்றோடு இணைத்து. அவற்றைத் தங்களுடைய மாணாக்கர்களுக்குப் பாடங்களாக எடுத்தோதினர். அவர் தம் புலமை, ஆற்றல், அனுபவம் ஆகியவற்றுக்கு ஏற்றவாறு கொள்கைகளையும் இலக்கணங்களையும், வகுத்து நூல்களையும் எழுதுவாராயினர்.

அதாவது சிற்பக்கலைஞர்கள் தலைமுறை தலைமுறையாகப் பெற்றிட்ட அனுபவங்களையும், பல நூற்றாண்டுகளாகச் செய்து செய்து பண்பட்டு மெருகேறிய செயல்முறைகளையும் ஒன்று திரட்டி இலக்கணம் செய்து சிற்ப நூல்களாக இயற்றினர். ஏராளமான கவிதைகளும், சிறு, பெருங் காப்பியங்களும். பிரபந்தங்களும் தோன்றியபின் எங்ஙனம் மொழி இலக்கண நூல்கள் தோன்றினவோ-இலக்கியம் கண்டே இலக்கணம் இயம்பினார்களோ-அங்ஙனமே பலவகையான கட்டடங்களும். சிற்பங்களும் தோன்றியபின் அவற்றின் அருமைப்பாடுகளைக் கண்டு கணித்து ஆக்கப் பெற்றவையே சிற்பக்கலை நூல்கள்.

இங்ஙனம் சிற்ப நூல்கள் இயற்றிய சிற்பக் கலைத்துறை ஆசிரியர்கள் நமது நாட்டில் எண்ணற்றவர் இருந்தனர். அவர்களில் தலை சிறந்தவனும், தமிழ் இலக்கியங்களில் பாராட்டப் பெற்றவனும் ஆனவன் மயன்* ஆவான்.

*(அ) ''மயன் விதித்தன்ன மணிக்கால் அமளிமிசை
நெடுநிலை மாடத்து இடை நிலத்துஇருந்துழி''...
சிலப்பதிகாரம்,-மனையறம் படுத்த காதை

(ஆ) பொன்னினும் மணியினும் புனைந்தன ஆயினும்.
"நுண்வினைக் கம்மியர் காணா மரபின
துயர் நீங்கு சிறப்பினவர் தொல்லோர் உதவிக்கு
மயன் விதித்துக் கொடுத்த மரபின இவைதாம்
ஒருங்குடன் புணர்ந்தாங்கு உயர்ந்தோர் ஏத்தும்
அரும்பெறன் மரபின் மண்டபம் அன்றியும்.''
சிலப்பதிகாரம்,-இந்திர விழ வூரெடுத்தகாதை

(இ) "அயில் முகக் குவிசத்து அமரர்கோன் நகரும்,
அளகையும், என்று இவை, அயனார்
பயிலுறவு உற்றபடி, பெரும்பான்மை
இப் பெருந் திருநகர் படைப்பான்
மயன் முதல் தெய்வத் தச்சரும்....''
-கம்பன்-பா.கா.96.

(ஈ) "பூவரும் அயனொடும் புகுந்து பொன்நகர்
மூவகை உலகினும் அழகு முற்றுற
ஏவின இயற்றினன் கணத்தின் என்பரால்—
தேவரும் மருள்கொளத் தெய்வத் தச்சனே''
(தெய்வத் தச்சன்—தெய்வத் தன்மையுள்ள மயன்)
—கம்பன்-யு.கா.6198.

(உ) அளவு அறும் அறிஞரோடு அரக்கர் கோமகற்கு
இளவலும் இனிது உடன் இருக்க, எண்ணியே
விளைவன விதிமுறை முடிக்க வேண்டுவான்
நளன் வருக! என்றனன்-கவிக்கு நாயகன்
(நளன்-விசுவகர்மாவின் மகனான வானரத் தச்சன்)
-கம்பன்-யு.கா.6803

தமிழ்மொழிக்கு அகத்தியனைப் போல சிற்பக் கலைக்கு மயனே முதலாசிரியன் ஆவான். இவன் இயற்றிய நூல் 'மயமதம்' எனப்படும். கட்டடக் கலையிலும், சிற்பக்கலையிலும், இவன் வகுத்தளித்த கொள்கையே 'மயமதம்' எனப்படுகிறது. இன்றளவும், இந்நூல் சிறப்பான நூலாக, அறிஞர்களாலும் சிற்பிகளாலும் போற்றிப் பின்பற்றப்படுகிறது. இவன் வழித்தோன்றிய நூலாசிரியர்கள் பலர்.

மானசாரம் என்ற கட்டடக்கலை நூல் முப்பத்து இரண்டு சிற்ப நூல் ஆசிரியர்களைக் குறிப்பிட்டு அவரவர் பெயரில் எழுந்த சிற்ப சாத்திரங்களையும், நாம் அறியச் செய்கின்றது. அவை சமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட தென்னாட்டுச் சிற்பக் கலை மரபைச் சேர்ந்த கலை நூல்கள் ஆகும். அவை பின்வருமாறு.:

1. விசுவகர்மீயம்
2. விஸ்வம்
3. விஸ்வசாரம்
4. பிரபோதம்
5. விருத்தம்
6. மயமதம்
7. துவஷ்டாதந்த்ரம்
8. மனுசாரம்
9. நளம்
10. மானவிதி
11. மானகல்பம்
12. மானசாரம்
13. பெகுஸ்ருதம்
14. சிருஷ்டம்
15. மானபோதம்
16. விஸ்வபோதம்
17. ஆதிசாரம்
18. விசாலாக்ஷம்
19. விஸ்வகாஸ்யபம்
20. வாஸ்துபோதம்
21. மகாதந்த்ரம்
22. வாஸ்துவித்யாபதி
23. பாராசரீயகம்
24. காலயூபம்
25. சைத்யம்
26. சித்திரம்
27. ஆவர்யம்
28. சாதகசார சம்ஹிதை
29. பானுமதம்
30. ஐந்திரமதம்
31. லோகக்னம்
32. சௌரம்

அங்ஙனமே மனுசாரம் என்ற சிற்ப-கட்டடக் கலை நூலில் இருபத்தெட்டு சிற்ப நூல்களின் பெயர்களைக் காண்கிறோம். அவற்றுள் மேற்கண்ட பட்டியலில் இடம் பெறாத கீழ்க்கண்ட நூல்களையும் இதன் மூலம் அறிகின்றோம்.

1. ஈசானம்
2. சித்ரகாஸ்யபம்
3. பிரயோகமஞ்சரி
4. பெருஹிதம்
5. பௌத்தமதம்
6. கௌதமம்
7. குலாலம்
8. வாசிஷ்டம்
9. மனோகல்பம்
10. பார்க்கவம்
11. மார்க்கண்டம்
12. கோபாலம்
13. நாரதீயம்
14. நாராயணீயம்
15. காஸ்யபம்
16. சித்ரபாமளம்
17. சித்ராகுல்யம்
18. தேசிகம்

இவைகளில் பெரும்பாலானவை இன்றில்லை. இன்று நம்மிடையே கீழ்க்கண்ட நூல்களே தங்கியிருக்கின்றன.

1. மயமதம்
2. விஸ்வகர்மீயம்
3. மானசாரம்
4. ஐந்திரமதம்
5. மனுசாரம்
6. காஸ்யபம்

இவை சிற்பக்கலை பற்றியும், கட்டடக்கலை பற்றியும் ஒருமித்துப் பேசும் முழு நூல்களாம். இவற்றுக்கு வாஸ்து சாஸ்திரம் என்றும் பெயர்.

மேலும்,

1. வாஸ்துவித்யை
2. மனுஷ்யாலயச் சந்திரிகை என்ற இரண்டு நூல்கள் உள்ளன.

இவை மனை நூல்கள் ஆகும். இவை இரண்டுமே மிகச் சிறந்த நூல்களாம்.

அத்துடன்,

1. சாரஸ்வதீயம்
2. பிராம்மீயம்
3. சகளாதிகாரம் என்ற மூன்று நூல்கள் உள.

அவை முற்றிலும் சிற்ப நூல்களாம். மனை, கட்டடக்கலை பற்றிப் பேசும் வாஸ்து நூல்கள் அல்ல அவை.

சில்பரத்னம் என்ற நூல் வாஸ்து நூலாகும்; இது பிற்காலத்தியதாகும். இது காஸ்யபம் மயமதம் ஆகிய இரண்டு நூல்களின் கொள்கைகளைச் சுருக்கமாகப் பேசும் சிறு நூலாகும். இது கட்டடக்கலை, சிற்பக்கலை இரண்டையும் உள்ளடக்கிய நூல்.

நாராயணீயம் என்ற பெயரில் உள்ள நூலின் ஒரு சில அத்தியாயங்களே கிடைத்துள்ளன. நூல் முழுதும் கிடைக்கவில்லை. அங்ஙனமே சித்ரபாகுல்யம் என்ற நூலிலிருந்து ஒரு சில அத்தியாயங்களே கைவசமுள்ளன. பிற பகுதிகள் கிடைக்கவில்லை.

சர்வார்த்த சிற்ப சிந்தாமணி, சிற்பரத்னாகரம் என்ற இரண்டு நூல்கள் உள. இவ்விரண்டும் தமிழ் நூல்கள் ஆகும். முன்னையது செய்யுளும், உரைநடையும் கொண்ட மனை நூல். பின்னையது முழுவதும் செய்யுளாகவே எழுதப்பட்ட மனை நூல். சிற்பரத்னாகரம் என்ற நூலுக்கு மயநூல் என்றும் ஒரு பெயர் இருந்ததாகத் தெரிகிறது. சிற்பரத்னாகரத்தில் கட்டடக் கலை பற்றிய செய்திகளையும், சிற்பக்கலை பற்றிய செய்திகளையும் காணவில்லை. மனைக் கட்டடங்கள் பற்றிய செய்திகளே காணக்கிடக்கின்றன.

முன்பு கூறப்பட்ட ஐம்பது நூல்களில் ஆறு நூல்களைத் தவிர மற்றவை அழிந்து போயின.

அழிந்தொழிந்து போன சிற்ப நூல்களில் என்னென்ன அரிய செய்திகளும், கொள்கைகளும் இருந்தனவோ அவற்றை நாம் இன்று அறியுமாறில்லை.

இருப்பினும் சிற்பக்கலை பற்றியவற்றில் ஒரு சில சைவ, வைணவ ஆகமங்களில் குறிப்பிட்டுக் காட்டப்படுகின்றன. அவ் ஆகமங்கள், தத்தம் குறிப்புரையின் இறுதியில் அவற்றின் விளக்கங்களைச் சிற்ப நூல்களில் கண்டு கொள்ளுமாறும் அறிவுறுத்துகின்றன.

இன்று நமக்குக் கிடைத்த சிற்பக்கலை இலக்கண நூல்கள் குறைவாக இருப்பினும், முற்காலச் சிற்பிகள் இலக்கியங்களாகப் படைத்த கலைச் சின்னங்கள் பல நூற்றுக்கணக்கில் இன்று நின்று நிலவுகின்றன. அவை ஒவ்வொன்றையுமே நமக்குக் கிடைக்கும் கண்மெய்யான இலக்கணமாகக் கொள்ளலாம்.

மாமல்லபுரத்துக்குடைவரைக் கோயில்களும், ஒற்றைக் கற்கோயில்களும், கட்டுமானக் கோயில்களும், எந்தச் சிற்ப நூல்களின் துணை கொண்டு எழுப்பப்பட்டனவோ? அவற்றை உருவாக்கிய கேவாதப் பெருந்தச்சன், தச்சன் குணமல்லன். பையமிழிப்பான், ஆபாஜன், ஆகிய பெருந்தச்சர்கள், ஏதும் சிற்ப நூல்களை இயற்றினார்களா, அப்படியானால், அவை யாவை என்பன ஏதும் இன்று அறியுமாறில்லை.

தஞ்சைப் பெருவுடையார் திருக்கோவிலைப் படைத்த குஞ்சரமல்லன் இராசராசப் பெருந்தச்சன் எந்த நூலைப் பயின்றானோ? எந்த நூலை இயற்றினானோ? நாம் அறியோம்.

உத்திரமேரூரில், அமைப்பாலும், அணியாலும், கருத்தாலும், புதியதொரு விமானம் கண்ட பரமேசுவரப் பெருந்தச்சன் எந்த நூல் வழி நின்று அதனைப் படைத்தானோ? எந்த நூலைச் செய்தானோ? அவற்றையும் நாம் அறியோம்.

திருவெற்றியூர்த் தூங்கானை மாடக்கோயிலைத் திறம்பட அமைக்க இரவிப் பெருந்தச்சன் பின்பற்றிய நூல்வழிதான் எதுவோ. அறியோம். ஆனால் எதை எதைப் பயின்றிருப்பினும், எதை எதை இயற்றியிருப்பினும், அதனால் விளைந்த சிற்பக்கருவூலங்கள் பலவற்றை நாம் கிடைக்கப் பெற்றவர்களாக இருக்கிறோம். இதனை நினைத்து மகிழ்ச்சி கொள்ளலாம். பெருமைப்படலாம். இவையெல்லாம், பிற்காலச் சிற்பிகளுக்கு இலக்கியமாகவும், இலக்கணமாகவும் பயன்பட்டிருக்குமென்பதில் ஐயமில்லை.

தமிழகமே ஒரு சிற்பக்கலைக் கூடம். ஒவ்வொரு கலைச் சின்னமும் அதன் ஒவ்வோர் எடுத்துக்காட்டு. ஒவ்வொரு தலை முறையினரும் படைத்தவை அவற்றில் ஏராளம், ஏராளம்.

இத்தகைய சூழ்நிலையில் இந்த நூற்றாண்டில் வெளிவருவது இச் சிற்பச் செந்நூல். இஃதோர் எளிய முயற்சி. கலைபயில் மாணாக்கர்கட்குப் பாட நூலாகப் பயன்தர வேண்டுமென்பதே அடிப்படை நோக்கம்.

தமிழக அரசு, 1957 ஆம் ஆண்டு, மாமல்லபுரத்தில் சிற்பக்கலையைப் பயிற்றுவிப்பதற்காகவும், தமிழகச் சிற்பக் கலை மரபை வளர்ப்பதற்காகவும், நிறுவிய கட்டட-சிற்பக்கலைப் பயிற்சி நிலையத்திலும் வேறு பல ப்யிற்சி நிலையங்களிலும் பயிற்சி பெற்று வரும் மாணாக்கர்களுக்கு பயன் தரும் பாட நூல்களாகக் கீழ்க்கண்ட நான்கு புத்தகங்களைத் தமிழிலே எழுதுவதற்காக G.O. Ms. No. 1925 Ind. (Spl.) Industries, Labour and Co-operation Department, dated 3rd April, 1965, and G.O. Ms. No. 1767 Ind. (Spl.) dated 4-8-1970–மூலம் ஆணை பிறப்பித்தது. இவ்வாணை சிற்பக்கலை மறுமலர்ச்சிக்குத் தமிழக அரசு வழங்கிய பெருங்கொடை வளமாகும்.

நூல்கள்

1. பிரதிமாலஷணம்
(படிமக்கலை இலக்கணம்)

2. ரூபத்யானலஷணம்
(உருவ அமைதி இலக்கணம்)

3. பிராசாதலஷணம்
(கட்டடக் கலை இலக்கணம்)

4. ஜீர்ணோத்தாரலஷணம்
(பழுது நீக்கிப் பாதுகாக்கும் நெறி)

1. பிரதிமாலஷணம் என்பது, படிமக்கலை அளவு இலக்கண நூலாகும். படிமங்களை இயற்றுவதற்குரிய இலக்கணங்களையும், விதிகளையும், முறைகளையும் பேசும் நூல். இந்த முதல் நூலே சிற்பச் செந்நூலாக வெளிவருகிறது.

2. ரூபத்யானலஷணம் என்பது, மேற்கண்ட சிற்ப இலக்கணங்களுக்கு ஏற்ப இயற்றப்பட்ட சிற்ப வடிவங்களின் அமைதிகளாகும். முதல் நூல் இலக்கணம் என்றால் இரண்டாவது நூல் அதன் இலக்கியமாகும். எண்ணற்ற வழிபடு படிமங்களின் உருவ வர்ணனைகளுக்கு ஏற்பட பண்டைச் சிற்பக் கலைஞர்களாலும் ஞானியர்களாலும் இயற்றப்பட்ட திருவுருவ விளக்கங்களின் தொகுப்பு நூல் இஃதாம்.

3. பிராசாதலஷணம் என்பது, கட்டடக்கலை நூலாகும். கிராமம், நகரம், பட்டணம், இராஜதானி ஆகியவற்றின் அமைப்பிலக் கணமும், வீட்டுக் கட்டட இலக்கணங்களும், திருக்கோயில் கட்டட இலக்கணங்களும் அடங்கிய பெரு நூலாகும்.

4. சிற்பங்களையும், கட்டடங்களையும் பழுது பார்த்துச் செப்பனிடும் முறையினை விளக்குவது ஜீர்ணோத்தாரலஷணமாகும்.

கடந்த 7 ஆண்டுகளாக இப்பணி நடைபெற்று வருகிறது.

மேற்கண்ட நூல்களை எழுதுவதற்கு ஆதாரமாகத் தமிழ் நாட்டில் வாழையடி வாழையாக தமிழகச் சிற்பக்கலை மரபிலே பணி செய்து வரும் பல சிற்பக் கலைஞர்களிடமிருந்து அரிய சுவடிகள் சேகரிக்கப்பட்டன. அங்ஙனம் சேகரித்துப் பயன்படுத்திய சுவடிகள் இந்நூலின் வேறிடத்தில் பட்டியலிட்டுக் காட்டப்பட்டிருக்கின்றன. அவற்றுள் மாமல்லபுரச் சிற்பக்கலைப் பயிற்சி நிலையத்தின் முன்னாள் முதல்வர், சிற்பகலா சாகரம் ம. வைத்தியநாத ஸ்தபதி அவர்களுடைய சுவடிகளே பெரும்பாலானவையாகும்.

மற்றும், தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூல் நிலையத்திலிருந்து சிற்பக்கலை பற்றிய பழைய சுவடிகளின் கையெழுத்துப் படிகள் பெறப்பட்டன. அங்ஙனமே பாண்டிச்சேரியில் இயங்கி வரும் FRENCH INSTITUTE OF INDOLOGY பிரஞ்சுக் கலைக் கழகத்தாரிடமிருந்து அரிய பல சுவடிகளும் கிடைக்கப்பெற்றன.

அத்துடன், அச்சு ஏறிய சிறந்த சிற்ப, ஆகம நூல்களையும் சேகரித்தோம். அவையனைத்தும் தமிழகச் சிற்பக்கலை மரபில் தோன்றிய நூல்கள். தொன்று தொட்டுத் தமிழகச் சிற்பிகளால் பயன்படுத்தப்பட்ட நூல்களாகும். அங்ஙனமே ஆகம நூல்களும் வழக்காற்றில் இன்று முள்ளவைகளாம்.

பண்டைய சிற்பக்கலை நூல்கள் அனைத்தும் ஓலைச் சுவடியில் கிரந்தலிபியில், சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டவை. சிற்பக்கலைச் செய்திகள் இலக்கணங்கள் அனைத்தும் செய்யுள் வடிவமாகவே இயற்றப்பட்டவை. இரத்தினச் சுருக்கமான அளவு முறைகள் நிரம்பியவை. கலைச் சொற்கள் மிகுதியாகக் கொண்டவை. கலைச் செய்திகளைச் சொல்லும் மொழி நடையே தனித்தன்மையது. சொற்களைக் கையாளும் முறையும், எண்களைக் குறிப்பிடும் பரிபாஷைச் சொற்களும் இலக்கிய மொழியிலிருந்து வேறுபட்டவை. சிற்பக்கலையில் பயிற்சியும், கலை நூல்களில் ஆராய்ச்சியும், உடையோரே படித்துப் புரிந்து கொள்ளக் கூடியவை. தமிழ்ச் சொற்களைத் தேவையான அளவு கையாள்பவை. அத்தகைய சிற்பக்கலை நூல்களைப் பலரும் பிரதி செய்து பயன்படுத்தி வந்தமையால், ஒரு சில சொற்கள் சிதைந்து காணப்படுகின்றன. மற்றும் ஒரு சில, பிரதி செய்தோரால் பிழை பட்டும் நிற்கின்றன.

எல்லாவற்றுக்கும் மேலாக, சிற்ப இலக்கணங்களுக்கேற்ற விளக்கமோ உதவிப் படங்களோ ஏதும் அச்சுவடிகளில் இல்லை. எனவே, விளக்கவுரைகளும், விளக்கப்படங்களும், இலக்கணங்களோடு வெளிவருதல் இன்றியமையாதது என்று கருதி இயன்றவரை இந்நூலைச் செம்மையாக ஆக்க முயன்றிருப்பதால் இந்நூல் செந்நூலெனப் பெயர் சூடி வருகிறது.

சிற்பச் செந்நூல் ஒரு மொழி பெயர்ப்பு நூல் அல்ல. கைவசமுள்ள பண்டைச் சிற்பக்கலை நூல்களையும், சைவ-வைணவ ஆகம நூல்களையும், மீண்டும் மீண்டும் துருவி ஆராய்ந்து, பல்வேறு இலக்கணங்கலையும், கருத்துக்களையும் செய்திகளையும் ஒரு சேரத் திரட்டி, ஒப்பு நோக்கி, பண்டைச் சிற்பக்கலை மேதைகள் படைத்தளித்த சிற்பச் செல்வங்களை நேரில் கண்டு சரிபார்த்து, தமிழகத்துச் சிற்பக்கலை மரபிற்கேயுரிய சிறப்பியல்புகளையும் கருத்திற் கொண்டு அவற்றையெல்லாம் இலக்கண விதி முறைகளோடு

இணைத்து பல்வேறு விளக்கப் படங்களை அளவிட்டு வரைந்து அவற்றையும் இணைத்து, நடைமுறைக்கு ஏற்றவாறு எளிய தமிழில் வெளியிடப்பெறும் நூலே இச் சிற்ப செந்நூல் ஆகும்.

சிற்பச் செந்நூல் இது. முதல் நூல், வழி நூல், சார்பு நூல் என்ற மூவகை நூல்களில் இரண்டாவதாகிய வழி நூல் ஆகும். முன்னோர் நூல்களின் முடிவுகளை ஒத்துச் சென்று, தமிழகச் சிற்பக்கலை மரபுகளையும், தொழில் மரபுகளையும் போற்றி, அவற்றை முற்றிலும் தழுவி, முன்னோர் நூல்களில் இடம் பெறாதவையும், சிற்பிகளுக்கு இன்றியமையாதவையும் ஆன கலைச் செய்திகளையும் மரபின் நுட்பங்களையும் தொகுத்து இலக்கணம் வகுத்து, அத்தியாயங்களையும் அதில் அடங்கிய செய்திகளையும் தக்க தலைப்புகளில் அமைத்து, இடையிடையே விளக்கவுரைகளையும் விளக்கப் படங்களையும் தந்து, நூலுக்குரிய பல உத்திகளையும் கொண்டு குறைகளின்றி, அழுகுபட, தெளிவாகவும், செம்மையாகவும் இயற்றப்பட்ட-ஒரு நூலுக்குரிய இலக்கணங்கள் அமைந்த-வெளியீடு ஆகும். இது

இந்நூல் சிற்பக் கலையில் பயிற்சி பெறும் மாணாக்கர்களையே மனத்திற் கொண்டு எழுதப்பட்டிருப்பினும், இக்கலையில் ஆர்வமுள்ளோர்க்கும், ஆராய்ச்சி செய்வோர்க்கும் பயன்சுரக்கும் என்பதே எங்கள் நம்பிக்கை.

சிற்பிகள் எனப்படுவோர் கல், மண், மரம், செம்பு, சுதை, கடுசர்க்கரை, செங்கல், தந்தம், மெழுகு, வண்ணம் ஆகிய பத்து வகைப் பொருள்களில் ஏதேனுமொன்றில் உருவங்கள் இயற்றும் கைவினைஞர் ஆவர். பொருள்களின் தன்மையினால் செய்முறை வேறுபடும். ஆனால் இலக்கணங்கள், கலை நுட்பங்கள் யாவும் சிற்பிகள் அனைவர்க்கும் பொதுவே. எனவே இச்சிற்பச் செந்நூல் மேற்கண்ட பத்துவகையான சிற்பிகளுக்கும் பயன் தரும் பொது நூலாகும்.

சிற்பக்கலை பயில்வோருக்குத் தெரிந்திருக்க வேண்டிய அடிப்படைச் செய்திகளும், மரபுகளும், செய்முறைகளும், இலக்கணங்களும், முதல் இருபத்தோர் அத்தியாயங்களில் விளக்கப் பட்டிருக்கின்றன. அடுத்த பதினைந்து அத்தியாயங்களில் இலக்கணத்திற்கேற்ற சிற்பங்களையும், வழிபடு படிமங்களையும், நடைமுறையில் சிற்பிகள் இயற்றிட உதவும் அளவுமுறைகளையும், கலைச் செய்திகளோடு சொல்லியிருக்கிறோம்.

பண்டைச் சிற்ப நூல்களைப் பார்க்கின் அவற்றின் தொடக்கம் முதல் இறுதி வரை சிற்ப உருவங்களின் அளவுகளும் அளவுகொள் முறைகளுமே நிரம்பி வழிவதைக் காணலாம். கலை பற்றிய அடிப்படைச் செய்திகளையோ தத்துவக் குறிப்புகளையோ அவற்றில் மிகக் குறைவாகவே காணமுடியும். ஏனெனில் அவற்றைப் பயிற்றுவிக்கும் ஆசிரியனே தன் கலை உணர்விற்கும், அனுபவத்திற்கும் ஏற்றவாறு மாணாக்கனுக்கு விரிவாக எடுத்துரைக்கும் வழக்கு கலைத் துறையில் தொன்று தொட்டு இருந்து வந்தமையாகும். ஆனால் இந்நூலில் ஆசிரியன் மாணாக்கனுக்குச் சொல்ல விரும்பிய கலைச் செய்திகள் எல்லாம் இடையிடையே தெரிந்த அளவு விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

படிம அளவுகளிலும், அளவு கொள் முறைகளிலும், அவற்றைத் தொழிற்படுத்திப் படிமங்களை இயற்றும் முறைகளிலும், பண்டை நூலாசிரியர்கள் தத்தம் கொள்கைக்கேற்றவாறு இலக்கணம் வகுத்தளித்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் ஒப்புநோக்கி, சிறப்பு வாய்ந்த ஆலயங்களுக்குச் சென்று அங்குள்ள படிமங்களையும் கண்டு, அவ்வளவுகளை ஆய்ந்து பார்த்து, வகுப்புகளில் கையாண்டு அழகுணர்ச்சிக்கும் நடைமுறைக்கும் ஒத்துவரக்கூடிய அளவுகளையும், இலக்கணங்களையும், அமைதிகளையும் இங்கு வலியுறுத்தியிருப்பதைக் காணலாம். அதே நேரத்தில் பிற நூலாசிரியர்களின் கருத்தையும் அவர்கள் கொண்ட அளவுகளையும் அடிக்குறிப்பில் காட்டியிருப்பதால் பிற நூலாசிரியர் கருத்தையும் சிற்பிகள் அறிந்து கொண்டு, விரும்பினால் பின்பற்றவும் வாய்ப்பு அளித்துள்ளோம்.

சிற்பக்கலை பயில்வோரும், பயிற்றுவிப்போரும், இத்துறையில் பணி செய்வோரும் தாங்கள் ஆக்கும் படிமங்களின் அமைப்பு இலக்கணங்களைத் தெரிந்து புரிந்து தங்களுடைய கற்பனைகளையும், கலந்து, துணிந்து செயலாற்றுவதற்கு அவ்வமைப்புகளுக்கு ஆதாரமாய் விளங்கும் தத்துவக் கருத்துக்களைச் சிற்ப நூல்களில் நேரடியாகக் காணக் கிடைப்பதில்லை. ஏனெனில் போதிக்கும் ஆசிரியரே தத்துவ நூல்களையும், ஆகம நூல்களையும் கற்றுத் தெளிந்து, கலை பயிலும் மாணாக்கர்க்கு இடையிடையே சொல்லித்தருவது நடைமுறை வழக்காகும். எனவே, குரு வழியே தெரிந்து கொள்ள வேண்டிய ஆகம, தத்துவக் கருத்துக்கள் "ஆகமக் கொள்கை விளக்கம்" என்ற தலைப்பில் இந்நூலில் தனி அத்தியாயமாக இடம் பெற்றுள்ளது. இவ் அத்தியாயத்தில் கூறப்பட்ட கருத்துக்கள் குறைவேயாயினும், அக்கருத்துக்கள் தெளிவுடன் அமைய, அத்துறையில் முறையோடு, கற்றுத்தேரிய பெரியோர்களின் ஆலோசனை பெற்றே அவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன. தொட்டுக் காட்டிய அச் செய்திகளை மேலும் ஆழ்ந்து ஆய்வதற்கு ஏற்ற ஆர்வத்தை அவை ஊட்டுமானால் இந்நூலின் பயன் மேலும் மிகுவதாகும்.

பண்டைச் சிற்ப நூல்களில் அங்குமிங்கும் சுட்டிக் காண்பிக்கப்படுவனவும் அடிப்படைச் செய்திகளுமான கை அமைதிகள், உடல் பங்க அமைதிகள், படிமத் திருக்கோலங்கள், ஆடை அணிகள், தலைக் கோலங்கள், கருக்கணிகள் தனித்தனி அத்தியாயங்களாக இந்நூலில் சிறப்பிடம் பெறுகின்றன. மரபுக்கேற்ப இலக்கணங்களும் வகுக்கப் பெற்று அம் மரபை விளக்கும் படங்களும் இடம் பெற்றுள்ளன.

பண்டைச் சிற்ப நூல்கள் ஆயுதங்களின் வடிவ அமைதி பற்றியும் அவை உணர்த்தும் பொருள் பற்றியும் அரிதாகவே பேசுகின்றன. ஆனால் பண்டைய சிற்ப வடிவங்களில் குறிப்பாக தெய்விகப் படிமங்களில் சுமார் 120 ஆயுதங்களும், கருவிகளும், பிறபொருள்களும் இடம் பெற்றுள்ளதை நாம் காண்கிறோம். சிற்பிகளும், வழிவழியாக அவற்றைச் செய்து வருகின்றனர். அவ் ஆயுதங்களும், கருவிகளும், ஆழ்ந்த கருத்துக்களை உணர்த்தி நிற்கின்றன. இந்த நோக்கிலேயே அவைகள் சிற்பத்தில் அமைக்கப்படுகின்றன. இந்தக் கோணத்தில் ஆராயும் போது ஆயுதங்களையும், கருவிகளையும் பற்றி விளக்கிய சிற்ப நூலொன்று இருந்திருக்கக்கூடும் என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆகம நூல்களும், புராண நூல்களும், காவிய நூல்களும் ஆயுதங்களைப் பற்றியும், கருவிகளைப் பற்றியும், ஆங்காங்கு கூறுகின்றன. நடைமுறையில் சிற்பிகளிடையே செவிவழிச் செய்திகளாகப் புழக்கத்தில் ஒரு சில உள்ளன. இவை அனைத்தையும் உற்று நோக்கித்தொகுத்தும், பகுத்தும், விரித்தும் இந்நூலில் தனித்தலைப்பில் முதல் முதலாக இயன்றவரை விளக்கப்பட்டுள்ளது. ஒரு சில சிறப்பான கருவிகளின் படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

நமது நாட்டு அருங்கலைகள்-காவியம், இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம்-அனைத்தும் ஒரே லட்சியமும், ஒரே தன்மையும் கொண்டு விளங்குபவை. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினைப் பெறச் செய்தலே அவற்றின் இலட்சியம். கலைத்துறையில் உள்ளதை உள்ளபடி சொல்வதும் செய்வதும் இல்லை. தாங்கள் கண்ட காட்சியினையும் அதனால் அகத்தில் எழுந்த ரசத்தையும் அனுபவித்து அந்த ரசானுபவத்தின் வெளிப்பாடாக-உள்ளதை உணர்ந்தபடி-செய்வது அல்லது சொல்வது மரபு. எனவேதான் காவிய இலக்கணத்தை சிற்பியும் தெரிந்திருக்க வேண்டும் என்று கலை நூலாசிரியர் வற்புறுத்தி "காவிய இலக்கணம் தெரியான் ஓவிய இலக்கணம் அறியான்" என்று ரத்தினச் சுருக்கமாகப் பேசுவர்.

எனவே, பண்டைக்காலத்தில் மொழி இலக்கண நூலறிவு பெற்ற சிற்பக்கலைஞனுக்கு நவரசங்களைப் பற்றித் தெரிந்திருக்குமாதலால், அவற்றுக்குச் சிற்ப நூல்களில் தனி இடம் அளிக்கவில்லை. என்றாலும், இஃதொரு குறையாகவே தோன்றியதால் கலையும் சுவையும் என்ற தலைப்பில் மிகச் சுருக்கமாகச் சுவை பற்றிய செய்திகள் இங்கு அறிமுகப்படுத்தப்பட்டிருக்கின்றன. உடலுக்கு உயிர் போல கலைக்கு உயிராக அமைவது சுவையானதால் சுவை பற்றி ஒரு குறிப்பாவது இருத்தல் இன்றியமையாததன்றோ?

தெய்வத்திருமேனிகளைச் செப்புத் திருமேனிகளாக வடிப்பதில் தமிழகம் தனிப்பெருமை பெற்று விளங்குகிறது. செப்புத் திருமேனிகள் வார்ப்படப் படிமங்களாம். சிற்ப நூல்களில் வார்ப்படப்படிமச் செய்முறை பற்றித் தெளிவாகக் கூறவில்லை. இது தொழில் அம்சம் நிரம்பிய முறையாதலால் செய்முறை பற்றி விளக்கமாகப் பேசவில்லை. என்றாலும், இந்நூலில் செய்முறைகள் மிகச் செம்மையாகவும், விரிவாகவும், விளக்கப்படுகின்றன. தனி அத்தியாயமே எழுதப்பட்டுச் சிறப்படைகிறது.

கலைத் துறையில் கலை நூல்களைக் கற்றறிந்தோர் சொல்லும் சொற்கள் தொழில் துறையில் பணி செய்வோர்க்குச் சரிவரப் புரிவதில்லை. அங்ஙனமே தொழிற் துறையில் கையாளும் கலைச்சொற்கள் நூலறிந்த புலவோர்க்குப் புரிவதில்லை. இந்நூலில் இவ்விருதுறைகளும் ஒன்றி உறவாடுகின்றன.

சிற்ப இலக்கணங்களையும், அளவுகளையும், நேரடியாகக் கையாண்டு படங்கள் வரையும் போது பண்டைச் சிற்பிகள், உடல் அமைதிகளையும், ஆடை அணிகளையும், தலைக் கோலங்களையும், எங்ஙனம் இயற்றி அமைத்தார்களோ அச்சிறப்பான மரபிலேயே படங்கள் இந்நூலில் வரையப்பட்டிருக்கின்றன. தலை சிறந்த கலைப் படைப்புகளை நேரில் சென்று கண்டு அங்ஙனமே படங்கள் வரையப்பட்டிருக்கின்றன. இம்மரபைக் காப்பது இந்நூலின் அடிப்படை இலட்சியமாகும். விளக்கப் படங்கள் இந்நூலுக்கு இன்னும் அதிகம் தேவை என்பதை உணர்ந்திருப்பினும் இம் முதல் பதிப்பில் ஒரு சில இன்றியமையாத படங்களையே சேர்க்க முடிந்தது.

இந்நூலில் அளவிட்டு வரையப்பட்ட ஓவியங்கள் ஒரு தனிவகையைச் சார்ந்தனவாம். ஓவியர்கள் இயல்பாக ஒரு வடிவத்தை வரையும் நேரத்தில் கண்ணால் காணும் போது ஒவ்வோர் உறுப்பும் கண்ணுக்கு எதிரே எத்தோற்றத்தில் காணப்படுமோ அங்ஙனமே வரைவர். அதாவது, கண்மட்டத்திற்கு மேல்வரும் உறுப்புகளின் அடிப்பகுதிகள் வெளிப்பட, மேற்பகுதிகள் மறைவுற்றிருக்கும். அங்ஙனமே கண் மட்டத்திற்குக் கீழுள்ள உறுப்புகளின் மேற்பகுதிகள் தெரிந்தும் அடிப்பகுதிகள் தெரியாமலும் அமையும். இது கண் காணும் இயல்பான காட்சியாகும். இஃது ஓவியத்தின் இயல்பான தன்மையாகும். இவ்வியல்பினதாய் புடைப்புச் சிற்பங்களை அல்லது

புடைப்புச் சிற்பக் காட்சிகளை அமைக்கலாம். ஆனால் முழு வடிவங்களை இயற்றுங்கால் அல்லது முழுப்புடைப்புடைய காட்சிகளை அமைக்குங்கால் இம்முறை சிறிது மாறுபடும். இதனை ஓர் உதாரணத்தின் மூலம் விளக்குவோம். கட்டடம் ஒன்றின் உயரத்தோற்றத்தை வரையும் போது கட்டடத்தின் ஒவ்வொரு பாகத்தின் முழு அளவையும் தோற்றத்தையும் காட்டி, ஒவ்வொரு மட்டமும் கண்ணெதிரே வந்து நிற்குமானால் எவ்வமைதி கொள்ளுமோ அவ்வமைதியிலேயே வரைகிறோம். அதன்படியே கட்டடத்தைக் கட்டுகிறோம். கட்டிமுடிந்தபின் கண்பார்க்கும் காட்சி இனிய காட்சியாக அமைவதைக் காணலாம். கண்பார்க்கும் இத்தகைய இயல்பான காட்சியை முதலில் வரைந்து கொண்டு பின்னர் அதன்படி கட்டடங்களைக் கட்டுவதில்லை. இது போல, முழுவடிவங்களைக் கல்லிலே மற்றும் மரத்திலே செதுக்குவதற்காக அளவிட்டுப் படங்களை வரையும் போது உருவத்தின் உயரத் தோற்றமாகவே வரைந்து உருவத்தைச் செதுக்கி அமைத்தல் மரபு. இங்ஙனம் செதுக்கி அமைந்த பின் அவ்வுருவத்தை அதன் இயல்பான தோற்றத்தில் கண் பார்த்து மகிழும். இம்மரபிலேயே இந்நூலில் படங்கள் வரையப்பட்டிருக்கின்றன. பணியாற்றும் சிற்பிகளுக்கு இது பெரும் பயன் தரும்.

இம்முறையே உருவங்களை இயற்றும் சிற்பிகள் வழிவழியாகக் கடைபிடித்து வரும் வழக்கமுமாகும். இதனால் அங்கங்களின் நீளம், அகலம், கனம் ஆகியவை குறைவுபடாமல் அமைய நேரிடுகிறது என்பதை ஆய்ந்து பார்ப்போர் உணர்வர். இத்தகைய முறையில் கல்லின் மீதோ மரத்தின் மீதோ படங்களை வரைந்து கொண்டு சிற்பங்களைச் செதுக்கினால் அத்தகைய சிற்பங்கள் அளவில் கூடுதல் குறைவு ஏற்படாமலும் அங்கங்களின் அமைதிகள் கெடாமலும் அமைவதோடு எக்கோணத்திினின்று அவ்வடிவைப் பார்த்திடினும் இயல்பான தோற்றத்தையே இறுதியில் தரும்.

சிற்பச் செந்நூல் இது. செந்தமிழ் மொழியில் வெளிவந்து தமிழகத்தில் சிற்பக் கலைத்துறை செழிக்க வேண்டும்; இஃது என் நெடுநாட் கனவு. அதன் ஒரு பகுதி இதன் மூலம் நிறைவேறுகிறது. இன்னும் மூன்று பகுதிகள் வெளிவரவேண்டும். அப்பொழுதுதான் இப்பணி முழுமை பெறும்.

இப்பணி நிறைவு பெற உதவியவர்கள் பற்பலர். தமிழக அரசு தந்த ஆக்கம் பெரிது. அடுத்து, தொழில் நுட்பக் கல்வித் துறை இயக்குநர் அலுவலகம் தந்த ஊக்கமும் பெரிது.

திரு. வை. கணபதி ஸ்தபதி, மாமல்ல புரத்திலுள்ள தமிழ்நாட்டுக் கட்டட-சிற்பக் கலைப்பயிற்சி நிலையத்து மேலவர்; தேசிய விருது பெற்றவர்; தஞ்சைப் பெருவுடையார் கோயிலை நிர்மாணித்த இராசராசப் பெருந் தச்சனின் பரம்பரையில் தோன்றிய சிற்ப கலா சாகரம் ம. வைத்தியநாத ஸ்தபதியாரின் மகன்; முறையாகத் தமிழும், சம்ஸ்கிருதமும், ஆங்கிலமும், கணிதமும், கற்றவர்; தந்தையாரிடமும் பெரிய தந்தையார் சிற்ப கலாசாகரம் ம. செல்லக்கண்ணு ஸ்தபதியாரிடமும் சிற்பக் கலைகளில் பயிற்சி பெற்றவர்; சிற்ப நூல்கள் பலவற்றை ஆய்ந்து கற்று பதினாறு ஆண்டுகட்கு மேலாக மாணாக்கர் பற்பலருக்கு முறையாகப் பயிற்சியளித்தவர்; பல்வேறு கலைப் படைப்புகளை ஆக்கிய செயல் திறனும் அனுபவமும் நிரம்பியர். இவருடைய பணியே இந்நூல் உருவாவதற்குப் பெருங்காரணமாகும்.

தமிழக அரசு, சிற்பக்கலை மறுமலர்ச்சிக்கு மேற்கொண்ட முதற்பணி மாமல்லபுரத்தில் ஒருபயிற்சி நிலையத்தை நிறுவியதாகும். சிற்பக்கலை நூல்களைத் தமிழில் இயற்றிட வாய்ப்பளித்தது இரண்டாவது நற்பணியாகும். பூம்புகார்க் கலைக்கூடங்களும், வள்ளுவர்கோட்டமும் சிற்பக்கலை வளர்ச்சிக்காக அரசு மேற்கொண்ட மூன்றாவது பணியாகும். இம் மூன்று திருப்பணிகளையும் தலைமை யேற்று அயராது உழைத்து அரசுக்கும் தமிழ்நாட்டுக்கும் நற்பெயரும் அழியாப் பெருமையும் தேடித்தந்தவர்.

இவருடன் பணியாற்றிய முன்னாள் ஆசிரியரும், தேசிய விருது பெற்றவருமான திரு. தி. குமரேச ஸ்தபதி இப்பணியில் உடன் இருந்து உதவியவர். சம்ஸ்கிருத ஆசிரியர் திரு. செள. ஸ்ரீநிவாசராகவன் உடனிருந்து உதவிய மற்றொரு அன்பர். செப்புத் திருமேனிகள் வடிப்பது பற்றிய குறிப்புகளைத் தந்துதவியவர். கும்பகோணம் திரு. எஸ். பூபதி ஸ்தபதியாவார் திரு. கணபதி ஸ்தபதியின் மேற்பார்வையில் படங்களை வரைந்து உதவியவர்கள் முன்னாள் மாணாக்கரும், இன்றைய ஆசிரியர்களுமான திரு. ஜி. பெருமாள்; திரு. ஜி. திருஞானம்; திரு. எஸ். துரைராஜ் ஆகியோர் ஆவர்.

தமிழ்நாடு தொழில் நுட்பக் கல்வித் துறை இயக்குநர் டாக்டர் வா.செ. குழந்தைசாமி அவர்கள் புகழ் வாய்ந்த பொறியியல் வல்லுநர், தமிழறிஞர், மாமல்லபுர கட்டட-சிற்பக்கலைப் பயிற்சி நிலையத்தின் வளர்ச்சியில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். தமிழில் கலை நூல்கள் பல இயற்றிட வேண்டுமென்ற பேரார்வமும் அக்கறையும் கொண்டவர். இவர் தந்த ஆதரவும், ஊக்கமும் இப்பணி சிறப்புடன் நிறைவேற பெரிதும் உதவின.

கூடுதல் இயக்குநர் திரு. சு. வையாபுரி அவர்களும், இப் பணியில் ஆர்வமும் அன்பும் காட்டி, எங்களை ஊக்குவித்தார்கள். இணை இயக்குநர் திரு. வி. ஸ்ரீனிவாசன் அவர்கள் இப் பணியில் பல ஆலோசனைகள் கூறி உதவியவர் ஆவார்.

இந் நூலை இவ்வளவு செம்மையாக அச்சிட்டு வெளிவர உதவியவர்கள் அச்சுத் தொழில் நுட்பப் பயிலக முதல்வர் திரு. க. மோகன்ராவ், தனி அதிகாரி திரு. ஆ.தே. புச்சிபாபு ஆகியவர்களாவர்.

மற்றும், இந்நூலில் இடம் பெற்றிருக்கும் விளக்கப் படங்களைச் சிறப்புற பிளாக்குகள் எடுத்தும், அச்சுக் கோப்பு, பிழை திருத்துதல், அச்சிடுதல், கட்டுதல் ஆகிய பணிகளை ஆர்வத்துடனும் திறமையுடனும் செய்தும், மேற்பார்வையிட்டும் உதவியவர்கள் இப்பயிலக ஆசிரியர்கள். இவர்களுக்கு உறுதுணையாக நின்று செயலாற்றியவர்கள் தொழில் வினைஞர் ஆவர்.

இவர்கட்கெல்லாம் என் மனமார்ந்த நன்றி கூறி மகிழ்கிறேன்.

இந்நூலில் உள்ள குற்றம் குறைகளைப் பொறுத்து, முதல் முயற்சியான இதை வரவேற்று, சிற்பத்துறை செழித்து வளர உதவ வேண்டுமென்று கலைஞர்களையும், அறிஞர்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

அன்பும் பணிவுமுள்ள,

கம்பன் அடிப்பொடி

(சா. கணேசன்)

# பொருளடக்கம்



2040-13-3

பொருளடக்கம்—*தொடர்ச்சி*

# I

# சிற்பத்துறை அளவைகள்



## அணு முதலிய அளவைகள்

பொருள்களை அளந்தறிவதற்கும், செய்வதற்கும், ஒவ்வொரு நாடும் தனக்கெனப் பல அளவை முறைகளை வகுத்துக்கொண்டிருக்கின்றது. இவ் வளவை முறை, துறைக்குத் துறை, வேறுபட்டுமிருக்கும்.

சிற்பக் கலைத் துறைக்கு ஒரு வகை நீட்டல் அளவை முறை தொன்றுதொட்டு இன்று வரை வழக்கில் இருந்து வருகிறது. நிலங்கள், மனை இடங்கள், சாலைகள் ஆகியவற்றை அளப்பதற்கு ஒரு வகை நீட்டல் அளவையும் வீடு, மாளிகை, மன்றம், கோவிற் கட்டடம், குளம், கிணறு ஆகியவற்றை அளப்பதற்கு மற்றொரு வகை அளவையும்; மஞ்சம், கட்டில், தொட்டில், ஊஞ்சல், நாற்காலி ஆகியவற்றை அளவிடப் பிறிதொரு வகை அளவையும்; தேர், சப்பரம், வண்டிகள் ஆகியவற்றை அளப்பதற்கு வேறோர் அளவையும்; சிற்பங்களையும் படிமங்களையும் அளவிட்டுச் செய்வதற்கு இன்னொரு வகை அளவை முறையும் வழக்கத்தில் இருந்து வருகின்றன.

சிற்பக் கலை நுணுக்கங்களைப் பேசும்பொழுதும் செயல்படுத்தும் பொழுதும், இவ் அளவை முறைகளையே பின்பற்ற வேண்டியுள்ளது. ஏனெனில் தொழில் நுட்பங்கள், இலக்கணங்கள் எல்லாம் இப் பண்டைக்கால அளவைகளின் வாயிலாகவே விளக்கப்படுகின்றன. இதனால் பண்டைக் கலைமரபும், அதற்குரிய சிறப்பும் வழுவாமல் காக்கப்பட்டு வருகின்றன.

சிற்பக் கலைத் துறையில் புகுவோரும், ஈடுபட்டிருப்போரும் இவ் வளவை முறைகளைத் தெரிந்து, புரிந்து, பிறருக்குத் தெரிவிக்கும் நேரத்தில் அவரவர்க்கு அறிமுகமான அளவைகளில் மாற்றி வழங்கிடவும் முடியும். ஆனால், பண்டைச் சிற்ப அளவை முறைகளை அறியாமல் புதிய அளவை முறைகளை நேரடியாகப் புகுத்தலும், பின்பற்றுதலும், இத் துறையில் இயலா.

## அணு

சிற்பத் துறையில் கையாளப்பெறும் நீட்டல் அளவைமுறை பரமாணுவிலிருந்து தொடங்குகிறது. எந்த அணுவை-நுட்பமான பொருளை—கண்களால் நாம் காண இயலாதோ, அதற்குப் பரமாணு என்று பெயர்.

ஆனால் இப் பரமாணு[1] மாமுனிவர்களின் கண்களுக்கு—அவர்தம் அறிவுக் கண்களுக்கு— மட்டுமே புலப்படும். இவ் வணுவை ஓரளவு நாம் புரிந்து கொள்வதற்குச் சிற்ப நூல்கள் இதனை, வீட்டுக் கூரைகளிலுள்ள சிறு துளைகளின் வழியாக ஊடுருவிப் பாயும் சூரியக் கதிரில் மிதக்கும் நுண்ணிய துகள்[2] என்று கூறுகின்றன.

## அணுவிலிருந்து வளர்ந்த பிற அளவைகள்

இத்தகைய நுட்பமான பரமாணு எட்டுச் சேர்ந்தது ஒரு தேர்த்துகள் என்றும், தேர்த்துகள் எட்டுக் கொண்டது உரோமத்தின் நுனி அகலம் என்றும், உரோமம் எட்டுக் கொண்டது ஓர் ஈரின் அகலம் என்றும், ஈர் எட்டுக் கொண்டது ஒரு பேனின் அகலமென்றும், பேன் எட்டுக் கொண்டது ஒரு நெல்லின் அகலமென்றும், நெல் எட்டுக் கொண்டது ஒரு விரல் என்றும் வகுக்கப்பட்டிருக்கின்றது[3].

தமிழ் நாட்டில் விளையும் எல்லா வகை நெல்லும் சிற்ப நூல் கூறும் அளவில் இரா. பெரும்பாலும், நெற்கள் ஐந்து வகையின. அவை செந்நிறம், பொன்னிறம், வெண்ணிறம் என மூன்றும், பெருநெல், சௌகந்தி என்ற இரண்டும் ஆகும். இவ்வைந்தில் செந்நெல்லை விரல் அளவு கொள்வதற்கு ஏற்றதெனச் சிற்ப நூலோர் தேர்ந்தனர்[4].

இந்நெல் அளவினை யவை[5] என்றும், விரல் அளவை அங்குலம்[6] என்றும் சிற்ப நூல்கள் கலைச் சொற்களாகக் கையாளுகின்றன.

இதுகாறும் அறிந்த அணு முதல் விரல் வரை உள்ள அளவைகளை ஒருங்கே முறைப்படுத்தி வாய்பாடாகக் கொடுத்திருப்பதைக் கீழே காண்க.

## விரல் வாய்பாடு[7]

| | | |
|---|---|---|
| 8 பரமாணு | = | ஒரு தேர்த்துகள் |
| 8 தேர்த்துகள் | = | ஒரு மயிர் நுனி அகலம் |
| 8 நுனி மயிர் | = | ஓர் ஈர் |
| 8 ஈர் | = | ஒரு பேன் |
| 8 பேன் | = | ஒரு நெல் (யவை) |
| 8 நெல் (யவை) | = | ஒரு விரல் (அங்குலம்) |

## மானாங்குலம்[8]

எட்டு நெல் (யவை) அகலம் கொண்டது விரல் அளவு அல்லது அங்குல அளவென்று முன்பு கண்டோம். அளப்பதற்குரிய பொதுவான அங்குல அளவாகையினால் இது மானாங்குலம் என்று சொல்லப்படும். (மானம்=அளவை)

எட்டு நெற்களை அகலவாட்டில் ஒன்றோடொன்று நெருங்க அமைத்து, அதன் மொத்த நீளம் ஓர் அங்குலமெனக் கணக்கிடப்படுகிறது.



மானாங்குலம்

## மானாங்குலத்தின் மூன்று வகைகள்

எட்டு யவை அகலம் கொண்ட விரல் அளவை உத்தமாங்குலமென்றும், ஏழு யவை அகலம் கொண்ட விரல் அளவை மத்திமாங்குலமென்றும், ஆறு யவை அகலம் கொண்ட விரல் அளவு அதமாங்குலம் என்றும் சொல்லப்படும்.

அளவை முறைக்கு ஏற்றதென நூல் கூறும் செந்நெல் அதன் அகலத்தைப் போல் இரு மடங்கு நீளமுடையது. எனவே, நீளவாட்டத்தில் நான்கு நெல்லின் மொத்த நீளம் ஓரங்குலம் எனவும் கொள்ளப்படும். இதனை உத்தமாங்குலம் எனக் கொண்டு, மூன்றரை நெல் நீளம் கொண்ட அங்குலம் மத்திமாங்குலம் என்றும், மூன்று நெல் நீளம் கொண்ட அங்குலம் அதமாங்குலம் என்றும் கொள்ளப்பட்டிருக்கின்றன.



மானாங்குலம்

## மானாங்குலத்திலிருந்து தோன்றிய பிற அளவைகள்

ஆறு மானாங்குலம் கொண்ட நீள அளவு தாளமென்றும், இரண்டு தாளம் கொண்டது விதஸ்தி[9] (கை முழம்) என்றும் இரண்டு விதஸ்தி கொண்டது ஒரு கிஷ்கு[10] (தச்சு முழம்) என்றும் சொல்லப்படும். ஒரு கிஷ்கு முழமானது 24 விரல் நீளம் கொண்ட பெரிய அளவென்பது இதிலிருந்து பெறப்படுகிறதல்லவா? இதனைத் தச்சு முழமென்றும் சிற்ப முழமென்றும் கூறுவர்.

விதஸ்தியை அரை முழமென்றும், கிஷ்குவை முழு முழம் என்றும் சொல்லலாம்.

இருபத்து நான்கு விரல் நீளம் கொண்டது ஒரு தச்சு முழம்[11] எனக் கண்டோம்.

## முழக்கோல் வாய்ப்பாடு

| | | |
|---|---|---|
| 6 மானாங்குலம் | = | 1 தாளம் |
| 2 தாளம் | = | 1 விதஸ்தி |
| 2 விதஸ்தி அல்லது | = | 1 ஹஸ்தம் |
| 24 விரல் | = | 1 அல்லது தச்சுமுழம் |

## பலவகை முழக்கோல்கள்

ஒரு முழத்திற்கு இருபத்து நான்கு விரல் என்பதே அடிப்படை அளவாகும் என்றாலும் காரணம் பற்றி வேறு சில முழக்கோல் அளவுகள் சிற்ப நூல்களில் கூறப்பெற்று, வழக்கத்தில் வெவ்வேறு பெயர்களில் வழங்கி வந்திருக்கின்றன. அவை பின் வருமாறு:-

| | | |
|---|---|---|
| 24 விரல் கொண்ட முழம் | = | கிஷ்கு |
| 25 விரல் கொண்ட முழம் | = | பிராஜாபத்தியம் |
| 26 விரல் கொண்ட முழம் | = | தனுர் முஷ்டி |
| 27 விரல் கொண்ட முழம் | = | தனுர் கிரஹம் |
| 28 விரல் கொண்ட முழம் | = | பிரரச்யம் |
| 29 விரல் கொண்ட முழம் | = | வைதேகம் |
| 30 விரல் கொண்ட முழம் | = | வைபுல்யம் |
| 31 விரல் கொண்ட முழம் | = | பிரகீர்ணம். |



முழக்கோலின் கால்பங்கு

24 விரல் கொண்ட கிஷ்கு முழத்திற்கு தஞ்சை முழ[12]மென்றும் ஒரு பெயர் வழக்கில் உண்டு. தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலை நிருமாணிப்பதில் இம்முழம் கையாளப் பெற்றமையால் இப்பெயர் பெற்றது. திருவண்ணாமலைத் திருக்கோவிலை அமைப்பதற்குப் பயன்படுத்திய அளவுகோல் இம் முழக்கோலாகையினால் இதற்கு அண்ணாமலை முழமென்றும் மற்றொரு பெயருமுண்டு.

சிதம்பரத்தில் ஆடவல்லான் திருக்கோயிலைக் கட்டுவதற்குக் கைக்கொண்ட முழம் சிதம்பர முழ[13]மென்றும் கூறப்படும். இஃது இருபத்தைந்து விரலளவு கொண்ட பிராஜாபத்ய முழக்கோல் ஆகும். திருக்கோயில்களைக் கட்டுவதற்கு உதவிய அளவுகோல்களில் சிதம்பர முழமே மிகப் பெரியது. தஞ்சை முழமும், சிதம்பர முழமும் தமிழகத்தில்— திருக்கோயில் நிர்மாணத்தில் பெரும்பணி செய்துள்ளன. எனவே இவை தமிழகத்தில் பெரும் புகழ் பெற்ற முழக்கோல்களாகும்.

## கிஷ்கு முழத்தின் உட்பிரிவுகள்

24 விரல் கொண்ட கிஷ்கு முழம் உத்தம கிஷ்கு முழம் என்றும், 23½ விரல் கொண்ட கிஷ்கு முழத்தை மத்திம கிஷ்கு முழமென்றும், 23¼ விரல் கொண்ட கிஷ்கு முழத்தை அதம கிஷ்கு முழமென்றும் கொண்டு இவற்றை மூன்று வகை அளவு கோல்களாக சிற்பிகள் வகுத்துள்ளனர்.

இம் மூன்று அளவுகளில் சிறியதாகிய அதம கிஷ்கு முழத்தை பழனி, மதுரை கோவில்களைக் கட்டிய சிற்பிகள் பயன்படுத்தியுள்ளனர். எனவே இவ் அதம கிஷ்கு முழத்திற்கு மதுரை முழம்[14] என்று பெயர்.

முழங்களில் தில்லை, தஞ்சை, மதுரை முழங்கள் பெரு வழக்குடையன. அந்தந்தப் பகுதிகளில் பணியாற்றும் சிற்பிகள் அவர்தம் பகுதிகளுக்குரிய முழத்தை இன்றளவும் பயன்படுத்தி வருகிறார்கள்.

வீடு, மாளிகை, அரண்மனை, கோவில் ஆகிய கட்டடங்களை கிஷ்கு முழத்தாலும், பிராஜா பத்திய முழத்தாலும் அளவிட்டுச் செய்தல் வேண்டும். வண்டிகள், படுக்கைகள் ஆகியவற்றை கிஷ்கு முழத்தால் அளவிடலாம். மனையிடங்களை தனுர்முஷ்டி முழத்தினால் அளவிட வேண்டும். கிராமம், நகரம், பட்டணம் ஆகிய பெரிய நிலப்பரப்புக்களை தனுர்கிரக் கோலினால் அளவிட வேண்டும்.

## கயிறு[15]

நான்கு கிஷ்கு முழம் கொண்ட நீளத்தைத் தனுர்தண்டம் என்றும், எட்டுத் தண்டம் கொண்ட நீளத்தை ரஜ்ஜூ (கயிறு) என்றும் கொள்ளப்படும். இதனைச் சாலைகள் அளப்பதற்குப் பயன்படுத்துதல் வேண்டும்.

## வாய்பாடு

| | | |
|---|---|---|
| 24 விரல் | = | ஒரு கிஷ்கு முழம் |
| 4 கிஷ்கு முழம் | = | ஒரு தண்டம் |
| 8 தண்டம் அல்லது 32 கிஷ்கு முழம் | = | ஒரு ரஜ்ஜூ அல்லது கயிறு |

## முழக்கோல் செய்வதற்குரிய மரங்கள்

சந்தனம், தேவதாரு, கருங்காலி, தேக்கு, முருக்கு, மா. பனை, வேங்கை, செண்பகம் ஆகிய மரங்களும்; பொன், வெள்ளி, தாமிரம், இரும்பு ஆகிய உலோகங்களும் முழக்கோல் செய்வதற்கு ஏற்றவையாகும். கமுகு, மூங்கில் இவை இரண்டும் தண்டக்கோல் செய்வதற்கு ஏற்றவை. அளவுகோல்கள் செய்வதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மரங்கள், வளைந்தோ, வெடித்தோ, உளுத்தோ அல்லது மிருதுவானதாகவோ இருத்தலாகா.

## கயிறு திரித்தல்

தேங்காய் நார், தர்ப்பைப்புல், ஆலமரவுரி, பருத்தி நூல், பட்டு நூல், பனை நார் ஆகியவை கயிறு (ரஜ்ஜூ) செய்வதற்கு ஏற்ற பொருள்களாகும். திரிக்கப் பெற்ற கயிறு முப்பிரிகளை உடையதாகவும், ஒரு விரல்பருமனுடையதாகவும், முண்டு முடிச்சுகள் இல்லாததாகவும் இருத்தல் வேண்டும்.

## முழக்கோல் செய்யும் முறை

தகுந்த மரத்தைத் தக்க அளவில் தேர்ந்தெடுத்த பிறகு அதனை மூன்று மாத காலம் நீரில் ஊற வைத்தல் வேண்டும். பிறகு அதனை வெளியிலெடுத்துக் கழுவித் துடைத்து, உலர்த்தி தச்சனைக் கொண்டு பிளக்கச் செய்து. சோறுள்ள பகுதியை நீக்கி உறுதியான வயிரமுள்ள பகுதியில் ஒரு முழ நீளமும், ஒரு விரல் அகலமும், அரை விரல் கனமும் உடையதாக மரத்தை நன்கு செதுக்கி, இழைத்து அதன் மீது அளவுக் குறிகளை இடுதல் வேண்டும். இங்ஙனம் தயாரிக்கப் பெற்ற முழக்கோல்களின் இருமுனைகளிலும் உலோகப் பூண்கள் பிடித்தலும் வேண்டும்.

## அளவுகளைக் குறித்தல்

செதுக்கி வடிவாக்கிய கோலைத் துல்லியமாக 24 விரல் நீளமுள்ளதாக நறுக்குதல் வேண்டும். அரை முழம். கால் முழம். அரைக்கால் முழம். ஒரு விரல். அரை விரல். கால் விரல், அரைக் கால் விரல் முதலிய பிரிவுகளைக் குறித்தல் வேண்டும். கிஷ்கு முழத்தை, இங்ஙனம் தயாரித்துக்கொள்ள வேண்டும்.

சிதம்பர முழம் 25 விரல் நீளமுள்ளது. இவ் அளவு கொண்ட கோலை நறுக்கி அதனை 24 பாகங்களாகப் பிரித்தல் வேண்டும். முன்னையதைக் காட்டிலும் பின்னையது அளவில் ஒரு விரல் கூடியதல்லவா? அந்த ஒரு விரல் 24 பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு விரலுடன் 1/24 சேர்ந்து விடுகிறது. எனவே சிதம்பர முழத்தை 24 கூறு செய்வதில் இந்தப் பின்ன விரல் நம்மை அறியாமலேயே கணக்கில் சேர்ந்து விடுமல்லவா? எனவே கிஷ்கு முழத்தில் 1/2, 1/4. 1/8 முழங்களுக்குரிய அளவுகளையும் 1. 1/2. 1/4. 1/8 விரல் அளவுகளையும் குறியிட்டு அதில் பொறித்தல் வேண்டும்.

23¼ விரல் கொண்ட மதுரை முழக்கோலையும் அங்ஙனமே நறுக்கி அதில் அரை முழம். கால் முழம் முதலிய எல்லாப் பின்ன அளவுகளையும் குறித்துக்கொண்டு பயன்படுத்துதல் வேண்டும்.

சுருங்கக்கூறின், எந்த அளவு நீளமுடைய முழக்கோலாக இருப்பினும் அந்நீளத்தை 24 பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தையும் விரலளவாகக் கொள்ள வேண்டும்.

## முழக்கோல் வடிவம்

முழக்கோல். தண்டக்கோல் இவ்விரண்டிற்கும் அதிதேவதை விஷ்ணுவென்றும், ரஜ்ஜூவிற்கு அதிதேவதை வாசுகி என்றும், பொதுவாக எல்லா அளவைகளுக்கும் அதிதேவதை நான்முகன் என்றும் நூல்கள்[16] இயம்புகின்றன. மேலும் அளவுகோலின் அடிப்பகுதி சிவரூபமென்றும், நடுப்பகுதி இலட்சுமி ரூபமென்றும், தலைப்பகுதி விஸ்வகர்மரூபம் என்றும் பிற நூல்கள் கூறும்.[17]

அளவுகோலின் அடிப்பகுதி பிரம்ம பாகமென்றும். இடைப்பகுதி விஷ்ணு பாகமென்றும். தலைப் பகுதி சிவ பாகம் என்றும் மற்றொரு நூல்[18] கூறுகிறது.

பெருந்தச்சனாகிய ஸ்தபதி இத் தேவதைகளைத் தியானித்து வணங்கிய பின்னரே பொருள்களை அளத்தல் வேண்டும்.

## படிம அளவைகள்

### தாளம்

படிமத்தின் முக நீளம் ஒரு தாளம் எனப்படும். இது கைப் பெருவிரல் நுனி முதல், நடுவிரல் நுனி வரை உள்ள சாண் அளவிற்கும் கைத் தலத்தின் அடிமுதல் நடுவிரல் நுனி வரையுள்ள நீளத்திற்கும் சமமாகும். இத் தாள அளவை 12 சம கூறுகளாகப் பிரித்து ஒரு கூறு அளவை ஒரு விரல் என்றும், விரல் அளவில் எட்டில் ஒரு கூறை 'யவை' என்றும் சொல்ல வேண்டும். இதன் விரிவைத் தாளமானத்தில் காண்க.

படிமங்களை அளப்பதற்கு நான்கு விதமான அங்குலங்கள் வழக்கில் இருக்கின்றன. அவை முறையே: (1) மானாங்குலம் (2) மாத்ராங்குலம், (3) தேகாங்குலம், (4) யவாங்குலம் ஆகும்.

### மானாங்குலம்

ஏற்கனவே பொது அளவையாகக் கைக்கொண்ட மானாங்குல அளவே இஃதாகும். எட்டு நெல்லின் அகல அளவு கொண்ட நீள அளவே இம் மானாங்குலமாகும். இது ஒரு பொது அளவு.

### மாத்ராங்குலம்

வீடு, கோவில், பிற கட்டடங்கள், படிமங்கள் செய்வதற்குப் பொருள் உதவி செய்து சிற்பி மூலம் அதனைச் செய்விப்போர் கர்த்தா எனப்படுவார். அவருடைய வலது கை நடுவிரலின், நடுக்கணுவின் நீளம் அல்லது அகலம் அல்லது சுற்றளவு 'மாத்ராங்குலம்' எனப்படும். இதனைப் படிமங்களையும் மற்ற சிறு பொருட்களையும் அளவிடத் தகுந்த அளவையாகக் கொள்வதும் உண்டு.

### தேகாங்குலம்

ஒவ்வொரு படிமத்தையும் ஒரு குறிப்பிட்ட தாள அளவையில் செய்வது வழக்கம். தாளமென்பது படிமத்தின் முக உயர அளவாகும். முக உயரத்திற்குச் சமமான இத் தாளத்தை மூல அலகாகக் கொண்டு படிமத்தின் நின்ற கோல உயரத்தை இத்தனை தாள உயரமென்று சொல்வது படிமக்கலைத் துறை வழக்கு. தாள அளவினை 12 சம கூறுகளாகப் பிரிக்கின் ஒவ்வொன்றும் அங்குலமென்று அல்லது விரல் என்று சொல்லப்படும். இனி படிமத்தின் உயரம் இத்தனை தாளமென்று சொல்லுதற்கு மாற்றாக இத்தனை அங்குலமென்று சொல்லிவிடலாமல்லவா? உதாரணமாக ஒன்பது தாள உயரமுடைய படிமத்தை 108 அங்குல உயரமுடையதென்று சொல்லலாம். இங்ஙனம் கிடைத்த ஒவ்வோர் அங்குலமும் படிமத்தின் உடலளவிலிருந்து–தேகத்திலிருந்து–பெறப்பட்டதால் இது 'தேகாங்குலம்' எனப்பட்டது.

எனவே, ஒரு படிமத்திற்கு வகுக்கப்பட்ட தாளமானத்தை அடிப்படையாகக் கொண்டு அதிலிருந்து கிடைக்கும் படிம அங்குலத்திற்குத் தேகாங்குலமென்றும், பேராங்குலமென்றும் பெயர் (பேரம்=மூர்த்தி; வடிவம்). இது ஒரு சார்பு அளவு. படிமத்தின் உயரத்திற்கேற்றவாறு இவ்வங்குலம் வேறுபடும்.

### யவாங்குலம்

மானாங்குலத்தின் எட்டில் ஒரு பங்காகிய யவை அளவு யவாங்குலம் என்று கூறப்படும். யவை அளவால் சிறு படிமத்தின் உயரத்தை அளப்பதும் கூறுவதுமுண்டு.

விரல் வாய்பாட்டிலிருந்து பெற்றிட்ட தாள அளவும், படிம இலக்கணத்தில் படிமத்திற்குக் கொண்ட தாள அளவும் ஒன்றல்ல; வெவ்வேறானவை. அங்ஙனமே தேகாங்குலத்தை எட்டுக் கூறுகளாக்கிக் கிடைத்த 'யவாங்குலமும்,' நெல் அளவிலிருந்து–மானாங்குலத்திலிருந்து–கிடைத்த யவாங்குலமும், ஒன்றல்ல. படிமத்தின் யவாங்குலம் படிமத்தைச் சார்ந்த அளவாகும். ஆனால் மானாங்குலத்திலிருந்து கொண்ட யவாங்குலம் நிலையான, வேறுபாடு இல்லாத பொது அளவு ஆகும்.

திருக்கோயில்களையும், வழிபடு படிமங்களையும் ஸ்தபதியானவன் செய்தளித்தபிறகு, அவற்றைப் புனிதப்படுத்தி கடவுண்மங்கலம் (பிரதிஷ்டை) செய்து, குடநீராட்டுச் (கும்பாபிஷேகம்) செய்தற் பொருட்டு ஆகம முறைப்படி வேள்வி நிகழ்த்தப்படும். அதற்கேற்ற வேள்விக்கூடம் ஒன்று நிறுவப்படும். அது யாகசாலை அல்லது யாக மண்டபம் என்று சொல்லப்படும். இதில் வேதிகை என்ற மேடை அமைத்து சுற்றிலும் அக்கினி வளர்க்கக் குண்டங்களும் சமைக்கப் பெறும். வேதிகைகளும், குண்டங்களும் பல்வேறு தோற்றமும் பெயரும் உடையனவாம். இவற்றை நிர்மாணம் செய்தளிக்கும் பொறுப்புடையவன் ஸ்தபதி.

யாக மண்டபத்தையும், வேதிகைகளையும், குண்டங்களையும் கட்டுவதற்கென அமைந்த ஒருவகை அளவுகோலை ஸ்தபதி உபயோகித்தல் வேண்டும்.

யாக மண்டபத்தில் நடைபெறவிருக்கும் வேள்விப் பணியைத் தலைமை ஏற்று முன்னின்று

நடத்தும் ஆகம விற்பன்னர் சர்வ சாதகா சாரியர் எனப்படுவர். இவரது கைமுழம் யாகசாலை நிர்மாணங்கட்கு அளவையாகக் கொள்ளப்படும். இவ் அளவுகோல் இரண்டு வகைப்படும். ஒன்று ரத்னி: மற்றொன்று அரத்னி எனப்படும்.



அரத்னி



ரத்னி

முன்கை முட்டியிலிருந்து விரிந்து நீண்ட கையின் சிறுவிரல் நுனிவரை கொண்ட நீளம் அரத்னி என்றும். விரல்களை மடக்கி முஷ்டி யாக்கின், முழங்கை முட்டி முதல் மடக்கிய கை முஷ்டி வரை கொண்ட நீளம் ரத்னி என்றும் சொல்லப்படும். இதனை 24 கூறுகளாக்கினால் ஒவ்வொன்றும் விரல் ஆகும். விரல் அளவை 8 கூறுகளாக்கினால் ஒவ்வொரு கூறும் யவை ஆகும்.

---

1. விளக்கம் (மானசாரம்): ஓர் ஆங்கில அங்குலத்தின் 1, 90, 650 கூறுகளில் ஒன்று அணுவின் அளவெனில் அது நமது கண்களுக்குப் புலப்படாதன்றோ!
2. இதனை ஆதாரமாகக் கொண்டு பெருகும் மற்றைய அளவைகள் நமது கண்களுக்குப் புலப்படக் கூடியனவே. "இல் நுழை கதிரின் துன் அணு" எனப் பேசும் திருவாசகம்.
3. மானசாரம்.
4. காசியபம்.
5. இஃது ஒரு வகைத் தானியம், வாற் கோதுமை என்றும் பார்லி என்றும் ஒரு சாரார் கூறுவர். ஆனால் தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டில் இது நெல்லையே குறிக்கும்.
6. அங்குலி-விரல்: விரல் என்ற அளவு மிகத் தொன்மையானது. இன்றும் வழக்கில் உள்ளது. "நூல் நெறி மரபில் அரங்கம் அளக்கும் கோல் அளவு இருப்பத்து நால் விரலாக." -அரங்கேற்றுகாதை-சிலப்பதிகாரம்.
7. தமிழ் நாட்டில் பண்டைக்காலத்தில் வேறு துறையில் வழக்கிலிருந்த விரல் வாய்பாடு.

| | | |
|---|---|---|
| 8 அணு | = | 1 தேர்த்துகள் |
| 8 தேர்த்துகள் | = | 1 இம்மி |
| 8 இம்மி | = | 1 எள்ளு |
| 8 எள்ளு | = | 1 நெல் |
| 8 நெல் | = | 1 பெருவிரல் |

என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கூறுவார்.

8. இஃது ஆங்கில அங்குலம் $1^{3}/_{8}$ கொண்டதாகும்.
9. விதஸ்தி = 12 விரல் = 12 x $1^{3}/_{8}$ = 1' - 4½"
10. கிஷ்கு = 2 விதஸ்தி = 2 x 1 - 4½ = 2' - 9"
11. பண்டைத் தமிழகத்தில் 24 விரல் கொண்ட அளவுகோல் வழக்கில் இருந்தமைக்கு இலக்கியச் சான்று "நூல் நெறி மரபின் அரங்கம் அளக்கும்கோல் அளவிருபத்து நால் விரலாக." – அரங்கேற்றுகாதை – சிலப்பதிகாரம்.
12. தஞ்சை முழம் = 24 விரல் = 24 x $1^{3}/_{8}$ = 2' - 9"
13. சிதம்பர முழம் = 25 விரல் = 25 x $1^{3}/_{8}$ = 2' - $10^{3}/_{8}$"
14. மதுரை முழம் = 23¼ விரல் = 23¼ x $1^{3}/_{8}$ = 2' - $7^{31}/_{32}$" அல்லது 2'-8"
15. கயிறு = 32 முழம் = 32 x 2¾ = 88' - 0"
16. மானசாரம்.
17. காமிகாகமம்.
18. விஸ்வகர்மீயம்

# 2

# படிம வகைகள்

## முழு முதற் பொருளின் முப்பெரும் நிலைகள்

கண்களுக்குப் புலப்படாததும், மனம் வாக்குகளுக்கு எட்டாததும்,உள்ளத்திற்கு உள்ளே உறைவதும்; ஒலியாய், ஒளிமயமாய் எங்கும், எதிலும், எப்பொழுதும், நிறைந்த பொருளாய், தோற்றம், வளர்ச்சி, ஒடுக்கங்களுக் கெல்லாம் காரணமாய் விளங்கும் முழுமுதற் பரம் பொருளை முப்பெரும் நிலைகளில் மூதறிஞர் உணர்ந் தோதினார்கள். அவை முறையே:—

1. அருவம்
2. உருவம்
3. அருவுருவம்

என்பபடும். இவற்றை முறையே அவ்வியக்தம், வியக்தம், வியக்தாவியக்தம் என்று கூறுவர். சிற்ப ஆகம நூல்கள் இவற்றை நிஷ்களம் என்றும், சகளம் என்றும், சகளநிஷ்களம் என்றும் கூறும்.

தலை, உடல், கை, கால்கள் பொருந்திக் கட்புலனாகும் வடிவத்தை உருவம் என்றும், அங்ஙனம் உறுப்புகளற்ற, கட்புலனாகாத, ஒன்றை அருவம் என்றும், இரண்டும் கலந்த ஒன்றை அருவுருவம் என்றும், சிற்ப நூல்கள் வரையறுத்துக் கூறுகின்றன. இவற்றிற்கு எடுத்துக் காட்டாக லிங்கத்தை அருவ மேனி என்றும், எல்லா உறுப்புகளும் நிறைந்த சந்திரசேகர மூர்த்தத்தை உருவ மேனி என்றும் முக லிங்கத்தை அருவுருவம் என்றும் கூறுகின்றன.

கடவுளைப் பற்றி மனிதன் கண்ட உண்மைகளும் அகக் காட்சிகளும், பிற அனுபவங்களும், இம் மூன்று படிமங்களில் அடங்குகின்றன. எனவே இம்மூன்று வகைகளும் வழிபடு படிமங்களாகும் என்பது சிற்ப நூலோர் கருத்து.

இறைவனைப் பற்றிய உண்மைக் கருத்துக்கள் புலப்படுமாறு எல்லா உறுப்புக்களும் அமைந்த உருவத் திருமேனிகளைச் சிற்பிகள் இயற்றுதற்குச் சிற்ப நூல்கள் பல இலக்கணங்களை வகுத்திருக்கின்றன.

உள்ளதை உள்ளபடி அல்லாமல் உள்ளதை உணர்ந்தபடி, ரசானுபவம் தோன்றுமாறு, கைத்திறன் மிக்க கலை வடிவங்களாக, இப் படிமங்களை இயற்றுதல் வேண்டும். இத்தகைய தெய்வப் படிமங்கள் வழிப்படுவோர் உள்ளத்தில் இறை அன்பைத் தோற்றுவிப்பதுடன் இக, பர வாழ்க்கைக்கு இன்றியமையாப் பொருளையும், அருளையும் முறையே நல்கும் என்று வலியுறுத்தி மெய்ஞான நூல்கள் இயம்புகின்றன. தத்துவக் கருத்துக்களுக்கும், சிற்ப இலக்கணங்களுக்கும் மாறுபட்டமைந்த படிமங்கள் வழிபடுவோர்க்கு நன்மை பயக்கா; அளவில் மிகினும், குன்றயினும் நலமுடையன அல்லவாம். மனித உருவம் எவ்வளவு இயற்கை வடிவத்தை ஒத்திருப்பினும் அது வழிபடுவதற்கு ஏற்றதன்று.

எனவே, வழிவழி வந்த சிற்பக் கலைத்துறையில் ஈடுபட்டோர் படிம இலக்கணங்களை நன்கு புரிந்து, தேர்ந்து, தெளிந்தே படிமங்களை இயற்றுதல் வேண்டும்.

தெய்வத் திருவுருவங்களையும் மற்றும் கலைப் படிமங்களையும் இயற்றுதற்கு அடிப்படையாகப் பின்கண்ட இலக்கண மரபுகளையும், அளவு முறைகளையும் நன்றாக புரிந்து கொள்ள வேண்டும்.

அவைகளாவன:

1. படிம வகைகள்
2. படிமப் பொருள்கள்
3. படிம வர்ணனை
4. படிம மானம்—ஆயாதி மானம்
5. தாள மானம்
6. அறுவகை மானங்களும் தூக்கு நூலளவுகளும்
7. உறுப்புகளின் சாயல்கள்
8. அபிநயங்கள்
9. பங்க அமைதிகள்
10. நாட்டியக் கோலங்கள்
11. ஆசன அமைதிகள்
12. ஆடை அணிகள்
13. அடையாளப் பொருள்கள்—ஆயுதங்கள்
14. கற்பனைகள்
15. நிறம்
16. பாவப்பொலிவு

## படிம வகைகள்

படிமங்கள் மூன்று வகைப்படும்: (1) சித்திரம், (2) சித்ரார்த்தம். (3) சித்ராபாசம்.

படிமங்களின் எல்லா உறுப்புகளும் முழுமையாகவும் அவ்வவற்றுக்குரிய அளவிலும் அமைப்பிலும் இயற்றப்படின் சித்திரம் (முழு ஓவியம்) என்று சொல்லப்படும். உலோகங்களில் செய்யப்படும் படிமங்கள் இவ் வகைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். இது பூர்ண சித்திரம் என்றும் கூறப்படும்.

படிமங்களின் முற்பகுதி உறுப்புகள் மட்டும் இயற்றப்பட்டு பின் உறுப்புகள் புலப்படுத்தப் படாமல் அமையும் படிமங்களைச் சித்ரார்த்தம் (புடை ஓவியம்) என்று சொல்லப்படும். சுவர்களில் சுதையினால் உருவத்தின் முன்பகுதிகள் மட்டும் அவ்வவற்றுக்குரிய அளவுகளில் அமைக்கபடுகின்றன. புடை ஓவியங்களை மற்ற பொருள்களால் அமைப்பதும் உண்டு.

சுவர், திரைச்சீலை, பலகை, காகிதம் முதலியவற்றின் மீது புடைப்பின்றித் தீட்டப்படும் ஓவியங்கள் சித்ராபாசம் (பட ஓவியம்) என்று சொல்லப்படும். இவை கோட்டுச் சித்திரங்களாகவும் வண்ண ஓவியங்களாகவும் அமைக்கப்படும். இவற்றைப் படங்கள் என்றும் சொல்வதுண்டு.

முழு உருவங்களை வழிபடுவதால் உத்தம பலனையும. புடைப்பு உருவங்களை வழிபடுவதால் மத்திம பலனையும் சித்ராபாசம் என்ற பட ஓவியங்களை வழிபடுவதால் குறைந்த பலனையும் வழிபடுவோர் பெறுவர் என்று சிற்ப நூல்கள் இயம்புகின்றன.

படிமங்கள் மேலும் மூன்று வகைப்படும். அவை முறையே: (1) அசலம், (2) சலம். (3) சலாசலம்.

## அசலம்

படிமங்கள் செய்த இடங்களிலிருந்தோ அல்லது நிறுவப்பட்ட இடங்களிலிருந்தோ அசைக்க இயலா வண்ணம் அல்லது அசைக்கக் கூடா நிலையில் இருப்பின் அசலம் என்று சொல்லப்படும். பாறைகளில் செதுக்கப்பட்டிருக்கும் படிமங்களும், மண்ணாலும் சுதையாலும், சுக்கானாலும் அமைக்கப்படும் படிமங்களும், அமைத்த இடத்திலேயே அசையாதிருக்கும் அசல வடிவங்களுக்கு எடுத்துக் காட்டுகள்.

## சலம்

படிமங்கள் ஓரிடம் விட்டு வேறிடம் நகர்த்தக் கூடிய வண்ணம் இருப்பினும் அல்லது அந் நோக்கத்தில் நிறுவப்பட்டிருப்பினும் அவை சலம் என்று சொல்லப்படும். கருங்கல், மரம், தாதுப் பொருட்கள், ரத்தினங்கள், உலோகங்கள் ஆகிய பொருள்களால் செய்யப்படும் படிமங்கள் சலப் படிமங்களுக்கு உதாரணங்களாம்.

## சலாசலம்

படிமங்களை இடம் விட்டு இடம் மாற்றக்கூடியதும் ஆனால் மாற்றக்கூடாது என்ற நோக்கத்தில் நிறுவப்பெற்ற படிமங்கள் சலாசலம் என்று கூறப்படும். கருங்கல், மரம் ஆகியவற்றால் செய்யப்பட்டு ஓரிடத்தில் நிலையாகப் பொருத்தி வைக்கப்பட்ட படிமங்கள் இவற்றுக்கு உதாரணம் ஆகும்.

தெய்வத் திருவுருவங்கள், சாத்விகம், இராஜஸம், தாமஸம் என்று மூன்று வகைப்படும்.

## சாத்விகப் படிமம்

எத் திருவுருவம் யோக முத்திரையையும், இயற்கையான சாந்த நிலையையும், அன்பர்க்கு அச்சகத்தை அகற்றி வேண்டுவனவற்றை அளிக்கும் கைகளையும் கொண்டதாய் விளங்குகின்றதோ அதுவே சாத்விகத் திருவுருவம் எனப்படும். தட்சிணாமூர்த்தி வடிவம் இதற்கு உதாரணம் ஆகும்.

### இராஜஸப் படிமம்

எத் திருவுருவம் நின்ற கோலத்திலாதல், ஊர்தியில் ஏறி இருக்கும் நிலையிலாதல், பல்வகை அணிகலங்களால் அலங்கரிக்கப்பட்டு அம்பு, வாள் முதலிய படைகளைத் தாங்கி அச்சம் அகற்றி (அபயம்) வேண்டுவனவற்றை அருளும் (வரதம்) கைகளை உடைதாய் விளங்குகின்றதோ, அதுவே இராஜஸத் திருவுருவம் என்று கூறப்படும். ஆறுமுகப் பெருமானின் திருக்கோலம் இராஜஸக் கோலம் ஆகும்.

### தாமஸப் படிமம்

எத் திருவுருவம், அம்பு, வாள் முதலிய படைகளால் கொடியவர்களைக் கொல்வதாகவும், எப்பொழுதும் அச்சுறுத்தும் தோற்றத்தை உடையதாகவும், போர்த்தொழிலில் மகிழ்ச்சியுள்ளதாகவும் விளங்குகின்றதோ அதுவே தாமஸத் திருவுருவம் என்று கூறப்படும். மகிஷாசுர மர்த்தனி இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டு.

படிமங்கள் அளவு முறையால் மேலும் மூன்று வகைப்படும். ஏழுதாள அளவு உயரமுள்ள உருவம் வாமனம் எனவும், எட்டு தாள அளவு உள்ள உயரம் மானுடம் எனவும், ஒன்பது தாள அளவு உள்ள உயரம் தெய்விகம் எனவும் கூறப்படும்.

### படிம பொருள்கள்[1]

1. களிமண்
2. சுடுமண் (செங்கல்)
3. சுதை
4. கடுசர்க்கரை (சுக்கான்)
5. மரம்
6. கல்
7. உலோகம்
8. தந்தம்
9. வண்ணம்
10. இரத்தினம்

மண்ணுக்கு மரமும், மரத்திற்கு கல்லும், கல்லுக்கு உலோகமும், உலோகத்திற்கு ரத்தினங்களும் உயர்ந்தவையாகும்.

உலோகங்களில் தாமிரத்திற்கு வெள்ளியும், வெள்ளிக்குத் தங்கமும், வழிபடு படிமங்கள் செய்ய உயர்ந்தவையாகும்.

ஏனெனில் பொருளுக்கு ஏற்றவாறு தெய்வத் தன்மையும் ஒன்றுக்கொன்று வேறுபட்டுக் காணப்படும் என்று சிற்ப, ஆகம நூல்கள் கூறுகின்றன.

நல்ல பலன்தரும் மரத்தை, உவர் நிலம், சத்துள்ள நிலம் மற்றும் வேறு விதமான நிலத்தில் பயிர் செய்தால் எங்ஙனம் நில வேறுபாட்டால் பலன் வேறுபடுகிறதோ, அங்ஙனமே தெய்வப் பலனானது செய்யப்படும் பொருள் வேறுபாட்டால் கூடுதல் குறைவு ஏற்படும் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

தந்தத்தினால் வழிபடு படிமங்களைச் செய்வதில்லை. அது காட்சிப் பொருளுக்கே ஏற்றதாம்.

வழிபடு படிமங்களை உரிய சிறந்த பொருள்களால் செய்து வழிப்பட்டால் வழிபடுவோர் மகப்பேறு முதலானவற்றை யடைந்து உலகில் வாழ்வாங்கு வாழ்ந்து, வீடுபேற்றையும் அடைவார்கள் என்பது நூலோர் முடிபு.

---

1. "கல்லும், உலோகமும், செங்கல்லும், மரமும்,
மண்ணும், சுதையும், தந்தமும், வண்ணமும்,
கண்ட சருக்கரையும், மெழுகும் என்றிவை
பத்தே சிற்பத்தொழிற்கு உறுப்பாகும்."
என்று பிங்கல நிகண்டு (3-129) பேசும்.

# 3

# தெய்வத் திருமேனிகளின் உயர நிர்ணயம்



## படிம மானங்கள்

திருக்கோயில்களில் மூல மூர்த்தங்கள் என்றும், பரிவார மூர்த்தங்கள் என்றும், உற்சவ மூர்த்தங்கள் என்றும், மூன்று வகையான படிமங்கள் காணப்படும். இவற்றின் உயரங்களை நிர்ணயம் செய்வது பற்றிச் சிற்ப நூல்கள் பல்வேறு வழிகளைக் காட்டுகின்றன.

சிவாலயங்களில் சிவலிங்கமும், பிற கோயில்களில் அவற்றிற்குரிய வெவ்வேறு திருமேனிகளும் மூல மூர்த்திகளாக அமைக்கப்படுகின்றன. எனவே, அவற்றின் உயரங்களைத் தெரிந்து கொண்டு அவற்றிலிருந்து அவ்வவற்றுக்குரிய பரிவார, உற்சவ மூர்த்தங்களின் உயரங்களை நிர்ணயம் செய்தல் வேண்டும். அல்லது அந்தந்த மூர்த்தங்களுக்கு அமைக்கப்பட்டிருக்கும் திருக்கோயில்களில் குறிப்பிட்ட ஒரு சில உறுப்புகளில் ஒன்றின் அளவுகளிலிருந்தும் உயரங்களை நிர்ணயிக்கலாம். இவற்றை விடுத்துத் தனித்த ஒரு சில அளவுகளைக் கொண்டும் அம் மூர்த்தங்களின் உயரங்களைக் கணித்துக் கொள்ளலாம். எந்த அளவு எங்கு பொருந்தும் என்பதை இடம், பொருள் ஆகியவற்றிற் கேற்பச் சிற்பிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு படிமத்தின் தாள் முதல் உச்சந்தலை வரை உள்ள நின்றகோல உயரமே படிம மானம் எனப்படும். கிரீடம், தனது பீடம் ஆகியவற்றுக்குக் கொள்ளும் உயரங்கள் இவ் அளவில் அடங்கா. படிமங்களை அமர்ந்த கோலத்திலோ அல்லது கிடந்த கோலத்திலோ செய்ய வேண்டுமானாலும் நின்ற உயர அளவைத் தேர்ந்தெடுத்துக் கொண்டே அவ்வவற்றுக்குரிய அளவில் அமர்ந்த அல்லது கிடந்த கோலங்களை அமைக்க வேண்டும்.



படிம உயரம்

மூலப் படிமங்களின் உயரங்களை நிர்ணயித்தற்குப் பன்னிரண்டு வழிகள் இருக்கின்றன. இந்த மானங்களால் மூல மூர்த்தங்கள், பரிவார மூர்த்தங்கள், உற்சவ மூர்த்தங்கள் ஆகியவற்றின் உயரங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஆனால், மூல லிங்க அளவுகளைக் கணிக்க ஏதுவான தனி முறையினை வேறு அத்தியாயத்தில் காண்க.

வழிபடு படிமத்தின் உயரத்தைக் கீழ்க்கண்ட 12 வழிகளில் அமைத்துக் கொள்ளலாம்.

1. லிங்க மானத்தால்
2. கர்ப்ப மானத்தால்

3. துவார மானத்தால்
4. அதிட்டான மானத்தால்
5. பாத மானத்தால்
6. மூலபேர மானத்தால்
7. மானாங்குலத்தால்
8. மாத்ராங்குலத்தால்
9. முழ மானத்தால்
10. தாள மானத்தால்
11. கர்த்தாவின் (செய்விப்போன்) உயர மானத்தால்
12. ஹர்மிய மானத்தால்

## லிங்க பூஜாம்சமும் அளவுகொள்முறையும்

சிவலிங்கமானது அடியிலிருந்து மேல்நோக்கி பிரம்ம பாகம், விஷ்ணு பாகம், ருத்ர பாகம், என்று மூன்று அங்கங்களாக ஒரே அமைப்பில் செய்யப்படும். இவற்றில் பிரம்ம பாகம் திருவுண்ணாழித் தள மட்டத்திற்குக் கீழேயும், விஷ்ணு பாகம் தள மட்டத்திற்கு மேல் ஆவுடையாருக்குள்ளும் மறைந்திருக்கும். மூன்றாவது கூறாகிய ருத்ர பாகம் ஆவுடையாருக்குள்ளும் மேல் மட்டத்திலிருந்து ஓங்கியும் நிற்கும். இங்ஙனம் வெளியே தெரியும் பாகம் பூஜாபாகம் என்றும், பூஜாம்சம் என்றும் சொல்லப்படும். இவ் வமைப்பு சிற்பிகளால் செதுக்கப் பெறும் மானுஷ லிங்கங்களில் அமையும். பிற வகையான சுயம்பு, பாண லிங்கங்களில் பிரம்ம பாகம்.




1. பிரம்ம பாகம்; 2. விஷ்ணு பாகம்/ஆவுடையார்; 3. ருத்ர பாகம்/பூஜாம்சம்; 4. சிரோவர்த்தனம்

விஷ்ணு பாகம் என்பன இரா. ஆனால், அவை ஆவுடையாருடன் சேர்ந்தே பூசிக்கப்படும். இங்ஙனம் அமைந்த எல்லாவகை லிங்கங்களின் பூஜாம்சம் என்பது ஆவுடையார் மேல் மட்டத்திலிருந்து மிக உயரமான எல்லைவரை உள்ள பகுதியின் அளவேயாகும். மானுட லிங்கங்களின் தலைப்பகுதியில் புடைத்துக் குடை போன்றமைந்த பகுதி சிரோவர்த்தனம் என்று சொல்லப்படும். மானுட லிங்கங்களில் சிரோ வர்த்தனத்தை நீக்கி மீதியுள்ள பாகத்தை பூஜாம்ச உயரமாகக் கொள்ளுதல் வேண்டும். சுயம்பு லிங்கம், பாண லிங்கம் ஆகியவற்றில் இத்தகைய சிரோவர்த்தனம் என்ற அமைப்பு இராத காரணத்தால் ஆவுடையாரின் மேல் மட்டத்திலிருந்து வெளித்தோன்றும் பகுதியில் அதிக உயரமுள்ளதைப் பூஜாம்ச உயரமாகக் கொள்ளுதல் வேண்டும். இந்த அளவு பிற சைவப் படிமங்களின் உயரங்களை நிர்ணயிப்பதற்கு மூல அளவாகக் கொள்ளப்படுகிறது.

லிங்க பூஜாம்ச உயரத்தைக் கொள்ளுவதைப் போலவே லிங்க பூஜாம்ச அகலம் அல்லது சுற்றளவு இதில் ஏதாவதொன்றை மூல அளவாகக் கொள்ளுதலும் மரபு. ஆனால், சுயம்புலிங்கம், பாண லிங்கம் மற்றும் பிற லிங்கங்களிலிருந்து அகலம், சுற்றளவு ஆகிய அளவுகளைக் காண அந்தந்த லிங்கங்களில் எவ்விடத்தில் அதிகப் பருமன் உள்ளதோ அவ்விடத்தின் அளவுகளைப் பற்றுதல் வேண்டும். எனவே லிங்க மானத்திலிருந்து படிம மானங்களை நிர்ணயம் செய்வதற்கு லிங்க பூஜாம்ச உயரம், அகலம், சுற்றளவு எனத் தனித்தனியே மூன்று அடிப்படை அளவுகள் கிடைக்கின்றன என்பதை சிற்பிகள் கருத்திற் கொள்ள வேண்டும்.

மான விதிகள்

லிங்க பூஜாம்ச உயரத்திற்குச் சமமாகவோ அல்லது அகலத்திற்குச் சமமாகவோ அல்லது சுற்றளவுக்குச் சமமாகவோ படிமங்களின் உயரம் இருக்க வேண்டும்.

லிங்க பூஜாம்ச உயர அளவை 16 கூறுகளாகப் பிரித்து அத்துடன் 3.5.7.9.11 ஆகிய கூறுகளை முறையே. கூட்டியோ அல்லது குறைத்தோ கிடைக்கும் 10 அளவுகளில் ஒன்றினைப் படிமத்தின் உயரமாகக் கொள்ளலாம்.

இங்ஙனமே அகல அளவினால் 10 உயரங்களும், சுற்றளவினால் 10 உயரங்களும் கிடைப்பதில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகக் கொள்ளலாம். எனவே மொத்தத்தில் கிடைக்கும் 33 உயரங்களில் பொருத்தமான ஏதேனும் ஒன்றைச் சிற்பிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.[1]

லிங்க பூஜாம்ச அகலம், சுற்றளவு, உயரம், ஆகியவற்றைத் தனித்தனியே 16 கூறுகளாகப் பிரித்து அக் கூறுகளுடன் ஒவ்வொரு கூறையும் முறையே கூட்டியோ அல்லது குறைத்தோ 11 விதமான படிம உயரங்களைப் பெறலாம். (17,18,19,20,21,22, 23,24,25,26,27); (15,14,13,12,11,10,9,8,7,6,5).[2]

லிங்க பூஜாம்ச உயரத்தை் இரட்டித்து அதனை 32 கூறுகளாகப் பிரித்து அக் கூறுகளில் 5,7,9,11,13,16,19,21,23,25,27 கூறுகள் ஆகிய ஏதேனும் ஒன்றினைப் படிம உயரமாகவும் நிர்ணயிக்கலாம். இதே முறையில் லிங்க அகலம், லிங்கச் சுற்றளவு ஆகியவற்றைத் தனித்தனியே இரட்டித்து, 32 கூறுகளாகப் பிரித்து, மேற்குறிப்பிட்ட 11 விதமான உயரங்களைக் கணித்து ஏதேனும் ஒன்றை படிம உயரமாகவும் கொள்ளலாம். இம்முறைகளால் மொத்தத்தில் 33 உயர அளவுகள் கிடைக்கின்றன.

அன்றியும், மேற்குறிப்பிட்ட 11 விதமான உயரங்களைத் தனித்தனியாக 9 கூறுகளாகப் பிரித்து அதன் ஒரு கூறுமுதல் 27 கூறுவரை 27 விதமான உயரங்களை, பூஜாம்ச உயரத்தாலும் அகலத்தாலும் சுற்றளவாலும் தனித்தனியே பெறலாம். இம் முறையில் மொத்தத்தில் 81 விதமான உயரங்கள் கிடைப்பதில் ஏதேனும் பொருத்தமான ஒன்றினைச் சிற்பிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.[3]

மேலும் லிங்க பூஜாம்ச உயரத்தை 9 கூறுகளாக்கி அத்தகைய கூறுகளில் ஒன்று முதல் 27 கூறுகள் வரை 27 உயரங்களும், பூஜாம்ச உயரத்தை இரட்டித்து அதனை 31 கூறுகளாக்கி, 31 கூறிலிருந்து இரண்டிரண்டு கூறுகளாகக் குறைத்து 5 கூறுகள் வரை 14 விதமான உயரங்கள் கிடைப்பதில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகவும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

லிங்க பூஜாம்ச உயரத்திற்குச் சமம், இரு மடங்கு, மும் மடங்கு ஆகிய அளவுகளைக் கொண்ட படிம உயரங்கள் முறையே கன்னியசம் மத்திமம், உத்தமம் என்று சொல்லப்படும். உத்தம அளவிற்கும் கன்னியச அளவிற்கும் உள்ள வித்தியாசத்தை 8 கூறுகளாக்கி, கன்னியச அளவு முதல் உத்தம அளவு வரை ஒவ்வொரு கூறாகக் கூட்டி 9 வகையான உயரங்களைப் பெறலாம்.

இங்ஙனமே லிங்க பூஜாம்ச அகலத்தாலும் சுற்றளவாலும் ஒன்பதொன்பது அளவுகளைப் பெறக்கூடும். இந்த அளவுகளில் ஏதேனும் ஒன்றினைப் பொருத்தமுடன் தேர்ந்து கொள்ளுதல் வேண்டும்.[4]

திருவுண்ணாழிக் கால்புறவாய் அகல அளவை அடிப்படையாகக் கொண்டு ஜாதி, சந்தம், விகல்பம், ஆபாசம், என்று நான்கு வகையாகக் கட்டடத்தைச் சிற்ப நூல்கள் பாகுபடுத்திக் கூறும்.

மூல லிங்க உயரத்திற்குச் சம அளவு, முக்கால் பங்கு, அரைப்பங்கு, கால் பங்கு உயரங்களை முறையே ஜாதி, சந்த, விகல்ப, ஆபாச ஆலயங்களில் அமைக்க வேண்டிய சகளத் திருமேனியின் உயர அளவாகக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் சுற்றளவிற்குச் சமம், முக்கால், அரை, கால் பங்கு அளவுகள் முறையே அந் நால்வகை ஆலயங்களுக்கு ஏற்ற படிம மானங்களாகும். அல்லது லிங்க உயரத்திற்குச் சம அளவிலிருந்து கால், கால் பங்காகக் கூட்டி மூன்று மடங்கு அளவு வரை ஒன்பது விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றினைப் படிம உயரமாகவும் கொள்ளலாம்.[5]

லிங்க பூஜாம்ச உயரத்திற்குச் சமம் அல்லது ஒன்றரை மடங்கு அல்லது இரண்டு மடங்கு ஜங்கமப் படிமங்களுக்கு உயர அளவுகளாகும். மேலும், பூஜாம்ச உயரத்தைப்போல் இரண்டரை அல்லது மூன்று மடங்கு ஜங்கமப் பிரதிமையின் உயரமாகவும் இருக்கலாம்.[6] இம்முறை சாளக் கிராமம், பாணலிங்கம் போன்றவை மூல லிங்கமாக உள்ள ஆலயங்கட்கு மிகவும் ஏற்றது.

லிங்க பூஜாம்ச உயரத்திற்குச் சமஅளவு இரு மடங்கு, மூன்று மடங்கு ஆகிய ஒவ்வொன்றையும் 27 பாகம் செய்து மூன்று பாகம் முதல் இரண்டு இரண்டு பாகமாகக் கூட்டி 27 கூறுவரை கிடைக்கும் 13 விதமான உயரங்களைப் படிம உயரமாகக் கொள்ளலாம். அல்லது மேற்கண்ட அளவுகளை 64 கூறுகள் செய்து, மூன்று கூறு முதல் ஒவ்வொரு கூறாகக்கூட்டி, 64 கூறுவரை 62 விதமான உயரங்களை அமைக்கலாம். அல்லது 29 கூறுகள் செய்து மூன்று கூறு முதல் ஒவ்வொன்றாகக் கூட்டி 29 கூறு வரை 27 விதமான உயரங்களைப் பெறலாம்.

லிங்க பூஜாம்ச அகலத்தை 33 கூறுகள் செய்து மூன்று கூறு முதல் ஒவ்வொன்றாக ஏற்றி 33 கூறு வரை 31 உயரங்களும் 43 கூறுகள் செய்து 5 கூறு முதல் இரண்டிரண்டாகக் கூட்டி 43 கூறு வரை 20 உயரங்களும், அல்லது 57 கூறுகள் செய்து மூன்று கூறு முதல் இரண்டிரண்டாக 57 கூறு வரைக் கூட்டி 28 உயரங்களும், அல்லது 65 கூறுகள் செய்து 5 கூறு முதல் இரண்டிரண்டாகக் கூட்டி 65 கூறு வரை 31 கூறுகளும் கிடைப்பதில் பொருத்தமான ஏதேனும் ஒன்றினைப் படிம உயரமாக ஏற்கலாம்.[7]

லிங்க பூஜாம்ச உயரத்திற்குச் சமம் அல்லது மூன்று மடங்கு அல்லது ஐந்து மடங்கு அளவு படிமங்களின் உயர மானங்களாக இருக்கலாம்.

அல்லது ஒவ்வொன்றையும் மூன்று கூறுகளாகப் பிரிக்க 9 வகையான உயரங்கள் கிடைக்கும். எனவே, அங்ஙனம் கிடைத்த 18 உயரங்களில் ஏதேனும் ஒன்றினை, இடத்திற்கும் பொருளுக்கும் ஏற்றவாறு தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

நித்யோத்சவர், அஸ்த்ர மூர்த்தி ஆகிய படிமங்களின் உயரத்தை லிங்க பூஜாம்ச உயரத்தால் செய்யின், பூஜாம்ச உயரத்தை 5 பாகம் செய்து ஒரு கூறுமுதல் ஒன்பது கூறுவரை ஒன்பது விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றினைப் படிம உயரமாகக் கொள்ளலாம்.

லிங்க பூஜாம்ச உயரத்தால் தேவியின் உயரம் காண, லிங்க பூஜாம்ச உயர அளவிற்குச் சம அளவிலிருந்து கால், கால் பங்காகக் கூட்டி, ஆறு மடங்கு வரை 24 விதமான உயரங்களாகக் கொள்ளலாம்[8].

## துவார மானத்தால் படிம மானம்

திருவுண்ணாழி என்ற கர்ப்பக்கிருஹ துவாரமாகிற திருவாயில், உள் அளவை அடிப்படையாகக் கொண்டு படிம மானங்கள் நிர்ணயம் செய்யத் தக்க பல்வேறு முறைகளைக் கீழே காணலாம். பிம்பத் துவார உயரத்திலும் படிம மானங்கள் கொள்ளும் விதியும் இதில் இடம் பெறுகின்றது. பிம்பத்துவாரத்தைப் பற்றிய இலக்கணத்தைத் 'துவார இலக்கணம்' என்ற இயலில் கண்டு கொள்க.

சுத்தத்துவார உயரத்திற்குச் சமம் அல்லது ஒன்றேகால் பங்கு அல்லது முக்கால் பங்கு உயரம் படிம உயரமாக இருக்கலாம். சம உயரத்திற்கும் முக்கால் பங்குக்கும் அதே போல் சம உயரத்திற்கும் ஒன்றேகால் பங்கு உயரத்திற்கும் உள்ள வித்தியாசத்தை 4 பாகங்கள் செய்து மொத்தத்தில் 9 விதமாகப் படிம உயரம் வைக்கலாம். ($1\frac{1}{4}, 1\frac{3}{16}, 1\frac{1}{8}, 1\frac{1}{16}, 1, \frac{15}{16}, \frac{7}{8}, \frac{13}{16}, \frac{3}{4}$).[9]

சுத்தத்துவார அகலம், உயரம் ஆகிய ஒவ்வொன்றையும் 4 கூறுகள் செய்து அத்துடன் ஒரு கூறு கூட்டி அல்லது ஒரு கூறு குறைத்துக் கிடைத்த ஒன்றேகால் பங்கு, முக்கால் பங்கு உயரங்களுக்கிடையேயுள்ள வித்தியாசத்தை 4 கூறுகளாகப் பிரித்து முக்கால் பங்கு முதல் கால், கால் கூறாகக் கூட்ட ஒவ்வொரு வகையாலும் ஐந்துவித உயரங்கள் கிடைக்கும். இதில் ஏதேனும் ஒன்றைப் பிம்ப உயரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

சுத்தத்துவார உயர அளவினால்: $\frac{3}{4}, \frac{7}{8}, 1, 1\frac{1}{8}, 1\frac{1}{4}$ (ஐந்து விதம்)

அல்லது

சுத்தத்துவார அகல அளவினால்: $\frac{3}{4}, \frac{7}{8}, 1, 1\frac{1}{8}, 1\frac{1}{4}$ (ஐந்து விதம்)[10].




1. உபபீடம் 2. அதிஷ்டானம் 3. பாதம்/கால் 4. பிரஸ்தரம்
5. கால்புறவாய் அகலம் 6. வாயில் உள் உயரம் 7. வாயில் உள் அகலம்

சுத்தத் துவார உயரத்தோடு கால் பங்கு கூடிய உயரம் உத்தம உயரம் என்றும், சம உயரம் மத்திம உயரம் என்றும், முக்கால் பங்கு அதம உயரம் என்றும் கொண்டு, இவ் அளவுகளில் ஏதேனும் ஒன்றைப் பிம்ப மானமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.[11]

மேற் குறிப்பிட்ட உத்தம உயரத்திற்கும் அதம உயரத்திற்கும் உள்ள வித்தியாசத்தை 8 கூறுகள் செய்து அதம மானத்திலிருந்து ஒவ்வொரு கூறாக உத்தம மானம் வரை கூட்டினால் மொத்தத்தில் ஒன்பது விதமான உயரங்கள் கிடைக்கும்.[12]

அல்லது, துவார உயரத்தை 27 கூறுகளாக்கி 27 கூறிலிருந்து ஒவ்வொரு கூறாகக் குறைத்து 27 வகையான உயரங்களைப் பெறலாம். மொத்தத்தில் துவார மானத்தால் 36 விதமான உயரங்கள் கிடைப்பதில் ஏதேனும் ஒன்றைப்படிம மானமாகத் தேர்ந்து கொள்ளவேண்டும்.[13]

சுத்தத் துவார உயரத்தை 8 கூறுகள் செய்து 5 கூறு உயரம் அல்லது 4 கூறு உயரம் அல்லது 3 கூறு உயரம் சகளத் திருமேனியின் உயரமாக இருக்கலாம். அல்லது 8-ல் 5 பாகத்திற்கும் 8-ல் 3 பாகத்திற்கும் உள்ள வித்தியாச்தை 8 கூறு செய்து 9 விதமான உயரங்களைப் பெறலாம்.[14]

சுத்தத் துவார உயரத்திற்குச் சம அளவு உயரமுடைய பிம்பம் உத்தமம் என்றும், முக்கால் பங்கு உயரம் மத்திமம் என்றும், அரைப் பங்கு உயரம் கன்னியசம் என்றும் கொண்டு உத்தம அளவிற்கும் கன்னியச அளவிற்கும் இடைப்பட்ட வித்தியாசத்தை 8 கூறுகளாக்கி, கன்னியச அளவு முதல் ஒவ்வொரு கூறாகக் கூட்டி உத்தம அளவு வரை 9 விதமான படிம உயரங்களைப் பெறலாம்.[15]

அல்லது துவார உயரத்தை 9 கூறுகளாக்கி ஒரு கூறு முதல் 9 கூறு வரை 9 விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றைப் படிம மானமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.[16]

சுத்தத் துவார உயரத்திற்குச் சமம் அல்லது 9-ல் 8 பாகம் அல்லது 8-ல் 7 பாகம், படிம உயரம் இருக்கலாம்.[17]

சுத்தத் துவார உயரத்திற்குச் சமம் அல்லது உயரத்தை 3 கூறு செய்வது 2 கூறு உயரம் அல்லது ஒரு கூறு உயரம் பிம்ப உயரமாக இருக்கலாம். மேலும் ஒவ்வொரு அளவையும் மும்மூன்று கூறாகப் பிரித்து, மொத்தத்தில் 9 விதமான உயரங்களைப் பெறலாம். இவற்றில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.[18]

சுத்தத் துவார உயரத்தை 5 கூறுகள் செய்து 1 கூறு முதல் 5 கூறு வரை 5 விதமாகப் படிம உயரம் கொள்ளலாம்.

பிம்பத் துவார உயரத்தால் படிம உயரம் கொள்ள வேண்டுமானால் பிம்பத் துவார உயரத்திற்குச் சம உயரம் படிம மானம் இருக்கலாம். அல்லது பிம்பத் துவாரத்தை 4 கூறு செய்து 1 கூறு ஏற்றிய 5 கூறு உயரமாதல், 3 கூறு செய்து 1 கூறு ஏற்றிய 4 கூறு உயரமாதல், 8 கூறு செய்து 1 ஏற்றிய 9 கூறு உயரமாதல், 9 கூறு செய்து 1 ஏற்றிய 10 கூறு உயரமாதல் படிம உயரம் இருக்கலாம். அல்லது பிம்பத் துவார உயரத்தை 3 கூறு செய்து 1 கூறு குறைத்து 2 கூறு உயரமாதல், அங்ஙனமே 4 கூறு செய்து 1 கூறு குறைத்து 3 கூறு உயரமாதல் அல்லது 8 கூறு செய்து 1 கூறு குறைத்து 7 கூறு உயரமாதல், அல்லது 9 கூறு செய்து 1 கூறு குறைத்து 8 கூறு உயரமாதல் படிம உயரம் இருக்கலாம். இங்ஙனம் 9 விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றைப் படிம மானமாகத் தேர்ந்து கொள்ள வேண்டும்.[19]

அதிஷ்டான மானத்தால்
படிம மானம்
பாத மானத்தால்

கர்ப்பக்கிருஹ கட்டடமானது அதிஷ்டானம். பாதம், பிரஸ்தரம்,சிகரம் ஆகிய உறுப்புகளைக் கொண்டிருக்கும். இவ் வுறுப்புகளில் அதிஷ்டானமும் பாதமும் மிக முக்கியமான உறுப்புக்களாகும். மேலும், இவ் வுறுப்புகளின் அளவுகள் கர்ப்பக்கிருஹக் கால்புறவாய் அகலத்துடன் தொடர்புடையவை. எனவே, இவ் வுறுப்புகளின் அளவுகளைக் கொண்டு பிம்பங்களின் உயரத்தை நிர்ணயிக்கவும் செய்யலாம்.

அதிஷ்டானம், பாதம், ஆகியவற்றின் உயரத்திற்கு சமம், கால் பங்கு அளவு கூடியது அல்லது கால் பங்கு அளவு குறைந்தது பிம்ப உயரமாக இருக்கலாம். அல்லது இவ் விரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தை நான்கு கூறுகள் செய்து ஒன்பது விதமாகப் பிம்பத்தின் உயரத்தை நிர்ணயிக்கலாம்.

பாத உயரத்திற்குச் சம உயரம் அல்லது ஒன்றேகால் பங்கு அல்லது முக்கால் பங்கு பிம்ப உயரம் இருக்கலாம். அல்லது சம உயரத்திற்கும் ஒன்றேகால் பங்கு உயரத்திற்கும் உள்ள வித்தியாசத்தை நான்கு கூறுகள் செய்தும், அதேபோல் சம உயரத்திற்கும் முக்கால் பங்கு உயரத்திற்கும் உள்ள வித்தியாசத்தை நான்கு கூறுகள் செய்தும், முக்கால் பங்கிலிருந்து ஒவ்வொரு கூறாக ஏற்றி ஒன்றேகால் பங்கு வரை ஒன்பது விதமான உயரங்களைப் பெறலாம். இவற்றில் ஏதேனும் ஒன்றைப் படிம மானமாகத் தேர்ந்து கொள்ளுதல் வேண்டும்.[20]

அதிஷ்டானம் அல்லது பாதம் ஆகிய ஏதாவது ஒன்றின் உயரத்தினை ஒன்பது கூறு செய்து, ஒரு கூறு முதல் ஒன்பது கூறு வரை ஒவ்வொன்றிலிருந்தும் ஒன்பது விதமான உயரங்கள் வருவதில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகக் கொள்ளலாம்[21].

அதிஷ்டானம் அல்லது பாதத்தின் உயரத்தை 27 கூறுகள் செய்து, ஒன்று முதல் 27 கூறு வரை 27 விதமான உயரங்களைப் பெறலாம். இதில் ஏதேனும் ஒன்றைப் படிம மானமாகக் கொள்ளுதல் வேண்டும்[22].

பாதம் அல்லது அதிஷ்டானத்தின் உயரத்தை ஒன்பது கூறு செய்து ஒரு கூறு முதல் ஒன்பது கூறு வரை ஒவ்வொன்றிலும் ஒன்பது விதமான உயரங்கள் கிடைக்கப் பெறுவதில் ஏதேனும் ஒன்றைப் படிம மானமாகக் கொள்ளலாம்.[23]

அதிஷ்டான உயரத்திற்குச் சமம் அல்லது முக்கால் அல்லது அரைப் பங்கு, பிம்ப உயரம் இருக்கலாம். இவற்றை முறையே உத்தம, மத்திம, கன்னியச, அளவுகள் என்று கொண்டு உத்தம அளவிற்கும் கன்னியச அளவிற்கும் உள்ள வித்தியாச அளவை 8 கூறுகள் செய்து உத்தம அளவிலிருந்து கன்னியச அளவு வரை ஒன்பது விதமான உயரங்கள் கிடைப்பதில் ஏதேனும் ஒன்றைப் படிம மானமாக ஏற்கலாம். அல்லது பாத உயரத்திற்குச் சம உயரமுடைய பிம்ப உயரத்தைக் கொள்ளலாம்.[24]

பாத உயரத்திற்கு சம உயரம், அல்லது பாத உயரத்தை 9 கூறு செய்து அதில் 8 கூறு உயரம் அல்லது 8 கூறு செய்து அதில் 7 கூறு உயரம் ஆகிய மூன்று விதமான உயரங்களைப் பிம்ப உயரங்களாக தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.[25]

அதிஷ்டான உயரத்திற்கு சமம்; அல்லது முக்கால் பங்கு, அல்லது அரைப்பங்கு, படிம உயரமாக இருக்கலாம். அல்லது இவை ஒவ்வொன்றுக்கும் உள்ள வித்தியாச அளவை எட்டு பாகம் செய்து பதினெட்டு விதமான உயரங்களை நிர்ணயிக்கலாம். பாத உயரத்தை 32 கூறு செய்து 5 கூறு முதல் ஒவ்வொன்றாகக் கூட்டி 28 வித உயரமும் 124 கூறு செய்து 5 கூறு முதல் ஒவ்வொன்றாக கூட்டி 120 வித உயரமும் கிடைக்கும். இதில் ஏதேனும் ஒன்றைப் பிம்ப உயரமாகத் தேர்ந்து கொள்ளுதல் வேண்டும்.[26]

அதிஷ்டானம் அல்லது பாதத்தின் உயரத்தை 10 கூறுகளாகச் செய்து 5 கூறு முதல் ஒவ்வொரு கூறாக ஏற்றி, 100 கூறு வரை 96 விதமான உயரங்களில் ஏதேனும் பொருத்தமான ஓர் அளவை உயரமாகக் கொள்ளலாம்.[27]

முழத்தால்
———————— படிம மானம்
தாள மானத்தால்

ஒரு முழம் முதல் ஒவ்வொரு முழமாகக் கூட்டி ஒன்பது முழ அளவு வரை வரும் ஒன்பது விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றினைப் படிம உயரமாகத் தேர்ந்து கொள்ளுதல் வேண்டும்.[28]

முழ மானத்தினால் பிம்பங்களின் உயரத்தை நிர்ணயம் செய்து அப் பிம்பத்தை வழிபட்டால் காமம், மோஷம் ஆகியவற்றைப் பெறலாம் என்று மானசாரம் கூறுகிறது.[29]

ஒரு தாள உயரம் முதல் 10 தாள உயரம் வரை பத்து விதமான உயரங்களைப் பிம்பங்களின் உயரங்களாகக் கொள்ளலாம்.[30]

ஒரு முழம் முதல் மும்மூன்று விரலாக ஏற்றி ஒன்பது முழம் வரை 65 விதமாகப் பிம்ப உயரத்தை நிர்ணயம் செய்யலாம்.[31]

ஒரு முழம் முதல் ஒவ்வொரு முழமாகக் கூட்டி ஒன்பது முழம் வரை ஒன்பது விதமான உயரங்கள் கிடைப்பதில் முதல் மூன்றினை உத்தமம் என்றும், இடையிட்ட மூன்றினை மத்திமம் என்றும், இறுதியான மூன்றினைக் கன்னியசம் என்றும், கொண்டு இவற்றில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாக நிர்ணயிக்கலாம்.[32]

மேலும், ஒன்பது முழம், ஐந்து முழம், மூன்று முழம் ஆகிய மூன்று வித அளவுகளில் ஏதேனும் ஒன்றைப் பிம்ப உயரமாக நிர்ணயித்தும் கொள்ளலாம்.[33]

இரண்டு தாளம் அல்லது மூன்று தாளம் அல்லது நான்கு தாளம் உள்ள அளவு பிம்பங்களின் உயர அளவாக இருக்கலாம். அவை முறையே கன்னியசம், மத்திமம், உத்தமம் என்று மூன்று தரமாகும்.[34]

ஒரு முழம் முதல் ஆறு, ஆறு விரல்களாகக் கூட்டி ஒன்பது முழ அளவு வரை கிடைக்கும் 33 விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றைப் பிம்ப உயரமாகக் கொள்ளலாம். மூல பேர உயரத்தை ஒரு முழத்திற்குக் குறைந்ததாக அமைக்கலாகாது.[35]

ஒரு தாளம் முதல் இரண்டிரன்டு தாளமாகக் கூட்டி 37 தாளம் வரை 19 விதமாகப் பிம்ப உயரம் இருக்கலாம்.[36]

பதினைந்து முழ உயர பிம்பம் உத்தமப் படிமம் என்றும், 10 முழ உயரம் கொண்டது மத்திமப் படிமம் என்றும், ஐந்து முழ உயரம் கொண்டது அதமப் படிமம் என்றும் கொண்டு இவற்றில் ஏதேனும் தக்க ஒன்றைப் பிம்ப உயரமாகக் கொள்ளலாம். இவ் விதி சுதந்திராலய மூர்த்திகளுக்கு ஏற்றதாகும்[37].

## கர்த்தாவின் உயர மானத்தால்

### படிம மானம்

ஒரு படிமத்தைச் செய்விப்பவர் கர்த்தா எனப்படுவார். இவர் படிமத்தைச் செய்வதுடன் கடவுண் மங்கலம் (பிரதிஷ்டை) செய்வதற்கு நிதி உதவி செய்பவரும் வழிபடுபவரும் ஆவார்.

இத்தகைய கர்த்தாவின் உயரத்தைப் புனித அளவாக ஏற்றுத் தெய்வப் படிமங்களின் உயரங்களை நிர்ணயிக்கலாம் என்று சாஸ்திரங்கள் விதிக்கின்றன. அவ்வடிப்படையில் கர்த்தாவின் உயரத்திற்குச் சமம் அல்லது கண், வாய், மோவாய், தோள், ஸ்தனம், மார்பு, ஆகிய மட்டங்களுக்கு ஒத்த அளவினதாகப் பிம்பங்களின் உயரம் ஏழு விதமாக இருக்கலாம்.[38]

கர்த்தாவின் உயரத்திற்குச் சமம், கண் மட்டம், மூக்கு மட்டம், மோவாய் மட்டம், தோள் மட்டம், ஸ்தன மட்டம், இருதய மட்டம், நாபி மட்டம், குய்ய மட்டம் ஆகிய ஒன்பது மட்டங்களுக்குரிய அளவுகளில் படிம உயரத்தை நிர்ணயம் செய்து கொள்ளலாம்.[39]

கர்த்தாவின் உயரத்தை ஒன்பது கூறு செய்து ஒரு கூறு முதல் ஒவ்வொரு கூறாக ஏற்றி, ஒன்பது கூறு வரை ஒன்பது விதமான உயர அளவுகளில் ஏதேனும் ஒன்றினைப் படிம மானமாகக் கொல்ளலாம்.[40]

கர்த்தாவின் உயரத்தில் 8-ல் ஒரு பங்கு கூடிய உயரம் அல்லது 7-ல் ஒரு பங்கு கூடிய உயரம் அல்லது 6-ல் ஒரு பங்கு கூடிய உயரம் என்று மூன்று விதமாகப் பிம்ப மானத்தை நிர்ணயிக்கலாம். கர்த்தாவின் அளவை விட அதிக உயரமுடைய இம் மூன்று மானங்களுக்கு அம்சாதிக மானம் என்று பெயர்.

கண், வாய், மோவாய், கழுத்து, ஸ்தனம், மார்பு, நாபி, குய்யம், ஆகிய எட்டு மட்டங்களில் எட்டுவிதமாகப் படிமங்களின் உயரத்தைக் கொள்ளலாம்.[41]

கர்த்தாவின் அளவிற்குச் சம அளவு உத்தமம் என்றும், முக்கால் அளவு மத்திமம் என்றும், அரை அளவு அதமம் என்றும் கொண்டு மூன்று விதமாகப் படிமங்களுக்கு உயரங்களை நிர்ணயிக்கலாம்.[42]

கர்த்தாவின் உயரத்திற்குச் சம அளவான படிமம் உத்தமம் என்றும், 8-ல் 7 பங்கு உயரமுடையது மத்திமம் என்றும், 8-ல் 6 பங்கு உயரமுடையது கன்னியசம் என்றும் கொண்டு ஏதாவது ஒன்றினைப் படிம மானமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். கர்த்தாவின் தோள் மட்டம், தன மட்டம், நாபி மட்டம் ஆகிய இடங்களில் கிடைக்கும் மூன்று வித உயர அளவுகளை உத்தம, மத்திம, கன்னியச அளவாகக் கொண்டு ஏதேனும் ஒன்றைப் படிம மானமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.[43]

சக்திப் படிமங்களின் உயர அளவை வெவ்வேறு வகையில் கணித்தறியலாம்.

சிவ சக்திகளின் உயரத்தை மூலலிங்க அளவிலிருந்து கொள்ளுதல் வேண்டும். உதாரணமாகக் கௌரியின் உயர அளவை மூலலிங்கத்தின் அகலம், சுற்றளவு, லிங்க பூஜாம்ச உயரம் ஆகிய ஏதேனும் ஒன்றிலிருந்து கணித்தறிதல் வேண்டும். அங்ஙனமே துர்க்கை, ஜேஷ்டை, இலக்குமி, சப்த மாதர்கள் ஆகிய சக்திப் படிமங்களின் உயரத்தை லிங்கமானத்திலிருந்து கொள்ளுதல் வேண்டும்.

சகளத் திருமேனியாக எழுந்தருளியிருக்கும் சிவனாரது அல்லது விஷ்ணு, பிரம்மா ஆகியோரின் சக்திப் படிமங்களை அந்தந்தச் சகளத் திருமேனியின் மூக்கு மட்டம், மார்பு மட்டம் என இருவகையாகவும் இவ் விரண்டு உயர அளவுகளின் வேறுபாட்டினை எட்டுக் கூறுகளாக்கி, மார்பு மட்ட உயர அளவிலிருந்து ஒவ்வொரு பாகமாக ஏற்றி ஒன்பது விதமாக உயர அளவை நிர்ணயிக்கலாம்.

மற்றும், சகளத் திருமேனியின் கழுத்து மட்டம் சக்திப் படிமத்தின் உயரமாக இருக்கலாம். அல்லது அதன் மார்பு மட்டமும் இருக்கலாம். இரண்டு அளவுகளுக்குமுள்ள வேறுபாட்டை எட்டுக் கூறுகளாக்கி, மார்பு மட்ட உயர அளவுடன் ஒவ்வொரு கூறாக ஏற்றி ஒன்பது விதமாக உயரம் கொள்ளுவதும் முறையாம். அங்ஙனம் மொத்தத்தில் பதினெட்டுவகையான உயரங்களில் சக்திப்படிமங்களை இயற்றலாம். இவ்வாறு நிர்ணயம் செய்த உயரத்தோடு ஜாத்யம்சம் கூட்டி ஆயாதிப் பொருத்தம் காண வேண்டும்.

## பங்க அமைதியில் சகள மேனிகள்

அமர்ந்த கோலம், நாட்டியக் கோலம், பங்க நிலை ஆகிய மூன்று நிலைகளில் உள்ள படிமங்களுக்குச் சக்திப் படிமங்களின் உயரம் கொள்வதை யுத்தி பூர்வமாகச் செய்தல் வேண்டும்.

கர்ப்ப
________________ மானத்தால்
ஹர்மிய

கர்ப்பக்கிருஹ உள்ளிடம் கர்ப்பமெனப்படும். கர்ப்பக்கிருஹக் கட்டடம் ஹர்மியம் எனப்படும். கர்ப்பக்கிருஹ உள் அகலத்தாலும், கர்ப்பக்கிருஹ வெளி அகலத்தாலும், படிம உயரங்களை

நிர்ணயித்துச் செய்யலாம். கர்ப்பக்கிருஹ வெளி அகலத்தைக் கால்புறவாய் அகலம் என்றும், உள் அகலத்தைச் சுத்த அகலம் என்றும் சொல்வது தொழில் வழக்கு.

கர்ப்ப மானத்தாலோ அல்லது ஹர்மிய மானத்தாலோ அளவு கொள்ளின், முறையே உள் அகலத்தையோ அல்லது வெளிப்புற அகலத்தையோ 9 பாகம் செய்து, 1 முதல் 9 பாகம் வரை ஒன்பது அளவுகளும், 27 பாகம் செய்து 1 முதல் 27 வரை இருபத்தேழு அளவுகளும், 18 பாகம் செய்து, 1 முதல் 18 பாகம் வரை பதினெட்டு அளவுகளுமாக மொத்தத்தில் 54 அளவுகளில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகக் கொள்ளலாம்.

மானாங்குல
------------------------------------ மானத்தால்
மாத்ராங்குல

மூலலிங்கத்தின் பூஜாம்ச உயரத்தை 124 பாகங்களாகப் பிரித்துக் கிடைத்த ஒவ்வொரு கூறும், அங்குலம் என்ற சொல்லாலேயே குறிக்கப்படுகிறது. மற்ற அங்குலங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டிட, இதனை லிங்காங்குலம் என்றும் சொல்வது வழக்கு. இங்ஙனம் கொண்ட மூல லிங்காங்குலத்தினாலும் மற்றும் மானாங்குலம், மாத்ராங்குலத்தினாலும் படிமங்களின் உயரங்களை நிர்ணயித்துக் கொள்ளலாம்.

மேற்குறிப்பிட்ட ஒவ்வொரு வகை அங்குலத்தால் படிம உயரத்தைக் கொள்ளும்போது, 7 அங்குலம் தொடங்கி, இரண்டிரண்டு அங்குலமாக ஏற்றி, 123 அங்குலம் வரை 59 விதமான உயரங்களைப் பெறலாம்.

பொதுமக்கள் வழிபாட்டிற்குரிய பரார்த்த ஆலயப்படிமங்களுக்கு மானாங்குலத்தாலும் லிங்காங்குலத்தாலும் உயர அளவு கொள்ளலாம். தன்பொருட்டு தனது வீட்டில் செய்யும் ஆத்மார்த்த பூசைகளுக்கு மாத்ராங்குலத்தினால் படிம உயரம் கொள்வதே சிறப்பாகும். ஆனால் மாத்ராங்குலத்தினால் பார்த்த பிம்பங்களுக்கு உயரம் கொண்டு செய்தலும் வழிபடுதலும் நன்றல்லவாம்.

மேற்குறிப்பிட்ட முறையிற்கொண்ட உயர அளவுகளுக்கு ஆயாதிப் பொருத்தம் பார்த்து நல்லதொரு அளவை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும்.

இறுதியாக, சிறு படிமங்களின் உயர அளவுகளை யவாங்குலத்தாலும் கணக்கிட்டு, ஆயாதிப் பொருத்தம் பார்த்துப் படிமங்களைச் செய்தலும் வழக்கத்தில் உளது. இந்த யவாங்குலமானது மானாங்குலத்தின் எட்டில் ஒரு பங்கு அளவையே குறிப்பிடும் என்பதைச் சிற்பிகள் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

---

1. சகளாதிகாரம், மானசாரம்
2. மானசாரம்
3. காசியபம்
4. சாரஸ்வதீயம்
5. மனுசாரம்
6. மயமதம்
7. ஐந்திரமதம்
8. விஸ்வகர்மீயம்
9. சகளாதிகாரம்
10. மானசாரம்
11. காசியபம், சாரஸ்வதீயம்
12. காசியபம், ஐந்திரமதம்
13. காசியபம், சில்பரத்னம்
14. சில்பரத்னம்
15. மனுசாரம்
16. மனுசாரம்
17. பூர்வகாரணாகமம், குமாரதந்த்ரம், அஜிதாகமம்
18. சுப்ரபேதாகமம்
19. விஸ்வகர்மீயம்
20. சகளாதிகாரம்
21. மானசாரம்
22. காசியபம், சில்பரத்னம்
23. சாரஸ்வதீயம்
24. மனுசாரம்
25. பூர்வகாரணாகமம், குமாரதந்த்ரம், ஆஜிதாகமம்
26. ஐந்திரமதம்
27. மனுசாரம்
28. சகளாதிகாரம்
29. சகளாதிகாரம், மானசாரம், காசியபம், சில்பரத்னம்
30. சில்பரத்னம்
31. மனுசாரம்
32. பூர்வகாரணாகமம், சுப்ரபேதாகமம்
33. பூர்வகாரணாகமம்
34. சுப்ரபேதாகமம்
35. குமாரதந்த்ரம், ஐந்திரமதம்
36. ஐந்திரமதம்
37. அஜிதாகமம்
38. சகளாதிகாரம்
39. மானசாரம், சில்பரத்னம்
40. காசியபம்
41. சாரஸ்வதீயம்
42. சுப்ரபேதாகமம்
43. மயமதம்

# 4

# வைணவத் திருமேனிகளின் உயர மானங்கள்



## வைணவப் படிமங்களின் அளவுகள்

படிம மானங்களை நிர்ணயம் செய்வதற்குச் சிற்ப நூல்கள் பல்வேறு முறைகளை வகுத்துக் கூறுகின்றன. அந் நூல்களில் சைவச் சார்பு நூல்களும், வைணவச் சார்பு நூல்களும், இரண்டுக்கும் பொதுவான நூல்களும் உண்டு. மேலும், பௌத்த சமணப் படிமங்களின் இலக்கணம் கூறும் பொது நூல்களும் உண்டு. பொது நூல்களில் கூறப் பெற்ற மான விதிகள் அனைத்தும் சைவ, வைணவ, சாக்த, கௌமார, காணாபத்ய, பைரவ அல்லது சௌரப்படிமங்களுக்குப் பொருந்தும். எனினும், ஒவ்வொரு வகைக்கும் சிறப்பான சம்ஹிதைகளும், ஆகமங்கள் அல்லது தந்திர நூல்களும் உண்டு. அவை சிற்பநூல் கருத்துகளைப் பிரதிபலிப்பதுடன் ஒரு சில சிறப்பு முறைகளையும் விளம்புகின்றன. அங்ஙனம் வைணவப் படிமங்களைப் பற்றிச் சிறப்பு நூல்கள் வகுத்துக் கூறும் முறைகளைப் பின்பற்றிச் சிற்பிகள் அளவு கொள்ளல் பயன் மிக்கதாகும்.

விஷ்ணு மூர்த்தங்களில், அந்தந்த மூர்த்தங்களின் அமைதியை ஆதாரமாகக் கொண்டு ஸ்தானக மூர்த்தம், ஆசன மூர்த்தம், சயன மூர்த்தம், யானக மூர்த்தம் என்று நான்கு வகையாக நூல்கள் பிரித்துக் கூறும். அவை முறையே நின்ற, அமர்ந்த, கிடந்த, இயங்கு திருக்கோலங்கள் எனப்படும். திரிவிக்கிரம மூர்த்தியாகிய உலகளந்த பெருமான், சக்கரத் தாழ்வார் போன்ற படிமங்களை யானக மூர்த்திக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

வைணவ மரபிலும் படிம மானம் அல்லது பிம்ப மானம் என்பது. படிமத்தின் தாள் முதல் தலை உச்சி வரையுள்ள உயர அல்லது நீள அளவேயாகும். கீரிடம், தனது பீடம், ஆகியவற்றுக்குக் கொள்ளும் உயரங்கள் இவ்வளவில் அடங்கா. படிமங்களை அமர்ந்த கோலத்திலோ அல்லது கிடந்த கோலத்திலோ இயற்ற வேண்டுமானாலும், நின்ற உயர அளவை நிர்ணயித்துக் கொண்டு அதிலிருந்தே அவ்வவற்றுக்குரிய அமர்ந்த, கிடந்த கோலங்களின் உயரத்தைக் கணித்தறிந்து கொள்ளுதல் வேண்டும்.

கீழ்க்கண்ட பதினோரு வகையான அடிப்படை அளவுகளிலிருந்து முலப்படிமங்கள், பரிவார மூர்த்தங்கள், உற்சவத் திருமேனிகள் ஆகியவற்றின் படிம உயர மானங்களைச் சிற்பிகள் கணித்தறியலாம்.

1. திருவுண்ணாழிக் கட்டடத்தின் கால் புறவாய் அகலம்.
2. திருவுண்ணாழியின் உட்கூட்டளவு
3. திருவுண்ணாழிக் கட்டடத்தின் சுவர் உயரம்
4. அதிஷ்டான உயரம்
5. திருவாயில் உள் அளவு
6. மூலப்படிமத்தின் உயரம்.
7. கர்த்தாவின் உயரம்
8. முழ அளவு
9. மானாங்குலம்
10. மாத்ராங்குலம்
11. பேராங்குலம் (தேகலப்தாங்குலம்)

திருவுண்ணாழியின் உட்பகுதியை கர்ப்பகேஹம் என்றும் கர்ப்பம் என்றும், கட்டட முழு அமைப்பை திருவுண்ணாழி, கர்ப்பக்கிருஹம் என்றும் நூல்கள் கூறும்.

## திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்தால் படிம மானம்

திருவுண்ணாழி என்ற கர்ப்பக்கிருஹக் கட்டடத்தின் கால்புறவாய் அகலத்தை அடிப்படையாகக் கொண்டு, விஷ்ணு மூர்த்தங்களின் உயர அளவுகளைக் கீழ்க்கண்ட பல்வேறு முறைகளில் நிர்ணயம் செய்யலாம்.

1. திருவுண்ணாழிச் சுவர்க் கால்புறவாய் அகலத்தை நான்கு கூறுகள் செய்து, அதில் இரண்டு கூறளவு கொண்ட உயரத்தை உத்தம உயரம் என்றும், ஒரு கூறளவு உயரத்தை அதம உயரம் என்றும் கொண்டு, இவ்விரண்டிற்குமுள்ள வித்தியாச அளவை 26 கூறுகள் செய்து அதம அளவிலிருந்து உத்தம அளவு வரை ஒவ்வொரு கூறாக ஏற்றினால் 27 விதமான உயரங்கள் கிடைக்கும். அவற்றில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகச் சிற்பிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

மேற்கண்ட 27 படிம உயரங்களில், 27 முதல் 19 வரை உள்ள ஒன்பது உயரங்களை உத்தம அளவு என்றும், 18 முதல் 10 வரை உள்ள ஒன்பது உயரங்களை மத்திம அளவு என்றும், எஞ்சியுள்ள ஒன்பது உயரங்களை அதம அளவு என்றும் கொள்ளுதல் வேண்டும். மேலும், முதல் தொகுப்பின் ஒன்பது உயரங்களில் முதல் மூன்று உயரங்களை சாத்விக உயரம் என்றும் அடுத்துவரும் மூன்று உயரங்களை ராஜச உயரம் என்றும், எஞ்சியுள்ள் மூன்று உயரங்களைத் தாமச உயரம் என்று கொள்ளுவர் நூலோர். சாத்விக உயரத்தை நின்ற திருக்கோலப் படிமங்களுக்கும், ராஜச உயரத்தை அமர்ந்த திருக்கோலப் படிமங்கட்கும் தாமச உயரத்தைக் கிடந்த திருக்கோலப் படிமங்கட்கும் உரியதாகத் தெரிந்தெடுத்தல் வேண்டும்.

திரிவிக்ரம அவதாரம் போன்ற இயங்கு கோலமான யானகப் படிமங்களுக்கு மேற்கண்ட மூன்று விதமான அளவுகளையும் கொள்ளலாம் என்று ஒரு பொது விதியும் உள்ளது.[1] ஆனாலும், சாத்விக அல்லது தாமச உயரங்களே பொருத்தமாகும்.

2. திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்தை 2 பாகம் செய்து, அதில் ஒரு பாகத்தை 26 சிறு கூறுகளாகச் செய்தல் வேண்டும். அவற்றில் ஒரு பாகம் முதல் தொடங்கி, ஒவ்வொரு சிறு கூறாகக் கூட்டி, 2 பாகம் ஈறாக 27 விதமாகப் படிம உயரங்களைக் கொள்ளலாம்.[2]

3. திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்தில் அரைப்பங்கு, கால்பங்கு, அரைக்கால் பங்கு, ஆகிய அளவுகளை உத்தம, மத்திம, அதம அளவுகளாகப் பாவித்து இம் மூன்று அளவுகளைத் தேவைக்கேற்றாற்போல் படிம உயரமாகக் கொள்ளலாம்.[3]

திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்தை மூன்று பாகம் செய்து இரண்டு பாக உயரம் உத்தம உயரம், ஐந்தில் மூன்று பாகம் மத்திம உயரம், அகலத்தில் பாதி அதம உயரம் எனக் கொண்டு, இங்ஙனம் கிடைக்கும் மூன்று விதமான உயரங்களில் பொருத்தமான ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.[4]

4. திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்திற்கு ஈடான படிம உயரம் உத்தமம் என்றும், அகலத்தின் ஒன்பதில் எட்டுப் பாகம் மத்திமம் என்றும், ஐந்தில் நான்கு பாகம் அதமம் என்றும் கொண்டு மூன்று விதமாக இம்முறையில் படிம உயரத்தை நிர்ணயிக்கலாம்.[5]

திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்திற்கு ஈடான படிம உயரத்தை உத்தமம் என்றும், ஐந்தில் மூன்று பாக உயரத்தை மத்திமம் என்றும், ஐந்தில் இரண்டு பாக உயரத்தை அதமம் என்றும் கொண்டு மேலும் மூன்று விதமான படிம உயரங்களைப் பெறலாம். மேற் குறிப்பிட்ட அளவுகள் நின்ற திருக்கோல மூர்த்தங்களுக்கு ஏற்றவை.

திருவுண்ணாழிக் கால்புறவாய் அகலத்தில் பாதி உயரத்தை அதம அளவு என்றும், ஐந்தில் மூன்று பாக உயரத்தை மத்திம அளவென்றும், மூன்றில் இரண்டு பாக உயரத்தை உத்தம அளவு என்றும் கொண்டு ஏதேனும் ஒன்றினைப் பொருத்தமாகச் சிற்பிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

## திருவுண்ணாழி உள் அளவால் படிம மானம்

1. திருவுண்ணாழியின் உள் அகலத்தை 10 கூறுகள் செய்து அதில் 7 கூறு உயரம் உத்தமம் என்றும், 4 கூறு உயரம் அதமம் என்றும் கொண்டு இவ்விரண்டு உயரங்களின் வித்தியாசத்தை 26 சிறு கூறுகளாகப் பிரித்து அதம அளவிலிருந்து ஒவ்வொரு சிறு கூறாகக் கூட்டி உத்தம அளவு வரை 27 விதமான உயரங்களைப் படிம உயரமாகக் கொள்ளுதல் ஒரு முறை. திருவுண்ணாழி உள் அகலத்தில் பாதி அல்லது மூன்றில் இரண்டு பாகம் படிம உயரமாகக் கொள்ளப்படலாம்.[6]

2. திருவுண்ணாழிக் கட்டட உட் கூட்டகலத்தில் நான்கில் மூன்று பாகம் அல்லது மூன்றில்

இரண்டு பாகம் அல்லது ஐந்தில் மூன்று பாகம் படிம உயரமாக இருக்கலாம். அல்லது, கர்ப்பக்கிருஹ உள் அகலத்தை இரண்டு பாகம் செய்து ஒரு பாகத்தை 26 சிறு கூறுகளாகப் பிரித்து ஒரு பாகத்திற்குரிய உயர அளவிலிருந்து ஒவ்வொரு சிறு கூறாக ஏற்றி இரண்டு பாக அளவு வரை 27 விதமாக உயரங்களை நிர்ணயிக்கலாம்.[9]

3. திருவுண்ணாழியின் உள் அகலத்திற்குச் சமம் அல்லது ஒன்பதில் எட்டுப் பாகம் அல்லது ஐந்தில் நான்கு பாகம் படிம உயரமாக இருக்கலாம்.[10]

4. அல்லது ஏழில் ஐந்து பாகமும், ஐந்தில் மூன்று பாகமும், மூன்றில் இரண்டு பாகமும் பிம்ப உயரமாக இருக்கலாம்.[11]

## சயனத் திருக்கோலங்களுக்குப் படிம மானங்கள்

1. விஷ்ணுப் படிமங்களின் அமைதிகளில் கிடந்த கோலம். சிறப்பானதொரு திருக்கோலமாகும். இவ்வகை பிம்பங்களுக்கு விசேட அளவு-கொள் முறைகள் சாத்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கின்றன. சிற்பிகள் இவற்றை நன்கு உணர்ந்து முறை வழுவாமல் செய்தல் வேண்டும்.

சாத்திரவிதிகட்கும், அளவுகட்குமிணங்க நிர்மாணிக்கப்பட்ட திருவுண்ணாழியின் உள் நீளத்தினை 18 கூறுகள் செய்து திருவடிப் பக்கம் ஒரு கூறு அளவும், தலைப்பக்கம் மற்றொரு கூறு அளவும், இடைவெளி விடுதல் வேண்டும். எஞ்சிய 16 கூறு நீளத்தில் ஆதிசேஷன் படத்திற்கு ஒரு பாகத்தையும், பிறகு படத்திற்கும் கிரீடத்திற்கும் இடையில் வெளிக்காக ஒரு கூறு அளவும், கிரீட நீளத்திற்கு ஒரு கூறு அளவும் விட்டு மீதமுள்ள 12 கூறு நீளத்தை சயனத் திருக்கோல மூல மூர்த்தியின் நீள அளவாகக் கொள்ளுதல் சிறந்ததொரு வழியாகும். இது பதவிந்யாச அடிப்படையில் எழுந்த விதியானதால் இதனை உத்தமோத்தம அளவென்று சிற்ப நூல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன.

2. முன்னர் குறிப்பிட்ட முறையில், கர்ப்பக்கிருஹ உள்நீளத்தை 16 பாகங்கள் செய்து, தலைப் பக்கம் நான்கு கூறுகளும், கால் பக்கம் இரண்டு கூறுகளும் விடுத்து, மீதமுள்ள 10 கூறு நீளம் உத்தமப் படிம நீளமென்றும், அதே அளவில் ஐந்து கூறினைத் தலைப் பக்கத்திலும் மூன்று கூறினைக் கால் பக்கத்திலும் விட்டு எஞ்சியுள்ள எட்டுக் கூறு நீளத்தை, மத்தம நீள அளவென்றும், அங்ஙனமே தலைப்பக்கம் ஆறு கூறுகளும், கால் பக்கம் நான்கு கூறுகளும் விட்டு எஞ்சிய ஆறு கூறு நீளத்தைச் சயனப் படிம நீளமாகவும் கொள்ளலாம்.[12]

3. திருவுண்ணாழியின் உள் நீளத்தை 16 பாகங்கள் செய்து தலைப்பக்கத்தில் 4 பாக அளவும் கால் பக்கத்தில் 2 பாக அளவும் கொடுத்து மீதி உள்ள 10 பாக நீளத்தைக் கிடந்த கோலத் திருமேனியின் நீளமாகக் கொள்வது உத்தம அளவென்றும், இங்ஙனமே 8 பாகம் செய்து இரண்டு பாகம் தலைப் பக்கத்திலும், ஒரு பாகம் கால் பக்கத்திலும், ஒதுக்கி எஞ்சியுள்ள 5 பாக நீளத்தைப் படிம நீளமாகக் கொள்வது மத்திம அளவென்றும், அல்லது 7 பாகம் செய்து முறையே 2,1 பாகங்களைத் தலை, கால் பக்கங்களுக்காக நீக்கி மீதமுள்ள 4 பாகத்தைப் படிம நீளமாகக் கொள்வது அதம அளவென்றும், 3 விதமாகக் கொண்டு ஏதேனும் ஒன்றைச் சயனத் திருக்கோல மூர்த்தத்தின் படிம நீளமாகக் கொள்ளலாம் என ஆகமம் கூறும்.[13]

யானக மூர்த்தங்களின் உயர அளவுகளைக் கர்ப்பக்கிருஹ உள் உயரத்தை ஆதாரமாக வைத்தும் தக்கதொரு உயரத்தை சிற்பிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

கர்ப்பக்கிருஹ உள் உயரத்தில் பாதி உயரம் யானக மூர்த்தியின் உயரமாகும். இஃதொரு முறை. கர்ப்பக்கிருஹ உள் உயரத்தை 12 பாகங்கள் செய்து தலைக்குமேல் இடைவெளிக்காக ஒரு பாக அளவும் பீடத்திற்கு இரண்டு பாக அளவும் நீக்கி மீதமுள்ள 9 பாக அளவைப் படிம அளவாகக் கொள்ளுதல் வேண்டும்.

கர்ப்பக்கிருஹ உள் உயரத்தில் 12ல் 7 பாகத்தைப் படிம உயரமாகக் கொண்டு தலைக்குமேல் இடைவெளி 2 பாகமும், பீடம் 3 பாகமும் கொள்ளுதல் மற்றொரு முறை. இங்ஙனம், 12 கூறில் 6 கூறு உயரத்தைப் படிம உயரமாகக் கொண்டு மும்மூன்று கூறுகள் மேற்பகுதிக்கும், பீடத்திற்கும் விடுத்தல் பிறிதொரு முறையாகும். இத்தகைய மூன்று விதமான பேதங்கள் விஸ்வ ரூப மூர்த்தியான உலகளந்த பெருமாளுக்கு ஏற்ற உயரம் என அறிதல் வேண்டும்.[14]

## துவார மானத்தால் படிம மானம்

திருவுண்ணாழிக் கட்டடத்திற்கு ஏற்ற அளவில் அதன் திருவாயிலை அமைக்கிறோம். மேலும் அவ்வாயிலின் அளவு ஆயாதி எனும் கணக்கால் செம்மையாகச் சோதிக்கப்பட்டுக் கொள்ளப் படுகிறது. எனவே, திருவுண்ணாழிக்குள் அமையும் வழிபடு படிமம் இவ்வாயிலின் அளவினால் உயர மானம் பெறுகிறது. இம் முறையில் திருவாயிலின் உள் உயர அளவும், அகல அளவும்

அடிப்படை அளவுகளாக எடுத்தாளப்படுகின்றன. இம் முறை சிறந்த சில முறைகளில் ஒன்றாகும்.

கட்டட வாயிலை துவாரம் என்ற சமஸ்கிருதச் சொல்லால் நூல்கள் குறிப்பிடும். துவார அளவானது வாயில் நிலைக்கால் உட்கூட்டளவையே குறிப்பிடும். இதனை சுத்தத் துவாரம் என்றும் நூலோர் கூறுவர். நிலைக்கழற்றியையும், சேர்த்துத் துவார அளவாகக் கூறுவது சிற்ப மரபு அன்று. திருவாயில் துவார அளவினை நிர்ணயிக்கும் முறையைத் திருவாயில் இலக்கண இயலில் காண்க.

நின்ற திருக்கோல விஷ்ணுமூர்த்தங்களின் உயர மானத்தைத் துவார உயரத்தால் நிர்ணயிப்பது மிக நல்லதொரு முறையாகும்.

துவார உயரத்திற்குச் சம உயரமுடைய படிமம் உத்தமோத்தமம் என்றும், துவார உயரத்தில் முக்கால் பங்கு உயரமுடைய படிமம் உத்தமம் என்றும், அரைப் பங்கு அளவினது மத்திமம் என்றும், கால் பங்கு அளவினது அதமம் என்றும் கூறப்படும். இவ் அளவுகளில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

துவார உயரத்தை 4 கூறுகள் செய்து, ஒவ்வொரு கூறாக ஏற்றி அளவு கொள்ள வேண்டும். இங்ஙனம் நான்கு கூறுகளுடன் 3 கூறு ஏற்றிக் கிடைத்த 7 கூறு அளவை உத்தம அளவு என்றும், 2 கூறுகள் ஏற்றிக் கிடைத்த 6 கூறு அளவு மத்திம அளவென்றும், ஒரு கூறு ஏற்றிக்கிடைத்த ஐந்து கூறு அளவு அதமம் என்றும் கொண்டு, இந்த அளவுகளில் ஏதேனும் ஒன்றை அமர்ந்த கோலப் படிம உயர அளவாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

கர்ப்பகிருஹ உள் உயரத்தில் பாதி உயரம் வாகன உயரமாகவும், கர்ப்பகிருஹ துவார உயரத்தில் பாதி அளவு படிம உயரமாகவும் கொண்டு, அவ்விரண்டும் சேர்ந்த உயரத்தை யானாரூடமாக உள்ள மூர்த்தியின் உத்தம உயர அளவாகக் கொள்ள வேண்டும். இந்த மொத்த அளவில் முக்கால் பங்கு மத்திமம் என்றும், பாதி அளவு அதமம் என்றும் சொல்லப்படுகிறது. இவ்வளவுகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

விஸ்வரூப மூர்த்தி என்றும் லோகாக்ரமண மூர்த்தி என்றும், திரிவிக்ரம மூர்த்தியை நூலாசிரியர்கள் கூறுவர். இம் மூர்த்திக்கு உயர அளவு கொள்முறை பின் வருமாறு:

கர்ப்பக்கிருஹ உள் உயர அளவை 12 கூறுகளாக்கி, 1 கூறு அளவை மேலே ஒதுக்கி, பீடத்திற்காக 2 கூறுகள் கீழே நீக்கி, எஞ்சியுள்ள 9 கூறு அளவு திரிவிக்கிரம யானக மூர்த்தியின் உத்தம உயரமாகக் கருதப்படும். மேற்பகுதியில் இரண்டு கூறுகளும் கீழே 3 கூறுகளும் கொடுத்து எஞ்சியுள்ள 7 கூறு உயரத்தை விஸ்வரூபத்தில் மத்திம உயரமாகவும், மேலேயும் கீழேயும் முறையே மும்மூன்று கூறுகள் கொடுத்து மீதியுள்ள 6 கூறு உயரளவு கொண்ட படிமம், அதம உயரமாகவும் சொல்லப்படும். இம் மூன்று அளவுகளில் ஏதேனும் ஒன்றைத் திரிவிக்ரம மூர்த்தியின் உயர மானமாகக் கொள்ளலாம்.

தேவன் நின்ற கோலத்தில் அமைந்தால் அங்ஙனமே தேவிகளும் அமைதல் வேண்டும். தேவன் அமர்ந்த கோலத்தில் இருப்பின் தேவியும் அங்ஙனமே இருத்தல் வேண்டும். தேவன் சயனக்கோலமானால் தேவிகள் நின்ற கோலத்திலோ அல்லது அமர்ந்த கோலத்திலோ இருக்கலாம். இங்ஙனம் தேவனோடு சேர்ந்த தேவிகளின் அமைதிகளை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். பொதுவாக, தேவனின் தோள் மட்டத்திற்கீடான உயரமுடையதாய், தேவிகளின் படிம உயரங்கள் இருத்தல் வேண்டும்.

யானாரூட மூர்த்தியின் தொடை மீது தேவி அமர்ந்திருந்தால் தனித்து வேறொரு தேவியை பக்கத்தில் அமர்த்துதல் கூடாது. தேவனோடு இடம் பெறும் தேவிகள், சௌமிய முகமுடையவர்களாகவும், இரண்டு கைகளை உடையவர்களாகவும், தேவனின் தோள்மட்டத்திற்கு ஈடான உயர அளவு உடையவர்களாகவும் இயற்றப்பெறல் வேண்டும்.

சுதந்திர தேவிகளாக அமையுங்கால் நான்கு கைகளுடனோ அல்லது இரண்டு கைகளுடனோ அமைவர். அத்தகைய தேவிகளின் உயரமானம் தேவனின் தோள்மட்ட உயர அளவுக்கீடாகும்.[18]

துவார உயரத்தைவிட, கால் பங்கு கூடிய பிம்ப உயரம் உத்தமம் என்றும், துவார உயரத்திற்குச் சம உயரம் மத்திமம் என்றும், அரைப் பங்கு உயரம் அதம உயரம் என்றும் கருதப்படும். இந்த அளவுகளில் ஏதேனும் ஒன்றினைப் படிம மானமாகத் தேர்ந்து கொள்ளலாம். அல்லது துவார உயரத்தை 16 கூறுகள் செய்து அதில் 15 கூறு உயரம் உத்தமம் என்றும் 14 கூறு உயரம் மத்திமம் என்றும் 13 கூறு உயரம் அதமம் என்றும் கொண்டு இவற்றில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். இந்த அளவுகள் நின்ற திருக்கோல மூர்த்தங்களுக்கு ஏற்றதாம்.

துவார அளவினால் சயன பிம்பங்களின் நீளத்தை நிர்ணயம் செய்வதும் ஒரு மரபு. இம் மரபிற் செய்யின் துவார அளவின் இரண்டு மடங்கு நீளம் உத்தமம் என்றும், ஒன்றரை மடங்கு மத்திமம் என்றும், ஒன்றேகால் மடங்கு அதமம் என்றும் தேர்ந்து ஏதேனும் ஒன்றைப் படிம நீளமாகக் கொள்ளலாம்.[16]

சுத்தத்துவார உயரத்தை 16 கூறுகள் செய்து ஒவ்வொரு கூறாகக் குறைத்து அல்லது இரண்டிரண்டு கூறாகக் குறைத்துக் கிடைக்கும் உயரங்களில் ஏதேனும் ஒன்றினைப் பிம்ப உயரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இம் மானவிதி நின்ற திருக்கோல மூர்த்தங்களுக்கு ஏற்றது. அமர்ந்த கோலப் படிமமானால் அப் படிமத்தின் உயரம், துவார உயரத்தால் ஒன்று, ஒன்றேகால், ஒன்றரை மடங்கு என மூன்று விதமாக அமையும். படிமம் கிடந்த கோலத்திலிருந்தால் துவார உயரத்தின் இருமடங்கு அல்லது ஒன்றரை மடங்கு அல்லது சம அளவு பிம்ப நீளமாகக் கொள்ளப்படலாம். மேற் குறிப்பிட்ட நின்ற, அமர்ந்த, கிடந்த திருமேனிகளின் அளவுகள் திருவுண்ணாழிக்குள் நிலையாக நிறுவப்படும் துருவபேர அளவுகளாகும்.

இத்தகைய துருவபேரத்தின் அளவை நிர்ணயித்துக்கொண்டு 4-ல் ஒரு பங்கு அல்லது 3-ல் ஒரு பங்கு உடையதாய் ஸ்நபன பேரத்தின் உயரத்தைக் கொள்ளுதல் வேண்டும்.[17]

துவார உயரத்தை 3 பாகம் செய்து ஒரு கூறு ஏற்றிய 4 கூறு உயரம், அல்லது 4 கூறு செய்து ஒரு கூறு ஏற்றிய 5 கூறு உயரம், அல்லது 8 கூறு செய்து ஒரு கூறு ஏற்றிய 9 கூறு உயரம், அல்லது 9 கூறு செய்து ஒரு கூறு ஏற்றிய 10 கூறு உயரம் ஆகிய நான்கு விதமான உயரங்களில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் அல்லது பிம்ப துவார உயரத்திற்குச் சம உயரமுடையதாகவே படிம உயரத்தைச் சமைக்கலாம். அல்லது துவார உயரத்திற்குக் குறைவான நான்கு வித உயரங்களும் பிம்ப உயரமாக இருக்கலாம். துவார உயரத்தில் 3-ல் 2 பங்கு அல்லது 4-ல் 3 பங்கு, அல்லது 8-ல் 7 பங்கு, அல்லது 9-ல் 8 பங்கு என்ற நான்கு குறைந்த அளவுகளில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.[18]

திருவுண்ணாழியின் சுத்தத் துவார உயரத்தில் கால் பங்கு கூடிய உயரம் அல்லது அரைப் பங்கு கூடிய உயரம் பிம்ப உயரமாக இருக்கலாம். அல்லது துவார உயரத்தை 6 கூறு செய்து 5 கூறு உயரமும் பிம்ப உயரமாக இருக்கலாம். மேற் குறிப்பிட்ட மூன்றுவித உயரங்களை மேலும் 9 பாகங்களாகப் பிரித்து மொத்தத்தில் கிடைக்கும் 27 வித உயரங்களில் ஒன்றைப் பிம்ப உயரமாக நிர்ணயிக்கலாம்.[19]

திருவுண்ணாழிச் சுத்தத் துவார உயரத்திற்குச் சமம், அரை, முக்கால், ஒன்றேகால் பங்கு உயரமுடையதாகப் பிம்ப உயரத்தைக் கொள்ளலாம். அல்லது துவார உயரத்தின் 9-ல் 8 பங்கு அல்லது 8-ல் 7 பங்கு பிம்ப உயரமாக இருக்கலாம்.[20]

சுத்தத்துவார உயரத்தில் பாதி, 5-ல் 3 கூறு அல்லது 3-ல் 2 கூறு படிம உயரமாகலாம்.[21]

1. பிராம்மீயம்
2. மரீசி சம்ஹிதை
3. விஸ்வக்சேன சம்ஹிதை
4. ஸநத்குமார சம்ஹிதை
5. ஸ்ரீ பிரஸ்ன சம்ஹிதை, பாத்ம சம்ஹிதை
6. பாத்ம சம்ஹிதை
7. வாசிஷ்ட சம்ஹிதை
8. சனத்குமார சம்ஹிதை, பாத்ம சம்ஹிதை
9. மரீசி சம்ஹிதை, விஸ்வக்சேன சம்ஹிதை
10. ஸ்ரீ பிரஸ்ன சம்ஹிதை, கபிஞ்சல சம்ஹிதை விசவாமித்ர சம்ஹிதை
11. கபிஞ்சல சம்ஹிதை, விஸ்வாமித்ர சம்ஹிதை
12. ஸ்ரீ பிரஸ்ன சம்ஹிதை
13. பாத்ம சம்ஹிதை
14. ஸ்ரீ பிரஸ்ன சம்ஹிதை
15. ஸ்ரீ பிரஸ்ன சம்ஹிதை
16. பாத்ம சம்ஹிதை, கபிஞ்சல சம்ஹிதை அத்ரி சம்ஹிதை
17. வாசிஷ்ட சம்ஹிதை, கபிஞ்சல சம்ஹிதை, விஸ்வாமித்ர சம்ஹிதை
18. விஸ்வகர்மீயம்
19. பிராம்மீயம்
20. மரீசி சம்ஹிதை, விஸ்வக்சேன சம்ஹிதை
21. சனத்குமார சம்ஹிதை, நாரதீய சம்ஹிதை

# 5

# உற்சவப் படிமங்கள்



ஒரு படிமத்தின் உயரம் என்பது, அப் படிமம் நேராக நிமிர்ந்து நிற்கும்போது, தலைமுதல் தாள் வரை உள்ள செங்குத்து உயரமேயாகும். இதுவே முன்பு படிம மானம் எனப்பட்டது.

கர்ப்பக் கிருஹத்தில் நிலையாக ஸ்தாபிக்கப்படும் படிமம் மூலப் படிமம் என்றும், மூல விக்ரஹம் என்றும், மூல பிம்பம் என்றும், மூலபேரம் என்றும் துருவபேரம் என்றும் பல பெயர்களால் சொல்லப்படும்.

கோவில் திருவிழாக் காலங்களில் திருவுலாக் கொள்வதற்குரியதாகப் படிமங்கள் இயற்றப்படுதல் மரபு. இவற்றையே உற்சவப் படிமங்கள் என்று கூறுகிறோம்.

உற்சவப் படிமங்களை இயற்றுங்கால், அவற்றை மூலப் படிமத்திற்கு இயைபுடையதாகவும், மூலப் படிமத்தின் உயர அளவோடு தொடர்பு கொண்டதாகவும் அமைத்தல் வழக்கு.

கீழ்க்காணும் அளவுகள் எல்லா வகைப் பிம்பங்களுக்கும் பொதுவானவையே. எனினும், சமயக் கருத்துகளுக்கு ஏற்ற சிறப்பு அளவுகளும் இதில் தனியாக இடம்பெற்றுள்ளதையும் காணலாம்.

மூல பிம்ப உயரத்திற்குச் சமம், முக்கால் அல்லது பாதியளவு செப்புத் திருமேனியின் உயரம் இருத்தல் வேண்டும். அல்லது, மூல பிம்பத்தின் உயர அளவை ஒன்பது சமக் கூறுகளாகப் பிரித்து, ஒரு கூறு முதல் ஒன்பது கூறு வரை கிடைக்கும் ஒன்பது விதமான அளவுகளில் ஏதேனுமொன்றைக் கொள்ளலாம். மேலும், மூல பிம்பத்தின் கேசாந்தம், புருவ மட்டம், கண் மட்டம், மூக்கு மட்டம், மோவாய் மட்டம், தோள் மட்டம், ஸ்தன மட்டம், மார்பு மட்டம் அல்லது நாபி மட்டம் ஆகியவற்றில் ஏதேனும் ஒரு மட்டத்தில் உற்சவப் பிம்பத்தின் உயரமிருக்கலாம்.

தினசரி பூசைக்குரிய படிமமானது கௌதுக பேரம் எனப்படும்.

உற்சவ பிம்பத்தின் உயர அளவில் பாதியளவைக் கௌதுக பிம்பத்தின் உயரமாகக் கொள்ளுதல் வேண்டும் அல்லது, உற்சவ பிம்பத்தின் உயரத்தை ஒன்பது பாகங்களாக்கி ஒரு பாகத்திலிருந்து ஒன்பது பாகம் வரையுள்ள ஒன்பது உயரங்களில் ஏதேனுமொரு உயரத்தைக் கௌதுக பிம்ப உயரமாகக் கொள்ளலாம்.

மானாங்குலத்தினாலும், பேராங்குலத்தினாலும், உற்சவப் பிம்ப உயரத்தைக் கொள்ளலாம். இவ்வளவுகள் திருக்கோவிலுக்கான படிமங் களுக்குரியன. ஆனால், ஆத்மார்த்த வழிபாட்டிற்குரிய செப்புத் திருமேனிகளை மாத்ராங்குலத்தினாலேயே கொள்ளுதல் வேண்டும். மானாங்குலம், மாத்ராங்குலம், பேராங்குலம் ஆகிய மூன்றாலும், உயர அளவு கொள்ளும்போது, ஆயாதிப் பொருத்தம் பார்த்து நல்ல அளவினைக் கொள்ளுதல் வேண்டும்.

மானாங்குல அளவில் உற்சவப் பிம்பத்தின் உயரம் கொள்ளுவதானால் ஒன்பது அங்குலம் முதல் இரண்டிரண்டு அங்குலங்களாகக் கூட்டி, நூற்றியிருபத்து மூன்று அங்குலம் வரை கிடைக்கும் பல்வேறு அளவுகளில் ஏதேனுமொன்றைத் தேர்தல் வேண்டும். அங்ஙனமே, பேராங்குலத்தால் உயரம் கொள்ள விரும்பும் போது, பதினொரு அங்குலம் தொடங்கி, இரண்டிரண்டு அங்குலங்களாகக் கூட்டி, நூற்றி முப்பத்து மூன்று அங்குலம் வரை கிடைக்கும்


240-1—6

பல்வேறு அளவுகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்து செய்யலாம்.

ஆத்மார்த்த பூசைக்குரிய பிம்பங்களின் உயரத்தை மாத்ராங்குலத்தால் கொள்ளும்போது, ஏழு அங்குலம் தொடங்கி, இரண்டிரண்டு அங்குலம் கூட்டி, நூற்றிப் பதின்மூன்று அங்குலம் வரை கிடைக்கும் பல அளவுகளில் ஏதேனுமொன்றை உயரமாகக் கொள்ளலாம்.

ஸ்கந்தாலய உற்சவப் படிமத்தின் அளவை மூல பிம்ப உயரத்திலிருந்தே கொள்வது முறையாகும். மூல பிம்பத்தின் உயரத்திற்குச் சமம், பாதி அல்லது கால் பங்குள்ளதாக உற்சவப் படிமத்தின் உயரமிருத்தல் வேண்டும். மேலும், மூல பிம்பத்தின் உயரத்தில் ஏழில் ஐந்து, ஐந்தில் நான்கு, அல்லது மூன்றில் இரண்டு பங்குள்ளதாகவும் இருக்கலாம்.

வைணவச் செப்புத் திருமேனிகளின் அளவுகளைக் குறிப்பிட்டுப் பேசும் ஆகம நூல்களிலிருந்தும் அளவு கொள்முறைகள் இங்குத் தரப்படுகின்றன. செப்புத் திருமேனிகள் கர்மார்ச்சை, உத்ஸவார்ச்சை, சயனார்ச்சை, பலியர்ச்சை, தீர்த்தார்ச்சை, ஸ்நபனார்ச்சை என ஆறு வகைப்படும். அவற்றின் ஒவ்வோர் உயர அளவையும் மூல பிம்ப உயரத்தைத் தழுவியே அமைத்தல் வேண்டும். எனவே, மூலபிம்ப உயரத்தில் பத்தில் இரண்டு பங்கு கர்மார்ச்சையும், அதே அளவினதாக உத்ஸவார்ச்சையும், பதினொன்றில் ஒன்று சயனார்ச்சையும், ஒன்பதில் ஒன்று பலியர்ச்சையும், எட்டில் ஒன்று தீர்தார்ச்சையும், ஆறில் ஒன்று ஸ்நபனார்ச்சையும் இருத்தல் வேண்டும்.[1]

மூல பிம்ப உயரத்தில் மூன்றில் ஒன்று, நான்கில் ஒன்று அல்லது ஐந்தில் ஒன்று கர்மார்ச்சையும், ஐந்தில் ஒன்று உத்ஸவார்ச்சையும், அதே அளவில் ஸ்நபனார்ச்சையும், ஸ்நபனார்ச்சையின் உயரத்தில் மூன்றில் ஒன்று பலியர்ச்சையும், மூலப் பேராங்குலத்தால் பதினொன்று அல்லது எட்டு அங்குல அளவில் தீர்த்தார்ச்சையும் இருத்தல் வேண்டும். மானாங்குலத்தால் ஆறு அங்குலம் கொண்டதாகவும் தீர்த்தார்ச்சையை அமைக்கலாம்.[2]

---

1. ஸ்ரீ பிரஸ்ன சம்ஹிதை
2. விஸ்வக்சேன சம்ஹிதை.

# 6

# ஆயாதி கணிதம்

கோயில்களை நிருமாணித்து, அங்கே இறைவனின் திருமேனிகளை முறைப்படி அமைத்து வழிபடுதல் வாயிலாகவும், மனையிடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கு இல்லங்களை நிறுவி வாழ்க்கை நடத்துவதன் வாயிலாகவும், மனிதன் அநேக நன்மைகளைப் பெற வேண்டுமென்ற பெருநோக்கோடு சிற்ப நூல்கள் சிறப்பான வழியொன்றினை நமக்குக் காட்டுகின்றன.

உலக நன்மைக்காகவும், யோகிகள், தேவர்கள் ஆகியோர் நன்மைக்காகவும் மேலான ஞானத்தைப் பெறுதற்காகவும் சிற்ப நூல்கள் இயற்றப் பட்டிருப்பதாகவே பண்டை நூலாசிரியர்கள் தத்தம் நூலின் தொடக்கவுரையில் கூறுகின்றனர்.

மனிதன், இயற்கையானதும் முழுமையானதுமான வாழ்க்கையை வாழ்ந்து, வேண்டிய இன்பத்தையும் அமைதியையும் துய்த்து, வாழ்க்கை இலட்சியத்தையும் அடைய உருவ வழிபாடே எளிய சாதனமாக உதவுகின்றது.

நன்மைகளை மக்கள் அடையும் பொருட்டுக் கூறப்படும் விதி முறைகளில் மிக அடிப்படையானதும், இரகசியமானதுமாகக் கருதப்பட்டு வழிவழியாகக் கடைப்பிடித்து ஒழுகப்படும் விதி ஆயாதி இலக்கண விதியாகும். இவ்விலக்கணத்திற்கு இணங்க அமைத்து வழிபடப்படும் படிமங்களும், கட்டப்படும் கோயில்களும், இல்லங்களும் நிறைந்த செல்வத்தையும், மிகுந்த சிறப்பையும் நல்குமென்று நூலாசிரியர் கூறுவர். எனவே கட்டடங்களைக் கட்டினாலும், படிமங்களைச் சமைத்தாலும், அதற்காக நம் இதயத்தின் அடித்தளத்தில் அரும்புகின்ற நோக்கம் நிறைவேறவே ஆயாதி இலக்கணம் தக்கதொரு வழிவகுத்துக் கொடுக்கின்றது.

சிற்பியானவன் ஒரு கோயிலைக் கட்டுவதற்கு அல்லது படிமம் ஒன்றினை ஆக்குதற்கு முன்பாக, முதன் முதலில் இந்த ஆயாதி இலக்கண விதியைப் பயன்படுத்தி ஆலயம் அல்லது படிமம் இவற்றின் அளவினைக் கணித்து அறிதல் வேண்டும்.

ஒரு கோயிலை அல்லது மனையை அல்லது வழிபடு படிமத்தை எத்தனையோ அளவுகளில் உருவாக்கலாம். ஆனால் அவையெல்லாம் செய்விப்போனுக்கும், வழிபடுவோருக்கும் நன்மைகளை நல்குமென்று சொல்லிட இயலாது. அவற்றில் ஒரு சில நன்மைகளைத் தருமென்றும் மற்றவை தீமைகளைக் கூட விளைவிக்குமென்பதும் சிற்ப நூலோர் துணிபு.

நீண்ட ஆயுளையும், மக்கள் பேற்றினையும் பெற்றுச் செல்வத்தோடும், இன்பத்தோடும் இல்வாழ்க்கை நடத்த வேண்டுமென்ற கருத்தோடு ஓர் ஆண் மகனுக்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியைப் பொருத்தம் பார்த்து எங்ஙனம் தேர்ந்தெடுகின்றோமோ அங்ஙனமே, ஒன்றைச் செய்விப்போன் விரும்பிய நன்மைகளைப் பெறுதற்கேற்ற படிம அளவினை அல்லது கட்டட அளவினை ஆயாதி இலக்கணம், பொருத்தம் பார்த்துத் தேர்ந்தெடுத்துத் தருகின்றது.

எனவே, நன்மை தரும் அளவை நிர்ணயிப்பது ஆயாதி இலக்கணத்தின் நோக்கம் ஆகும். இதனை ஆயாதிச் சூத்திரமென்றும், ஆயாதிப் பொருத்தமென்றும் நூல்கள் கூறும்.

ஆயம் என்பது வரவு அல்லது பயன் என்று பொருள்படும். ஓர் அளவைக் கைக் கொள்வதால் ஏற்படும் பயன் அல்லது விளைவு


240-1—6a

பற்றிக் கூறும் இலக்கணமாகையினால்—ஆயாதி—ஆயத்தை ஆதியாகவுடைய இலக்கணம் எனப்பெற்றது.

ஆயாதிச் சூத்திரங்கள் பலவகைப்படும். ஆறு வகையான பொருட்களை மட்டும் ஆராய்வதை ஷடாயாதி என்றும், பத்துப் பொருள்களை மட்டும் ஆராய்வதை, தசாயாதி என்றும், பதினாறு பொருள்களை ஆராய்வது ஷோடச ஆயாதி என்றும் சொல்லப்படும். ஷோடச ஆயாதியினை பூர்ண ஆயாதி என்றும் சொல்வது ஒரு வழக்கு.

வழிபடு படிமங்களுக்கு உயரம் கொள்ளும் முறையைப் பல்வேறாகச் சிற்ப நூல்கள் கூறுகின்றன. ஒரு படிமத்தின் உயரத்தைப் பதினோரு விதமாகக் கொள்ளலாம். எவ்வெவெற்றாலெனின், லிங்க மானத்தால், கர்ப்பக்கிருக மானத்தால், துவார மானத்தால், அதிஷ்டான மானத்தால், பாத மானத்தால், ஹஸ்த மானத்தால், தாள மானத்தால், கர்த்தாவின் உயரமானத்தால், பேராங்குல மானத்தால், மானாங்குல மானத்தால், மாத்ராங்குல மானத்தால், படிம மானம் பதினோரு வகையாகும். இவற்றின் விரிவை முன்னுள்ள அத்தியாயத்தில் காணலாம். இதில் ஏதாவதொரு மானத்தைச் சிற்பியானவன் கைக்கொண்டு அவ் அளவு செய்விப்போனுக்குப் பொருத்தமுடையதா என்று ஆயாதிக் கணக்கின் மூலமாக ஆராய்ந்து தேர்ந்தெடுத்தல் வேண்டும்.

ஷடாயாதியில் அடங்கிய ஆறு பொருள்கள் பின்வருமாறு: (1) ஆயம் (2) வியயம் (3) யோனி (4) தினம் (5) வாரம் (6) அம்சம்—என்பன ஆகும்.

1. ஆயம் என்பது வரவு அல்லது பயன்
2. வியயம் என்பது செலவு அல்லது இழப்பு
3. யோனி என்பது திசைகள்
4. தினம் என்பது நட்சத்திரங்கள்
5. வாரம் என்பது கிழமைகள்
6. அம்சம் என்பது கூறு அல்லது தன்மை.

இனி, மேற்குறிப்பிட்ட ஒவ்வொன்றின் விரிவைத் தனித்தனியே காண்போம்.

ஆயம் பன்னிரண்டு வகைப்படும். அவை முறையே:—

| | | |
|---|---|---|
| 1. | யோகம் | – எதிர்பாராத வரவு |
| 2. | போகம் | – துய்த்தல் |
| 3. | சம்ப்ராப்தி | – நற்பேறு |
| 4. | வீரம் | – கொற்றம் |
| 5. | தான்யம் | – கூல வகைகள் |
| 6. | தனம் | – செல்வம் |
| 7. | சுகம் | – இன்பம் |
| 8. | தர்மம் | – அறம் |
| 9. | ஞானம் | – மெய்யறிவு |
| 10. | யோகம் | – ஒன்றிப்பு (லயம்) |
| 11. | சித்தி | – வெற்றி |
| 12. | அர்த்தம் | – பொருள் |

செலவாகிய வியயம் பத்துப் பொருள்களைக் கொண்டது. அவை முறையே:—

| | | |
|---|---|---|
| 1. | புக்தி | – துய்த்தல் |
| 2. | முக்தி | – வீடு |
| 3. | சுபம் | – நன்மை |
| 4. | சம்ருத்தி | – நல்வளம் |
| 5. | சம்பத் | – பல்வகைச் செல்வம் |
| 6. | தனம் | – பொருட்செல்வம் |
| 7. | மேன்மை | – வளர்ச்சி |
| 8. | நாசம் | – அழிவு |
| 9. | கலகம் | – சண்டை |
| 10. | நட்பு | – நேயம் |

யோனி எட்டு வகைப்படும். அவை திசை அடையாளங்களைக் குறிக்கும். இவற்றைக் கிருக பந்தம் என்றும், திக்தேவதைகள் என்றும், கிருகங்களின் பிராணன் என்றும் (வீட்டின் உயிர்) நூல்கள் கூறும். அவை

| | | | |
|---|---|---|---|
| 1. | துவஜம் | – கொடி | – கிழக்கு (இந்திரன்) |
| 2. | தூமம் | – புகை | – தென் கிழக்கு (அக்னி) |
| 3. | சிம்மம் | – சிங்கம் | – தெற்கு (எமன்) |
| 4. | சுவானம் | – நாய் | – தென்மேற்கு (நிருதி) |
| 5. | விருஷபம் | – எருது | – மேற்கு (வருணன்) |
| 6. | கரம் | – கழுதை | – வடமேற்கு (வாயு) |
| 7. | கஜம் | – யானை | – வடக்கு (குபேரன்) |
| 8. | காகம் | – காக்கை | – வடகிழக்கு (ஈசானன்) |

தினம் என்பது அசுவினி முதலான இருபத்தேழு நட்சத்திரங்களைக் குறிக்கும். வாரம் என்பது ஞாயிறு முதலாகிய ஏழு கிழமைகளைக் குறிக்கும். அம்சம் என்பது கூறு அல்லது தன்மை என்று பொருள்படும். அஃது ஒன்பது வகைப்படும். அவை முறையே:—

| | | |
|---|---|---|
| 1. | தஸ்கரன் | – திருடன் |
| 2. | புக்தி | – இன்பம் துய்ப்போன் |
| 3. | சக்தி | – ஆற்றலுடையோன் |
| 4. | தன்யன் | – பேறு பெற்றோன் |
| 5. | நிருபன் | – அரசன் |
| 6. | கிளீபன் | – அலி |
| 7. | நீர்பீதி | – அஞ்சாநெஞ்சன் |
| 8. | தரித்திரன் | – வறியவன் |
| 9. | பிரேஷ்யன் | – சேவகன் |

## ஆயாதி கணிக்கும் முறை:

இனி, ஆயாதி கணிக்கும் முறையை இங்கு ஆராய்வோம். நின்ற கோலத்தில் இருக்கும் படிமம் ஒன்றின் தாள் முதல் தலைவரை கொண்ட உயரமானம் செய்விப்போனுக்கும், அதனை வழிப்படும் ஊர்மக்கட்கும் அப் படிமம் உணர்த்தும் இறைவனுக்கும் பொருத்தமுடையதாக அமைந் திருக்கின்றதா என்பதை சோதித்தறிய முயல்வோம்.

**இதற்கு அடிப்படைத் தேவைகள்:**

1. செய்விப்போனின் பிறந்த நாள்; அதாவது கர்த்தாவின் **ஜென்ம நட்சத்திரம்.**
2. ஊர் நட்சத்திரம்; இதற்கு வாஸ்து நட்சத்திரம் என்று பெயர்.
3. படிமம் எந்தத் தெய்வத் திருமேனியைக் குறிப்பிடுகிறதோ அந்தத் திருமேனிக்குரிய நட்சத்திரம். இது சுவாமி அல்லது பிம்ப நட்சத்திரம் எனப்படும்.

இம்மூன்றில் செய்விப்போனாகிய கர்த்தாவின் நட்சத்திரத்தை அவரது பிறந்த நாட்குறிப்பிலிருந்து அறிதல் கூடும். அங்ஙனம் இல்லையேல், அவருடைய பெயரின் முதலெழுத்துக்குரிய நாம நட்சத்திரத்தையே கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு கிராமும், நகரமும், பட்டணமும் ஒரு குறிப்பிட்டக் காலத்தில், குறிப்பிட்ட நட்சத்திரத்தில் தோற்றுவிப்பது பண்டைக்கால முறை. அந் நட்சத்திரத்திற்கேற்ற பெயரை அவ்விடத்திற்குச் சூட்டுவதும் உண்டு. எனவே முறைப்படி தோற்றுவிக்கப்பட்டு அதற்கேற்ற பெயரும் அவ்விடத்திற்குச் சூட்டப் பெற்றிருக்குமாயின் அவ் வாஸ்து தோன்றிய நாள் அல்லது நட்சத்திரம் எளிதில் கிடைக்கும். இங்ஙனம் முறைப்படி கிடைக்காவிடில் ஊர்ப் பெயரின் முதலெழுத்துக்குரிய நாம நட்சத்திரத்தையே கொள்ள வேண்டும்.

எந்தெந்த மூர்த்தத்துக்கு எந்தெந்த நட்சத்திரம் உரியது என்பதைச் சிற்ப, ஆகம நூல்கள் கூறும். அங்ஙனம் கூறப்பெறாத கடவுட் படிமம் இருப்பின் அவற்றின் பெயரின் முதலெழுத்துக்குரிய நாம நட்சத்திரத்தையே கொள்ள வேண்டும்.

## லிங்க நட்சத்திரங்கள்

| | | |
|---|---|---|
| சுயம்பூ | – | திருவாதிரை |
| தைவிகம் | – | பூசம் |
| ஆருஷம் | – | சுவாதி |
| ஆசுரம் | – | உத்திரம் |
| மானுஷம் | – | அனுஷம் |

## சுவாமி நட்சத்திரங்கள்

| | | |
|---|---|---|
| கணபதி | – | சதயம் |
| சுப்பிரமணியன், | | |
| ஷண்முகன் | – | கார்த்திகை |
| முருகன், கந்தன் | – | விசாகம் |
| சிவன் | – | திருவாதிரை |
| பிரம்மா | – | ரோகிணி |
| கிருஷ்ணன் | – | ரோகிணி |
| விஷ்ணு | – | திருவோணம் |
| இராமன் | – | புனர்பூசம் |
| சனி | – | பரணி |
| பகவதி, பார்வதி | – | பூரம் |
| காளி | – | கார்த்திகை |
| துர்க்கை, சரஸ்வதி | – | சுவாதி |
| லஷ்மி | – | உத்திரம் |
| பூமிதேவி | – | விசாகம் |
| சண்டேசுவரன் | – | சுவாதி |
| ஷேத்ர பாலகன் | – | மிருகசீருஷம் |
| சந்திரன் | – | ரோகிணி |
| ஆதித்தன் | – | மகம் |
| வீரபத்திரன் | – | பரணி |
| சாஸ்தா | – | உத்திரம் |
| கருடன், அனுமான் | – | சுவாதி |
| வாமனன் | – | திருவோணம் |
| மத்ஸ்யாவதாரம் | – | ரேவதி |
| கூர்மாவதாரம் | – | கார்த்திகை |
| வராகாவதாரம் | – | மூலம் |
| நரசிம்மன் | – | சுவாதி |
| பரசுராமன் | – | மிருகசீருஷம் |
| ஸ்ரீ தரன் | – | மூலம் |
| ஞானி | – | ஹஸ்தம் |
| பலராமன் | – | திருவாதிரை |
| கல்கி | – | உத்திரம் |

இங்ஙனம், கர்த்தா நட்சத்திரம், வாஸ்து நட்சத்திரம், சுவாமி நட்சத்திரம் ஆகிய மூன்று நட்சத்திரங்களையும் முன்கூட்டியே அறிந்து கொள்ள வேண்டும். இம் மூவருக்கும் பொருத்தமுடையதாக, படிமத்தின் உயரத்தை வகுத்துக் கொள்ள வேண்டுமல்லவா?

ஏற்கனவே வேறிடத்தில் கூறியுள்ளபடி ஒரு படிமத்தின் உயரத்தைப் பதினோரு வகையாகக் காணலாம். அதில் ஏதேனும் ஓர் அளவைத் தேர்ந்தெடுத்து நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். இப்படி அமையும் உயரமானது ஏற்கனவே கட்டப்பட்டிருக்கின்ற கோவிலின் உள் அளவு, வாயில் அளவு ஆகியவற்றையும்

அடிப்படையாகக் கொண்டதாயிருத்தல் வேண்டும். கிட்டத்தட்ட இதனைக் `கண் பொருத்தம்' என்று கூறலாம்.

இங்ஙனம் மதிப்பிடப்பட்ட படிம உயரமானது, கர்த்தா, வாஸ்து, சுவாமி ஆகிய மூவருக்கும் பொருத்தமுடையதா என்று சோதிக்க, இந்த அளவைக் கொண்டு இவ்வளவுக்குரிய மற்றொரு நட்சத்திரத்தைக் கண்டு பிடித்தல் வேண்டும். அங்ஙனம் கணித்துப் பெறப்பட்ட நட்சத்திரம் ஆயாதி நட்சத்திரம் என்று சொல்லப்படும். இந்த அளவுக்குத்தானே ஆயம் முதலியன காண வேண்டியுள்ளது? எனவே இப்பெயர்.

படிமத்திற்குக் கொண்ட உயர அளவை எட்டால் பெருக்கி இருபத்தேழால் வகுத்தால் கிடைக்கும் மீதி எண் ஒன்றானால் அசுவினி; இரண்டானால் பரணி; மூன்றானால் கார்த்திகை; இப்படியே 27 வரை முறையே கணக்கிடவும், 27 அல்லது 0 மீதமானால் அது ரேவதி என்று கொள்ள வேண்டும். இங்ஙனம் ஆயாதி நட்சத்திரம் கண்டு பிடிக்கப்படுகிறது. உதாரணத்தின் மூலம் இதனை மேலும் விளக்குவோம்.

ஒரு படிமத்தைச் செய்விப்போன் விசாக நட்சத்திரத்தில் தோன்றியவன் என்றும், ஊர் நட்சத்திரமாகிய வாஸ்து நட்சத்திரம் சித்திரை என்றும், சுவாமி (முருகன்) நட்சத்திரம் கார்த்திகை என்றும் கொள்வோம். உத்தேசப் படிம உயரம் 17 மானாங்குலம் என்று கொள்வோம். இது நின்றகோலப் படிமத்தின் தாள் முதல் தலை வரை உள்ள உயரமாகும்.

இவ்வளவுக்குரிய எண்ணாகிய 17ஐ எட்டால் பெருக்கி, இருபத்தேழால் வகுத்தால் மீதி வருவது ஒன்று. அசுவினி முதல் ரேவதி வரை உள்ள நட்சத்திர வரிசையில் முதலாவது நட்சத்திரமாகிய அசுவினியை மீதியாக வந்த ஒன்றுக்குரிய நடசத்திரமாகக் கொள்ள வேண்டும். (வகுத்து வந்த மீதி ஐந்து எனில் நட்சத்திர வரிசையில் ஐந்தாவது நட்சத்திரமாகிய மிருக சீருஷம் ஆயாதி நட்சத்திரமாகும்). இப்பொழுது பதினேழு மானாங்குலத்திற்குக் கிடைத்த ஆயாதி நட்சத்திரம் அசுவினி ஆகிறது.

இனி, கர்த்தா முதலியோருக்கு இந்நட்சத்திரம் பொருத்தமுடையதாவென்று சோதித்தல் வேண்டும். கர்த்தா நட்சத்திரமாகிய விசாகத்திலிருந்து, ஆயாதி நட்சத்திரமாகிய அசுவினி வரை, வரிசையாக எண்ண வேண்டும். அங்ஙனம் எண்ணினால், ஆயாதி நட்சத்திரம் பதின் மூன்றாவது நட்சத்திரமாக வருவதைக் காணலாம். இதனை ஒன்பதால் வகுத்தால் மீதம் நான்கு.

இவ்விடத்தில் மற்றொரு விதியை அறிதல் வேண்டும். எந்த நட்சத்திரத்திலிருந்து தொடங்குகிறோமோ அதிலிருந்து ஒன்பதாவது நட்சத்திரம் வரை உள்ள நட்சத்திரச் சேர்க்கையை முதல் பிரிவென்றும், பத்து முதல் பதினெட்டாவது நட்சத்திரம் வரை உள்ள நட்சத்திரங்களை இரண்டாவது பிரிவென்றும், பத்தொன்பதாவது நட்சத்திரம் முதல் இருபத்தேழாவது நட்சத்திரம் வரை உள்ள நட்சத்திரம் மூன்றாவது பிரிவென்றும் கொள்ளுதல் வேண்டும். இப் பிரிவுகளுக்குப் பரியாயம் என்று பெயர். இங்ஙனம் ஒவ்வொரு பரியாயத்திலும் வரக்கூடிய ஒன்று முதல் ஒன்பது நட்சத்திரங்களுக்கு வரிசையாகப் பலன்களும் கூறப்பட்டிருக்கின்றன. அவை முறையே:

1. ஜென்மம் (பிறப்பு)
2. சம்பத் (நற்பேறு)
3. விபத்து (ஆபத்து)
4. ஷேமம் (நற்சுகம்)
5. பிரத்தியரம் (விரைவற்றது)
6. சாதகம் (அனுகூலம்)
7. வதை (கொலை)
8. மைத்திரம் (நட்பு)
9. (0 அல்லது) பரம மைத்திரம் (முழு நட்பு)

எனச் சொல்லப்படும். ஒவ்வொரு சொல்லின் பொருளே அதன் பலனாகும். கர்த்தா நட்சத்திரம் முதல் ஆயாதி நட்சத்திரம் வரை எண்ணிக் கிடைத்த எண், முதலாவது (அல்லது) இரண்டாவது (அல்லது) மூன்றாவது பரியாயத்திலிருப்பின் அப் பரியாயத்தில் எத்தனையாவது என்பதைக் கண்டு, அதற்குரிய பலனை நோக்கி, அதன் அடிப்படையில் படிம மானத்தைக் கொள்ளுதல் அல்லது தள்ளுதல் வேண்டும். இது நட்சத்திரப் பலன் ஆகையினால் தாரா பலன் என்றும் சொல்லப்படும். உதாரணத்தில் கொண்ட கர்த்தா நட்சத்திரமாகிய விசாகத்திலிருந்து ஆயாதி நட்சத்திரம் இரண்டாவது பரியாயத்தில் நாலாவதாகிய ஷேமதாரகையைக் காட்டுகிறது. எனவே, பதினேழு அங்குல அளவு கொண்ட படிமம் செய்விப்போனுக்கு ஷேமத்தைத் தரும் என்பது உணரப்படும். பிறகு, வாஸ்து நட்சத்திரமாகிய சித்திரையிலிருந்து ஆயாதி நட்சத்திரமாகிய அசுவினி வரை எண்ணினால் ஆயாதி நட்சத்திரம் இரண்டாவது பரியாயத்தில் ஆறாவதாகிறது. இது சாதகத்தாரகையைக் குறிக்கிறது அல்லவா? எனவே, படிமத்திற்குக் கைக் கொண்ட அளவு செய்விப்போனுக்கும், ஊருக்கும் சாதகமானது–அனுகூலமானது–பொருத்தமுடையது என்றாகிறது. இதே போல், சுவாமி நட்சத்திரமாகிய

கார்த்திகையிலிருந்து ஆயாதி நட்சத்திரமாகிய அசுவினி வரை எண்ணினால். மூன்றாவது பரியாயத்தில் எட்டாவது தாரையாகிய மைத்திரத் தாரை வருகிறது. இதுவும் நட்பு ஆகும். நற்பலனாகையினால் சுவாமிக்கும் பொருந்து வதாகிறது.

இச் சோதனையிலிருந்து நாம் அறிவது யாதெனில், படிமத்தை செய்விப்போன், படிமத்தை வணங்கும் ஊர் மக்கள், வழிபடு படிமம் ஆகிய மூவர்க்கும் தாரா பலன் சிறப்பாகப் பொருந்தி இருக்கிறது.

இதேபோல எஞ்சியுள்ள ஆயம், வியயம், வாரம், யோனி, அம்சம் ஆகிய ஐந்தையும் சோதனை செய்வோம்.

படிம உயரத்தை ஆயாதி எண் என்று கொண்டு, அந்த ஆயாதி எண்ணை 8-ஆல் பெருக்கி 12 ஆல் வகுத்து வரும் மீதி ஆயம் அல்லது வரவு எனப்படும்.

1. ஆயம் 17 x 8 12 = ஈவு 11 மீதி 4
2. வியயம் 17 x 9 10 = ஈவு 15 மீதி 3

வரவைக் காட்டிலும் இழப்பு குறைவானதினால் நன்றாம்.

3. யோனி 17 x 3 8 = ஈவு 6 மீதி 3— சிம்மயோனி
4. வாரம் 17 x 9. 7 = ஈவு 21 மீதி 6— வெள்ளிக்கிழமை
5. அம்சம் 17 x 4 9 = ஈவு 7 மீதி 5— இராஜ அம்சம்

மேற்கண்ட பலன்களைக் கவனிக்கையில், எல்லாம் நல்லதாகவே அமைவதால் பதினேழு அங்குல அளவுடைய படிமம் நன்மையைப் பயக்கக் கூடிய அளவென்று தெரியவருகிறது.

இத் தருணத்தில் மற்றொரு முக்கியமான பொருளையும் மனத்தில் இருத்திக் கொள்ளுதல் வேண்டும். பதினேழு மானாங்குலம் படிம அளவு எனக் கொண்டது, ஆயாதி எண் என்று முதலில் சொன்னோம். இது எண் ஆகையினால் பதினேழு அங்குலமாகவும், பதினேழு முழமாகவும், பதினேழு தாளமாகவும், பதினேழு மாத்ராங்குலமாகவும் இருக்கலாம். எனவே பதினேழு என்பது ஓர் எண் என்றும் அது வெவ்வேறு அளவுகளில் கொள்ளப்படலாம் என்பதும் தெரிகிறதல்லா? எனவே தேவைக்கு ஏற்றவாறு பதினேழு என்ற நல்ல எண்ணை முழமாகவோ, தாளமாகவோ, அங்குலமாகவோ, மாத்ராங்குலமாகவோ, யவாங்குலமாகவோ. கொண்டு படிமத்தின் உயரத்தை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். மற்றுமொரு படிம உயரத்தைக் குறிக்கும் எண்ணைக் கொண்டு ஆயாதிச் சோதனையைச் செய்வோம்.

| | | |
|---|---|---|
| படிம உயர அளவு | .. | 23 மானாங்குலம், எனவே, |
| ஆயாதி எண் | .. | 23 |
| கர்த்தா நட்சத்திரம் | .. | விசாகம் |
| சுவாமி நட்சத்திரம் | .. | கார்த்திகை |
| வாஸ்து நட்சத்திரம் | .. | சித்திரை |

முதலில் ஆயாதி நட்சத்திரத்தைக் கணித்தறிந்து கர்த்தா, வாஸ்து ஆகிய மூவருக்கும் பொருந்துகிறதா என்பதைச் சோதிப்போம்.

ஆயாதி நட்சத்திரம்–23 x 8 27 = ஈவு 6 மீதி 22—திருவோணம்

கர்த்தா நட்சத்திரமிருந்து திருவோணம் வரை எண்ணினால் முதல் பரியாயத்தில் 7வது நட்சத்திரம்.

பலன்–வதை (துன்பம்)
சுவாமி நட்சத்திரத்திலிருந்து திருவோணம் வரை எண்ணினால் 2-வது பரியாயத்தில் 2-வது நட்சத்திரம்

பலன்–சம்பத்து (பொருளுடைமை)

வாஸ்து நட்சத்திரத்திலிருந்து திருவோணம் வரை எண்ணினால் முதல் பரியாயத்தில், 9வது நட்சத்திரம்.

பலன்–பரம மைத்ரம் (நட்பு)
இவ்வளவு சுவாமிக்கும் ஊருக்கும் பொருந்தியுள்ளது. செய்விப்போனுக்கு வதை (துன்பம்) என்ற பலன் வருவதால் இவ் அளவு ஏற்கத்தக்கதன்று.

ஆயாதி நட்சத்திரமே பொருந்தவில்லையாதலால் படிமத்திற்குக் கொண்ட அளவு ஏற்றதன்று. எனினும் மற்ற விஷயங்களையும் இங்கு ஆராய்வோம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆயம் | 23 x 8 | 12 | = | ஈவு 15 | மீதி 4 |
| வியயம் | 23 x 9 | 10 | = | ஈவு 20 | மீதி 7 |
| யோனி | 23 x 3 | 8 | = | ஈவு 64 | மீதி 5 |
| தினம் | 23 x 8 | 27 | = | ஈவு 6 | மீதி 22 |
| வாரம் | 23 x 9 | 7 | = | ஈவு 29 | மீதி 4 |
| அம்சம் | 23 x 4 | 9 | = | ஈவு 10 | மீதி 2 |

குறிப்பு: வகுத்த பின் மீதி 0 ஆனால் அதை 9 எனவே கொள்ள வேண்டும். மேற்குறிப்பிட்ட பலன்களை வரிசைக் கிரமமாகக் கணிக்கும் போது கீழ்க்கண்ட பலன் காணப்படுகிறது.

ஆயம் நான்கு. வியயம் ஏழு. இதில் வரவு குறைந்து இழப்பு கூடியுள்ளது. எனவே தள்ளத் தக்கது.

யோனி 5. விருஷப யோனி கொள்ளத்தக்கது. (யோனிகளில் 1,3,5,7 ஆகிய துவஜம், சிம்மம், விருஷபம், கெஜம் ஆகியவை நன்மை தருவன. மற்றவை தீமை பயப்பன).

தினம் 22. திருவோண நட்சத்திரம்—நல்ல நட்சத்திரம் எனவே கொள்ளத்தக்கதே. கர்த்தா, சுவாமி, வாஸ்து ஆகிய மூன்றில் கர்த்தாவிற்கு நல்ல பலனைத் தராததால் கொள்ளத்தக்கதன்று. வாரம் 4, புதன்—நன்று. (திங்கள், புதன், வியாழன், வெள்ளி ஆகிய நான்கு வாரங்கள் நன்றாகும். மற்றவை நன்றல்ல).

அம்சம் 2. புக்தி அம்சம். இன்பம் துய்க்கும் தன்மை உண்டு (தஸ்கரன், கிளீபன், தரித்திரன் ஆகீய மூன்றும் நன்றல்ல. மற்றவை நன்றே).

## முடிவுரை:

கர்த்தா நட்சத்திரமாகிய விசாகத்திற்கு ஆயாதி நட்சத்திரமாகிய திருவோணம் துன்பம் என்ற பலனை விளைவிக்குமாதலாலும் செய்விப்போன் இப் பணியில் முக்கிய உறுப்பினர் ஆகையினாலும், தினப்பொருத்தமே நன்றாக இல்லை என்று முடிவு கூறி நீக்கலாம். இங்ஙனம் தினப்பொருத்தம் நன்றாக அமையவில்லையானால் மற்ற விஷயங்களைச் சோதித்து அறியவே வேண்டாம்.

இருப்பினும், ஆயம், வியயம் ஆகிய இரண்டும் குறைபாடுடையன. மொத்தத்தில் ஆறு பொருள்களில் மூன்று நற்பலனும் மூன்று தீய பலனும் கொண்டதாய் இவ் அளவு அமைவதால் படிமத்திற்கு மதித்த அளவு கொள்ளத்தக்கதல்ல வென்று முடிவு செய்தல் வேண்டும்.

மேற்கூறிய வண்ணம் ஆயாதி விஷயங்களைக் கணித்து, அவற்றிற்குரிய பலன்களை அறிந்து, எல்லாம் நற்பயனைத்தரும் எனில் அவ்வளவினைக் கைக்கொண்டு படிமங்களுக்கு உரிய உயரத்தைக் கொள்ளுதல் வேண்டும்.

சில நேரங்களில் ஆறு விஷயங்களில் ஒன்று (அல்லது) இரண்டு நல்ல பலனைத் தராது எனினும் ஏற்கலாம். ஆனால் தினப் பொருத்தம், யோனிப் பொருத்தம் மிக நன்றாக அமைதல் இன்றியமையாததாகும்.

ஆயாதியின் ஆறு பொருள்களை ஆய்ந்தறிந்த பின் யோகம் என்ற ஒரு விசேட அம்சம் பற்றியும் சோதித்து நல்ல யோகமுடைய ஆயாதி அளவைத் தேருதல் வேண்டும்.

யோகம் நான்கு வகைப்படும். அவைமுறையே:—

1. வியோகம்
2. மரணம்
3. நாசம்
4. அமிர்தம்

முதல் மூன்று யோகங்கள் தள்ளத்தக்கன. அமிருத யோகமே கொள்ளத்தக்கதாம்.

## யோகம் காணும் முறை:

அசுவினி முதல் ரேவதி வரை நடசத்திரங்கள் 27. இவ் வரிசையில் எப்பொழுதும் அசுவினி நட்சத்திரத்தை முதல் நட்சத்திரமாகக் கொள்கிறோம். ஆனால் யோகம் கண்டு பிடிக்க வேண்டிய நேரத்தில் விசாகத்தை முதலாகக் கொண்டு, விசாகம் முதல் மூலம் வரை ஒரு தொகுப்பும், பூராடம் முதல் திருவோணம் வரை மற்றொரு தொகுப்பும், இங்ஙனமே நான்கு நான்கு நட்சத்திரங்கள் சேர்ந்த தொகுப்புகளாகப் பிரிக்கின், மொத்தத்தில் 7 தொகுப்புகள் கிடைக்கும். முதல் தொகுப்பை ஞாயிற்றுக்கிழமைக்கு உரியதென்றும், இரண்டாவது பிரிவைத் திங்களுக்கு உரியதென்றும், இங்ஙனம் 7-வது பிரிவைச் சனி வாரத்துக்குரியதென்றும் ஜோதிட நூலோர் கூறுவர்.

ஒவ்வொரு தொகுப்பிலும் அடங்கிய நான்கு நட்சத்திரங்களுக்கு மேற்குறிப்பிட்ட நான்கு யோகங்களை வரிசையாகத் தொடர்புபடுத்திப் பலன் கூறி விளக்கியுள்ளார்கள்.

ஒவ்வொரு கிழமைக்கும் ஏற்பட்ட நட்சத்திரங்கள் எந்தெந்த யோகத்தில் அடங்குகின்றன என்பதை வரிசைக் கிரமமாக்க் கொடுத்திருப்பதைக் கீழே காண்க.

| கிழமை | வியோகம் | மரணம் | நாசம் | அமிருதம் | மற்ற நட்சத்திரங்கள் |
|---|---|---|---|---|---|
| ஞாயிறு | விசாகம் | அனுஷம் | கேட்டை | மூலம் | சித்தயோகம் |
| திங்கள் | பூராடம் | உத்திராடம் | – | திருவோணம் | சித்தயோகம் |
| செவ்வாய் | அவிட்டம் | சதயம் | பூரட்டாதி | உத்திரட்டாதி | சித்தயோகம் |
| புதன் | ரேவதி | அசுவினி | பரணி | கார்த்திகை | சித்தயோகம் |
| வியாழன் | ரோகிணி | மிருகசீருஷம் | திருவாதிரை | புனர்பூசம் | சித்தயோகம் |
| வெள்ளி | பூசம் | ஆயில்யம் | மகம் | பூரம் | சித்தயோகம் |
| சனி | உத்திரம் | அஸ்தம் | சித்திரை | சுவாதி | சித்தயோகம் |

அமிருதயோகம் உத்தமம் ஆகும். ஓர் உதாரணத்தின் மூலம், மேலும் இதனை விளக்குவோம்.

ஆயாதிக் கணக்கில் கிடைக்கும் வாரம், புதன் என்று கொள்வோம். அந்த வாரத்தில் ரேவதி நட்சத்திரம் வருமானால், அதனை வியோகம் என்று நீக்கிடல் வேண்டும். அங்ஙனமே அசுவினி, பரணி வருமானால் முறையே மரணம், நாசம் ஆகியவற்றைத் தரும். புதன் வாரத்தில் கார்த்திகை நட்சத்திரம் வருமானால் அமிர்தயோகம் என்று கொண்டு வாரத்தை ஏற்றுக் கொள்ளலாம். இந்த நான்கு நட்சத்திரங்களைத் தவிர வேறு நட்சத்திரம் வருமானாலும் அதனைச் சித்தயோகம் என்று கொள்ள வேண்டும்; இதுவும் நல்ல யோகமே.

ஆயாதிச் சோதனைக்கும், நல்ல காரியங்களைத் தொடங்க நாள் தேர்ந்தெடுக்கவும், இம் முறையினைப் பின்பற்றிக் கண்டு கொள்ள வேண்டும்.

கட்டட நிர்மாணத்தில் கட்டட அளவுகளுக்கும் இங்ஙனம் ஆயாதிப் பொருத்தம் காண்பது தொன்றுதொட்ட வழக்கம். கோவிற் கட்டடங்களில் திருவுண்ணாழி (கர்ப்பக் கிருகம்), அதன் வாயில், மண்டபம், கோபுரம், திருச்சுற்று (பிரகாரம்) ஆகியவற்றின் சுற்றளவுகளுக்கு ஆயாதிப் பொருத்தம் காணுதல் வேண்டும். அங்ஙனமே கொடிமர (துவஜ ஸ்தம்பம்) உயரம், குளம், கிணறு முதலியவற்றின் ஆழம் ஆகியவற்றிற்கும் பொருத்தம் காணுதல் வேண்டும். வீடு, மனையிடம், கிராமம், நகரம், பட்டணம் ஆகிய எல்லா அமைப்புகளுக்கும் ஆயாதிக் கணிதச் சோதனை செய்து, நன்மை தரும் சுற்றளவினைத் தேர்தல் வேண்டும். இதன் நுணுக்கங்களையும், பிற ஆயாதி முறைகளையும் கட்டட நூலில் விளக்கிக் கூறியிருப்பதைக் காண்க.

# 7

# கை அமைதிகள்



## ஆடற்கலையும் சிற்பக்கலையும்

நம் நாட்டுச் சிற்பக்கலை மரபின் சிறப்பியல்புகளில் ஒன்று. ஆடற்கலை இலக்கணங்களை இக்கலையில் ஏற்றுக் கொண்டமையாகும். சிற்ப வடிவங்கள் நின்றாலும், அமர்ந்தாலும், கிடந்தாலும் வேறு எந்த அமைதியில் தோன்றினாலும் அவை பெரும்பாலும் ஆடற்கலை இலக்கணத்தைப் பின்பற்றியே அமைந்திருப்பதைக் காணலாம். இருப்பினும் சிற்பியானவன் ஆடற்கலை இலக்கணத்தை நன்குணர்ந்து, மனத்துட்கொண்டு, வேண்டிய அளவிற்கு அதைத் தழுவி தன்னழகுணர்ச்சியையும் புகுத்தி, தான் எப்பொருளில் எவ்விடத்தில் எதற்காக அமைக்கின்றானோ அவற்றுக்கு ஏற்றவாறு சிற்ப வடிவத்தைச் சரித்து, வளைத்து, நெளித்து, கைகளையும், கால்களையும் பல அமைதிகளில் சமைத்து, பார்ப்போர் கலையழகை மட்டுமின்றி அதன் உட்கிடையையும் உணருமாறு செய்து விடுகிறான். இத்தகைய செயலில் ஈடுபடும்போது உடற்கூறுகளை இயல்புக்கு மீறிச் சற்று மிகையாக அமைக்க வேண்டியதாகிறது. அதனால் கை முத்திரைகளிலும், ஆசனங்களிலும், உடல் பக்கங்களிலும் தனித்தன்மை உருவாகிறது. அதனால் உடல் அமைதி, கை அமைதி பற்றிய வரம்புகளை உணர்த்தும் இலக்கணங்கள் சிற்பக் கலைத் துறையிலும் தோன்றலாயின.

ஆடற்கலையின் உயிர்நாடி பாவனை. அபிநயத்தின் மூலமே பாவனை வெளிப்படும். அபிநயம் என்பதும் ஒருவகை மொழிதான். ஆனால் ஒலியோ. ஒலிக்கூட்டமான சொல்லோ இன்றி இயங்குவது அம்மொழி என்றாலும், சொல் இல்லாமலேயே பொருளை அல்லது கருத்தை உணர்த்த வல்லது அபிநயம். எல்லா மொழியினருக்கும் அது பொது. எனவே அதை `மொழியா மொழி' என்று அறிஞர் கூறுவர். சிற்பங்கள் பேசுவதும் இம் மொழியே. எனவே இது சிற்பக்கலை மொழியாகும்.

## அங்க இலக்கணம்

தலைமுடி, முகம், கழுத்து, மார்பு, வயிறு, குய்யம், தொடை, முழங்கால், கெண்டைக்கால், தாள் ஆகிய பத்துப் பகுதிகள் படிம உயரக் கணக்கில் எடுத்தாளப்படுகின்றன. இவை தசகண்டம் என்று சொல்லப்படும்.

மேலும், படிம உறுப்புகளை நூலோர் நான்கு வகையாகப் பகுத்துக் கூறுவர். அவை, முறையே மஹாங்கம் (பேருறுப்பு). அங்கம் (உறுப்பு), உபாங்கம் (துணையுறுப்பு), பிரத்யங்கம் (இணையுறுப்பு) என்று சொல்லப்படும்.

முகம், மார்பு, உடல், குய்யம் நான்கும் மஹாங்கம் ஆகும்.

கைகள், கால்கள் இரண்டும் அங்கம் ஆகும். சிகை, நகம், பற்கள் ஆகிய மூன்றும் உபாங்கம் ஆகும்.

ஆயுதம், அணிகலன்கள், ஆடைகள் ஆகிய மூன்றும் பிரத்யங்கம் ஆகும்.

## நாட்டியத்தில் அபிநயம்

அபிநயம் நான்கு வகைப்படும். தலை, கழுத்து, உடல், கால், கை ஆகியவற்றால் உணர்ச்சியைத் தொழிற்படச் செய்தல் ஆங்கிகாபிநயம் ஆகும். உணர்ச்சியின் பல நிலைகளைப் பாட்டின் உதவியுடன் அபிநயித்துக் காட்டுதல் வாசிகாபிநயம் ஆகும். பாத்திரத்திற்கேற்ற ஆடை, அணிகளையும் பிற பின்னணிகளையும் சேர்த்துக் கொண்டு

அபிநயித்தல் ஆகார்யாபிநயம் ஆகும். முக பாவத்தால் மட்டும் உணர்த்தப்படுவது `சாத்விகாபிநயம்' என்று சொல்லப்படும்.

## படிமத்தில் அபிநயம்

சிற்பக் கலையைப் பொறுத்த வரையில், கை அமைதிகள், உடலின் பங்க (வளைவு) அமைதிகள், ஆசன அமைதிகள் இம்மூன்றும் ஆங்கி காபிநயத்தைச் சாரும்.

சிற்ப வடிவங்களிலும், வழிபடு படிமங்களிலும் அதனதற்குரிய ஆடைகள், அணிகலன்கள், தலைக்கோலங்கள், ஆயுதங்கள் ஆகியவற்றைச் சேர்த்து, தக்க பின்னணிகளையும் தோற்றுவித்தல் `ஆகார்யாபிநயம்' ஆகும்.

உளக் கருத்தைப் புருவம், கண், உதடு ஆகிய மூன்றும் வெளியிடுவதால் சாத்விகாபிநயமும் சிற்ப வடிவங்களில் கொள்ளப்பெறும்.

மேற்சொன்ன மூன்று அபிநயங்களும் தக்கவாறு ஒரு வடிவத்தில் அல்லது படிமத்தில் அமையின், அது காண்போர் உள்ளத்தைத் தொட்டு, இன்ப உணர்ச்சியை ஊட்டி, வாசிகாபி நயச்சுவை தோன்றிடச் செய்யும்.

## கை அமைதிகள்

கைவிரல்களை நீட்டுதல், மடக்குதல், கூட்டுதல், விலக்குதல், குவித்தல் ஆகிய ஐந்து நிலைகளை அடிப்படையாகக் கொண்டு, தன் எண்ணத்தை வெளியிடுதற்கு, மனிதன் இயற்கையாக இவற்றையெல்லாம் எங்ஙனம்; எப்பொழுது, இயக்குகிறான் என்பதை உற்று நோக்கியும், இவ்வசைவுகளை–இயக்கங்களை–நூலோர் முறைப்படுத்தி, மெருகூட்டி, பொருள்காட்டி, இலக்கணமாக வகுத்தளித்துள்ளார்கள். இவை கை அமைதிகள் எனப்படும். இவை ஆத்மாவின் அபிநயங்கள் ஆகும்.

கை அபிநய பேதங்களை முத்திரை (பிடி) வேறுபாடுகளென்று அறிஞர் கூறுவர். முத்திரை என்பது குறியீடு என்று பொருள்படும். கை முத்திரைகள் ஆடற்கலை இலக்கண முறையிலிருந்து சிறிது வேறுபடுவதோடல்லாமல், பெயரில் சிறு மாற்றங்களோடு வழங்கி வருதலையும் இங்கே காணலாம்.

படிமக் கலையில் 32 வகையான கை அமைதிகள் வழக்கத்தில் உள்ளன. இவை ஹஸ்த முத்திரை என்றும், சிற்பக் கையென்றும் கூறப்படும். கை அமைதிகள் இரு பெரும் பிரிவுகளில் அடங்கும். ஒன்று `தொழிற் கை' என்றும் மற்றொன்று `எழிற்கை' என்றும் சொல்லப்படும். ஒரு கருத்தை உணர்த்த–அசைக்கும்–அபிநயிக்கும் கையானது தொழிற்கை எனப்படும். எக்கருத்தையும் உணர்த்தாமல் படிமத்தை சமநிலைப்படுத்தவும், படிமத்திற்கு எழிலூட்டவும் அமைக்கப்படும் கை எழிற்கை எனப்படும். இதனைச் சிற்பிகள் நாட்டியக்கரம் என்றும் குறிப்பிடுவர்.

அபய முத்திரையைத் தொழிற் கைக்கும், நின்ற கோலப் பெண் படிமங்களில் அழகிற்காகத் தொங்க விடப்பட்ட கையினை எழிற்கைக்கும், உதாரணமாகக் கூறலாம்.

மேலும், தொழிற்கை அபிநயம் இருவகைப்படும். ஒரே கையினால் அபிநயித்துக் காட்டுகிற ஒரு வகையும், இருகைகளையும் இணைத்துச் செயற்படுத்துகிற மற்றொரு வகையும் ஆகும். ஞான முத்திரை முன்னையதற்கும், அஞ்சலி முத்திரை பின்னையதற்கும் நல்ல எடுத்துக் காட்டுகளாகும்.

## தொழிற்கைகள் (28)

### அ. ஒற்றைக் கைகள்

1. அபய ஹஸ்தம்
2. வரத ஹஸ்தம்
3. கடக ஹஸ்தம்
4. சிம்ம கர்ண ஹஸ்தம்
5. வியாக்யான ஹஸ்தம்
6. சூசி ஹஸ்தம்
7. தர்ஜனீ ஹஸ்தம்
8. கர்த்தரீமுக ஹஸ்தம்
9. அலபத்ம ஹஸ்தம்
10. விஸ்மய ஹஸ்தம்
11. பல்லவ ஹஸ்தம்
12. நித்ரா ஹஸ்தம்
13. அர்த்த சந்திர ஹஸ்தம்
14. அர்த்த பதாக ஹஸ்தம்
15. திரிசூல ஹஸ்தம்
16. முஷ்டி ஹஸ்தம்
17. சிகர ஹஸ்தம்
18. பூ ஸ்பரிச ஹஸ்தம்
19. கடி ஹஸ்தம்
20. ஊரு ஹஸ்தம்
21. ஆலிங்கன ஹஸ்தம்
22. தனுர் ஹஸ்தம்
23. டமரு ஹஸ்தம்
24. தாடன ஹஸ்தம்

ஆ. இரட்டைக் கைகள்

1. அஞ்சலி ஹஸ்தம்
2. தியான ஹஸ்தம்
3. புஷ்பபுட ஹஸ்தம்
4. தர்மசக்கர ஹஸ்தம்

## எழிற்கைகள் (4)

1. கஜ ஹஸ்தம்
2. தண்ட ஹஸ்தம்
3. டோல ஹஸ்தம் (லம்ப ஹஸ்தம்)
4. பிரசாரித ஹஸ்தம்

## தொழிற் கைகள்–(28)

### 1. அபய ஹஸ்தம்:

கைச் சுட்டுவிரல் முதல் சிறுவிரல் வரை உள்ள நான்கு விரல்களையும் ஒன்றோடொன்று ஒட்டியமைத்து. கைத்தலத்திற்குச் சம மட்டத்தில் செங்குத்தாக மேல் நோக்கி நிறுத்தி, பெருவிரலைச் சுட்டுவிரலோடு சேர்த்து மேல்நோக்கி அமைத்துப் பிடிக்கும் கைஅமைதிக்கு அபய ஹஸ்தம் என்று பெயர். நாட்டிய வழக்கில் இது பதாகம் (கொடி) என்று சொல்லப்படும்.



கல்லிலே செய்யப்படும் படிமங்களில் உறுதியை முன்னிட்டு, ஐந்து விரல்களும் ஒன்றோடொன்று ஒட்டியதாக பிடிக்கப்படும். படிமத்தினுடைய முலைக்கண்ணின் மட்டத்திற்கு கை நடுவிரலின் நுனி அமைதல் வேண்டும். இதனால் படிமம் நேரிய, விரைப்பான தோற்றம் பெறும். கை ஒரு தாள அளவு முன்னோக்கினதாகவோ புறங்கை மார்பு மட்டத்தில் அமைவதாகவோ இயற்றலாம். இங்ஙனம் செய்யும் போது அது தாழ்க்கட்டைப் பிடிப்புடன் அமையும்.

செப்புப் படிமங்களில் பெருவிரல் கைத்தல மட்டத்திலிருந்து முன்னோக்கிச் சென்றும், அதன் தலை கைத்தலத்தை நோக்கி சிறிது சாய்ந்தும், சுட்டுவிரலும், சிறு விரலும் செங்குத்தான கைத் தலத்திலிருந்து சிறிது பின்னடங்கியும், சிறிது வளைந்தும், அமையும். இத்தகைய அமைதியானது அபயமுத்திரைக்கு அழகூட்டும். இக்கை 'அஞ்சற்க' என்ற கருத்தை உணர்த்தும்.

### 2. வரத ஹஸ்தம்:

அபய ஹஸ்தத்தை தலைகீழாகப் பிடிப்பின் அது வரத ஹஸ்தமாகும். இதில் உள்ளங்கை வெளிப்புறம் அமைதல் வேண்டும்.



கற் படிமங்களில் ஐந்து விரல்களும் ஒன்றோடொன்று சேர்ந்து கீழ் நோக்கியனவாக அமையும். செப்புப் படிமங்களில் இங்ஙனம் அமைந்த விரல்களில் பெருவிரல் கைத் தலத்திற்கு முன்னே சென்றும், சுட்டுவிரலும், சிறுவிரலும் மற்ற இரு விரல்களை விட்டுப் பிரிந்து, சிறிது பின்னடங்கி வளைந்து அமையும். இத்தகைய அமைப்பினை, தகுந்த தாழ்க்கட்டையுடன் (பின்னணி பிடிப்புடன்) செய்தல் வேண்டும். வரதக் கையின் நடுவிரல் நுனி குய்ய மட்டத்தில் அமைதல் வேண்டும். நின்ற கோல–அமர்ந்த கோலப் படிமங்களுக்கு இப்பாவனை ஏற்புடையத்தாகும். கொடுக்கும் கரமாகையினால் கைத்தலமும் விரலும் விரைப்புடனில்லாமல், கனிவை உணர்த்தக் குழைவுடனிருத்தல் வேண்டும்.

### 3. கடக ஹஸ்தம்:

கைத்தலத்திலிருந்து பெருவிரலை நீட்டி உள் முகமாகச் சிறிது வளைத்து, நடுவிரலையும் அணிவிரலையும் ஒன்றோடொன்று இணைத்து

முன்னோக்கி வளைத்து, சுட்டுவிரலையும், சிறு விரலையும் தனது இடங்களில் நிறுத்தி, மேற்கணுக்களை சிறிது வளைத்துப் பிடிக்கும் கை `கடக ஹஸ்தம்' எனப்படும். இதில் நடுவிரலின்



நுனியானது அணிவிரல் நுனியிலிருந்து சிறிது முன்னோக்கி அமைதல் வேண்டும். இதன் புறத்தோற்றம் நண்டின் உருவத்தை ஒத்திருப்பதால் கடகம் (நண்டு) எனப் பெயர் பெற்றது. சிற்ப வடிவங்களில் பாசம், அங்குசம், தண்டம், கத்தி, அம்பு போன்ற ஆயுதங்களைப் பிடிப்பதற்கு இப்பிடி பயன்படுகிறது. ஆயுதம் இல்லாமலும் இம்



முத்திரையை சிற்பங்களில் அமைப்பது உண்டு. அது பிடிப்பைக் காட்டும்.

கற் படிமங்களில் விரல்கள் ஒன்றோடொன்று நெருங்கியிருத்தல் வேண்டும். செப்புப் படிமங்களில் விரல்கள் நெருங்கியும் நெருங்காமலும் லளிதமாக அமையும்.

### 4. சிம்ம கர்ண ஹஸ்தம்:



கடக முத்திரையில் நடுவிரலானது உள்ளங்கை வரையில் நன்கு வளைந்து, அணிவிரல் அதனைத் தொடர்ந்து செல்ல, மற்ற விரல்கள் கடக முத்திரையில் உள்ளவாறே வளைந்திருக்கும். இப்பிடி சிம்மகர்ணமாகும். (சிங்கச் செவி) வாவென்று அழைக்கும் அமைதியை இக்கரம் உணர்த்தும்.



### 5. வியாக்கியான ஹஸ்தம்:

பெருவிரல் கைத்தலத்தை விட்டுப் பிரிந்து முன்னோக்கி நீண்டு நிற்க, சுட்டுவிரலானது வணங்கி, பெருவிரலின் நுனியைத் தொட்டு வளையம் போன்று அமையும். நடுவிரல், அணிவிரல், சிறுவிரல், ஆகியன அவ்விரு விரல்களை விட்டுப் பிரிந்து மேல் நோக்கினதாய் பின்னணியில் அடுக்கடுக்காய் நிற்கும். ஞானாசிரியர் மேலான தத்துவ விளக்கம் செய்யும் குறிப்பை இது உணர்த்தும். எனவே இக்கை அமைதிக்கு `வியாக்யான ஹஸ்தம்' என்றும், `விதர்க்க முத்திரை' என்றும் பெயர். இது சிறப்பாக `சின் முத்திரை' என்றும் கூறப்பெறும்.

கற் படிமங்களில் பெருவிரலும் சுட்டு விரலும் கைத்தலத்தை அணுகியே அமையும். மற்றைய விரல்கள் ஒன்றோடொன்று நெருங்கி நேரியனவாக நிற்கும்.



ஜீவாத்மாவான சுட்டு விரல் இயல்பாக ஆணவம். மாயை, கன்மம் (நடு, அணி, சிறு விரல்கள்) என்ற மூன்று மலங்களுடன் சேர்ந்தே உழல்கின்றது. அவ்வழுக்குகளிலிருந்து ஜீவாத்மா விடுபட்டு பரமாத்ம வெள்ளத்தில் லயமாகிவிடுதலே வீடு பேறு பெறுதல் என்பது, இஃதே உயிர்களாகிற நமது இலட்சியமாக இருத்தல் வேண்டுமென்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். இத் தத்துவத்தை ஆலமர் செல்வனாகிய தஷிணாமூர்த்தி தனது வியாக்யான முத்திரை மூலம் உணர்த்துகிறார். ஐந்து விரல்களும் ஐந்து தத்துவப் பொருள்களைக் குறிக்கும்.

| | | |
|---|---|---|
| பெருவிரல் | – | பதியாகிய பரமான்மாவையும் |
| சுட்டுவிரல் | – | பசுவாகிய ஜீவான்மாவையும் |
| நடுவிரல் | – | ஆணவ மலத்தையும் |
| அணிவிரல் | – | மாயா மலத்தையும் |
| சிறுவிரல் | – | கன்ம மலத்தையும் குறிக்கும் என்பர் நூலோர். |

இயல்பாக, கைத்தலத்தை விரிக்கும்போதும், கட்டைவிரல் பிரிந்தும், பிற நான்கு விரல்கள் சேர்ந்தும் அமைவதைக் காணலாம். சுட்டு விரலான ஜீவான்மா (பிற மூன்று விரல்களான) மும்மலங்களுடன் சேர்ந்தே உழல்வதை இஃது உணர்த்தும். இத்தகைய ஜீவான்மா மும்மலங்களிலிருந்து விடுபட்டு பரமான்மாவை கிட்டிச் சென்று அதை அடைதலே வீடுபேற்று நிலையல்லவா? சுட்டு விரலானது மற்றைய மூன்று விரல்களிலிருந்து பிரிந்து, வளைந்து பெரு விரலைத் தொட்டு நிற்றல் இதனை உணர்த்தும். இதனால் இப்பிடி ஞானமுத்திரை என்று பெயர் பெறும். பெருவிரலும், சுட்டு விரலும் இணைவதால் இது சந்தம்ஸ (இடுக்கி) முத்திரை என்றும் சொல்லப்படும்.

ஜீவாத்மா–பரமாத்மா வெவ்வேறானவை அல்ல; அவை இரண்டற்ற நிலையுடையன என்ற அத்வைதக் கருத்தினையுணர்த்த இப்பிடியினை உள்முகமாகப் பிடித்தல் ஒரு முறையாகும். இதனை `யோக முத்திரை' என்றும் சொல்வதுண்டு. ஞான தஷிணா மூர்த்தத்தில் இக்கை அமைதியைக் காணலாம் தர்ம வியாக்யான தஷிணாமூர்த்தத்தில் இப் பிடி வெளி முகமாகப் பிடிக்கப்படும்.

ஞான முத்திரையுடைய கையானது உணர்த்தப்படும் கருத்துக்கேற்றவாறு வெளிமுகமாகவோ, உள்முகமாகவோ பிடிக்கப்படும் என்பதை மேலே பார்த்தோம். இதே முத்திரையை பதுமாசனக் கோலத்தில் அமர்ந்திருக்கும் அடியவர்





படிமத்திலும் காணலாம். வேறுபாடு யாதெனில், இரண்டு கைகளிலும் ஞான முத்திரையைப் பிடித்து முழங்கால் முட்டியின்மீது நீட்டி வைத்து, கைத்தலம் வானோக்கி இருக்குமாறு செய்யப்படுவதேயாகும். இதில் பெருவிரல் மேலேயும், சுட்டுவிரல் கீழேயும் அமையும். ஒன்றையொன்று நுனியில் தொட்டுக் கொண்டுமிருக்கும். ஆண்டவனைப் பெருவிரலும், உயிராகிய அடியவனைச் சுட்டுவிரலும் காட்டுமெனக் கொண்டு 'ஆண்டானடிமை'–ஆண்டவனுக்கு உயிர் அடிமையென்ற கருத்தையுணர்த்துவதாக கொள்வதும் உண்டு. மேலும் இதில் வேறொரு நயமும் உண்டு. கீழேயுள்ள சுட்டு விரலின் தலை வளைந்து சுருண்டு, பெருவிரலின் அடியைத் தொட்டிருப்பதாக அமைத்து, ``ஆண்டவன் அடியைப் பற்றுதலே அடியவர் கடன்'' என்ற உண்மையை உணர்த்தும் அருமையை இம்முத்திரை சிறக்கக் காட்டும்.

## 6 சூசி ஹஸ்தம்:

கடக முத்திரையில் சுட்டுவிரலை செங்குத்தாக நிறுத்தியமைத்த பிடி சூசி ஹஸ்தம் (ஊசி அல்லது சுட்டுக்கை) எனப்படும். இஃது ஒரு பொருளை சுட்டிக் காட்டுதலை உணர்த்தும். இவ்வமைதியில் நடுவிரலும், பெருவிரலும் நெருங்கியிருப்பின் இது பிகுவான தோற்றத்தைப் பெறும். செப்புப் படிமங்களில் இங்ஙனம் அமைதலைக் காணலாம்.



சிறுவிரல், அணிவிரல், நடுவிரல் ஆகியவை கைத்தலத்தை நோக்கி வளைந்து, கட்டை விரலோ மூன்று விரல்களை நோக்கி நெருங்கி அமைய, சுட்டுவிரல் மட்டும் நிமிர்ந்து செங்குத்தாக நிற்கும். இம்முத்திரையைப் பிடிக்கும்பொழுது புறங்கை வெளிப் பக்கத்திலும், அகங்கை உட்புறத்திலும் அமையும். இத்தகைய முத்திரை கொண்ட கையினை நீட்டித் தன்னுடலைத் தானே சுற்றிக் கொள்வதால் இக்கையும் சேர்ந்தே சுழலும். இதனை விவர்த்தித கரம் என்பர் நூலோர்.

மகிழ்ச்சியில் திளைத்துக் கூத்தாடும் ஞான சம்பந்தர் படிமத்தில் இப்பிடியைக் காணலாம். இது சூசி முத்திரையின் வேறொரு செயல்முறையாகும்.

## 7. தர்ஜனீ ஹஸ்தம்:

தர்ஜனீ முத்திரையானது சூசி முத்திரையைப் போன்றதே எனினும் சுட்டுவிரலும், கைத்தலமும் சிறிது பின்னடங்கிச் சாய்ந்து அச்சுறுத்தும் தன்மையை உணர்த்துவதாக அமையும். தர்ஜனீ என்ற சொல் அச்சுறுத்தல் என்று பொருள்படும்.



## 8. கர்த்தரீ முக ஹஸ்தம்:

அணி விரலும், பெரு விரலும் உள்ளங்கையில் முன்புறத்தே நெருங்கி அமைய, சிறு விரலானது தன்னிடத்தில் செங்குத்தாக நிமிர்ந்து அல்லது சிறிதே வளைந்து இருக்கும். சுட்டு விரலும் நடு விரலும் செங்குத்தாக நேரே நிமிர்ந்து, நடுவிரல் முன்னோக்கியும், சுட்டுவிரல் பின்னோக்கியும் விரிந்து கத்திரிக்கோலின் அலகுகள் போல அமையும். இது கர்த்தரீ முக ஹஸ்தம் என்று சொல்லப்படும்.

கற்படிமங்களில், அணிவிரலும், பெருவிரலும் பெரிதும் கைத்தலத்தை நோக்கி மடிந்து அமையும். சிறுவிரல் அங்ஙனமே அணிவிரலை அணுகிச் சிறிது வளைந்து அமையும். சுட்டு விரலும் நடுவிரலும் விரிந்து கத்திரிக்கோல் அமைப்பை ஓரளவு புலப்படுத்தும்.



ஆனால் செப்புப் படிமங்களில் கட்டை விரலும், அணிவிரலும் முன்னோக்கி வளைந்து உள்ளங் கையைத் தொடா வண்ணம் விலகி நிற்கும். சிறு விரல் சிறிதே வளைந்திருக்கக் கர்த்தரி விரல்கள் முன்னும் பின்னும் அமைந்து விரிந்த கத்தரிக்கோலின் அலகுகளை நன்கு ஒத்திருக்கும். கர்த்தரீமுக ஹஸ்தத்தில் பெருவிரலும், அணி விரலும் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருக்குமானால் அதற்கு 'மயூர ஹஸ்தம்' எனப் பெயர். இவ்வமைதியையும் இதில் காட்டுவதுண்டு.

சிலவகை ஆயுதங்களை லளிதமாகத் தூக்கி நிறுத்திப் பிடிக்க இது பயன்படுகிறது. கடவுட் படிமங்களின் மேற்கரங்களில் இம்முத்திரை பெரும்பாலும் காணப்படும்.

கர்த்தரி அலகுகளுக்கிடையே ஆயுதத்தைப் பக்கவாட்டில் அமைத்து ஆயுதத்தை இயக்கும் பாவனையில் காட்டும்போது இதனைப் பிரயோக முத்திரையில் இருப்பதாகச் சொல்ல வேண்டும்.

### 9. அலபத்ம ஹஸ்தம்:

இம்முத்திரையில் எல்லா விரல்களும் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து, விரிந்த தாமரை மலர் போல் தோற்றம் தரும். இதில் சிறு விரலிலிருந்து படிப்படியாக மற்ற விரல்கள் சரிந்ததாக அமையும். இம்முத்திரையில் கைத்தலம் மேல் நோக்கி அமையும். இது மகிழ்ச்சியை உணர்த்தும்.



துவாரபாலகர் படிமங்களில் நடுவுடலை அணுகியதாகவோ மேற்கரத்திலோ இப்பிடி அமைவதைக் காணலாம்.

### 10. விஸ்மய ஹஸ்தம்:

அலபதும முத்திரை செங்குத்தாக அமைந்து காண்போர்க்குப் புறங்கை தெரியப் பிடிச்சுக் காட்டுவது விஸ்மய ஹஸ்தமாகும். விரல்களெல்லாம் தனித்தனியே பிரிந்து கைமலரென விரிந்து, வியப்பினை இஃது உணர்த்தும்.



### 11. பல்லவ ஹஸ்தம்:

ஐந்து விரல்களை விரித்து நீட்டி உள்ளங்கை உள்முகமாகவும், புறங்கை வெளிமுகமாகவும் அமைய, மணிக்கட்டிலிருந்து இலைபோல் கீழ் நோக்கி மடிந்து தொங்கும் கையமைதி 'பல்லவ ஹஸ்தம்' என்று சொல்லப்படும். மென்மையான தளிர் தொங்கும் தோற்றத்தை இஃது ஒத்திருத்தலால் இதனை `தளிர்க்கை' என்றும் கூறுவதுண்டு. ரிஷபாந்திக சிவமூர்த்தத்திலும், இராஜகோபாலன் படிமத்திலும் இதனைக் காணலாம்.



### 12. நித்ரா ஹஸ்தம்:

இது ஆசனத்தில் ஊன்றிய கை அமைதியாகும். அபய முத்திரையோடு கூடிய கையை ஆசனத்தில் படுக்கையாக வைத்த நிலையில் இம்முத்திரை

அமையும். சுட்டுவிரலும், சிறுவிரலும் ஆசனத்தைத் தொடாமல் சற்று மேல் நோக்கிக் கிளம்பி சிறிது வளைந்து அமைந்து இப்பிடிக்கு மென்மையும், அழகும் ஊட்டும். இது உறக்க நிலையை உணர்த்துவதால் நித்திரா ஹஸ்தம் எனப்படும். இதனை நித்ராதா முத்திரை என்றும் சொல்வதுண்டு.



சோமாஸ்கந்தர் படிமத்தில் உமாதேவியின் இடதுகை இவ்வமைதியில் இருப்பதைக் காணலாம்.

**13. அர்த்த சந்திர ஹஸ்தம்:**

சுட்டுவிரல் முதல், சிறுவிரல் வரை உள்ள நான்கு விரல்களையும் ஒன்றொடொன்று ஒட்டியமைத்து, கட்டை விரலை அவற்றினின்று பிரித்து, விரைப்பாக எதிர்புறம் நீட்டி அமைத்த பிடி, அர்த்த சந்திர ஹஸ்தமாகும். இத்தகைய கையினை சம மட்டத்தில் செங்குத்தாகப் பிடிக்காமல் வானத்தை



நோக்கியதாகச் சிறிது சாய்த்துப் பிடிக்கின், அரை மதித் தோற்றம் துலங்கும், லளிதமாகவும், நளினமாகவும் இது தோன்ற சுட்டுவிரலும் சுண்டுவிரலும் மற்ற இருவிரலை விடுத்து சிறிது கீழ்நோக்கி வளைவுடன் அமைதல் வேண்டும். மற்ற இருவிரல்களும் அங்ஙனமே பிறைபோல் அமையும். கட்டைவிரலும், சுட்டுவிரலும் பிறை வடிவத்தைத் துலக்கமாகக் காட்ட, நல்ல விறைப்புடன் அமைதல் வேண்டும். ஆடவல்லான் படிமத்தின் இடது மேற்கரத்தில் தீச்சுடர் ஏந்திய பிடி அர்த்த சந்திர ஹஸ்தமாகும்.

**14. அர்த்த பதாக ஹஸ்தம்:**

சுட்டுவிரலையும், நடுவிரலையும் விரித்து நீட்டி, மற்ற விரல்களை முன்னோக்கி மடக்கி, கைத்தலத்தையும் விரலையும் செங்குத்தாகப் பிடித்து அமைந்த கை அர்த்த பதாக ஹஸ்தம் எனப்படும்.



ஜீவாத்மா, பரமாத்மா இவ்விரண்டும் வெவ்வேறானவை என்றுணர்த்தும் துவைதக் கொள்கையினை இது உணர்த்தும். இம்முத்திரையை மாத்துவாச்சாரியாரின் கையில் காணலாம்.

**15. திரிசூல ஹஸ்தம்:**

கைத்தலத்தையும், விரல்களையும் செங்குத்தாக நீட்டி, நிறுத்தி, சிறு விரலையும், பெரு விரலையும் கைத்தலத்திற்கு முன்புறம் கொணர்ந்து மடக்கி, ஒன்றையொன்று தொட்டிருக்க மற்ற மூன்று விரல்களும் ஒன்றையொன்று தொடாமல் விலகி மேல்நோக்கி நிமிர்ந்து நிற்கச் செய்து அமைத்த பிடி `திரிசூல ஹஸ்தம்' (முத்தலை வேல்) எனப்படும். இது மூன்று பொருளை உணர்த்தும் கையமைதியாகும். பசு, பதி, பாசம் என்னும் முப்பொருளுண்மையை இஃதுணர்த்தும். அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலை உணர்த்துவ தாகக் கொண்டு இதனை `முப்பால் முத்திரை'

எனவும் கூறலாம். இதனைத் திருவள்ளுவர் படிமத்தில் காண்க.



16. முஷ்டி ஹஸ்தம்:



கட்டை விரல் தவிர, மற்ற நான்கு விரல்களை மடக்கி உள்ளங்கையோடு சேர்த்து இறுகப் பிடித்து நடுவிரல் மீது பெருவிரலைப் பொருத்தி அமைத்த முத்திரை முஷ்டி எனப்படும். இது தண்டம், வாள் முதலியவற்றை இறுக்கிப் பிடித்தலைக் காட்டும்.

17. சிகர ஹஸ்தம்:



பெருவிரல் தவிர்த்த மற்ற விரல்களை ஒரு சேர மடக்கி இறுகப் பிடித்துப் பெருவிரலை செங்குத்தாக நிறுத்தி அமைத்த பிடி சிகரம் எனப்படும். வில்லைப் பிடிக்கும் கரம் இதுவாகையினால் இது விற்பிடி என்றும் சொல்லப்படும்.

18. பூ ஸ்பரிச ஹஸ்தம்:



பல்லவ முத்திரையுடைய கையினை, பூமியைத் தொடுமாறு பிடித்தால் அது 'பூ ஸ்பரிச முத்திரை' எனப்படும். இதனைப் புத்தர் படிமத்தில் காணலாம். ஞானம் பெற்றமையை புத்தர் பூமியைத் தொட்டு மக்களுக்கு உணர்த்திய நிலையை இது காட்டும்.

19. கடி ஹஸ்தம்:



கைத்தலத்தையும் விரல்களையும் விரித்து, கட்டை விரலை இடுப்பில் பிகுவாக ஊன்றி, மற்ற விரல்களை ஒன்றோடொன்று சேர்த்து இணைத்து இடுப்பில் படியுமாறு வைத்து, சிறு விரலையும், சுட்டு விரலையும் உடலிலிருந்து கிளப்பி அமைந்த கரம் கடி ஹஸ்தமெனப்படும். விரல்களை சற்று மேல்நோக்கிய நிலையில் வைத்தால் வடிவத்திற்கு ஒரு கம்பீரமான தோற்றத்தை அளிக்கும்.

## 20. ஊரு ஹஸ்தம்:

கையைக் கீழ்நோக்கி நேராக நீட்டி, கைத்தலத்தையும் விரல்களையும் தொடைமீது பொருத்தி, மென்மையாக ஊன்றியிருக்கும் நிலையினையுடையது ஊருஹஸ்தம் எனப்படும். இடுப்புக்குக் கீழ் தொங்கியமையும் கையாதலால் கடியவலம் பிதம் என்று சொல்லப்படும். நடுவிரலும், அணிவிரலும் தொடையில் லளிதமாய்ப் பதிந்து அமைய, சுட்டு விரலும் சிறு விரலும் தொடையை விட்டு நீங்கி இதமாக வளைந்து, கட்டை விரலானது மற்ற விரல்களிலிருந்து விலகித் தொடையோடு பிகுவாகப் பொருந்தியிருக்க வேண்டும்.



கற் படிமங்களில், சுட்டுவிரல் முதல் சிறுவிரல் வரை நான்கு விரல்களையும் தொடையில் சமமாகப் படிய அமைத்து, பெருவிரலை அவற்றிலிருந்து பிரித்து, தொடைமீது ஊன்றியழுத்திய பாவனையிலும் செய்யலாம். உறுதியை முன்னிட்டு சிறுவிரலும், சுட்டு விரலும் சிறிது மேல் நோக்கி வளைந்து, மற்றைய விரல்கள் தொடை மீது அழுந்த, சுட்டுவிரல், நடுவிரல், அணிவிரல் ஆகிய மூன்றும் தொடை மீது ஊன்றப்பட்டு சுட்டுவிரலும் அதற் கடியிலுள்ள கைத் தலமும், தரைக்குச் சம மட்டமாக அமையும்.

மேலும், பெருவிரல் பக்கவாட்டில் தொடையை நெருங்கியிருக்க மற்றைய விரல்களும், கைத் தலமும் தரையை நோக்கி மட்டமாக அமைய சிறுவிரலும், சுட்டுவிரலும் பிற விரல்களை விட்டுக் கிளம்பி நளினமாக வளைந்து முன்னோக்கி அமையும்.

நின்ற கோல விஷ்ணுப்படிமத்திலும், கந்தன் படிமத்திலும் இவ்வமைதியைக் காணலாம்.

## 21. ஆலிங்கன ஹஸ்தம்:

சுட்டுவிரல் முதல் சிறுவிரல் வரை உள்ள விரல்களை ஒன்றோடொன்று நெருங்கியதாக அமைத்து, சுட்டுவிரலையும், சிறுவிரலையும் சிறிது மேல் நோக்கிக் கிளப்பி, கட்டை விரலை கைத் தலத்திலிருந்து பிரித்துச் செங்குத்தாக்கி, தேவியின் உடலை அணைத்தவாறு அமைக்கும் இப்பிடி ஆலிங்கன ஹஸ்த மெனப்படும். இடுப்பைத் தொட்ட நிலையிலாவது, புஜத்தை அணைத்த நிலையிலாவது, இஃது அமையும்.



உமா சகித சந்திரசேகர மூர்த்தத்திலும், லஷ்மி நாராயணன் படிமத்திலும் இதனைக் காணலாம்.

## 22. தனுர் ஹஸ்தம்:

கைத்தலத்தை உள்முகமாகத் திருப்பி, நடுவிரலையும் அணிவிரலையும் சேர்த்து, வில்லின்



மீது படியச் செய்து, சுட்டுவிரலையும் சிறுவிரலையும் மேல் நோக்கிக் கிளப்பி, சிறிது வளைத்து, பெருவிரலைக் கைத்தலத்தை உள்முகமாகப் பார்த்த வண்ணம் மடக்கி, விரல் நுனியை வில்லின் பக்கத்தைத் தொட்டிருக்குமாறு அமைத்த கை அமைதி தனுர் ஹஸ்தம் என்று சொல்லப்படும். சுட்டுவிரல் நுனி படிமத்தின் புருவ மட்டத்தில் அமையின் நல்ல தோற்றம் பெற்று விளங்கும். இவ்வமைதியினை திரிபுராந்தக சிவ மூர்த்தத்திலும், கோதண்டராமன் படிமத்திலும் காணலாம்.

**23. டமரு ஹஸ்தம்:**

விரல்களையும், கைத்தலத்தையும் விரித்து, நடுவிரலையும், அணிவிரலையும் ஒன்றோடொன்று நெருக்கி யமைத்து, கைத்தலத்தை நோக்கி பிகுவாக வளைத்து, கட்டை விரலை டமருகத்தை நோக்கி வளைத்து, சுட்டு விரலையும், சிறு விரலையும் செங்குத்தாக்கிச் சிறிதே முன்புறம் வளைத்து, அமைத்த பிடி டமரு ஹஸ்தம் எனப்படும். உடுக்கை பிடித்துள்ள பாவனையை இஃது உணர்த்தும். ஆடவல்லான் படிமத்தில் இதைச் சிறப்பாகக் காணலாம்.



**24. தாடன ஹஸ்தம்:**

பெருவிரல் முதல் சிறுவிரல் வரை எல்லா விரல்களையும் ஒன்றொடொன்று ஒட்டி, கட்டை விரலைக் கைத்தல மட்டத்திலேயே அகல விரித்து சிறிது பின்னோக்கிச் சென்று அமையும் பிடிதாடன ஹஸ்தம் எனப்படும். இது தண்டிக்கும் செயலை உணர்த்தும்.



## இரட்டைக் கைகள்

**1. அஞ்சலி ஹஸ்தம்:**

அபய முத்திரையுடன் கூடிய வலது இடது கரங்களை மார்புக்கு முன்புறமாக இணைத்துப் பிடித்த இரட்டைக்கை அமைதி அஞ்சலி ஹஸ்தம் எனப்படும். கைக்களுக்கிடையே பூ, பூமாலை, உருத்திராக்க மாலை போன்ற ஒன்றை காட்டலும் உண்டு.



இவ்வமைதியினை இறைவனடியார் படிமங்களில் காணலாம்.

2. தியான ஹஸ்தம்:

அமர்ந்த கோலத்தில், இடது கைத்தலத்தை மேல் நோக்கியவாறு மடியில் வைத்து, வலது கைத்தலத்தையும் அங்ஙனமே இடது கைமீது படிய வைத்திருக்கும் கை அமைதி, தியான ஹஸ்தம் எனப்படும். கைவிரல்கள் அபய முத்திரையில் கூறியவாறு சேர்த்து நீட்டியவாறு இருத்தல் வேண்டும். இடது கைவிரல்கள் வலது பக்கம் நீட்டியும் வலது கைவிரல்கள் இடது பக்கம் நீட்டியும் இருக்கும்.



தியான புத்தர் படிமத்தில் இவ்வமைதியினைக் காணலாம்.

இரண்டு கைகளையும் தியான முத்திரையில் பொருந்தாது ஒரே கையில் இம்முத்தியினைக் காட்டியமைப்பதும் உண்டு. இது பெரும்பாலும் இடக்கையாகவே அமையும். பிரம்மா, ஆழ்வார் படிமங்களில் காணலாம். மோன நிலையை—தியான நிலையை—யோக நிலையை இஃது உணர்த்தும்.

3. புஷ்ப புட ஹஸ்தம்:

இரு கைகளிலும் வரத முத்திரை காட்டி, இரண்டையும் மார்புக்கு முன்னே நளினமாகப் பிடித்து, விரல் நுனிகளை உள்முகமாகச் சிறிது



மடக்கி மலர்க்குடலைபோல் அமைத்த கை அமைதி புஷ்ப புடம் எனப்படும். இது மலர் கொண்டு வணங்கும் பாவனையைக் குறிக்கும் அடியவர் படிமங்களுக்கு ஏற்றதாம்.

இரு கைகளும் பிரிந்து வரத முத்திரையுடன் நாபி மட்டத்திற்குக் கீழே பிடிக்கப்படும் போது அழைக்கும் பாவனையை உணர்த்தும்.

மேலும் இக்கைகளை அபய முத்திரையுடன் கூடியதாய் நடுவிரலும், அணிவிரலும் முன்னோக்கி வளைந்தமையின் இதே கருத்தைச் சுவையோடு உணர்த்துவதாகும். குழந்தை முருகனை உமையானவள் இம்முத்திரையால் அழைக்கும் பாவனை இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

4. தர்மசக்கர ஹஸ்தம்:

வலது புறங்கையை மார்பின் அணித்தே வைத்து, அபய முத்திரையைப் போல விரல்களை லளிதமாகவும், வெளிமுகமாகவும் பிடித்து, சுட்டு விரலை மட்டும் முன்னோக்கி நீட்டி வளைத்து, இடது கையை வலது கையருகே கொணர்ந்து இதன் அகங்கை உள்முகமாக அமையப் பிடித்து ஐந்து விரல்களையும் மேல்நோக்கி நீட்டி மார்பை நோக்கி மென்மையாக வணங்கிப் பிடித்து வலக்கையும், இடக்கையும் அருகருகே அமையுமாறு அமைத்து, வலது கையின் சுட்டு விரலால் இடது கை நடுவிரலை நெருங்கியிருக்குமாறு அமைத்து அற விளக்கம் கூறும் அமைதி கொண்ட முத்திரைக்கு "தர்ம சக்கர முத்திரை" என்று பெயர். தர்ம சக்கரத்தை இயக்கும் பாவனை என்று இதனைச் சொல்லுவார்கள்.



வலது கரத்தை மார்போடு அமைத்து வெளி முகமாக வியாக்யான முத்திரை பிடித்து, இடது கையை வலது கையருகே கொணர்ந்து, உள்முகமாகத் திருப்பி, சுட்டுவிரலும் பெருவிரலும்

ஒன்றை ஒன்று தொட்டமையவும், பிற விரல்கள் பின் அடங்கி நிற்கவும், ஞான முத்திரையாகப் பிடித்த கையமைதியும் தர்மசக்கர பிரவர்த்தன முத்திரை எனப்படும். தர்ம சக்கரத்தை இயக்கிவிடும் முத்திரை என்று பொருள்படும். இதற்கு அறவாழிக்கை என்ற அழகிய பெயருமுளது. முதலில் சாரநாத்தில் புத்த பகவான் அறவிளக்கம் கூறும் கோலத்திலுள்ள புத்தர் படிமத்தில் இக்கையமைதியைக் காணலாம்.



## எழிற்கைகள்–(4)

### 1. கஜ ஹஸ்தம்:

கையை நேராக நீட்டி, மணிக்கட்டில் கைத்தலத்தைக் கீழ்நோக்கிச் சரித்து, தளிர்க்கை போல் விரல்களை அமைத்து, கம்பீரமாகப் பிடிக்கும் கையானது கஜ ஹஸ்தம் (தும்பிக்கை) எனப்படும்.



இதனை 'கரி ஹஸ்தம்' என்றும் சொல்வதுண்டு. கஜ ஹஸ்தத்தை ஆடவல்லான் படிமத்தில் காணலாம்.



### 2. தண்ட ஹஸ்தம்:

கஜ ஹஸ்தத்தை முன்னோக்கி நீட்டியவாறு அமைப்பது தண்ட ஹஸ்தம் எனப்படும். இக்கையானது அமர்ந்த கோலப் படிமத்தில், மடக்கி நிறுத்திய முழங்காலின் மீது மணிக்கட்டை வைத்த நிலையில் அமையும். இதனை அய்யனார் படிமத்திலும், பிற யோக, தியானக் கோலப் படிமங்களிலும் காணலாம்.



### 3. டோல ஹஸ்தம்:

ஒடிந்த அறாக் கிளை மரத்தில் தொங்கி நிற்கிற நிலையைப் போலத் தோளிலிருந்து நீட்டப் பெற்றுத் தொங்கியமையும் கை அமைதி 'டோல ஹஸ்தம்' எனப்படும். லோலகரம், லம்பகரம்

என்ற பெயர்களும் இதற்கு உண்டு. விரல்கள் பல்லவ முத்திரையில் கண்டவாறு அமைந்து விளங்கும்.



பெண் படிமங்களில் இக்கரத்தைச் சிறப்பாகக் காணலாம்.

**4. பிரசாரித ஹஸ்தம்:**

புயத்தை நேராக நீட்டி, கைத்தலத்தையும் விரல்களையும் பல்லவ முத்திரையுடன் கூடியதாக அமைத்து விளங்கும் கையமைதி பிரசாரித ஹஸ்தம் எனப்படும். இதனை சயனக் கோல விஷ்ணுப் படிமத்தில் காணலாம். மேலும், கூத்தாடும் விநாயகர்,



கண்ணன், கந்தன், சம்பந்தர் படிமங்களில் எழிலுக்காக நீட்டிப் பிடிக்கப்படும் கை அமைதியாகவும் காணலாம். இதனை வீசிய கரம் என்றும், நாட்டியக் கரம் என்றும் கூறுவர்.

# 8

# படிமங்களின் பங்க இலக்கணம்

வேறெந்த நாட்டுச் சிற்பக்கலை மரபிலும் காண முடியாத ஒரு சிறப்பியல்பு நமது மரபிற்கு எப்பொழுதும் உண்டு. சிற்ப வடிவம் எதுவாயினும் சரி, இயற்கையான அமைப்பில்—இயற்கையின் பிரதியாகச் செய்யப்படுவதில்லை. சிற்ப வடிவங்கள் நின்றாலும், அமர்ந்தாலும், கிடந்தாலும், எக்கருத்தை உணர்த்துவதானாலும் அவை ஆடற்கலைப் (போக்கு) பாணியிலேயே அமைக்கப்படுகின்றன. ஆடற் கலை ஒரு பண்பட்ட கலை. உள்ளத்திலே தோன்றும் இயல்பான உணர்ச்சிகளை மிகத் தெளிவாகவும், சுவையோடும், நெஞ்சிலே நிலைத்து நிற்கும் வகையிலும் உணர்த்த வல்ல ஒப்பற்ற கலை, முக பாவத்தாலும் உடல் ஒடிவு, வளைவு, குழைவு, முதலிய அமைதிகளாலும், முத்திரை முதலான அபிநயங்களாலும், ஆடற்கலை எத்தனையோ உணர்ச்சிகளை உணர்த்துகின்றது. ஆடற்கலை வாயிலாகக் கருத்துக்கள் சுவையோடும், முறையோடும் உணர்த்தப்படுவதை உற்று நோக்கி, இதனைப் படிமக் கலையில் புகுத்தினர் பண்டைக் காலச் சிற்பக் கலைஞர்கள். இதனால் சிற்பக்கலை உயிர்த் துடிப்புடன் விளங்குவதாயிற்று. சிற்பங்கள் ஆடற் கலைப் பண்பினைப் பெற்றிருப்பதால் இவை தோற்றுவிக்கும் கலையின்பத்திற்கு எல்லையே இல்லை.

ஆடற்கலை இலக்கணங்களை நேரடியாகக் கையாளாமல், படிமத்திற்குக் கைக்கொண்ட பொருளின் தன்மைக்கு ஏற்றவாறும், தேவையான கட்டுப்பாட்டுடனும், பாத்திரத்திற்குப் பொருந்துமாறும், இவ்விலக்கணங்களைச் சிற்பிகள் வகுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உலோகச் சிற்பங்களில் கை, கால் நீட்சிகளும், ஒடிவு, வளைவுகளும் எளிதாகக் காட்டப்பட முடியும். ஆனால் கல்லில் வடிக்கும்போது அங்ஙனம் காட்டுதல் எளிதன்று. எனவே, நீட்சிகளையும், ஒடிவு வளைவுகளையும் மிதமாகவும், பிற அங்கங்களோடு நெருங்கியதாகவும் கட்டுப்படுத்தப்படுகிறது. அங்ஙனம் அமைதியின் ரசானுபவம், காண்போர் உள்ளத்தில் ஏற்படும். எனவே, ஆடற் கலை இலக்கணங்கள் சிற்பியின் கண்ணோட்டத்தில் சிறிது மாற்றம் கொள்கின்றன. அவற்றில் முக்கியமானவை, ஆசனங்களும், உடல் பங்கங்களும், கை முத்திரைகளும் ஆகும்.

## பங்கம்

படிமங்களின் உடல் ஒடிவு, வளைவுகளுக்குப் பங்கம் என்று பெயர். இவை ஆபங்கம், சமபங்கம், ஆதிபங்கம் என மூன்று வகைப்படும். இம் மூன்றிலும் உடலின் ஒடிவு மூன்றாகையால் ஒவ்வொன்றையும் திரிபங்கம் என்றும் சொல்வதுண்டு.

## நதமானம்

தலையையும், உடலையும் நேராக நிமிர்த்தி, ஒருபாற் கோடாமல், சமநிலையில் கைகளையும், கால்களையும் அமைத்து நேர் நோக்குடையதாக அமையும் சிற்ப அமைதிக்குச் சமபாத ஸ்தானகம் என்று பெயர். இந்த நிலையில் ஒரு படிமத்திற்குக் கொள்ளப்படும் உயரமே அதனுடைய படிம மானம் என்று சொல்லப்படும். இங்ஙனம் உள்ள ஒரு படிமத்தை, ஒடிவு, வளைவுடன் (பங்கத்துடன்) அமைக்கும்போது, அப்படிமம் உயர அளவில் குறையும். இஃது *ஒடிமானம், நதமானம்* என்றும் *பங்கமானம்* என்றும் சொல்லப்படுகிறது. உடல் வளைவுறாமல் இருக்கும்போதுள்ள

படிம உயரத்திற்கும், உடல் வளைவுற்றபின் ஏற்படும் உயரத்திற்கும் உள்ள வேறுபாடே இஃதாகும். இவ்வொடிமானம் அந்தந்த படிமத்திலிருந்து பெறும் விரலளவால் கொள்ளப்படும். ஆபங்கம், சமபங்கம், ஆதிபங்கம் ஆகியவற்றுக்கு முறையே நதமானம் 3.4.5 விரலளவாகும்.

நேராக நிமிர்ந்து சமபாத ஸ்தானக அமைதியில் உள்ள படிமம் தராசின் முள்போன்று ஒரு பாற் கோடாஇறை நிலையை உணர்த்தும். ஆனால் ஒரு படிமத்தை, ஆபங்கத்தில் அமைத்திடில் அன்பும் அமைதியும் அதில் பொருந்தி சாத்விக பாவம் பொலியும். சமபங்கத்தோடு அப்படிமம் அமையின் சிருங்காரமும் ராஜஸமும் கலந்து நிற்கும். ஆதிபங்கத்தின் மூலம் வீர ரசம் வெளிப்படும். இம்மூன்று திருக்கோலங்களிலேயே வழிபடு படிமங்கள் மிகுதியாக இயற்றப்படுகின்றன. இம்மூன்று கோலங்களிலும் முகம் அமைதியுடனும், கண்கள் கருணையுடனும், இதழ்கள் புன்முறுவலுடனும் அமைதல் வேண்டும். இறைவனின் எவ்வித அமைதியும் ஆத்மாவைத் தூய்மைப்படுத்தும் கருணையை அடிப்படையாகக் கொண்டதாகையால் இவ்விலக்கணம் பொருந்தப் படிமங்களை இயற்றுதல் வேண்டும். உடல் பங்கங்களைப் படிமத்தில் புகுத்தி அமைக்க வழி முறைகள் உள. நேரே நிமிர்ந்து சமச் சீருடன் நிற்கும் படிமத்தின் முன்புறத்தில் தலை, நெற்றி, மூக்கு, மோவாய், மார்பு, நாபி, குய்யம், தொடைகள், பாதங்கள் ஆகிய உறுப்புகளின் நடுவே செல்லும் தூக்கு நூல் மைய சூத்திரம் என்றும், அது முன்புறத்தில் செல்லுமாதலால் பூர்வ சூத்திரம் என்றும் சொல்லப்படும். இந்நூல், படிமத்தை சம நிலைப்படுத்தும் இன்றியமையாச் சூத்திரமாகும். இந்நூலை அடிப்படையாகக் கொண்டே தலை, மூக்கு, மார்பு, நாபி, குய்யம், கால்கள், பாதங்கள் ஆகிய உறுப்புகள் எந்தெந்தப் பக்கங்களில் எவ்வெவ்வளவுகளில் அந்நூலிலிருந்து வளைவுறுகின்றன என்பதை உறுதிப்படுத்த முடிகின்றது. பூர்வ சூத்திர எல்லையிலிருந்து, உடல் ஒடிவு, வளைவின் உறுப்புகள் எய்தும் இடப் பெயர்ச்சி 'விலக்கம்' அல்லது 'ஒதுக்கம்' என்றும் சொல்லப்படும்.

## ஆபங்கம்

1. குறைந்த பங்கத்தை (வளைவை) யுடையது என்பது இதன் பொருள். இஃதில் உடலின் ஒடிவு வளைவுகள் மிதமாக அமைந்துள்ளதால் ஆபங்கம் என்று சொல்லப்படுகிறது. நின்ற கோலத்திலுள்ள படிமத்தின் முன்புறத்தில் தொங்கும் மைய நூலானது உடலின் எவ்வெப்பகுதிகளில் செல்லும் என்பதை இனிக் காண்போம். தொங்கு நூலானது தலையின் இடது பக்கம், இடது அடிக்கண், இடது மூக்குப்புடை, மோவாயின் வலது பக்கம், வலது மார்பின் இடப்பக்கம், நாபியின் வலது பக்கம், இடது தொடையின் வலப்பக்கம், வலது கால் கணுவின் இடது பக்கம் செல்லும். இப்பக்கத்தில் குதி காலின் இடைவெளி முன்புறத்தில் கட்டை விரல்களின் இடைவெளி அளவில் மூன்றில் ஒரு பங்காகும். பெருவிரல்களின் இடைவெளி 16 விரல் அளவெனக்கொள்க. இங்ஙனம் ஒடிந்து நிற்கும் படிமத்தின் நதமானம் 3 விரலாகும். இது திரிபுராந்தக மூர்த்திக்கு ஏற்ற பங்கமாகும்.



**2. மைய நூலானது**

தலை, நெற்றி, மூக்கு ஆகியவற்றின் நடுவில் செல்லும்.

| | | |
|---|---|---|
| அடிக்கழுத்து எலும்பின் | – | பக்க வாட்டிலும் |
| நாபியின் | – | பக்கத்திலும் |
| தொடையின் | – | பக்கத்திலும் |
| கணுக்காலின் | – | பக்கத்திலும் செல்லும். |

பூர்வ சூத்திரத்திலிருந்து

தூக்கிய காலின் அடித்தொடையின் நடுவில் ஒதுக்கம் *2'-4"

தூக்கிய முழங்காலின் ஒதுக்கம் 8'-0"

இங்ஙனமே எல்லா அளவுகளையும் கொள்க.

* 2-4 என்பதை 2 விரல் 4 யவை என்று கொள்ள வேண்டும்.

கணுக்கால்கள் இரண்டின் நடுவில்
இடைவெளி 3'-0"

கால் கட்டை விரல்களிரண்டின் இடைவெளி 12'-0"

இது பெண் வடிவங்களுக்குரியது.



3. மைய நூலானது

வலது வெண்விழி, மூக்குப்புடை, மோவாய் வழிச் செல்லும்.

மைய சூத்திரத்திலிருந்து இடது பக்கத்தில் மார்பின் ஒதுக்கம் 1'-0"



இடது பக்கத்தில் நாபியின் ஒதுக்கம் 2'-0"

இடது பக்கத்தில் யோனியின் ஒதுக்கம் 4'-0"

ஊன்றியுள்ள இடது முழங்காலின் ஒதுக்கம் 1'-4"

இரு குதிகால்களின் நடுவில் இடைவெளி 3'-0"

இரு பெருவிரல்களின் இடைவெளி 10'-0"

4. மைய நூலானது

இடது கடைக்கண்

இடது மூக்குப்புடை

மோவாயின் இடது பக்கம்

மார்பின் வலது பக்கம்

இடது தொடையின் பக்கம்

ஊன்றிய காலின் கணு

ஆகியவற்றின் வழியாகச் செல்ல வேண்டும். இது ஆண், பெண் படிமங்கள் இரண்டுக்கும் ஏற்றதாம்.



**5. மைய நூலானது**

தலை, நெற்றி, மூக்கு முனை வழியாகவும், இடது குதிகாலை ஒட்டியும் செல்ல வேண்டும்.

மேலும் பூர்வ சூத்திரத்திலிருந்து

| | |
|---|---|
| வலது பக்கத்தில் கண் விலக்கம் | 1'-0" |
| இடது பக்கத்தில் மார்பு ஒதுங்குவது | 2'-0" |
| இடது பக்கத்தில் நாபி விலகியிருப்பது | 1'-0" |
| குய்ய மூலம் வலது பக்கத்தே ஒதுக்கம் | 4'-0" |
| கால் பெருவிரல்களின் இடைவெளி | 15'-0" |
| குதிகால்களின் இடைவெளி | 5'-0" |

இது பெண் வடிவத்திற்கேற்றது



நாட்டிய மகளிரை இப்பங்கத்தில் நிறுத்திக் காட்டலாம்.

**6. தலையின் வலது பக்கம்**

வலது கண், வலது மூக்குப்புடை, மோவாயின் வலது பக்கம், வலது மார்பின் இடது பக்கம், நாபியின் வலது பக்கம், வலது குதிகாலின் இடது பக்கம் ஆகிய இடங்களில் மத்திய சூத்திரம் செல்ல வேண்டும். இதனை உத்தியாகக் கொண்டு படிமத்தைப் பங்க அமைதி கொள்ளச் செய்ய வேண்டும். இது ஆண் வடிவங்களுக்கு ஏற்றது. அர்த்த நாரீஸ்வரப் படிமத்திற்கும் பொருந்தும்.



**7. மைய நூலானது**

இடது வெண்விழி, இடது மூக்குப்புடை, மோவாயின் இடப் புறம், வலது மார்பின் இடப் பக்கம், இடது தொடையின் வழியாகச் சென்று இடது குதிகால் ஓரத்தில் தொங்க வேண்டும். இது திரிபுராந்தக மூர்த்தத்திற்கு ஏற்றதாகும்.



## 8. மைய நூலானது

தலையின் பக்கம், இடதுவெண் விழி, இடது மூக்குப்புடை, மோவாயின் இடது பக்கம். மார்பின் வலது பக்கம், வலது தொடை வழியாகவும் இடது கணுக்காலைத் தொட்டுக் கொண்டும் செல்ல வேண்டும்.



## 9. மைய நூலானது

நெற்றியின் இடப்பக்கம்

இடது கண்

இடது புடை

இடது உதடு

இடது தாடை

நெஞ்சுக் குழியின் மையம்

மார்பு மையம்

நாபிக்கு வலது புறம் 4'-0" தூரத்தில் கணுக்கால் மத்தியில் செல்ல வேண்டும்.

இது கங்காள மூர்த்தத்திற்கு ஏற்ற பங்க மானமாகும்.



### சமபங்கம்

1. மைய நூலானது தலை உச்சி மூக்கு நுனி வழியாகவும் குதிகால்களின் மையத்திலும் செல்லும். சூத்திரத்திலிருந்து மார்பின் விலக்கம் இடது பக்கத்தில் 3'-0"

சூத்திரத்திலிருந்து இடது பக்கம் நாபி நடு 1'-0"

சூத்திரத்திலிருந்து வலது பக்கத்தில் யோனி மூலத்தின் ஒதுக்கம் 4'-0"

சூத்திரத்திலிருந்து வலது முழங்கால் வரை ஒதுக்கம் 1'-0"

பெருவிரல்களின் இடைவெளி 16'-0"

இவ்வளவில் மூன்றிலொரு பாகம் குதிகால்களின் இடைவெளி ஆகும்.



## 2. மைய நூலானது

தலையின் இடது பக்கம், நெற்றியின் இடது பக்கம், மூக்குப்புடைக்கு இடது பக்கம், இடது அடிக்கண், மார்பின் வலது பக்கம், நாபிக்கு இடது பக்கம், இடது தொடையின் நடுவில் தொட்டுச் செல்லும்.



## 3. மைய நூலானது

தலை உச்சியின் இடது பக்கம், நெற்றியின் இடது பக்கம். மார்பின் இடது பக்கம். நாபியின் நடுவில். வலது தொடையின் இடப் பக்கம். இரு குதிகால்களுக்கு நடுவில் செல்ல வேண்டும்.



## 4. மைய நூலானது

தலை உச்சியின் மையம், மூக்கு நுனி, இடது குதிகால் பரடு இவற்றின் வழியே செல்ல வேண்டும்.



ஒதுக்கம்

| | |
|---|---|
| பூர்வ சூத்திரத்திலிருந்து மார்பின் இடது | 0'-4" |
| இடது பக்கத்தில் நாபியின் ஒதுக்கம் | 2'-0" |
| இடது பக்கத்தில் யோனியின் ஒதுக்கம் | 4'-0" |
| இடது முழங்காலின் ஒதுக்கம் அல்லது 2'-0'' இருத்தல் வேண்டும். | 1'-4" |

**5. மைய நூலானது**

தலை உச்சியின் வலது பக்கம், நெற்றியின் வலது பக்கம், மூக்குப்புடையின் வலது பக்கம், கழுத்தினிடையேயும் செல்ல வேண்டும்.

| | |
|---|---|
| இந்நூலிலிருந்து இடதுபக்க நாபியின் ஒதுக்கம் | 2'-0" |
| இடதுபக்கக் குய்ய மையத்தின் ஒதுக்கம் | 1'-0" |

மேலும் இடது தொடையின் வலது பக்கத்தை ஒட்டியவாறும் இடது கெண்டைக் காலின் வலது புறத்திலும் செல்வதோடு இரு குதிகால்களின் நடுவேயும் செல்ல வேண்டும்.

இது கங்காள மூர்த்தம், கங்காதர மூர்த்தம் ஆகியவற்றிற்கு ஏற்றது.



**6. மைய நூலானது**

தலை உச்சியின் மையம், மூக்கு மையம், பாதங்களின் மையம், ஆகிய இடங்களில் விழ வேண்டும்.

| | |
|---|---|
| மைய சூத்திரத்திலிருந்து நடுக் கழுத்தின் இடது பக்க ஒதுக்கம் | 2'-0" |
| மார்பு மையமானது வலது பக்கத்தில் ஒதுக்கம் | 1'-0" |
| நாபியின் நடுவானது வலது பக்கத்தில் ஒதுக்கம் | 0'-2½" |
| தொடை மையம் சூத்திரத்திலிருந்து விலக்கம் | 3'-0" |
| இடது முழங்கால் ஒதுங்கியிருப்பது | 4'-0" |
| கால் பெருவிரல்களின் இடைவெளி | 10'-0" |

இந்த இடைவெளியின் மூன்றில் ஒன்று குதிகால் இடைவெளி ஆகும். இது சண்டேசானுக்ரஹ மூர்த்தம்; உமாமகேஸ்வர மூர்த்தம் இரண்டுக்கும் ஏற்றது.



ஆலிங்கனம் செய்து நிற்கும் இருகாதலர் படிமங்கட்கும் இப் பங்கம் பொருந்தும்.

7. மைய நூலானது

நெற்றியின் நடு மற்றும் மூக்கு முனை வழியாக ஓடி இரு பாதங்கள் நடுவில் சென்று அடையும்.

ஒதுக்கம்

| | |
|---|---|
| பூர்வ சூத்திரத்திலிருந்து இடது பக்கம் கழுத்தின் ஒதுக்கம் | 1'-0" |
| இடது பக்க மார்பின் ஒதுக்கம் | 0'-4" |
| வலது பக்க நாபியின் ஒதுக்கம் | 2'-0" |
| வலது பக்கத்தில் குய்யத்தின் ஒதுக்கம் | 4'-0" |
| இடது பக்க முழங்கால் ஓரத்தின் ஒதுக்கம் | 1'-4" |




8. மைய நூலானது

தலை உச்சியிலிருந்து, நெற்றியின் இடது பக்கம், இடது கண், இடது மூக்குப்புடை, மார்பகத்தின் இடது பக்கம், நாபி மையம், தொடை மையம், குதிகால்கள் மையத்தில் விழ வேண்டும்.

விருஷவாகனர், கங்காதரர் படிமங்களுக்கும் தேவிகளுக்கும் ஏற்ற பங்கமாம்.



9. மைய நூலானது

| | |
|---|---|
| தலை உச்சியின் வலது பக்கத்திலும் நெற்றியின் வலது பக்கத்திலும் மூக்குப்புடையின் வலது பக்கத்திலும் நெஞ்சுக்குழியின் மத்தியிலும் நாபிக்கு வலது பக்கத்திலும் குய்யத்தின் வலது பக்கத்தில் தள்ளியும், இடது குதிகால் பரடு மத்தியிலும் செல்லும். | 4'-0'' |
| சமபங்கத்தில் கால் கட்டை விரல்களினிடையே வெளி | 18'-0'' |



10. மைய நூலானது

மூக்கு நுனி முதல் குதிகால் மத்தி வரை தொங்கும். இந் நூலிலிருந்து

| | |
|---|---|
| நெஞ்சுக்குழி இடது பக்கத்தில் | 1'-0" விலகியிருக்கும் |
| வலது பக்கத்தில் மார்பு | 0'-4" தூரத்திலும் |
| நாபி மத்தியம் வலது பக்கத்தில் | 2'-0" தூரத்திலும் |
| குய்யம் வலது பக்கத்தில் | 4'-0" தூரத்திலும் |
| இடது முழங்கால் மூட்டு தூரத்திலும் இருக்கும் | 1'-4" |



12. மைய நூலானது

தலை உச்சியின் வலது பக்கம், நெற்றியின் வலது பக்கம், வலக் கண்ணின் வெண்விழி, கீழுதட்டின் ஓரம், மோவாயின் வலது பக்கம். மார்பின் வலது பக்கம், நாபியின் மையம், குதிகால்களின் நடுவிலுமாகச் செல்லும்.



11. மைய நூலானது

மூக்கு முனையையும் பாத தலத்தையும் ஒட்டிச் செல்லும்.

| | |
|---|---|
| நூலிலிருந்து அடிக்கழுத்து இடது பக்கத்தில் ஒதுக்கம் | 1'-0'' |
| மார்பு மையம் இடது பக்கத்தில் ஒதுக்கம் | 0'-4'' |
| குய்யம் வலது பக்கத்தில் ஒதுக்கம் | 4'-0'' |
| இடது முழங்கால் ஒதுக்கம் | 1'-4'' |
| இடது கணுக்கால் ஒதுக்கம் | 3'-0'' |

இது கிருஷ்ணன் படிமத்திற்கேற்றதாம்.



13. மைய நூலானது

நெற்றியின் இடது பக்கம, இடது கண், இடது மூக்குப்புடை, மார்பகத்தின் இடது பக்கம், நாபியின் மையம், வலது தொடையின் மையம், இரு கணுக்காலின் நடுவே செல்ல வேண்டும்.



14. சக்திப் படிமத்தின் நெற்றி மையம், மூக்கு மையம், பாத மையம், குதிகால் மையம் ஆகிய இடங்களில் மைய சூத்திரம் தொங்க வேண்டும்.

### அங்க விலக்கம்

| | |
|---|---|
| மைய நூலிலிருந்து இடது பக்கத்துக் கொங்கைகளின் மையம் | 3'-0" |
| கொப்பூழ் | 2'-0" |
| யோனி மையத்தில் இடது பக்கம் | 4'-0" |
| ஊன்றிய காலின் பெருவிரல்கள் | 18'-0" |
| குதிகால் ஒழுங்கு | 6'-0" |

நீலோற்பல மலர் பிடித்த கையின் மேல் மட்டம் முலைகாம்பின் மட்டத்திற்குச் சமமாக இருத்தல் வேண்டும். இக் கை கொப்பூழ் மையத்திலிருந்து மணிக்கட்டு வரை 13'-4" விலக்கம் கொண்டிருக்கும். மேற்கையின் மையம் உடல் ஒழுங்கிலிருந்து 7'-0" ஒதுங்கியிருக்கும். இடுப்பு ஒழுங்கிலிருந்து தொங்கு கரத்தின் முழங்கை 4'-0" விலகியிருக்கும். பெருந்தொடைக்கும், மணிக் கட்டிற்கும் இடைவெளி 14'-0". சிறு தொடைக்கும், தொங்கு கையின் நுனி விரலுக்கும் இடைவெளி 10'-0". கௌரிப் படிமம் இடதுகாலை யூன்றி வலது காலைக் குஞ்சிதமாக வைத்து நிற்கும்.

### விலக்கம்

நெற்றி, மூக்குமுனை, குதிகால், பாதம் இவற்றின் மையம் ஆகியவற்றில் லம்ப சூத்திரத்தைப் பொருந்த அமைத்தல் வேண்டும். இத் தூக்கு நூலிலிருந்து வலப்புறத்தில் முலைக்காம்பின் விலக்கம் 3'-0". நூலுக்கு வலதுபுறம் கொப்பூழ் மையத்திற்கு வலது பக்கம் 3'-4" மைய நூலுக்கு வலதுபுறத்தில் யோனி மையத்தில் விலக்கம் 4'-0". மைய நூலுக்கு வலது புறத்தில் முழங்கால் மையத்தின் விலக்கம் 3'-0". இது சமபங்க சக்திப் படிமங்களை இயற்றுவதற்குரிய விதிகளாகும்.




## அதிபங்கம்

1. மைய நூலானது

தலை உச்சிக்கு இடது பக்கம்

நெற்றிக்கு இடது பக்கம்

மூக்குப்புடைக்கு இடது பக்கம்

இடது கடைக் கண்ணின் இடப் பக்கம்

மார்பு நடுவிலிருந்து 3'-0" விரல் தூரம் வலது மார்பிலும்

நாபி மையத்திலிருந்து 3'-0" விரல் தூரம் வலது மார்பிலும்

இடது தொடை நடுவிலும் ஊன்றிய காலின் கணுவிலும் தொங்க வேண்டும்.



## 2. மைய நூலானது

உச்சந்தலைக்கு இடது பக்கத்திலும்

அடிக்கண் பக்கத்திலும்

மூக்குப்புடையின் பக்கத்திலும்

மார்பு மையத்திலிருந்து வலது பக்க மார்பில் 3'-0'' தூரத்திலும்

நாபி மையத்திலிருந்து
இடது பக்கம் 3'-0" தூரத்திலும்

நூலிலிருந்து 0'-4" தூரத்தில்
இடது முழங்காலிலும்

இடது குதிகாலின் வலது பக்கத்திலும் விழ வேண்டும்

## 3. மைய நூலானது

தலை உச்சியின் பக்கத்திலும் கண்ணின் மையத்திலும் மார்பின் பக்கத்திலும் தொடையின் மையத்திலும் முழங்கால், கெண்டைக்கால் நடுவிலும் விழ வேண்டும்.

## ஒதுக்கம்

| | |
|---|---|
| மைய நூலிலிருந்து அடித்தொடைகளின் இடையே | 2'-4" |
| முழங்கால்களுக்கு இடையே | 12'-0" |
| கணுக்கால்களுக்கு இடையே | 5'-0'" |
| கட்டைவிரல்களுக்கு இடையே | 20'-0" |
| குதிகால்களின் நடுவில் ஒதுக்கம் | 5'-0" |





# 9

# படிமத் திருக்கோலங்கள்



சிற்பக் கலையானது, ஆடற்கலைக் கூறுகளைத் தழுவித் தன்வயமாக்கிக் கொண்டு தனக்கேற்ற வழிமுறைகளில் இலக்கணம் அமைத்துக் கொண்டது போல, யோகத்துறை ஆசன அமைதிகளில் ஒரு சிலவற்றையும் ஏற்றுக் கொண்டு, அத்துடன் அன்றாட வாழ்க்கையில் காணப்படும் இயல்பான அமைதிகளையும் தேர்ந்து, ஒழுங்கு படுத்தித் தொகுத்து இலக்கணமும் வகுத்துக் கொண்டு தனக்கு மேலும் வலிவையும்,பொலிவையும் ஏற்படுத்திக் கொண்டுள்ளது.

நாட்டியத் தோற்றங்களும், யோகாசனக் கோலங்களும், இயற்கை அமைதிகளும், ஏற்கெனவே நாட்டு மக்களுக்கு நன்கு அறிமுகமாகி இருந்தமையால் இவற்றைத் துணையாகக் கொண்டு மெய்ஞானக் கருத்துக்களுக்குத் தக்க விளக்கமாகப் படிமங்களை இயற்றியுள்ளார்கள். தெரிந்ததைப் புலப்படுத்தித் தெரியாத ஒன்றை விளக்குவதும், அரிய கருத்துக்களை-சுய அனுபவங்களை-மக்கள் அறியச் செய்வதும், ஒரு கலையின் பொது நோக்கும் பயனுமாகுமன்றோ?

### ஆசனங்கள்

தெய்வப் படிமங்களின் திருக்கோலங்கள் ஆசனங்கள் எனப்படும். அத்தகைய ஆசனங்கள் ஐந்து வகைப்படும். அவை முறையே *1. ஸ்தானகம் 2. ஆசனம் 3. சயனம் 4. ஸ்தானாசனம் 5. சயனாசனம்* என்பன ஆகும். இவை ஒரு மூர்த்தி தோன்றும் நிலையாகும்.

இவற்றை *ஐந்தொழிலென்றும், பஞ்சகிருத்தியம்* என்றும் சிற்ப நூல்' கூறும்.

நின்ற கோலம் *ஸ்தானகம்* ஆகும்; அமர்ந்த கோலம் ஆசனம் ஆகும்; கிடந்த கோலம் *சயனம்* ஆகும்; நின்ற கோலத்தைச் சார்ந்த ஸ்தானக அமைதிகள் எல்லாம் *ஸ்தானாசனம்* ஆகும்; கிடந்த கோலத்தைச் சார்ந்த சயன அமைதிகள் அனைத்தும் *சயனாசனம்* ஆகும்.

'ஆசனம்' என்ற சொல் பொதுவாக அமர்ந்த நிலையையே குறிக்கும் என்றாலும் கலைத்துறையில், 'கோலம்' (தோன்றும் நிலை) என்ற பொருளையும் உணர்த்தும். எனவே ஸ்தானாசனம், சயனாசனம் என்பவை கலைச் சொற்களாக வழங்கிவருகின்றன.

மேலும், ஆசனம் என்பது இருக்கை அல்லது பீடத்தையும் குறிக்கும். இம் மூன்று பொருள்களையும் குறிக்கும் சொல்லை அதனதன் இடத்திற் கேற்பப் பொருள் கொள்ள வேண்டும்.

கை அமைதிகளை கை அபிநயங்கள் என்று சொல்வது போல கால் அமைதிகளான ஆசனங்களைப் *பாத அபிநயம்* என்று கூறலாம்.

### 1. ஸ்தானகம் (நின்ற கோலம்)

#### சமபாத ஸ்தானகம்

இது பாதங்களைச் சமமாக வைத்து நிற்கும் நிலை என்று பொருள் படும்.

தலையையும் உடலையும் நேராக நிமிர்த்தி, சம நிலையில் கைகளையும் கால்களையும் நெருங்க அமைத்து, ஒருபாற் கோடாமல் நேர்நோக்குடையதாக அமைக்கப்படும் ஆசன அமைதிக்கு 'சமபாத ஸ்தானகம்' என்று பெயர். சந்திர சேகர மூர்த்தம், விஷ்ணு மூர்த்தம் ஆகிய இரண்டும் இதற்கு நல்ல எடுத்துக் காட்டுகள்

ஆகும். கைகளில் அவரவர்க்குரிய முத்திரைகளைப் பிடித்து நிற்கும் நிலையும் சமபாத ஸ்தானகமே ஆகும்.



சமபாத ஸ்தானகம்

சமபாத ஸ்தானக நிலையில் மேலும் இரு உட்பிரிவுகள் உள. ஒன்று *வைதஸ்திக ஸ்தானகம்* என்றும், மற்றொன்று *அர்த்த வைதஸ்திக ஸ்தானகம்* என்றும் கூறப்படும். சமபாத ஸ்தானக நிலையில் சமமாக வைக்கப்பட்ட பாதங்களின் பெருவிரல்களின்-இடைவெளி ஒரு விதஸ்தி (இரண்டு சாண்)



வைதஸ்திக ஸ்தானகம்

அளவிருப்பின் இக்கோலம் 'வைதஸ்திக ஸ்தானகம்' என்று சொல்லப்படும். பாதங்களின் இடைவெளி ஒரு சாண் அளவே இருப்பின் அது 'அர்த்த வைதஸ்திக ஸ்தானகம்' என்று சொல்லப்படும்.



அர்த்த வைதஸ்திக ஸ்தானகம்

பாதங்களைச் சமமாக வைத்து, உடலை நேரே நிமிர்த்தி, தலையைச் சம நோக்குடன் அமைத்து, கைகளை நேரே கீழ்நோக்கித் தொங்கவிட்டு, விரல்களையும் இயல்பாக நீட்டியமைத்து, கைத் தலங்கள் தொடைகளை அணுகியிருக்கச் செய்து நிற்கும் கோலம் *காயோத்சர்க்கம்* என்றும் *ஆஜானு லம்ப பாகு* என்றும் சொல்லப்படும். உடலைப் பற்றிய ஆசாபாசங்களைத் துறந்து நிற்பதால்— *'காயோத்சர்க்கம்'* என்றும், கைகள் முழங்கால் வரை நீண்டு தொங்கி நிற்பதால் 'ஆஜானு லம்ப பாகு' என்றும் பெயர் பெற்றன. இந் நிலையைத் *தாள் தாழ் தடக்கை* என்று தமிழில் கூறுவர்.



காயோத்சர்க்கம்

சமண சமய, கோமதேஸ்வரப் படிமம் இதற்குத் தக்க எடுத்துக்காட்டு.

## 2. ஆசனம் (அமர்ந்த கோலம்)

ஒரு பீடத்தில் அமர்ந்து ஒரு காலைத் தொங்கவிட்டு, மற்றொரு காலை மடித்துப் பீடத்தில் படுக்க வைத்துள்ள கோலத்திற்கு 'ஆசனம்' என்று பெயர். ஆசீனம் என்றும் கூறுவதுண்டு.

### (அ) சுகாசனம்

உடலை எப்பக்கத்திலும் சாய்வின்றி நேராக நிமிர்த்திக் கைகளை சமச்சீருடையதாகக் கோலித்து, ஒரு காலை ஆசனத்தின் மீது படுக்க வைத்து, மற்றொரு காலைச் சுகமாகத் தொங்கவிட்டு, அமர்ந்திருக்கும் நிலைக்கு சுகாசனம் என்று பெயர். தனித்த சிவமூர்த்தங்களையும், விஷ்ணு மூர்த்தங்களையும் இக் கோலத்தில் காணலாம். இம் மூர்த்தங்களின் பெயருக்கு முன்னால் 'சுகாசன' என்ற அடைமொழி சேர்த்தே வழங்குதல் வேண்டும்.



சுகாசனம்

### (ஆ) பத்மாசனம்

அமர்ந்த நிலையில் உடலை நேரியதாக அமைத்துக்கொண்டு இரு பாதங்களை ஒன்றுக்கொன்று குறுக்காகத் தொடை மீது கிடத்தியும், உள்ளங்கால்களை வானோக்கியும் அமையச் செய்த கோலம் பத்மாசனம் எனப்படும். இதற்கு வேறொரு பெயர் கமலாசனம் ஆகும்.



பத்மாசனம்

இது பௌத்த மரபில் பரியங்காசனம் என்றும் *வஜ்ராசனம்* என்றும் சொல்லப்படும். 'பரியங்கம்' என்ற சொல் 'படுக்கை' என்று பொருள்படும். இருபாதங்களும் படுக்கையாகக் கிடத்தப் பெறுவதால் அஃது இப்பெயர் பெற்றது.

இரு பாதங்களில் ஒன்றினைச் சாதாரணமாக ஆசனத்தில் மடக்கிப் படுக்கக் கிடத்தி மற்றொன்றை முன்போல் தொடை மீதே அமைத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் நிலைக்கு அர்த்த *பத்மாசனம்* என்று பெயர்.



அர்த்த பத்மாசனம்

### (அ) லளிதாசனம்

பீடத்தில் இரண்டு கால்களையும் வைத்து அமர்ந்து, ஒரு காலைப் பீடத்தின் மீது மடக்கிப் படுக்கையாக வைத்து, மற்றொரு காலை மடக்கி நிறுத்தியமைத்த அமைதி *லளிதாசனம்* எனப்படும். இதை விநாயகரின் அமர்ந்த கோலத்தில் காணலாம்.



லளிதாசனம்

### (ஈ) மகாராஜ லீலாசனம்

இதே கோலத்தில் வலது கையினை மடித்துத் தூக்கி நிறுத்திய முழங்கால் மீது லளிதமாக வலது முழங்கையை வைத்து நீட்டிய அல்லது மார்பை நோக்கியமைத்து இடது கையைப் பக்கவாட்டில் ஒய்யாரமாக ஊன்றி, உடலைச் சுகமாக வளைத்து அமர்ந்திருக்கும் நிலையை *மகாராஜ லீலாசனம்* என்று கூறுவோம். பௌத்த சிம்ம நாதப் படிமத்தில் இதனைக் காணலாம்.



மகாராஜ லீலாசனம்

### (உ) வீராசனம்

அமர்ந்த நிலையில் ஒரு காலைப் பிகுவாகத் தொங்கவிட்டு ஊன்றி, மற்றொரு காலை அதன் மீது விரைப்பாகப் படுக்கக் கிடத்தி நீட்டி, உடலைச் சமநிலையிற் கொண்டு விரைப்பாக நிமிர்த்தி ராஜ நோக்குடன் அமர்ந்திருக்கும் கோலம் *வீராசனம்* என்று சொல்லப்படும். ஒப்பற்ற தலைவன் அல்லது அரசன் ஒருவனைக் குறிக்கும் கோலமாதலால், இது இராஜலிங்காசனம் என்றும் சொல்லப்படும்.



வீராசனம்

வியாக்யான தஷிணா மூர்த்தம் இக்கோலத்திற்குத் தக்க உதாரணமாகும். இராஜ ராஜேஸ்வரி போன்ற, அளப்பரிய ஆற்றல் வாய்ந்த, சுதந்திரச் சக்திப் படிமங்களையும் இக்கோலத்தில் அமைக்கலாம்.

பீடத்தில் இரண்டு கால்களையும் வைத்து, வலதுகாலை மடக்கிக் குய்யத்தோடு ஒட்ட அமைத்து, இடது காலின் பரடை வலது தொடை மீது ஏற்றி, பிகுவாக அமைத்து, உடலையும் அங்ஙனமே நேரியதாக்கி அமைத்த கோலமும் இவ்வகையினையே சாரும். இஃது உலகப் பொதுமறை வழங்கிய பொய்யா மொழியாருக்கு ஏற்றக் கோலமாம்.



இராஜலிங்காசனம்

### (ஊ) உத்குடிகாசனம்

அமர்ந்த நிலையில் ஒரு காலைத் தொங்க விட்டு மற்றொரு காலை மடக்கி ஆசனத்தின் மீது ஊன்றி அமர்ந்திருக்கும் கோலத்திற்கு *உத்குடிகாசனம்* என்று பெயர்.

யோக தஷிணா மூர்த்தமும், ஐயனார் படிமமும் இக்கோலத்திற்கு உதாரணங்கள்.



உத்குடிகாசனம்

### (எ) யோகாசனம்

யோகிகள் ஐம்புலன்களை அடக்கி மனதை ஒருமுகப் படுத்தி அம் மனத்தைப் பரம்பொருளில் ஒன்றச் செய்து-தன்னை மறந்து-ஆனந்த நிலையில் திளைத்து இருக்கும் அமைதிக்கு 'யோக நிலை' என்று பெயர். யோக நிலையில் ஆழ்ந்திருக்கும் ஞானிகள் கொள்ளும் கோலம் *யோகாசனம்* என்று சொல்லப்படும்.

இக் கோலத்தில் அமர்ந்திருக்கும் படிமம் பத்மாசனக் கோலத்தில் அமையும். அதாவது அமர்ந்த நிலையில் இரு கால்களையும் குறுக்காகப் பின்னி உள்ளங்கால்களைத் தொடை மீது வானோக்கியதாக அமைத்து, கைகளை உடலோடு ஒட்டி அமைத்த நிலையிலிருக்கும். இந்நிலை ஐம்புலன்களை அடக்கிக் கொண்டிருக்கும் நிலையை உணர்த்தும். இருகைகளில் ஒன்றில் *ஞான முத்திரை* பிடித்து மார்போடு இணைத்து, அம்முத்திரை வெளிமுகமாகவோ அல்லது உள்முகமாகவோ அமைதி கொள்ளும். மற்றொரு கையினை மடியில் வைத்துக் கைத்தலத்தை வானோக்கி வைத்து விரல்களை நீட்டி ஒன்றோடொன்று நெருங்கி இருக்கச் செய்திருக்கும். தலையை நேரே நிமிர்த்தி, கண்கள், மூக்கின் நுனியைப் பார்த்திருக்கும். அதுவே யோகாசனக் கோலத்தின் சிறப்பமைதியாகும்.

மேலும், ஆசனத்திலமர்ந்து இருகால்களையும் மடித்து, ஆசனத்தின் மீது ஒன்றுக்கொன்று குறுக்காகக் குய்யத்தைத் தொட்டிருக்கச் செய்து, உடலையும், கால்களையும் சேர்த்து *யோகபட்டம்* என்னும் ஒரு பட்டியால் கட்டப்படும். இத்தகைய ஒன்றிற்கும் *யோகாசனம்* என்று பெயர். இந்நிலையில் ஒரு கையின் மணிக்கட்டு முழங்கால் மீது வைக்கப் பெற்று தண்டமென நீண்டிருக்கும். மற்றொரு கை *சின் முத்திரை* பிடித்திருக்கும்.



யோகாசனம்

## (ஏ) ஸ்வஸ்திகாசனம்

நின்ற கோலத்திலாதல், அமர்ந்த கோலத்திலாதல் கால்களை ஒன்றுக்கொன்று குறுக்காக-சிக்குப் பலகையைப் போல்-வைத்திருக்கும் நிலைக்கு *ஸ்வஸ்திகாசனம்* என்று பெயர். இவ்வாசனத்தை அமர்ந்த கோலத்தில் யோகசாதனமாகக் கொள்ளும்போது யோகாசனம் எனவும் பெயர் பெறும். ஒரு காலைத் தொங்க விட்டு மற்றொரு காலை பீடத்தின் மீது குத்திட்டு மடக்கி நிறுத்திய கோலத்திற்கு மட்டும் கூறப்படும் பெயர் *உத்குடிகாசனம்* ஆகும்.



ஸ்வஸ்திகாசனம்

இதனை யோக சாதனமாகக் கொள்ளும்போது மடக்கிய காலையும் உடலையும் யோகபட்டத்தால் கட்டி, ஒரு கையில் சின்முத்திரை காட்டி மற்றொரு கையை மடக்கிய முழங்கால் மீது நீட்டி அமைக்கப் பெறும். ஒரு காலும் உடலும் சேர்த்து யோக பட்டத்தால் இணைக்கப் பெறும். இந்த யோகாசனத்தை *அர்த்த* (அரை) *யோகாசனம்* என்பர் சிலர்.

ஞான முத்திரையும், முக பாவமும் யோக நிலையை உணர்த்தும் குறிகளாகும். அத்துடன் யோக பட்டமும் கூடி இந்நிலையைத் துலக்கமாக வெளிப்படுத்தும்.

எனவே, யோகாசனமானது பத்மாசனம் அல்லது ஸ்வஸ்திகாசனம் அல்லது உத்குடிகாசனம் என்ற மூன்று ஆசனங்களில், ஏதேனும் ஒன்றை அடிப்படைக் கோலமாகக் கொண்டமையும்.

## (ஐ) கருடாசனம்

வலது காலை மடக்கி, அதன் முழங்கால் முட்டியை கீழே படிய வைத்து, இடது காலை மடக்கி, ஊன்றிய அல்லது சிறிது நீட்டியமைத்த அமைதிக்குக் *கருடாசனம்* என்று பெயர். இது கருடாழ்வாருக்குரிய ஆசனம் ஆகும். கடவுட் படிமத்தின் முன்னிலையில் அடியவர் பணிந்து வழிபடும் கோலமும் இஃதாகும். முன்போல் கால்களை ஊன்றி இறக்கைகளை மேல் நோக்கி விரித்து நீட்டி கைகளை ஒன்று சேர்த்து, கைத்தலம் வானோக்கி அமைய, பறக்கும் பாவத்தை உணர்த்துவது *கமனக்கோலம்* என்று சொல்லப்படும்.



கருடாசனம்

விஷ்ணுவின் ஊர்தியான கருடவாகன அமைப்பிலும் இக்கோலத்தைக் காணலாம்.

### 3. சயனம்

கால்களையும் கைகளையும் நீட்டி, உடலையும், தலையையும் பீடத்தில் கிடத்திப் படுத்த நிலைக்கு சயனம் என்று பெயர்.

### 4. ஸ்தானாசனங்கள் (நின்றகோலச் சார்புடைய பிற அமைதிகள்)

#### (அ) வைசாக ஸ்தானகம்

ஒரு காலை நன்றாக ஊன்றி மற்றொரு காலை இரண்டரைச் சாண் அளவில் முன் வைத்து நிமிர்ந்து பங்க அமைதியோடு அழகுற நிற்கும் நிலை *வைசாக ஸ்தானகம்* என்று சொல்லப்படும். விசாகம் என்ற



வைகாச ஸ்தானகம்

நட்சத்திரங்கள் ஐந்தும் வில் போன்ற தோற்றமுடையவை. விசாகன் என்ற சொல்லுக்கு வில்லாளன் என்பது பொருள். விசாக நாளில் தோன்றியவன் முருகன். எனவே முருகனை *விசாகன்* என்று சொல்லுகிறோம். இஃது அவனுக்குரிய ஒரு சிறப்புக் கோலமாகையினால் இது `வைசாக ஸ்தானகம்' என்றும் பெயர் பெற்றிருக்கலாம். மேலும் விசாகனே இக்கோலத்திற்கு *அதிதேவதை*.

எனவே, இந்நின்ற கோலமானது வில்லேந்தி நிற்பதற்கேற்ற கோலமாகிறது. கோதண்டம் ஏந்திய இராமன் படிமமும், வில்லேந்திய வேலவன் படிமமும் இவ்வகையில் சிறப்பானவை. இராமன், முருகனைத் தவிர எப்படிமம் இக்கோலத்திலிருந்தாலும் அதனை வைசாக ஸ்தானக நிலை என்றே சொல்வது வழக்கு.

#### (ஆ) வைஷ்ணவம்

ஸ்தானாசன வகையில் வைஷ்ணவம் என்பதும் ஒரு நின்ற கோலமாகும். ஒரு காலை நன்றாக ஊன்றி மற்றொரு காலை சிறிதே மடக்கி உடலை வளைவோடு அமைத்து நிற்கும் கோலம் *வைஷ்ணவம்* எனப்படும். விஷ்ணு இதற்கு அதிதேவதை. எனவே இஃது இப்பெயர் பெற்றது.



வைஷ்ணவம்

இக்கோலத்தில் ஒரு காலை நிலையாகவும்-ஸ்திரமாகவும்-மற்றொரு காலை மடக்கியும்-குஞ்சிதமாகவும் அமைப்பதால் இதனை *ஸ்தித குஞ்சிதம்* என்றும் சொல்வதுண்டு.

இக்கோலம் லளித நிலையைக் காட்டும். சிவ மூர்த்தங்களிலும், விஷ்ணு மூர்த்தங்களிலும், சக்திப் படிமங்களிலும் சாத்துவிக பாவத்தை உணர்த்த இது கையாளப்படுகிறது.

(இ) ஸ்வஸ்திகாசனம்

ஒரு காலை நிலையாகவூன்றி மற்றொருகாலை அதற்குக் குறுக்கே வைத்து நிற்கும் அமைதி *ஸ்வஸ்திகாசனமென்று* சொல்லப்படும். குழலூதும் கண்ணனின் திருக்கோலத்திலும், ரிஷபாந்திக சிவமூர்த்தத்திலும், கொடிப் பெண் வடிவங்களிலும் இவ்வமைதியைக் காணலாம்.



ஸ்வஸ்திகாசனம்

(ஈ) ஆலீடாசனம்

நின்ற கோலத்தில் இடது காலை முன்னே எட்டி வைத்து, வலது காலைப் பின்னோக்கி நீட்டி, கணை தொடுத்து நிற்கும் கோலத்திற்கு *ஆலீடம்* என்றும் *ஆலீடாசனம்* என்றும் பெயர். இத்தகைய நிலையில், இடது கையில் சிகர முத்திரையால் வில்லைப் பிடித்து வலது கையில் கடக முத்திரை அமைய, கணையையும், நாணையும் சேர்த்துப் பின்னோக்கி இழுத்து, நிற்க வேண்டும்.



ஆலீடாசனம்

(உ) பிரத்யாலீடாசனம்

வில்லிலிருந்து கணையை விடுத்த அடுத்த வினாடியில் நிகழ்ந்த-முன்னோக்கிப் பாயந்து நின்ற-கோலத்திற்கு *பிரத்யாலீடம்* என்று பெயர். இவ்வாசனத்தில் கைகளையும் பாதங்களையும் ஆலீடாசன அமைதியிலிருந்து மாற்றி அமைத்தல் வேண்டும்.

வில்லை இறுகப் பிடித்து, அம்பையும், நாணையும் விசையோடு பின்னோக்கி இழுத்துப் பிடித்த நிலையில் உடல் முழுவதும் அந்த விசை பரவி நிற்கும். விசையோடு கலந்த கணையை வில்லோன் விடுத்தபின் அவ்விசையால் முன்னோக்கி அவன் உந்தப்படுகிறான். அம்பை விடுவித்த அந்நிலையில் தன்னைச் சமநிலைப்படுத்திக் கொள்ளும் வில்லோனின் கோலமே `பிரத்யாலீடம்' ஆகும்.

(ஊ) ஊர்த்வ ஜானு

ஒரு காலை உறுதியாகக் கீழே ஊன்றி மற்றொரு காலைப் பீடத்தின் மீது அல்லது வேறொரு உயர்ந்த இடத்தில் அல்லது ஓர் உருவத்தின் மீது தூக்கி வைத்து மடித்து ஊன்றி நின்ற கோலம் *ஊர்த்வ ஜானு* என்று சொல்லப்படும். இது தூக்கிய முழங்கால் எனப் பொருள்படும்.



ஊர்த்வ ஜானு

தேரின் மேல்தட்டில் ஒரு காலை ஊன்றி மற்றொரு காலைக் கீழே ஊன்றி கணை விடுக்க நிற்கும் திரிபுர சம்மார சிவ மூர்த்தமும், ஒரு காலை ஊன்றி மற்றொரு காலை மகிஷாசுரன் மீது வைத்து நிற்கும் துர்க்கையின் படிமமும் இக்கோலத்திற்குச் சிறந்த உதாரணங்கள் ஆகும்.

### (எ) ஏக பாத ஸ்தானகம்

ஒரு காலை ஊன்றி, மற்றொரு காலை மடக்கி, ஊன்றிய காலின் முழங்கால் முட்டியின் மீது மடக்கிய காலின் பாதத்தை வைத்து நிற்கும் ஸ்தானக நிலைக்கு *ஏக பாத ஸ்தானகம்* என்று பெயர். இதனைத் தவக்கோல அர்ச்சுனன் படிமத்தில் காணலாம்.



ஏக பாத ஸ்தானகம்

ஒரு காலை ஊன்றி மற்றொரு காலை மடக்கி, மடக்கிய காலின் பாதம் குய்யத்தை அடைய வைத்து, உள்ளங்கால் வானோக்கி அமைய, நிற்கும் கோலமும் *ஏகபாத ஸ்தானகக்* கோலமாகும். இதனைத் தவக்கோலக் காமாட்சியின் படிமத்தில் காணலாம்.



ஏக பாத ஸ்தானகம்

## 5. சயனாசனம்

### (அ) சமசயனம்

ஆசனத்தின் மீது கால்களையும் கைகளையும் நீட்டி, உடலையும் தலையையும் படுக்கையின் மீது கிடத்தி, கண்களை மூடிக் கொண்டு, சம மட்டத்தில் மல்லார்ந்து படுத்த நிலைக்கு *சமசயனம்* என்று பெயர்.

இவ் வமைதி *ஆபிசாரக சயன விஷ்ணு* மூர்த்தத்துக் குரியதாம்.

### (ஆ) அர்த்த சயனம்

படுக்கையில் படுத்த நிலையில் உடலை வில் போல வளைத்து, வலது கையைத் தலையணை மீது வைத்தோ அல்லது கையை நீட்டி மடகுடத்தைத் தொட்டிருக்கச் செய்தோ, இடது கையைச் சிறிது வளைவோடு இடது தொடை மீது நீட்டி, இடது காலைக் குஞ்சிதமாக--சிறிது முடக்கி—வலது காலை நேராக நீட்டி, மைய சூத்திரத்திலிருந்து முகத்தை வலது பக்கம் மூன்று விரளலவு சாய்த்து ஒருக்கணித்துப் படுத்திருக்கும் நிலைக்கு அர்த்த சயனம் என்று பெயர். இதனை அர்த்தார்த்த சயனம் என்றும் சொல்வதுண்டு.

இச் சயனக் கோலத்தில் பாதங்களின் இடைவெளி இருபது விரலளவும், குதிகால்களின் இடைவெளி நான்கு விரலளவும், முழங்கால்களின் இடைவெளி பதினான்கு விரலளவும் இருத்தல் வேண்டும்.

இத்தகைய கோலத்தை போக சயன விஷ்ணு மூர்த்தத்தில் காணலாம்.

வலது கையைத் தலையணை மீது வைத்தோ அல்லது கையை நீட்டியோ இடது கையை மடக்கி முழங்கையை இடுப்பருகே அமையச் செய்தோ அல்லது தொடைமீது நீட்டியோ இடது காலைக் குஞ்சித்து வலது காலை நீட்டி, சிறிது திறந்த நோக்குடன் சயனித்த நிலையையும் 'அர்த்தார்த்த சயனம்' என்பர். இதனை யோக சயன விஷ்ணு மூர்த்தத்தில் காணலாம்.

வலது கையைத் தலையணை மீது வைத்து இடது கையை நீட்டியமைத்துள்ள சயன நிலை வீரசயன விஷ்ணுவுக்குரிய அமைதியாகும்.

ஆபங்கம், சமபங்கம், அதிபங்கம் ஆகிய மூன்று பங்க அமைதிகளுக்கும் ஸ்தானகம், ஆசனம், சயனம், ஸ்தானாசனம், சயனாசனம் ஆகிய ஐந்தொழில் அமைதிகளுக்கும் அப்பாற்பட்ட கோலத்தில் வழிபடு படிமங்களை அமைப்பதுமுண்டு. நடராஜப் பெருமானின் படிமம் இதற்கு நல்லதொரு சான்றாகும். இதனை பொதுப்படையாக *ஆபாச பங்கம்* என்றும், *நாட்டியக் கோலம்* என்றும் சிற்ப நூல்கள் சிறப்பித்துக் கூறும். இப் படிமம் கலையும், தத்துவமும், விஞ்ஞானமும் ஒருங்கே அமைந்த மகோன்னதப் படைப்பானதால் அதைத் தனி அத்தியாயத்தில் விளக்கமாகக் காணலாம்.

1. விஸ்வகர்மீயம்

# 10

# நடனத் திருக்கோலங்கள்



## இறைவனின் திருக்கூத்து

கடவுள் இரண்டு நிலைகளை உடையவராகக் கருதப்படுகின்றார். மனம், வாக்குகளுக்கு அப்பாற்பட்ட 'கடந்த நிலை' முதல் நிலையாகும். இதனையே 'சொரூபம்' என்றும் 'நிர்குணம்' என்றும் கூறுவர். கடவுளின் இயல்பான, உண்மையான, இறுதியான நிலை இஃதாகும். உலகத்தில் காணப்படும் எல்லாப் பொருள்களிலும் அம் மெய்ப்பொருள் நீக்கமற நிறைந்து காணப்படும் நிலை இரண்டாவதாகும். இதனையே 'தடஸ்தம்' என்றும், 'சகுணம்' என்றும் கூறுவர். இது 'கலந்த நிலை' என்று சொல்லப்படும்.

கடந்த நிலையிலுள்ள கடவுள் அறிவு மயமானதால் அந் நிலையிலுள்ள கடவுளை 'அறிவு' என்றே குறிப்பர். உலகப் பொருள் அனைத்தும் உணர்ச்சியற்ற சடப் பொருளே. அதாவது இயற்கை சடமேயாகும். இத்தகைய இயற்கையோடு 'அறிவு' கலப்பதால் இயற்கை அனைத்தும் இயக்கம் அல்லது அசைவு கொள்கின்றது. அதுவே அண்டத்தின் அசைவாகும்.

அறிவுப் பொருளைச் 'சிவம்' என்றும், சடப் பொருளான இயற்கையைச் 'சக்தி' என்றும் நம் முன்னோர் பெயரிட்டு அழைத்தனர். எனவே சிவமும், சக்தியும், பிணைவதால் பிரபஞ்சம் இயங்குகிறது. தனித்த சிவம் தானாகவும் இயங்கும். இயற்கையோடு கலந்தும் இயங்கும். தனித்த இயற்கை அல்லது சக்தி தானாக இயங்க இயலாது. சிவத்தோடு சேர்ந்தே இயங்க முடியும். இத்தகைய இயக்கத்தைக் கருத்திற் கொண்டே நமது கடவுட் படிமங்கள் அனைத்தும் இயக்கத் தன்மை பெற்றனவாய்க் காட்டப்படுகின்றன.

இக் கருத்தைத் தழுவியே ஆகாயம், கடவுளின் திருமேனி என்றும், சூரியன், சந்திரன், அக்னி, இம் மூன்றும் அவனது கண்கள் என்றும், கைகள் எல்லாம் திசைகள் என்றும், கடல் நீர் ஆடையென்றும், நிலம் அவனது திருவடி என்றும் கொண்டு பிரபஞ்சத்தையே இறைவனின் உருவமாகப் புலவர் வருணிப்பர்.

மேலும், பிரபஞ்சத்தையே இறைவனின் உடல் என்றும், அதிலிருந்து கிளம்பும் ஓசையும், பேச்சும், பாட்டும், அவனது ஒலி என்றும், வானமும் சந்திரனும் தாரகைகளும், அவனது ஆடை அணிகள் என்றும் நாட்டியக் கலைஞர் கொள்வர்.

அவனையே கூத்தனாகக் கொண்டு, அண்டத்தின் இயக்கத்தை அவனது 'ஆங்கிகாபிநயம்' என்றும், அண்டத்தின் அசைவால் எழும் ஒலியை அவனது 'வாசிகாபிநயம்' என்றும் அண்டத்தைச் சூழ்ந்த வானத்தையும் அதில் ஒளிரும் தாரகைகளையும் அவனது 'ஆகார்யாபிநயம்' என்றும், அவ் வியக்கத்தின் உட்கிடையை—பாவத்தை—அவனது 'சாத்விகாபிநயம்' என்றும் அழகுபடக் கூறுவர்.

இறைவனின் இவ் வியக்கம் ஒருவகையான கட்டுப்பாட்டுக்குட்பட்டே நிகழ்கின்றது. இவ் வியக்கம் இசைபட நிகழ்வதாகவும் காணமுடிகிறது. எனவேதான் அதனை முறையாகவும் நாம் அனுபவிக்க முடிகிறது. இத்தன்மையினை உணர்ந்தே கடவுட் படிமங்கள் நின்றாலும், அமர்ந்தாலும், கிடந்தாலும், ஒழுங்கு முறைகளுக்குட்பட்டு இயங்கும் ஆடற் கலை அமைதிகளிலேயே இயற்றப்படுகின்றன.

அண்ட சராசரங்களின் இயக்கமே இறைவனின் திருக்கூத்து எனக் கண்டோம். அக்

கூத்தே நடராஜனின் திருநடனமாகும். இயற்கையின் வாயிலாகவே இந்த நடனம் நிகழ்வதால், இயற்கை இந்நடனத்திற்கு இன்றியமையாப் பொருளாகிறது. இது சிவகாமி என்ற அழகிய பெண் வடிவாகக் கலையில் சித்தரிக்கப் பட்டிருக்கிறது. எனவே, சிவனாடும் கூத்து சிவகாமியோடு சேர்ந்து ஆடும் கூத்து ஆகும். இக் காரணம் பற்றியே நடராஜப் படிமத்திற்கருகில் எப்பொழுதும் நாணக் கோலமுடைய அழகான சிவகாமியின் படிமமும் அமைக்கப்படுகிறது.

இறைவனின் இத்திருக்கூத்து ஏதோ ஓர் இடத்தில் நிகழ்வதன்று. இஃது எங்கும் எப்பொழுதும் நிகழும் நீண்ட கூத்தாகும். நமது உள்ளத்திலும் இக் கூத்து நிகழ்கிறது. வெளியேயும் இக் கூத்தே நிகழ்கிறது.

கடவுள் அனாதியானவர். உயிரும் அனாதியானது. இவ்வுயிர் அனாதிக்காலம் தொட்டு பாசம் என்ற அழுக்கால் மறைப்புண்டு ஒளியிழந்து கிடக்கின்றது. இப்பாசமும் அனாதியானதே. ஒளியிழந்த இத்தகைய ஆன்மாவை, தூய்மைப்படுத்துவதற்கே, கருணை மேலிட்டால், அசையா இறைவன் அசைந்து தொழிற்படுகிறான். இவன் ஆற்றும் தொழில்களே பஞ்சகிருத்யம் என்றும் ஐந்தொழில் என்றும் சொல்லப்படுகிறது.

*படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்,* என்பன அவ்வைந்து தொழில்களாம். அவை சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரஹம் என்றும் சொல்லப்படும்.

உயிர்கள் தாமாகவே பாசத்தை நீக்கிக் கொள்ள முடியாது. எனவே கடவுள் இப்பாசத்தை நீக்குதற் பொருட்டே இவ்வைந்து தொழில்களை மேற்கொள்ளுகிறார்.

### படைத்தல்

உயிர்களைக் கடவுள் படைக்கவில்லை. ஆனால் அவ்வுயிர்களுக்குத் தனு, கரண, புவன, போகங்களை கடவுள் கொடுத்தலே 'படைப்பு' எனப்படும்.

### காத்தல்

உடம்பு பெற்ற உயிரானது, அறியாமையால் தான் செய்த நல்வினை தீவினைகளுக் கேற்ப வினைப் பயனை அனுபவிக்கச் செய்தலே 'காத்தல்' எனப்படும்.

### அழித்தல்

உயிர்களுக்கு இறைவன் அளித்த தனு, கரண, புவன, போகங்களை நீக்குதலே 'அழித்தல்' எனப்படும்.

### மறைத்தல்

உயிர்கள் செய்த வினைப் பயன்களை ஒரே பிறவியில் தீர்த்துக் கொள்வது இயலாது. இதனால் உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறப்பெடுக்க வேண்டியதாகிறது. இங்ஙனம் பிறவி எடுப்பதில் உயிர்கள் வெறுப்படையாது, பாசம் தேயுமளவு வினைப்பயனைத் துய்க்குமாறு உயிர்களை அதில் ஆழ்த்துவதே 'மறைத்தல்' எனப்படும்.

### அருளல்

உயிர் மீது படிந்த பாசம் மாய்ந்தபின் ஞானம் பிறக்கின்றது. கடவுளை உயிர் நாடுகிறது. தூய்மையடைந்த அவ் ஆன்மாவை இன்பம் துய்க்குமாறு செய்வதே 'அருளல்' எனப்படும்.

இந்த ஐந்து தொழில்களையும் ஒருங்கே விளக்கும் திருக்கோலமே சிவபெருமானின் ஆனந்தத் தாண்டவப் படிமமாகும்.

வலது காலை முயலகன் மீது ஊன்றி, சிறிது மடக்கி, இடது காலை வலது பக்கத்தில் குறுக்கே தூக்கிச் சிறிது குஞ்சிதமாக்கி, இடது தன் கரத்தை வலது பக்கம் நேராக நீட்டி, கைத்தலத்தைக் கீழ் நோக்கித் தொங்கவிட்டு, வலது தன்கரத்தில் அபய முத்திரை பிடித்து, இடது மேற்கரத்தில் அக்கினியும் வலது மேற் கரத்தில் துடியும் கொண்டு, முகமலரில் குமிழ் சிரிப்புப் பொங்க நின்று, தீச்சுடர்கள் கொண்ட திருவாசி சூழ்ந்திருக்க, அதன் நடுவே நின்றாடும் கோலமே ஆனந்தத் தாண்டவப் படிமமாகும்.

இப்படிமத்தில் அமைந்த கருவிகள் மூலமாகவும், கை முத்திரைகள் மூலமாகவும், சிவபெருமானின் ஐந்தொழில்களை உணர்த்தியிருப்பதைக் காண்க.

படைத்தலைத் துடியும், காத்தலை அபயமும், அழித்தலைத் தீச்சுடரும், மறைத்தலை ஊன்றிய திருவடியும், அருளலைத் தூக்கிய திருவடியும் உணர்த்துகின்றன.

அதுமட்டுமின்றி, வேறுபல தத்துவச் செய்திகளையும், இப்படிமம் இனிது விளக்குகின்றது.

சிவபெருமான் தாமரைப் பீடத்தில் நின்றாடுகின்றான். இது நமது இதய கமலத்தில் சிவன் நின்றாடுகிறான் என்பதை உணர்த்தும். மேலும் முயலகன் மீது நின்றும் ஆடுகிறான். மும்மலங்களின் உரு, முயலகன்.

தூக்கிய திருவடி அருளலைக் குறிக்குமாதலின், அதனை அடைவதே உயிர்களின் குறிக்கோள் என்பதை வீசிய கரத்தின் சுட்டு விரல் சுட்டும்.

மற்றை நடு, அணி, சிறு விரல்கள் மூன்றும் முயலகனைச் சுட்டி உயிர்கள் மும்மலம் அற வேண்டும் என்பதை உணர்த்தும்.

அபயகரத்தின் குவிந்த கைமலர், இறைவன், உயிர் மீது கொண்ட கருணையின் அபிநயக் குறிப்பாகும். குமிழ் சிரிப்பு அவனது திருவுளத்தின் வெளிப்பாடு. திருவாசி இயற்கையைக் குறிக்கும். இத்திருவாசிக்குள் நின்று இறைவன் ஆடுகின்றான். இதன் மூலம் இயற்கையுள் கலந்து ஒன்றாயும், அவற்றை உள் நின்று இயக்குந் தன்மையால் அவற்றோடு உடனாய் நிற்கின்றான் என்பதையும் விளக்கும். விரித்த செஞ்சடையும், பறந்து விளங்கும் ஆடையும், அவனது இயக்கத்தின் வேக நிலையைக்காட்டும். எத்தகைய வேகத்திலிருப்பினும், அதிலிருந்து வேறுபட்டவனாய், விகாரமடையாதவனாய், அம் முதல்வன் உள்ளான் என்பதை சாந்த முகமும், விழிகளும் உணர்த்தும்.

ஆனந்தத் தாண்டவத்திற்கு ஓங்கார நடனம் என்ற ஓர் அழகிய பெயரும் உண்டு. ஓம் என்ற பிரணவத்தில் அ.உ.ம என்ற மூன்று எழுத்துக்கள் உண்டு. இம்மூன்று மட்டும் சேர்ந்தால் ஓம் ஒன்ற ஒலி பிறந்து விடாது. எனவே இவ்வொலி கிடைப்பதற்கு மகரத்தின் மேற்புள்ளியான நான்காவது எழுத்தும் சேர வேண்டும். இதனை அரைமாத்திரை என்றும் அமாத்திரை என்றும் சொல்லுவர். எனவே இந்த அமாத்திரையாகிய நான்காவது பகுதியும் சேராவிடில் ஓம் என்ற ஒலி தோன்றுவதற்கில்லை. முதல் மூன்றை இயற்கையாகிற பிரகிருதி என்றும், நான்காவதாகிய அமாத்திரையை உலகெலாம் பரவி நிற்கும் புருஷன் என்றும் கொண்டு, ஒன்றையொன்று பிரிக்க முடியாத பிரகிருதி-புருஷன் கலப்பாலேயே உலக இயக்கம் நிகழ்கிறது என்பர். புருஷனுடைய விருப்பமின்றி பிரகிருதியின் நடனம் நடைபெறாது. அப்பிரகிருதிக்குள்ளேயே உடனாய் நின்று தானும் ஆடுகிறான்.

திருவாசியே பிரகிருதியையுணர்த்தும் அடையாளம். அதற்குன் சிவனாரின் தலை, கால், கை முதலியவற்றைப் பரந்து ஒட்டியிருக்குமாறு அமைத்து, அதன் மூலம் பிரகிருதி முழுதும் பரவியிருக்கும் புருஷனை உணர்த்தியிருக்கிறது. இதற்கிடையே ஆன்மாவானது சிவாயநம என்ற பஞ்சாஷர மந்திரத்தில் 'சிவ' என்பதற்கும் 'நம' என்பதற்கும் இடையே 'ய' அமைவது போல் இருக்கின்றது என்பர் தத்துவாசிரியர்.

சிவனின் நடனத்தை நமசிவாய என்ற பஞ்சாஷர மந்திரத்தின் வடிவம் என்பர் தத்துவாசிரியர். திருவடி 'ந' கரத்தையும், வயிறு 'ம' கரத்தையும், தோள் 'சி' கரத்தையும், முகம் 'வா'வையும் முடி 'ய'வையும் குறிக்கும் என்று விளக்குவர். சைவ சமயக் கருத்துக்களும், சைவ சித்தாந்தக் கருத்துக்களும் ஒரு சேர அமைந்த திருவுருவமே நடராஜப் பெருமானின் படிமமாகும். இவ்வழகிய படிமத்தினை வடித்தெடுக்கும் அளவு முறைகளையும் சூத்திர விளக்கத்தையும் இனிக் காண்போம்.

## ஆபாச பங்கம்

கடவுட் படிமங்களின் நின்ற கோலங்களை ஆபங்கம், சமபங்கம், அதிபங்கம் என்ற மூன்று பங்க நிலைகளில் அடக்கிக் காட்டிய அழகை வேறொரு அத்தியாயத்தில் காட்டினோம். இந்த மூன்று பங்கங்களை விடுத்து வேறுபல ஆடலமைதிகளிலும் சிற்ப வடிவங்கள் இயற்றப்படுகின்றன. இவை எண்ணிலடங்கா. அவற்றை அளவுகட்குட்படுத்தி வகைப்படுத்துவதும் எளிதன்று. எனவே இந்த ஆடலமைதிகளால் அமையும் பங்கத்தை 'ஆபாச பங்கம்' என்ற பொதுப் பெயரில் அடக்கியிருக்கிறார்கள் பண்டைச் சிற்பிகள். எனவே நடராஜப் பெருமானின் ஆனந்தத் தாண்டவக் கோலம் ஆபாச பங்கத்தைச் சார்ந்ததென அறிதல் வேண்டும்.

## நதமானம்

நடராஜப் படிமத்தை உத்தம தசதாளத்தினாலோ அல்லது மத்திம தசதாளத்தினாலோ அளவிட்டு இயற்றுதல் வேண்டும். இவ்வமைதியில் இப்படிமத்தின் நதமானம் 10,11 அல்லது 12 விரலாகும்.

## பங்கமானம்

இப்படிமத்தின் பூர்வ சூத்திரமானது, உச்சந்தலையின் வலது பக்கம், வலது கண்ணின் இடது அடி, வலது மூக்குப் புடை, மோவாயின் வலப் பக்கம், நாபி மையம், தூக்கியமைத்த தொடையின் மையம், ஊன்றிய வலது காலின் கணு ஆகியவற்றின் வழியாகத் தொங்க வேண்டும். மேலும் இந்நூல் நடு வயிறு, மார்பு ஆகியவற்றைத் தொட்டுத் தொங்க வேண்டும். அத்துடன் தூக்கிய தொடையின் உட்புறத்திலேயே அந்நூல் தொங்கிக் கணுக்காலின் முன்புறத்தில் வந்தடைய வேண்டும் என்பதைக் கருத்திற்கொள்ளுதல் வேண்டும்.

## ஒதுக்கம்

பூர்வ சூத்திரமிருந்து வலது பக்கத்தில் வலது முழங்கை வரை ஒதுக்கம் 37 விரல். அபயகரத்தின் உட் பகுதிவரை ஒதுக்கம் 24 விரல். இடது கரமான வீசிய கரத்தின் மணிக்கட்டுவரை ஒதுக்கம் 29 விரல். வலது கக்கத்தின் ஒதுக்கம் 12.




நடராஜப் படிம மானங்கள்

தூக்கிய காலின் முழங்காலின் ஒதுக்கம் 15 விரல். தூக்கிய காலின் கட்டை விரல் நுனியின் ஒதுக்கம் 48 விரல். ஊன்றிய காலின் முழங்கால் எல்லையின் ஒதுக்கம் 17 விரல். ஊன்றிய காலின் முழங்காலின் உட்பகுதியின் ஒதுக்கம் 8 விரல். ஊன்றிய காலின் பரட்டிலிருந்து தூக்கிய திருவடியின் குதி வரை குறுக்கு அளவு 45 விரல். வலது தொடைக்கும் தூக்கிய காலின் முழங்கால் உட்பகுதிக்கும் இடைவெளி 8 விரல். துடிக்கையின் புறத்திவரை ஒதுக்கம் 45 விரல்.

பூர்வ சூத்திரமிருந்து இடது பக்கத்தில் அக்னி ஹஸ்தத்தின் மணிக்கட்டு வரை ஒதுக்கம் 45 விரல். அதன் முழங்கைவரை ஒதுக்கம் 34 விரல். தோள் மட்டத்திலிருந்து இடது மேற்கரத்தின் முழங்கையின் தாழ்த்தி 20 விரல். இடது தோளின் ஒதுக்கம் 16½ விரல். நடுவுடலின் ஒதுக்கம் 9 விரல். இடது புட்டத்தின் ஒதுக்கம் 18 விரல்.

### அடக்கம்

அந்த முன் நூலிலிருந்து நெற்றியின் அடக்கம் 4½ விரல். நடுக்கழுத்தின் அடக்கம் 7½ அல்லது 9 விரல். தலையிலணிந்த கொக்கு இறகின் அடக்கம் 15 விரல். பூர்வ சூத்திரத்துக்கும் முன்புறத்தில் வீசிய கரம் அமைகின்றதால் அந்நூலிருந்து அக்கை முன்னோக்கி இருக்கும் அளவு 16½ விரலாகும்.

தூக்கிய திருவடியின் முழங்காலானது நாபி மட்டத்திற்குச் சமமாக இருப்பின் ராஜசத் தோற்றத்தைக் காட்டும். அங்ஙனமே வீசிய கரமும் தொய்வின்றி நேரியதாகவே அமைதல் வேண்டும். துடி பிடித்த கையின் நடுவிரலானது காது மட்டத்திற்கு ஏறியிருத்தலும் இக்கருத்தை வலியுறுத்தும். கஜஹஸ்தத்தின் விரல்கள் தூக்கிய திருவடியையும் முயலகனையும் சுட்டிக் காட்டுதல் வேண்டும்.

### துடி

துடியானது, இரண்டு பத்மங்கள் சேர்ந்த அமைப்பில் இருத்தல் வேண்டும். துடியின் நீளம் 8 விரலும், அகலம் 5 விரலும், இரண்டுக்கும் இடைப்பட்ட அதன் இடுப்பின் அகலம் 3 விரலும் இருத்தல் வேண்டும்.

### அக்னி

தீச்சுடரின் உயரம் 7,8 அல்லது 9 விரலாகும். அதில் 3,5 அல்லது 7 சிகைகள் முன்னும் பின்னும் அமைதல் வேண்டும். தீயைச் சட்டியிலோ அல்லது உள்ளங்கையிலேயோ, தாங்கியிருக்கச் செய்தல் வேண்டும்.

### முயலகன்

அபஸ்மாரன், குறட் பூதம், என்பன மறு பெயர்கள். இது பூத வடிவம் கொண்டிருக்கும். நான்கு தாள நீளமுடையது. படுத்த நிலையில் அதன் கனம் 9,10,11 அல்லது 12 விரல். இதனை ஊன்றிய பாதத்தின் அடியில் குப்புறப்படுத்து கையினால் பாம்பைப் பிடித்து விளையாடும் பாவனையில் அமைத்தல் வேண்டும். இடது கையில் பாம்பைப் பிடித்து வலது கரத்தில் அரிவாளைக் கொண்டிருப்பதாகவும் இயற்றலாம். சியாமள வண்ணம் அல்லது பச்சை வண்ணம் முயலகனின் மேனி வண்ணமாகும். இத்தாண்டவத்தில் முயலகனின் தலையானது படிமத்தின் வலப்புறத்தில் திமிறி மேல் நோக்குவதாக அமைதல் வேண்டும்.

### தலையணி

கொக்கின் இறகுகளை, தலைமுடியில் வரிசையாக விசிறி போல அமைத்தல் வேண்டும். அதன் நீளம் 16,17 அல்லது 18 விரல் அளவிருக்கலாம். பாம்பு, எருக்கம்பூ, ஊமத்தைப்பூ கொன்றை மலர் ஆகிய பூக்களால் தலையை அலங்கரித்திருத்தல் வேண்டும். மண்டை ஓடும், உச்சந்தலையில் அமைந்திருத்தல் வேண்டும். தலையின் இடது பக்கத்தில் பிறைச் சந்திரனை ஒட்டியமைத்தல் வேண்டும்.

### பிற அணிகள்

கழுத்தில் ஆரங்களும், மார்பில் பூணுலும், இடது காதில் குழையும், வலது காதில் மகர குண்டலும், கைகளில் வளைகளும், முழங்கையில் கடக வளையமும், பாதங்களில் பாதசரிகளும் பூட்டப்பட்டிருக்க வேண்டும். வீரக் கழலையும் வலது காலில் கட்டலாம். கால் விரல்களிலும் கை விரல்களிலும் மோதிரங்களையும் அணிவித்தல் வேண்டும்.

### உதர பந்தம்

நடு உடலில் கட்டிய உதரபந்தம் (உடற்கட்டு) ஆட்டத்தின் வேகத்தால் அவிழ்ந்து பறந்து ஒடி திருவாசியைத் தொட்டுக் கொண்டிருப்பதாக அமைத்தல் வேண்டும்.

### புஜங்க வலயம்

பாம்பை வளையாகக் கொண்டமைவதால் இது 'புஜங்க வலயம்' எனப்படும். அது முன்கையின் சுற்றளவைப்போல் 1¼ மடங்கு நீளமுடையது. அத்துடன் அதனுடைய படத்தின் நீளம் 12 விரலும், அகலம் 7 விரலும், கனம் 1 விரலும், இருத்தல்

வேண்டும். பாம்பு முன் நோக்கிப் படமெடுத்துச் சீறி ஆடும் நிலையில் அமைக்கப்பட வேண்டும்.

### ஆடை

இடுப்பில் புலித் தோலாடையைத் தொடையை ஒட்டியவாறு அமைத்தல் வேண்டும்.

### விரிசடை

விரித்த செஞ்சடையானது மார்பு மட்டத்திலிருந்து 8-0 விரல் பின்னடங்கி அழகுற விசிறிபோல் அமையவேண்டும். இதனடைப்பிலும் சுழன்றாடும் வேகத்தைக் காட்டுதல் வேண்டும். சடைகளின் எண்ணிக்கை ஒவ்வொரு பக்கத்திலும் 5,7,8 அல்லது 9 வரை இருக்கலாம்.

### கங்கை

வலது பக்க விரிசடையில் கங்கையை அமைத்தல் வேண்டும். இடுப்புக்கு மேல் பெண் உடலும், கீழே மீன் உடலும் கொண்டு கரண்ட மகுடம் தரித்து கூப்பிய கரத்தினளாக அமைதல் வேண்டும்.

### பத்ம பீடம்

பத்ம பீடத்தின் உயரம் 16 விரல், நீளம் 64 விரல், அகலம் உயரத்தைப்போல் 1/¼, 1/½ அல்லது 2 பங்கு இருத்தல் வேண்டும். மேலும் கீழும் பத்மாகாரமாக இதனை அலங்கரித்தல் வேண்டும். இப் பத்ம பீடத்தின் மீதே பிரபா மண்டலமாகிய திருவாசியை பொருத்தி அமைத்தல் வேண்டும். இதற்கு பிரபாவளி (சுடர்வலயம்) என்றும் மற்றொரு பெயர் உண்டு.

### பிரபாவளி (திருவாசி)

பிரபாவளியை வட்ட வடிவமாகவோ, முட்டை வடிவமாகவோ, அமைக்கலாம். ஊன்றிய பாதத்தின் அடியிலிருந்து 100 விரல் விட்டமுடையதாகவோ, அல்லது உறுப்புகள் உறுதியுடன் அமைவதற்குத் தக்க அளவிலோ அமைக்கலாம். திருவாசித் தண்டின் அடிவாரத்தில் மகரங்களை அமைத்து அதன் வாயிலிருந்து பிரபாவளி கிளம்புவதாகக் காட்டுதல் வேண்டும். தண்டின் வெளிப்புறத்தில் தீச்சுடர்களை வரிசையாக அழகுற அமைத்தல் வேண்டும். திருவாசித் தண்டை, இலை, கொடிக் கருக்குகளால் அலங்கரித்தல் வேண்டும். திருவாசியின் சிகரத்தில் நாசித் தலையை ஆனந்தத் தாண்டவத்தில் வைக்கக்கூடாது.

திருவாசியை முட்டை வடிவினதாக அமைத்தால் அது சூரியன் தனது ஒளி, ஈர்ப்பு ஆகிய ஆற்றல் நிரம்பிய வட்ட வடிவமான தனது எல்லைக்குள் ஏனைய கோள்களையும், அகப்படுத்தி அவற்றை இயக்குவதைப் போல, முழு முதல் இறைவன் தனது அருட்சக்தி எல்லைக்குள் உலக உயிர்களை ஆட்படுத்தி தனது ஐந்தொழில்களை செய்கின்றான் என்ற கருத்தை உணர்த்தும். இக்கருத்தைப் புலப்படுத்த சூரிய மண்டல அமைப்பைத் திருவாசி உணர்த்தி நிற்கிறது. இங்கு இறைவனின் இயல்பினை அண்டங்கள் உணர்த்தும் பாங்கு அறிந்து மகிழ்வதற்குரியதாகும்.

### சிவகாமி

தாண்டவ மூர்த்தியின் இடது பக்கத்தில் சிவகாமியின் படிமத்தை மிக அழகாக இயற்றுதல் வேண்டும். வலது கையில் நீலோத்பலம் பிடித்து இடது கையைத் தொங்கவிட்டு, கரண்ட மகுடம் அல்லது கேசபந்தமணிந்து பங்கத்தோடு நின்ற கோலத்தில் அமைத்தல் வேண்டும்.

ஆனந்தத் தாண்டவப் படிமத்தில் சிவபெருமானின் ஐந்தொழில்களையும், ஒரு சேர அமைத்துக் காட்டியிருக்கிற தல்லவா? இவ்வைந்து தொழில்களைத் தனித்தனியே விளக்கிக் காட்டும் படிமங்களும் உண்டு. அவற்றின் இலக்கணங்களை இதன் துணை நூலில் காணலாம்.

கூத்தப் பிரானுக்கு உரியதாக திருவாதிரை நட்சத்திரத்தைச் சொல்லுவார்கள். திருவாதிரை ஒன்றுதான் செக்கச் சிவந்த நட்சத்திரம். அதைச் சுற்றி ஆறு வெண்மீன்கள், அவற்றுடன் கூடிய திருவாதிரை நட்சத்திரமே நடராஜ மூர்த்தம் தோன்ற அடிப்படைப் புள்ளியாக அமைந்திருக்கிறது என்பர் சில புலவோர் 'வெண்ணீறு பூசிய செம்மேனி எம்மான்' என்று முன்னையோர் பாராட்டிப் பரவினர் என்றும் கூறுவர்.

நடராஜ மூர்த்தத்தின் முடி, அக்கினி, புலிவால் அல்லது உத்தரியம், ஊன்றிய திருவடி, தூக்கிய திருவடி, துடி ஆகிய ஆறும் 60 பாகைக்கொன்றாக அமைந்து திருவாசியாகிய பிரபஞ்சத்தைத் தொட்டுக் கொண்டு பிரபஞ்சத்தை இயக்கும் ஆரக்கால் போல இருக்கின்றன.

அறுகோண அமைதியில் அமைந்த இத்திருவுருவம் ஆறாதாரத் தத்துவத்தையும் உணர்த்திக் கொண்டிருக்கிறது.

வலமேற்கரத்தில் உள்ள துடி (டமருகம்) 'ஓ' என்ற வரி வடிவின் தொடக்கச் சுழியாய் அமைய வலமாய் வந்து இடையில் நீட்டிக் கொண்டிருக்கும் புலிவால் (உத்தரியம்) பகுதியில் இடமாய் ஒடித்து வளைந்து மீண்டும் வலமாய் வந்து பதுமபீடம் சேருவது வரை நோக்கினால் 'ஓ' அமைவதைக் காணலாம். முயலகன் 'ம' வரி வடிவத்தைத் தோன்றச் செய்வதையும் காணலாம். இரண்டையும் சேர்த்து நோக்க 'ஓம்' புலப்படுவது தெளிவு.

கலை நோக்கிலும், விஞ்ஞான நோக்கிலும், தத்துவ நோக்கிலும் எப்படிப் பார்த்தாலும், நடராஜ மூர்த்தம் ஓர் ஒப்பற்ற அற்புதப் படைப்பு என்பதை எவரும் ஏற்றுக் கொள்வர்.

# II

# தலைக் கோலங்கள்



சிற்பக்கலைத் துறையில் சிற்ப வடிவங்கள் கருத்தோடும், உவமை அணி புலப்படுமாறும், தொழில் நுட்பங்களோடும், இயற்றப்படுகின்றன. இக்கலை வடிவங்களுக்கு மேலும் அழகூட்டுவதற்கு பல்வகை அணிகலன்களும் தலைக் கோலங்களும் ஆடை அலங்காரங்களும் அந்தந்த வடிவங்களுக்கு ஏற்ப, அழகுற, அமைக்கப்படுகின்றன.

தலையை வாரி முடியாகவும், கொண்டையாகவும், பின்னலாகவும், பல்வேறு கோலங்களில் மக்கள் தங்களை அலங்கரித்துக் கொண்டு தங்கள் அழகுணர்ச்சியைப் புலப்படுத்திக் கொள்வது போல, சிற்பிகள் தாங்கள் கற்பித்த வடிவங்களுக்கு அழகிய மகுடங்களையும், பலவகையான தலைக் கோலங்களையும், இயற்றியுள்ளார்கள். அங்ஙனமே, படிமங்களின் கழுத்திலும், காதிலும், மார்பிலும், தோளிலும், இடுப்பிலும், தொடையிலும், காலிலும், தாளிலும் அழகிய அணிகலன்களையும் ஆக்கி அமைத்திருக்கிறார்கள்.

தலைக் கோலங்களையும், அணிகளையும் உற்று நோக்கின், அவை சிற்பவடிவங்களில் தனியொரு ஒழுங்கு முறையினையொட்டி அமைந்திருப்பதைக் காணலாம். அணிகலன்களைச் சூட்டினாலும், தலைக் கோலங்களைப் புனைந்தாலும் உடலின் இயற்கையழகு மறைக்கப்படாமலும் பாதிக்கப் படாமலும் செய்தல் வேண்டும்.

அதுமட்டுமல்ல, முக உயர-அகல அளவுகளுக்கு இயைபுடையதாகவும் முகத்திற்குப் பொலி வூட்டுவதாகவும் தலைக் கோலங்களை அமைத்தல் வேண்டும்.

முடியை முறுக்கியும், சுருட்டியும், அள்ளிச் செருகியும், பின்னியும், கொண்டையிட்டும் மற்றும் பல்வேறு மனங்கவர் அமைதிகளில் இயற்றுவது ஒரு வகை. தங்கம், வெள்ளி முதலிய உலோகங்களால் மகுடங்களாக அமைப்பது மற்றொரு வகை. இவ்விரண்டும் இங்கு தலைக் கோலங்கள் என்றே கொள்ளப்பட்டிருக்கின்றன.

முடியால் அமைத்த தலைக் கோலங்களின் பூச்சரங்கள், முத்து மாலைகள், மணி மாலைகள், பல்வகை முகப் பணிகள் ஆகியவற்றை பொருத்தமான இடங்களில் அழகூட்டும் பாவனைகளில் கட்டியும், தொங்க விட்டும் அமைத்து, அத்தலைக் கோலங்களின் தோற்றப் பொலிவை மிகுவித்தல் வேண்டும்.

கடவுட் படிமங்களின் தலைக் கோலங்களில் அப் படிமங்கள் கொண்டுள்ள கருத்துகளை விளக்கத்தக்க சின்னங்களையும் பொருத்தமான இடங்களில் வைத்து அமைத்தல் வேண்டும். படிமங்களுக்கு அழகு தருவதோடு பல கருத்துகளையும் தலைக் கோலங்கள் பிரதிபலிக்குமாதலால் தலைக் கோலங்களைப் பற்றிய அமைப்பு இலக்கணங்கள் தோன்றலாயின.

வரலாற்றுக்குரிய வரலாற்றுச் சிற்பங்களை இயற்றுங்கால், கால வழக்கைத் தழுவியும், நிகழ்ந்த இடத்தின் நாகரிகத்தைச் சார்ந்ததாகவும் அக்கோலங்கள் அமைந்திட வேண்டும். அத்தகைய அமைப்புகளில் கலை நயமும், கற்பனை நயமும் விளங்கச் செய்தல் வேண்டும். அணிகலன்களையும், ஆடை அலங்காரங்களையும் அங்ஙனமே கொள்ளுதல் வேண்டும்.

பேரரசர்களுக்கும், அரசிகளுக்கும் அவரவர்க்குரிய தலைக் கோலங்களையே அமைத்து காட்ட வேண்டும். தலைக் கோலங்களைக் கொண்டே அவரவர் சமூக நிலைகளை உணர்த்த


240-1—12a

முடியுமன்றோ! எடுத்துக்காட்டாக, கிரீட மகுடம் பேரரசனையும், தம்மில்லம் என்ற கோலம் பட்டத்தரசியையும் குறிப்பிடும். பிற அரசச் சின்னங்களை உடலிலே பூட்டி தலைக் கோலமாக ஜடா மகுடம் சித்தரிக்க பட்டிருக்குமானால் அச்சிற்பம் பேரரச நிலையை நினைப் பூட்டுவதோடு, அவனது சிவனடியார் நிலையையும் உணர்த்திடும் என்பதைச் சிற்பிகள் கருத்திற் கொள்ளுதல் வேண்டும்.

சிற்பங்களை அளவின் முறைகளுக்கு ஒப்ப அழகுடன் அமைத்தாலும் அணிகளையும், தலைக் கோலங்களையும் அழகுறப் புனையாவிடில் சிற்பத்தின் எழில் குன்றிவிடுமாதலால் இத்துறையிலும் சிற்பிகளுக்குச் சிறப்பான கவனம் இருத்தல் வேண்டும்.

சிற்ப உருவங்களின் நிலை, தன்மை, உருவகிக்கும் பாத்திரம், இவற்றைக் கருத்திற் கொண்டு இலக்கன வரம்புகளுக்குட்பட்டு கற்பனை நயத்துடனும், காவிய நயத்துடனும் தலைக்கோலங்களை இயற்றுதல் வேண்டும். ஆடைகள், அணிகள், தலையலங்காரங்கள் ஆகியவற்றை ஆகார்யாபிநயத்தைச் சேர்ந்த கூறுகள் என்பதை மறக்கவே கூடாது.

தலைக்கோல வகைகள்

. தலையிலுள்ள கேசத்தை அள்ளிச் செருகியும், முடித்தும், பல்வேறு அலங்காரச் செயற்கை முடிகளைச் சேர்த்துத் தலைக்கு அணியாகக் கொண்டும் அலங்கரிப்பது தலைக்கோலம் எனப்படும்.

இவை பொதுவாக 'மௌலி' என்றும் ''முடி' என்றும் 'மகுடம்' என்றும் சொல்லப்படும். உலோகத்தால் அமைக்கப்படும் பலவகை மகுடங்களும் தலைக்கோல வகையினையே சாரும். தலைக்கோலங்கள் பலவகைப்படும். அவற்றுள் சிறப்பான தலையணிகள் பின்வருமாறு:

1. ஜடா மகுடம்.
2. ஜடா பாரம்.
3. ஜடா மண்டலம்
4. ஜடா பந்தம்
5. விரிசடை
6. சுடர்முடி
7. கேச பந்தம்
8. சிரஸ்திரகம்
9. குந்தளம்
10. தம்மில்லம் (தமிழம்).
11. அளக சூடம்
12. கிரீட மகுடம்
13. கரண்ட மகுடம்

ஆகியவைகளாகும்.

1. ஜடா மகுடம்

தலையில் கொண்டை அமைத்து நீண்ட திரிசடையைத் தலையில் படுக்கையாகவும், செங்குத்தாகவும் சுற்றிக் கரகம் போல் அமைந்த தலைக்கோலம் ஜடா மகுடம் ஆகும். இது முக உயரத்தால் 1, 1½ அல்லது 2 பங்கு உயரமுடையதாக அமைதல் வேண்டும். விரலளவால் 24,21,18,17 அல்லது 16 விரல் இருத்தல் வேண்டும். முகத்திற்குப் பொருத்தமாக அமைத்தற் பொருட்டு அவ்வளவை ஒரு சிறிது கூட்டியும் குறைத்தும் செய்யலாம். முடியின் உயரத்தை கேசாந்தமிருந்து கணக்கிடல் வேண்டும். முறுக்கிய கேசம் சிறுவிரல் கனமிருத்தல் வேண்டும். திரிசடையின் நீளம் 30 விரல் முதல் ஒவ்வொரு விரலாகக் கூட்டி



ஜடா மகுடம்

61 விரலளவு வரை இருக்கலாம். திரிசடைகள் முன்புறத்தில். மூன்று அல்லது ஐந்து வரிசைகளாகவும், தலைக்குச் செங்குத்தாகவும் அமையும். உச்சந் தலைக்கு அருகே மூன்று அல்லது ஐந்து திரிசடைகள் தலைக்கு சமாந்தரமாக முடியைச் சுற்றி இறுகி அமையும். இங்ஙனம் செங்குத்தாகவும், படுக்கையாகவும் அமைந்த திரிசடைகளின் பக்கவாட்டில் அச் சடைகள் மாலைபோல் அடுக்கடுக்காய்த் தொங்கி அமையும். இத் திரிசடைகளின் இடைவெளிகளில் முத்துச் சரங்கள் அல்லது மணிவடங்கள் தைக்கப் பெற்றிருக்கும். இச்சடையானது அடிப்பகுதியில் முகத்தின் அகல அளவிற்குச் சிறிது பருத்தும், முறையே மேல் நோக்கிக் கரைந்தும் செல்லும். இம் முடியின் நான்கு பக்கங்களிலும் பூரிமம் என்ற முகப்பு அணிகள் பொருத்தப்படும். இப் பூரிமத்தின் அடியில் மணிவடங்கள் தொங்கி நிற்கும் அல்லது தாமரை இதழ்களான தாமங்களைத் தொங்கவிட வேண்டும். சடை முடியின் உச்சியில் இதழ் விரிந்த தாமரை அணி செய்தல் வேண்டும்.



ஜடா மகுடம்

இத்தகைய சடைமுடி உறுதியாகத் தலையின் மேல் நிற்பதற்கு தலையின் முன்புறத்தில் தலையை ஒட்டியவாறு மணிவடங்கள் பொருத்தப்பட்டிருக்கும். நெற்றியின் மேல் விளிம்பில் தலையைச் சுற்றி முகத்திற்குப் பொலிவூட்டுவதற்காகப் பட்டிகை ஒன்று கட்டப்படும். இப் பட்டிகையின் மேல் விளிம்பில் முகத்தின் மையத்தில் ஒரு மலரும் கண்களின் நடுப்பகுதிக்கு நேர் மேலே இரு பக்கங்களிலும் ஒவ்வொரு மலரும். அங்ஙனமே காதிற்கு முன்புறத்தில் ஒவ்வொரு மலரும் செருகப்பட்டிருக்கும். இம் மலர்கள் செருகப் பட்ட துளைகளில் சடைமுடியைப் பிணைக்கும் மணிவடங்கள் இணைக்கப்பட வேண்டும். இணைப்புகளை மறைத்தற் பொருட்டே மலர்கள் செருகப்படுகின்றன. மேலும் அவ்விணைப்புகளி லிருந்து மணிச்சரங்கள் பட்டத்தின் முன்புறத்தில் தாமங்களாகத் தொங்கி அப் பட்டிகையைச் சிறந்த அணியாகத் தோற்றுவிக்கும்.

ஜடா மகுடத்தையும், பிறவகை மகுடங்களையும் அலங்கரிக்கும் முகப்பு அணி பூரிமம் எனப்படும். இதன் முழுத் தோற்றம் 'அரசிலை' போன்றதாகும். அகன்ற இதன் அடிப்பகுதியில் இடது-வலது பக்கங்களை நோக்கிய முகமும் பிளந்த வாயும் உடைய மகரங்கள் அமைந்திருக்கும். இவ்விரு மகரங்கள் சேரும் நடுவிடத்தில் இலைக்கருக்கு அல்லது மணிவடங்கள் தொங்கி இவ்விணைப்பை



மகர பூரமம்

மறைப்பதோடல்லாமல் அவ்விடத்தை அழகுடையதாயும் செய்யும். பிளந்த மகர வாயிலிருந்தும், தும்பியிலிருந்தும் மணிவடங்கள் தொங்குவதாயும் இயற்றப்படும். பூரிமத்தின் நடுவில் நீலம், பச்சை அல்லது சிவப்புக் கல் பதிக்கப் பெறும். அதைச் சுற்றி அமையும் கருக்கு வேலைப்பாடுகள் மணியை உள்ளடக்கி அணி செய்யும். மேற்புறத்தில் சம்பங்கிப் பூக்கள் தலைகீழாகவும், செங்குத்தாகவும் தைக்கப் பெறும். ஐந்து அல்லது ஏழு பூக்கள் அரசிலை வடிவத்திற்குள்

அமையுமாறு பொருத்தப் பெறும். பூக்களின் தலையிலிருந்து அதனதன் மையத்தில் மணி வடங்கள் அலங்காரமாகத் தொங்கும்.

கிரீட மகுடத்திலும், கரண்ட மகுடத்திலும் ஜடா மகுடத்திலும் இப் பூரிமம் நெற்றிக்குத் திலகம் போல் அமைந்து அழகூட்டும். இதன் உயரம் 12 விரல் இருத்தல் வேண்டும்.

கிரீட மகுடத்தில் பூரிமத்தின் அடியிலிருக்கும் மகரவாயிலிருந்து தோரணம் போன்ற மணி வடமானது மேல் நோக்கி வளைந்து சென்று பின்புறத்திலுள்ள பூரிமத்தின் மகரவாயை அடையும்.



பத்ர பூரிமம்



பத்ர பூரிமம்



பத்ர பூரிமம்

நடுவே மணியும் அதைச் சுற்றி இலைக்கருக்குகளும் சேர்ந்தமைந்த பூரிமம் மற்றொரு வகையாகும். இது ‘பத்ர பூரிமம்’ எனப்படும். அரசர்களின் முடிகளுக்கும், வழிபடு தெய்வப் படிமங்களின் முடிகளுக்கும் மகர பூரிமம் ஏற்றதாகும். ஏனையவற்றிற்குப் பத்ர பூரிமத்தையே அமைத்தல் வேண்டும்.

### சிரச்சக்கரம்

சக்கரம் போன்ற அமைப்புடையதும், முடியின் பின்புறத்தில் பொருத்தப்படுவதுமான அணிக்கு *சிரச்சக்கரம்* என்று பெயர். சிரச்சக்கரம் 8,12,16 ஆரங்களைக் கொண்டிருக்கும். சூரியக் கதிர் போன்று மையத்திலிருந்து விரிந்து, நீண்டு வட்டத்திற்குள் அமைந்திருக்கும். இக் கதிர்கள் தாமரை இதழ்களை ஒத்தும் இருக்கும். சக்கரத்தின் மையத்தில் மூன்று அல்லது ஐந்து மணிச்சரங்கள் கொத்தாகத் தொங்கும். இத்தகைய சிரச்சக்கரம் படிமத்திற்குப் பின்னழகைச் சேர்க்கும்.

ஜடா மகுடமானது சிவன், பிரம்மன், ஞான சரஸ்வதி, முனிவர்கள் ஆகியோருக்கு உரியதாகும். இம் முடியானது தொன்மை, யோகம் முதிர்ந்த ஞானம், வயது முதிர்ச்சி, இவற்றை உணர்த்தும்.

### 2. ஜடா பாரம்

தலைக் கோலங்களில் கீழ்க்காணும் ஜடா பாரம், ஜடா மண்டலம் முதலியவை பிற சிற்ப நூல்களில் இடம் பெறாவிடினும், அவை தனித்தன்மையும், அழகும், கருத்தும் கொண்டு விளங்குபவை, தமிழகச் சிற்பப் படிமங்களில் இவை சிறப்பிக்கப்பட்டுள்ளன. நடைமுறையிலும்



ஜடா பாரம்

இருந்து வருகின்றன. எனவே இவற்றைப் பற்றிய அமைப்பு இலக்கணம் அவசியமன்றோ? தலையின் இருபுறங்களிலும் திரிசடையும், சுருள்சடையும், அடர்த்தியாகவும் அழுத்தமாகவும் தொங்கியமைந்த தலைக்கோலம் ஜடா பாரம் எனப்படும்.

தலையில் உள்ள கேசமானது சுருள் சுருளாகவும் திரிசடைகளாகவும், தலையின் பின்பக்கத்திலும்



ஜடா பாரம்

முகத்தின் இருப்பக்கங்களிலும் தொங்கியமையும். ஜடைகள் பளுவோடும் காடு போன்றும் அடர்த்தியாகத் தொங்கி அமையும்.

தலை உச்சியிலிருந்து அரை முகம், முக்கால் முகம் அல்லது ஒரு முக அளவில் உயர்ந்து இருப்பக்கங்களிலும் விரிந்து தோள்மட்டம் வரை தொங்கி இருக்கும். தலை மட்டத்தில் சடையின் மையத்தில் மகர பூரிமம் இதனை அழகுபடுத்தி அமைந்திருக்கும்.

சிவனுக்குரிய ஜடா பாரத்தில் பிறைச்சந்திரன், கங்கை ஆகிய சின்னங்களும் இணைந்து விளங்கும்.

விரிந்து தொங்கும் ஜடா பாரத்தை வேறொரு விதமாகவும் அமைக்கலாம். தலை உச்சியில்



ஜடா பாரம்

பூரிமத்தைப் பொருத்தி தலை மேல்மட்டத்திலேயே சடைகள் இருபுறங்களிலும் பிரிந்து சரிந்து தொங்குவது போலும், சடை நுனியில் சுருள்கேசங்கள் அமைய இதனைச் செய்யலாம்.

தலையின் உச்சியில், நடுவிலிருந்து இரு பக்கங்களிலும் பிரிந்து பாரமாகத் தொங்கும் சடைகளைக் கட்டியமைத்து அழகுபடுத்தியும் அமைக்கலாம்.

இது பிஷாடனர், தஷிணாமூர்த்திப் படிமங்களுக்குரிய சிறப்பான தலைக் கோலமாகும்.

### 3. ஜடா மண்டலம்

தலையின் பின்னணியில் திரிசடைகளை வட்டமாக-மண்டலமாக-அமைப்பின் அத் தலைக்கோலம் ஜடா மண்டலம் எனப்படும்.

இத் தலைக் கோலத்தை சிறப்பாகத் தஷிணாமூர்த்திப் படிமத்திலும், பிஷாடனப் படிமத்திலும் காணலாம்.

முக அகலத்தைப் போல் மூன்று மடங்கு விட்டமுடைய வட்டமாக அமைத்தல் வேண்டும். ஓரங்களில் கேசங்களைத் திரித்துச் சுருட்டிவிட்டுக் குழலாக்கி மற்ற இடங்களில் வாரிய சமதளமாகச் செய்து அதில் கங்கை, பிறைச்சந்திரன், ஊமத்தை மலர், நட்சத்திரங்கள் ஆகியவை தெளிவாகத் தெரியுமாறு அமைக்கப்படும். இந்த ஜடா மண்டலம் தலையின் பின்புறத்தில் முடியப் பெற்றிருக்கும். எனவே அலங்காரமான நாடாக்கள், முத்துச் சரங்கள் ஆகியவற்றைக் காதோரம் தெரியுமாறு அழகுபடக் காட்டிடல் வேண்டும்.



ஜடா_மண்டலம்.

மேலும் இந்த ஜடா மண்டலமானது தலைக்கு நேர்மேலே வகிடு எடுக்கப்பட்டு இருபுறமும் சரிந்து விளங்கும் நிலையிலும் காட்டப்பெறும்.

மற்றொரு அமைதியில், ஜடா மண்டலமானது, வட்ட வடிவமாகவும், வட்டத்தின் ஓரத்தில் திரிசடைகள் குழல்போல் சுருண்டு அமையவும்,



ஜடா மண்டலம்

இடையில் திரிசடைகள் நெளிந்து வளைந்து அக் குழல்களோடு இணையுமாறும் அமைக்கப்படும். பின்புறத்தில் நேர்வகிடு எடுக்கப்பட்டு இரண்டு பிரிவுகளாக்கப்பட்டு பக்கங்களில் படர்ந்து மண்டலித்து அமையும்.

மேலும், இம்மண்டலத்தை சிறிது நீண்ட வட்டமாக அமைத்து ஓரங்களில் குழற்சியான திரிசடைகளை வரிசையாக வைத்து, இடையிலுள்ள வெற்றிடத்தில் அதே போல் மூன்று வரிசையில் சுருண்ட திரித்த சடைகளை அமைத்து இதனைச் சிறப்பாக்குவதும் ஒரு வகையாகும்.

பாம்புகளையே சடைகளாகப் பின்னி தலையில் பாகையாகச் சுற்றி அமைத்த சிறப்பான தலைக்கோலம் ரிஷபாந்திக சிவமூர்த்தத்தில் காணப்படும். இது 'சர்ப்ப மௌலி' எனப்படும்.



ஜடா பந்தம்



சர்ப்ப மௌலி



ஜடா பந்தம்

### 4. ஜடா பந்தம்

சடைகளைப் பந்து போலச் சுருட்டி தலை உச்சியில் விளங்கச் செய்வது இக்கோலம். தலையுச்சியிலிருந்து ஒருமுக உயரத்தில் இது பெரும்பாலும் அமையும். முனிவர்களுக்குரிய தலைக் கோலம் இஃதாகும்.

## 5. விரிசடை

திரிசடைகள் தலையின் பின்புறத்திலிருந்து பிரிந்து தலையின் இருமருங்கிலும் வீசி விரிந்து எழிலுற அமைந்த சடையானது விரிசடை எனப்படும். இதனை ‘விகீர்ண ஜடை’ என்றும் கூறுவர். சுழன்று நடம் புரியும் நடராஜப் படிமத்தில் இதனைக் காணலாம்.

விரிசடைகள் 5,7,8 அல்லது 9 சடைகளாக இருத்தல் வேண்டும்.

சடைகள் 32 தேகாங்குலம் முதல் 61 தேகாங்குலம் வரை நீண்டிருக்கலாம். ஒவ்வொன்றும் சிறுவிரல் கனமுடையதாக இருத்தல் வேண்டும். திரிசடைகளுக்கிடையே மணிகள் கோத்த பூச்சரங்கள் விளங்கும். சடையின் நுனியில் பூக்களைச் செருகி அழகுபடுத்துதல் வேண்டும். மூன்று அல்லது ஐந்து வரிசைகளைக் கொண்ட பூச்சரங்களால் அச்சடைகளைப் பிணைத்து அலங்கரித்தல் வேண்டும்.



விரிசடை



விரிசடை

## 6. சுடர்முடி

இது தலையின் பின்புறத்தில் கேசத்தை தீச்சுடர்போல் அடுக்கடுக்காய் மேல் நோக்கி ஒரு சீராய் அமைக்கப்படும் தலைக்கோலமாகும். இஃது அரசிலைத் தோற்றத்தை ஒத்ததாய் அமைந்திருக்கும். மேலும் இது தலைக்கு இருமருங்கிலும் தலைக்கு மேலும் தெரியும் வண்ணம் அமைக்கப்படும். இவ்வகைத் தலைக்கோல அமைப்பிறகு 'அக்னி கேசம்' என்றும் பெயர் உண்டு.



சுடர் முடி

இத்தலைக் கோலத்தின் உயரம் நெற்றிப் பட்டத்திலிருந்து ஒன்று. ஒன்றேகால் அல்லது ஒன்றரை முக உயரம் உள்ளதாயும். பக்கங்களில் அரைமுகம் அளவு விரிந்ததாயும் அமைதல் வேண்டும். தலைக் கோலத்தில் நெற்றிப் பக்கத்தில் மணிவடங்கள் வட்ட வட்டமாய்த் தலையைச் சுற்றியும் அமைதல் வேண்டும். மணிவடங்களுக்கு மாறாக பட்டினால் ஆன நாடாவைப் போல வட்ட வட்டமாகத் தலையைச் சுற்றி அமைத்துக் காட்டுவதும் உண்டு. இதனைப் பூக்களால் ஆன சரத்தால் புனைவதும் உண்டு. இத்தகைய அமைப்பு தலையின் பின்புறத்தையும், விரிந்த சடையினையும் இணைத்து அத்தலைக் கோலத்திற்கு பொலிவூட்டும். இத்தகைய கோலத்தை உக்கிர சக்திகள் படிமத்திலும், சிறப்பாகக் காளி வடிவத்திலும் அமைத்தல் வழக்கு.

## 7. கேச பந்தம்

தலையுச்சி மட்டத்திலிருந்து 1 முகம் 1½ முகம் அல்லது 2 முக உயரங் கொண்டதாகவும், செங்குத் தானதாகவும், தூக்கி முடிந்த பந்தமாகவும், அமைந்த தலைக்கோலம் *கேச பந்த* மெனப்படும். இது ஜடா பந்தம் அல்லது ஜடா மகுடத்திலிருந்து வேறுப்பட்டதாகும். பெரும்பாலும் சக்திப் படிமங்களில் இக்கோலத்தைக் காணலாம்.



கேச பந்தம்

கேசத்தை வாரி மகுடம் போலத் தூக்கி நிறுத்தி மேற்பகுதியில் குழல்களான சுருண்ட கேசங்களை மகுடத்தைச் சுற்றிலும் அமையுமாறு செய்தல் ஒரு மரபு. அதற்குக் கீழே சூட்டும் மாலைகள் மூன்று அடுக்குகளாக அமையும்.

நான்கு பக்கங்களிலும் நான்கு பூரிமங்களைத் தைத்தல் வேண்டும். நெற்றியின் மேல் மட்டத்தில் மணிவடங்கள் கோக்கப் பெற்ற ரத்தினப் பட்டம், அல்லது பூக்களால் ஆன புஷ்பப் பட்டத்தைச் சூட்டி அழகுபடுத்த வேண்டும்.

இது கலைமகளுக்கும், சாவித்திரி, உமை முதலிய சக்திகளுக்கும், குழந்தைமுருகன், கண்ணன் ஆகியோர் படிமங்களுக்கு ஏற்ற தலைக்கோலம்.



கேச பந்தம்



கேச பந்தம்

## 8. சிரஸ்திரகம்

இது தலைக்குப் பாகையாகக் கருதப்படும் ஒரு வகைத் தலைக்கோலம். இதில் கேசமானது நீர்க்குமிழிகள் போல் சுருட்டப்பட்டுச் சீராக அலங்கரிக்கப்பட்டிருக்கும். தலை உச்சியில் கேசத்தாலான கொண்டையும், குமிழிகள் போன்றே அமைந்திருக்கும். இத்தகைய மகுடத்திற்கு சிரஸ்திரகம் என்று பெயர்.

இத்தலைக் கோலத்தைப் புத்தர் படிமத்தில் காணலாம்.



சிரஸ்திரகம்

## 9. குந்தளம்

இது சக்திப் படிமங்களுக்குரிய தலை முடியாகும். இது கூந்தலை அள்ளிக் கொண்டை போட்டு, தலைமேல் அழகாக அமைக்கும் தலைக் கோலமாகும். இது தலைக்கு நேராகவோ அல்லது பக்கவாட்டில் சாய்ந்தோ அழகுற அமைக்கப் பெறலாம். குழந்தைக் கண்ணனின் படிமத்திலும் ஆண்டாள் படிமத்திலும் இதனைச் சிறப்பாகக் காணலாம்.



குந்தளம்

கண்ணனின் இரு தேவியர்களான ருக்மிணி, சத்யபாமா ஆகியோரின் தலைக் கோலத்தையும் குந்தளமாகவே அமைப்பது ஒரு வழக்கு. இஃது ஆண்டாளின் குந்தளம் போல் அல்லாது காதை நோக்கிச் சிறிது சரிந்தமைந்த பாவனையில் அமையும். கண்ணனுக்கு இடது பக்கத்தில் வரும் படிமத்திற்கு அக் கொண்டை இடது பக்கம் சாய்ந்தும், வலப் பக்கப் படிமத்திற்கு வலப் பக்கம் சாய்ந்தும் சமச் சீருடையதாக அமையும்.

## 10. தம்மில்லம் (தமிழம்)

இதுவும் ஒரு வகைத் தலைக் கோலமாகும். முடியை முறுக்கிக் கொடியாக்கி வளைத்துத் தலையின் பின்னணியில் சேர்த்தமைத்து. தலை உச்சிக்கு மேல் தெரியுமாறு சேர்த்துக் கட்டி அமையும் தலைக் கோலம் *தம்மில்லமாகும்.* இது தமிழகப் பெண்களிடையே வழக்கிலிருந்து வந்த தலைக் கோலமானதால் *தமிழம்* என்று பெயர் பெற்றது. இது பின்புறத்தில் வட்ட வடிவினதாகவோ, நீண்ட வட்ட வடிவினதாகவோ அமையும். இத்தலைக் கோலத்தைச் சிறப்பாக சீதையின் படிமத்திலும். ருக்மிணி, சத்தியபாமா ஆகியோர் படிமங்களிலும் சிவனடியார்களின் துணைவியர் படிமங்களிலும் காணலாம்.



தமிழம்

இத் தலைக் கோலம் உடலின் பின்னழகைச் சிறப்பித்துக் காட்டும். இஃது அரசிகளுக்கும் ஏற்ற கொண்டையாகும். தம்மில்லத்தின் மூன்று வகையான அமைப்புகளை உற்று நோக்குக. இஃது எளிமையும் எழிலும் கொண்ட தலைக் கோலமன்றோ!



தமிழம்

இத் தலைக்கோலமானது முகவுயரத்தால் முக்கால் அல்லது அரைப் பங்கினதாக அமையும். தம்மில்லக் கொண்டையின் அகலம் முக அகலமாகும். ஒரு வளையமாகவும் அல்லது மூன்று வளையங்களாகவும் அமையும். தம்மில்லத்தில் மேற் பகுதி அகன்றும் கீழ்ப் பகுதி அவ் அளவில் ஐந்தில் மூன்று பங்கினதாகச் சுருங்கியும் அமையலாம். தம்மில்லத்திற்கு சிகாமணி என்ற உச்சி அணி இல்லை. நெற்றியில் சிரச்சூளமென்ற குழற்சியான கேசங்களை நெற்றி எல்லையில் வரிசையாக அமைத்து இக் கோலத்தில் முழுத் தோற்றத்தையும் சிறப்பிக்க வேண்டும்.



தமிழம்

## 11. அளக சூடம்

குழல், கேசத்தால் அமைக்கப்படும் ஒருவகை நெற்றியலங்காரமே என்றாலும் இது மகுட வகையாகவே படிமத் துறையில் கொள்ளப்பட்டிருக்கிறது. இஃது ஆண்களுக்கும், பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் உரிய எளித தலைக்கோலமாகும். இதில் நெற்றி விளிம்பில் வளர்ந்து இருக்கும் முடி கருவண்டினைப் போன்று சுருள் சுருளாக அமைக்கப்படும். இச்சுருள் முகத்தின் வலது புறத்தில் அமையும்போது இடமாகவும் முகத்தின் இடது புறத்தில் அமையும்போது வலமாகவும் சுழிந்து அமையும். முகத் தாமரையை வண்டுகள் சூழ்ந்த தோற்றத்தை கவிஞனைப் போன்றே சிற்பியும் கலைநயத்தோடு இயற்றுவதை இங்கு காண்க. இதற்குச் 'சிரச்சூளம்' என்ற பெயருமுண்டு.



அளக சூடம் (நெற்றியில்)
தமிழம் (புறத்தியில்)

## 12. கிரீட மகுடம்

கிரீட மகுடம் என்பது மணிமுடியாகும். இதன் தோற்றம் கண்டாமணி அல்லது பூசை மணியை ஒத்திருக்கும். இரத்தினப்பட்டம், பூரிமம் (திரண்ட மணி போன்ற) மகுடம்,



கிரீட மகுடம்

கரண்டத்தை ஒத்த பிரம்பணி, தாமரை மொட்டு ஆகிய பகுதிகளைக் கொண்டது. முக உயரத்தால் மகுட உயரமானது 1½ அல்லது 2 அல்லது 2½ பங்கினதாக அமைதல் வேண்டும். இவ்வுயரம் இரத்தினப் பட்டமும் சேர்ந்த உயரமாகும். ஆனால் மகுடத்தின் உச்சியில் அமையும் தாமரை மொட்டான சிகாமணியின் உயர அளவு இதில் அடங்காது. நான்கு பூரிமங்களோடு கூடியதாகவும் திரண்ட பகுதியில்

அலுங்கு எனப்படும் செதிள் போன்ற மலர் அணிகளை உடையதாகவும், பிரம்பணியில் சுற்றிலும் முத்துகள் அல்லது மணிகள் பதிக்கப் பெற்றதாகவும், தாமங்கள் இழைக்கப் பெற்றதாகவும் இருத்தல் வேண்டும். மகுடத்தின் பின்புறத்தில் சிரச்சக்கரமும் அமைதல் வேண்டும். இத்தகைய கிரீட மகுடம் பேரரசர்களுக்கும், ஆட்சிக் கோலத்திலுள்ள சக்திப் படிமங்களுக்கும், சுதந்திர சக்திப் படிமங்களுக்கும் ஏற்றது. சிறப்பாக கிரீட மகுடம் விஷ்ணுப் படிமத்திற்கு மிகவும் உரியதாகும்.



கிரீட மகுடம்

## 13. கரண்ட மகுடம்

தேன் கூட்டுக்குக் கரண்டம் என்று பெயர். இதன் தோற்றமுடையதே வெற்றிலைப் பாக்குப் பெட்டியிலுள்ள சுண்ணாம்புக் கரண்டம் அல்லது கரண்டிகை என்ற பெயராலானது. இது பானைக்கு அடியில் அதனை சமநிலைப்படுத்த வைக்கப்படும் புரிமணை போன்றதாகும். மேலும் இதற்கு உவமையாக மூங்கில் கணுவையும் சொல்லுவர்.



கரண்ட மகுடம்

இத்தகைய அடுக்குகள் மூன்று அல்லது ஐந்தினை மேற்பகுதியில் கொண்டதும், குழாய் போன்ற கீழ்ப்பகுதிகளோடு இணைக்கப்பட்டதும் நான்கு பூரிமங்கள் தைக்கப் பெற்றதும், சிகரத்தில் தாமரை மொட்டையொத்த சிகாமணியை உடையதும் கரண்ட மகுடமாகும். கரண்டத்தைச் சுற்றி முத்துகள் வரிசையாக அமையும். இதற்குச் சரரத்தின கிரீடம் என்ற ஒரு பெயரும் உண்டு. நெற்றியில் மணிவடங்கள் தொங்குகிற ரத்ன பட்டத்தைக் கொண்டதுமாகும். பட்டமும் மகுடமும் இணைக்கப்பட்டுமிருக்கும்.

தேவிகள், முருகன், இராமன். விநாயகன் முதலியோர் படிமங்களில் இம்மகுடத்தைச் சிறப்பாக காணலாம்.

## நெற்றிப் பட்டங்கள்

நெற்றியில் அணிவிக்கப்படும் பட்டிகைகளுக்குப் பட்டம் என்று பெயர். இது நெற்றியின் மேல் மட்டத்தில் தனித்தோ மகுடங்களோடு இணைத்தோ பட்டையாக அமைக்கப்படும் ஒரு வகை அணியானாலும், தலைக்கோலங்களோடு சேர்ந்தும் இவை அமையும். இவ்வகைப் பட்டங்கள் மூன்று வகைப்படும். கலை அழகு கொண்ட இலை, கொடி, பூ ஆகியவை எதில் பொறித்து அமைக்கப்படுகிறதோ அது பத்ரப்பட்டம் எனப்படும். இத்தகைய பட்டம் உலோகத்தால் செய்யப்பட்டிருக்கும்.

இரத்தினங்கள் பதிக்கப் பெற்றதும், மணிச் சரங்கள் பொருத்தப்பட்டதும், பூச்சித்திர வேலைப்பாடுகள் பொறிக்கப் பெற்றதும், பொன்னாலானதுமான பட்டிகை இரத்தினப்பட்டம் என்று சொல்லப்படும்.

பூமாலையை நெற்றியில் சூட்டுவதுமுண்டு. இது புஷ்பப்பட்டம் எனப்படும். வெற்றிச் சின்னமாக நெற்றியை ஒட்டிக் கட்டப்படும் மாலை தலைமாலை என்றும் சிகலி என்றும் சொல்லப்படும். முருகன் படிமத்தில் இதனைக் காணலாம்.



கரண்ட மகுடம்

# 12

# அணிகலன்கள்



படிமக் கலைத்துறையில் பல்வேறு வகையான அணிகலன்கள் புழங்குகின்றன. பெரும்பாலும் அவ் வணிகள் ஆண் வடிவங்களுக்கும், பெண் வடிவங்களுக்கும் பொதுவானவையே. ஒரு சில அணிகளே பால் வேறுபாடுடையன. மேலும் படிம வகைகளுக்கும், காப்பிய பாத்திரங்களுக்கும் ஏற்ற சிறப்பான அணிகளும் உள.

அணிகள் உடலை ஒட்டியவாறும், உடலின் மேடு பள்ளங்கள் துலங்குமாறும், உடல் திரட்சிக்கு ஏற்றவாறும், வடிவத்தோடு இசைந்தவாறும் அமைதல் வேண்டும். சுருங்கக் கூறின் உடற்கட்டுக் கோப்பினை இவ்வணிகள் சிறப்பித்துக் காட்டுதல் வேண்டும்.

அணிகலன்கள் இயல்பாகத் தொங்கும்போது அவை கொள்ளும் இயல்பான அமைதியினை நன்குணர்ந்து அவற்றை வலியுறுத்தியும், வடிவத்திற்கு அழகூட்டுமாறும் அமைத்தல் வேண்டும். எடுத்துக்காட்டாக, முத்து மாலையானது கழுத்திலிருந்து நேரே தொங்கும் தன்மையுடையது; விரைப்பற்றது. இத்தகைய மாலையை மார்பில் அணிவிக்கும்போது ஏற்கெனவே அணியப்பட்டுள்ள கழுத்தணிகளின் எழிலை மறைக்காமலும், அதே நேரத்தில் மாலை தன்னைப் புலப்படுத்திக் கொண்டிருக்குமாறும் அமைத்தல் வேண்டும்.

இஃது எவ்வாறெனக் காண்போம். சவடி, சரப்பளி போன்ற கழுத்தணிகளை அணிவித்து அதன் மீது மாலையைச் சூட்டுவது வழக்கு. அங்ஙனம் செய்யும் போது மேற்சொன்ன சவடி, சரப்பளிகளின் வளைவான அமைதிக்கேற்றவாறு மாலையை அகட்டி, அணிகளின் வெளிப்புறத்தில் அமையச் செய்து, எஞ்சிய நுனிப்பகுதியை ஒடுக்கி, அதன் இயல்பான தொங்கும் கோலத்தில் அமைத்தல் இலக்கணமாம்.

அங்ஙனமே, தொடையில் அணியும் குறங்கு செறியும், மார்பில் அணியும் பூனூலும், காலில் அணியும் காற்சரியும், அந்தந்த உறுப்புகளுக்குகேற்றவாறு வளைந்தமைந்து உறுப்புகளுக்கு அழகூட்டுவதோடு சுயத் தன்மையையும் உணர்த்திக் கொண்டிருக்க வேண்டும்.

வண்ண ஓவியங்களிலும், வண்ணம் தீட்டப்பட்ட சுதை, மரச்சிற்பங்களிலும், . அணிகலன்கள் அவ்வவற்றுக்குரிய நிறங்களோடு அமைவதால் கண்களுக்குத் தெளிவாகத் தெரியும். ஆனால் கல், தாமிரம், வண்ணம் பூசிடாத மரச்சிற்பங்களில் உருவமும் அணிகளும் ஒரே நிறத்தனவாகையால் அணிகளைத் துலக்கமாகக் காட்ட, தகுந்த அளவு அவற்றைப் புடைப்புடையதாகச் செதுக்கியமைத்தல் வேண்டும். பொதுவாக, அணிகளின் புடைப்பு ஒரு யவை முதல் மூன்று யவை அளவு வரை இருக்கலாம்.

தலை அணி வகையில் மகுடங்களும் நெற்றிப் பட்டங்களும் இடம் பெறுவதுண்டு. என்றாலும் அதனைத் தனியாகத் தொகுத்து முன்பே விளக்கி விட்டபடியால் இங்கு மீண்டும் விவரிக்கவில்லை.

### தலை அணிகள்

தொய்யகம், பூரப்பாளை, புல்லகம் என்பவை தலை அணிகளாகும். இவ் வணிகளைச் சுமங்கலி படிமங்களில் காணலாம். இவை மனித படிமங்களுக்கே உரியவை. விளக்கு நாச்சியார், நாட்டியப் பெண் ஆகியோர் படிமங்களில் இதனை சிறப்பாக அமைப்பது வழக்கு.

## தொய்யகம்–பூரப்பாளை

தொய்யகம் என்பது, பெண்களின் தலையில் நேர் வகிட்டின் மீது நெற்றியின் எல்லையினின்று தொங்கும் அரசிலை வடிவாகவும், சித்திர வேலைப் பாடுகளுடைய பதக்கம் போன்றும், நடுவில் சிவப்பு மணி பதிக்கப்பட்டதாகவும் இருக்கும். சித்திர வேலைப்பாடமைந்த விளிம்பில் முத்துகள் வரிசையாக இணைக்கப்பட்டு அமையும். இத்தகைய நெற்றி அணி சங்கிலித் தொடர் ஒன்றால் இணைக்கப்பட்டு, அச்சங்கிலியின் மறு முனை தலைக் கோலத்தோடு பொருத்தப்பட்டிருக்கும். சங்கிலித் தொடரின் இணைப்புகள் தென்னம்பாளையைப் போன்றும், பூரானைப் போன்றும், ஒன்றிலிருந்து மற்றொன்று புறப்படுவதுபோல அமைந்து இருக்கும். மேலும், இது நெற்றியின் விளிம்பினைத் தொட்டுக் காதுவரை தொடர்ந்து செல்லும். இச் சங்கிலித் தொடருக்குப் *பூரப்பாளை* என்று பெயர். இதன் புறத்தோற்றம் பூரானையும், பாளையையும் ஒத்திருப்பதால் இப்பெயர் பெற்றது. நேர் வகிட்டில் தொங்கும் நெற்றிப் பதக்கமாகிற இவ் வணிக்குத் *தொய்யகம்* என்று பெயர். *சீதேவி* என்ற வேறொரு பெயருமுண்டு. பூரப்பாளை, தொய்யகத்தின் ஒரு பகுதியே.

## புல்லகம்

நேர் வகிட்டின் இருமருங்கிலும் தலையில் அணியாகச் சூட்டப்படும் சுட்டிகள் *புல்லகம்* எனப்படும். இவை பிறைச் சந்திரன் வடிவத்திலும், சூரியன் வடிவத்திலும் மணிகள் பதிக்கப்பெற்றும் விளங்கும். இவற்றை *சந்திரப் பிரபை*, *சூரியப் பிரபை* என்று கூறுவது வழக்கு. இடப் புறத்தில் பிறையும், வலப் புறத்தில் சூரியனும் அமையும். இச் சுட்டிகளைப் பல்லி என்றும் கூறுவர். வலச் சுட்டியைத் *தென் பல்லி* என்றும், இடச்சுட்டியை *வட பல்லி* என்றும் சொல்வது வழக்கு. பொதுவாக, இவ்விரண்டு பல்லிகளும் ஒரு சேரப் *புல்லகம்* என்று பெயர் பெறும். 'புல்' என்பது ஒட்டுதல் என்று பொருள்படும், ஆதலின் இப்பெயர் பெற்றது.

சடையைக் கருநாகம் போன்று நீட்டித் தொங்க விட்ட நிலையிலும், சடையைச் சுருட்டித் தம்மில்லம் போன்று கொண்டையாக அமைத்துக் கொண்ட நிலையிலும், மேலும் இத்தலைக் கோலத்திற்கு அணியாகச் *சடைத்திருகு* என்ற அணி சூட்டப்படுகிறது. புல்லக இனத்தைச் சேர்ந்தமையால் திருகுபுல்லை என்றும் சடை வில்லை என்றும் இதற்கு வேறு பெயர்களுமுண்டு. இது வட்டமாகவும், இரத்தினக் கற்கள் பதிக்கப்பட்டதாகவும், திருகுடன் கூடியதாகவும் அமையும்.

## சூளாமணி (சூடாமணி)

வட்ட வடிவமானதும், குங்குமச் சிமிழின் மூடி போன்றதும் தாமரைத் தாமங்களையுடைதும், இரத்தினக்கற்கள் பதிக்கப் பெற்றதும், குமிழின் முனையிலிருந்து மணிவடங்கள் கொத்தாகத் தொங்குவதுமான அணியே *சூளாமணி* என்றும் *சூடாமணி* என்றும், *சூடை* என்றும் சொல்லப்படுவதாகும்.

இவ்வணி கோணலான தலைக் கொண்டையில் பொருத்தப் பெற்று தொங்கியசைந்து முகத்திற்கும், அசைவுக்கும் அழகூட்டும்.

குழந்தைக் கண்ணன் படிமத்திலும், ஆண்டாள் படிமத்திலும் இதனைச் சிறப்பாகக் காணலாம்.

### காதணிகள்

காதுகளில் பூட்டப்படும் அணிகள் பல. அவற்றில் குதம்பையும், குழையும் முக்கியமானவை.

## குதம்பை

வளர்த்துத் தொங்கும் காதின் துளையில் நுழைத்து, காதுக்கு அணியாகச் செய்யும் பனையோலைச் சுருளே *குதம்பை* எனப்படும். இதற்குப் *பத்ர குண்டலம்* என்றும் பெயர் உண்டு. பனை ஓலைக்கு மாற்றாகப் பொன்னோலையினைச் செருகிக் கொள்வதுமுண்டு. சுருட்டியமைத்த இக் குதம்பையின் இடைவெளியில் மலர்ந்த நீலோற்பலத்தைச் செருகி மேலும் அழகுபடுத்துவதால் இது *நீலக்குதம்பை* என்று பெயர் பெறும். நீலக்குதம்பையின் நெற்றிப் பக்கத்தில் அதன் விளிம்பில் முத்துக்களை வரிசையாகப் பதித்து அமைப்பதும் உண்டு.

குதம்பையான பத்ர குண்டலத்தின் விட்டம் 3,4,5 விரல் அளவும் சுருளின் கனம் ஒரு யவை அளவும் இருத்தல் வேண்டும். சுருளானது வெள்ளை அல்லது சிவப்பு நிறமாக இருக்கலாம்.



தொய்யகம், புல்லகம், கடிப்பு

## கடிப்பு

வட்டவடிவமானதும், தட்டையானதும், இரத்தினங்கள் பதிக்கப் பெற்றதுமான காதணி அமைப்பைக் *கடிப்பு* என்று கூறுவர். இது குதம்பையின் வளர்ச்சி பெற்ற அமைப்பாகும். இதுவே தோடாகும்.

## குழை

குழை எனப்படும் குண்டலங்கள் *மகர குண்டலம்* என்றும், *சிம்ம குண்டலம்* என்றும், *வியாழ குண்டலம்* என்றும் மூன்று வகைப்படும். மகர மீனை வளைவாக அமைத்துக் குழையாக அணிவது மகர குண்டலம் எனப்படும். இஃது 2,4 அல்லது 5 விரல் அகலமிருத்தல் வேண்டும். வியாழமாகிய பாம்பினை வளைத்துக் குழையாக்கியது வியாழ குண்டலம் எனப்படும். காதுத் துளையில் வளையம் ஒன்றினை வைத்து அடைத்து அவ் வளையத்தின் மையத்திலிருந்து சிம்மம் வெளிவருவது போல் அமைக்கப்படும் குண்டலம் சிம்ம குண்டலம் என்று சொல்லப்படும்.

உருண்டை வடிவமானதும், வளையம் பொருத்தப்பட்டதுமான அணி விருத்த குண்டலம் எனப்படும். இதன் அகலம் 18 யவையும் கனம் 4 யவையுமாக இருத்தல் வேண்டும். இது வாழைப்பூ, தாமரை மொட்டு ஆகிய வடிவில் இருக்கும். உருத்திராட்சத்தையும் காதில் குண்டலமாக அமைக்கலாம். இவை எளிமையான காதணிகள் ஆகும். உலோகத்தால் ஆன குண்டலத்தை அனுமன் படிமத்திலும், உருத்திராட்ச குண்டலத்தை (6 முகங்கொண்டது) முருகன் காதிலும் காணலாம்.

காதில் தாடங்கம் என்ற தோடு. பெண் வடிவங்களின் காதணியாகும். நவரத்தினங்கள் பதிக்கப் பெற்ற, வட்ட வடிவமான, காதணி இஃதாகும்.

### *கழுத்தணிகள்*

கழுத்தில் அணியும் அணிகளில் கண்டிகை, சவடி, சரப்பளி, மணியாரம், முத்தாரம் ஆகியவை முக்கியமானவை.

### *கண்டிகை*

கழுத்தை ஒட்டியவாறு பருமணி ஒன்றும், இருமருங்கிலும் சிறுமணிகள் 2,4,6 கொண்ட முறுக்கு நூலாலாகிய சரட்டிற்குக் *கண்டிகை* என்று பெயர். பருமணியானது நீண்டு கடுக்காய் போலும் இருக்கும். பருமணி அடிக்கழுத்திலுள்ள தொண்டைக் குழியில் அமைய சிறுமணிகள் அச்சரட்டின் இரு மருங்கிலும் அமைந்து விளங்கும். இதனைச் சரட்டுக்கவடு என்று கூறுவர். உட்கழுத்தில் இஃது அணியப் பெறுவதால் *உபக்கிரீவம்* எனவும் கூறப்படும்.



கண்டிகை, சரப்பளி, அரும்புச்சரம், சவடி

இதுவே, பெண் படிமங்களில் முறுக்கிய நூலாகவும் அமைக்கப்படும்.

## சவடி

கண்டிகை அல்லது சரப்பளியை ஒட்டியவாறு கழுத்தைச் சுற்றி தட்டையாக விளங்கும் அணி *சவடி* எனப்படும். மெல்லிய தங்கக் கம்பிகளால்

நெருக்கமாகப் பின்னப்பட்டதாயும், அடிப் பக்கம் தட்டையாகவும், மேற்பக்கம் நடுவில் மேடுடையதாகவும் இச்சவடி அமையும். இதன் நடுவில் பூக்கருக்கு வேலைகள் அமைந்த முகப்புப் பொருத்தப்பட்டிருக்கும். பூக்கருக்குகளை இச் சவடியில் விட்டுவிட்டும் இணைத்தும் அழகுபடுத்தப்படும்.

## சரப்பளி

கழுத்தணிகளில் பெரியதும், அகன்றதும், சிறப்பானதுமான அணி இஃதாகும். மூன்று அல்லது நான்கு விரல் அகலம் கொண்டு இவ்வணி அணையும். பொன்னாலான இவ்வணியில் நவமணிகள் பதிக்கப்பட்டு இருக்கும். மேற் புறத்திலும், அடிப்புறத்திலும் சிறப்புச் சித்திர வேலைகள் நிறைய அமைந்து சிறப்பிக்கும். மேல் வரிசையில் முத்துவடம் இதனை ஒட்டி அமையும். கீழ்ப் புறத்தில் வரிசையாக அரசிலை வடிவங்கள் அமையும். இத்தகைய சரப்பளியைப் பெரும்பாலும் பெண் வடிவங்களிலே காணலாம்.



கண்டிகை, சரப்பளி, சவடி

நடுவில் மணிகள் பதிக்கப் பெற்றதாயும், மேலும் கீழும் இதழ்களோடு கூடியதாயும், இரண்டு விரல் அகலமும், ஆறு விரல் நீளமுள்ள முகப்பை உடையதாயும், பொன் வடத்தினால் அல்லது கயிற்றால் இழுத்துப் பிணைக்கப்பட்டதாயும் இதனை அமைத்தல் வழக்கு. பெரும்பாலும் ஆண் படிமங்களுக்குச் சிறப்பான அணியாகும். இதனை *கிரைவேய ஹாரம்* என்றும் சொல்வதுண்டு.

## புலிப்பல் தாலி

நூலால் அல்லது பொன்னாலான வடத்தில் ஒன்று அல்லது இரண்டு புலிப் பற்களைக்கட்டி கழுத்தில் அணியாகவும் சூடுதல் வழக்கு. வீரர்களின் கழுத்திலும் வீர பாவத்தில் உள்ள படிமங்களிலும் காணலாம்.



புலிப்பற்றாலி

## அரும்புச்சரம்

ஒரு சரட்டில் முல்லை அரும்புகளைக் கோவையாக அமைத்துக் கழுத்தில் அணிவது அரும்புச்சரம் எனப்படும். இது கண்டசரம் என்றும் சொல்லப்படும். அரும்புகளை நீண்டனவாகவும், நீளம் குறைந்தனவாகவும் செய்யலாம். இது சரப்பளிக்கு மாற்றாக, சரப்பளி அணியும் இடத்தில் அமையும்.




1. கண்டிகை 2. சரப்பளி (கிரைவேய ஹாரம்) 3. பூணூல் 4. வாகுமாலை
5. சரிந்த தோள்மீது — தோள்மாலை

## மணியாரம்

இது கழுத்தைச் சுற்றி நெஞ்சுக்குழி வரை தொங்கும் மணிமாலை. மூன்று அல்லது ஐந்து வடங்களைக் கொண்டிருப்பின் முறையே திரிசரி, *பஞ்சசரி* என்று சொல்லப்படும். ஒரே வடமாயின் *ஏகாவளி* என்று சொல்லப்படும்.

## முத்தாரம்

மூன்று, ஐந்து, ஏழு முத்துச் சரங்களால் ஆன மாலைக்கு *முத்தாரம்* என்று பெயர். இது கழுத்திலிருந்து கொப்பூழ் வரை தொங்கும்.

விஷ்ணுமூர்த்தியின் கழுத்தில் அணிவிக்கப்படும் மாலை கௌஸ்துப மணி மாலை என்று சொல்லப்படும். இது மூன்று, ஐந்து அல்லது ஏழு சரங்களைக் கொண்டது. மையத்தில் கௌஸ்துபம் என்ற மணியைக் கொண்டு திகழும். கௌஸ்துப மணியென்பது பொன்னாலான பதக்கத்தின் நடுவில் பதிக்கப்படும் மாணிக்கக் கல் ஆகும். இதனைத் திருப்பாற்கடலிலிருந்து பெற்றதென்பர். இப் பதக்கத்தைச் சுற்றிலும் பொன்னாலான இதழ்களில் புஷ்பராகக் கல் பதிக்கப்பட்டிருக்கும். இலை, கொடி, கருக்கு வினை முற்றிய தலைப்பும், மருங்கும் அமைந்து விளங்கும்.

*வனமாலை, வைஜயந்தி* என்ற இருவகை மாலைகள் விஷ்ணுவின் கழுத்தையும், மார்பையும் அலங்கரிக்கும் ஆரங்களாகும்.

வனமாலையானது பல பருவங்களில் பூக்கும் பூக்களாலானது. அப்பூக்கள் மாலையாகத் தொடுக்கப் பெற்று, கதம்பப் பூப்பந்தமும் நடுவில் குச்சமாகப் பொருத்தப் பெற்றுத் தொங்கும். இத்தகைய மாலை கழுத்திலிருந்து முழங்கால் வரை தொங்கும்.

கொத்து ஒன்றுக்கு ஐந்து மணிகள் வீதம் பலமணிக் கொத்துகளால் ஆன மணி மாலையே வைஜயந்தி எனப்படும். முத்து, மாணிக்கம், மரகதம், நீலம், வைரம் ஆகிய மணிகள் சேர்ந்திருக்கும் என்று ஒரு சாராரும், நீலம், முத்து, கௌஸ்துபம், கோமேதகம், புஷ்பராகம் ஆகிய ஐந்து மணிகளே அவை என்று மற்றொரு சாராரும் கூறுகிறார்கள். நிலத்தை நீலமும், நீரை முத்தும், நெருப்பை கௌஸ்துபமும், காற்றை கோமேதகமும், ஆகாயத்தை புஷ்பராகமும் குறிப்பிடும் என்று விஷ்ணு ரகஸ்யம் என்ற நூல் பேசுகின்றது. பஞ்ச பூதங்களைத் தன் மேனியில் மணியாரமாகக் கொண்டு விஷ்ணு விளங்குகிறார் என்ற தத்துவக் குறிப்பினை இஃது உணர்த்தும்.

கழுத்தினடியிலிருந்து, சரிந்த தோளின் மீது பல்வகைப் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட மாலைகள், படிமங்களில் சூட்டப்பெறும். அம் மாலைக்கு ஸ்கந்த மாலை என்று பெயர். தோள் மாலை என்பது இதன் பொருள்.

திரண்ட புயங்களைச் சுற்றித் தொங்கும் மாலை *வாகு மாலை* என்று சொல்லப்படும். இதனைப் பல பூச்சித்திர வேலைப்பாடு அமைந்ததாகவும், முத்துகள் பதிக்கப் பெற்றதாகவும் அமைக்கலாம்.

## வீரச்சங்கிலி

கழுத்தைச் சுற்றியும், மார்பணிகளைச் சுற்றியும் உடலின் ஒரு மூலையிலிருந்து எதிர் மூலைக்குக் குறுக்கே சென்று முதுகிலும் அங்ஙனமே அமைந்த இரு சங்கிலிகளின் பெயர் *வீரச் சங்கிலி* ஆகும். இச்சங்கிலி ஸ்தனத்திலிருந்து 8 விரல் அளவு கீழே தொங்கிச் செல்லும் இதற்குச் *சன்ன வீரம்* என்றும் பெயர் உண்டு.

இச் சங்கிலிகள் முன்பக்கத்திலும் பின் பக்கத்திலும் ஒன்றையொன்று குறுக்கிட்டுச் செல்லுமிடத்தில் பிணையுண்டும் அமையும். அவ்விடத்திலிருந்து அரசிலை போன்ற பதக்க அணியொன்று தொங்கும். அதற்குத் *தூக்கம்* என்று



சன்ன வீரம்

பெயர். இதற்கு மாற்றாகப் பூங்கொத்து தொங்குமாறும் செய்யப்படும்.

இவ் 'வீரச்சங்கிலி' வீரர்களின் அணியாகும். வீரனாகிய முருகனுக்கு உகந்த அணியுமாகும். ஆற்றலின் வடிவமான சக்திப் படிமங்களிலும் இஃது அமையும்.



வீரச்சங்கிலி



வீரச்சங்கிலி

முப்பிரிகளையுடைய பூணூலிலிருந்து நான்காவது நூல் ஒன்றை வலது மார்பின் கீழ்ப்புறத்தில் தொங்கச் சுற்றி, முதுகுப்புறம் சென்று பூணூலுடன் சேரும். இதற்கு ஸ்தன சூத்திரம் என்று பெயர். முத்துச் சரமாகவோ அல்லது நூலாகவோ இதனை அமைக்கலாம். நூலின் பருமன் ஒரு யவை அளவாகும்.

இதனை ஆண், பெண் இருபாலாருக்கும் அணிவிக்கலாம்.



சன்னவீரத்தின் பின் அமைதி, தூக்கம்

## பின்தாலி

சிற்பப் படிமங்களில் புறங்கழுத்தின் அடியிலிருந்து மார்பில் அணிந்த அணிகளை, புறத்தே கட்டியிணைத்த சங்கிலித் தொடரிலிருந்து அரசிலை போன்ற ஒரு பதக்கம் தொங்கும். இதற்கு *பின்தாலி* என்று பெயர். இஃது ஆரங்களைப் பின்புறத்தில் முடிச்சிட்டபின் தொங்கும் பகுதியாகும்.

### மார்பணிகள்

## பூணூல்

இடது தோளிலிருந்து மார்பு வழியாகக் கொப்பூழ் மட்டத்திற்குக் கீழே 2 விரல் அளவில் தொங்கி அங்கிருந்து மேலும் தொடர்ந்து முதுகந்தண்டைக் கடந்து மீண்டும் இடது தோளில் வந்து இணையும்




1. பூணூல் 2. உதர பந்தம்

முப்புரி நூலுக்குப் *பூணூல்* என்று பெயர். இதன் கனம் 1/8 யவை. வெறும் நூலாகவோ அல்லது நூலில் முத்துகளைக் கோத்து, முத்துச்சரமாகவோ இதனை அமைக்கலாம்.



பூணூலில் பிரம்ம முடிச்சு

நூல்கள் இணையுமிடத்தில் முடிச்சினை அமைத்தல் வேண்டும். இதனைப் *பிரம்ம முடிச்சு* என்பர். முடிச்சு அமையுமிடத்தில் பூச்சித்திர வேலைப்பாடுகளைக் கொண்ட முகப்புப் போன்ற அணியை அமைத்தல் வேண்டும்.

## உரஸ் சூத்திரம்

பூணூலிலிருந்து வலதுபுறமாகச் செல்லும் நூலை ஸ்தன சூத்திரமென்று கண்டோம். அங்ஙனமே பூணூலிலிருந்து தனித்த ஒரு நூல் நேரே உடலை ஒட்டி இடுப்புவரை தொங்கும். இஃது *உரஸ் சூத்திரம்* அல்லது மார்பு நூல் என்று சொல்லப்படும். ‘விஷ்ணு, சிவன், பிரமன் ஆகியோர் படிமத்தில் இதனை அமைத்தல் மரபாகும்.




1. பூணூல் 2. உரஸ் சூத்திரம் 3. ஸ்தன சூத்திரம்

## உத்தரீயம்

உத்தரீயம் என்பது மேலாடை ஆகும். இஃது இடது தோளிலிருந்து இடுப்புவரை தொங்கி முதுகுப் பக்கத்தில் தொடர்ந்து வந்தடையும். இதற்கு மாற்றாக உத்தரீயம் போல முத்துவடங்களே அமைந்திருப்பதைச் சிற்பங்களில் காணலாம். இது முத்தினாலான உத்தரீயம் ஆனதால் *மௌத்திகோத்தரீயம்* எனப்படும்.

## உதர பந்தம்

இவ் வணி உடலைச் சுற்றிக் கட்டப்படும் அலங்காரக் கட்டாகும். இஃது இரு விரலகலம் கொண்டு பட்டிகை போன்று நடு உடலைச்சுற்றி

அமையும். இப் பட்டிகையின் விளிம்புகளில் முத்துகள் இணைக்கப் பெற்று, நடுவிடத்தில் பூச்சித்திர வேலைப்பாடுகள் அமையும். இதன் மையத்தில் பருமணி பதிக்கப்படும். மேலும் மணிச்சரங்கள் தாமங்களாகவும் தொங்கும். உதரபந்தமென்ற இவ்வுடற்கட்டு ஆண் படிமங்களுக்கே உரியது.




1. ஸ்தன சூத்திரம் 2. பூணூல்
3. உரஸ் சூத்திரம் 4. உதர பந்தம்

## கை அணிகள்

தோள்வளையென்பது மேற் கையின் நடுவிடத்தில் அணியப்படும் அணியாகும். மேற்புயத்தின் மையத்தில் கத்திரிபோல் ஒன்றையொன்று குறுக்கிட்டுச் செல்லும் முத்துவடம் எளிமையும் தொன்மையும் கொண்டதாகும். இது கம்பியாகவும் அமையும். பிற்காலத்தில் இது வங்கியெனவும் பெயர் பெறுவதாயிற்று.

தோள்வளையினை இரண்டு வகைத் தோற்றத்தில் சிறப்பாகச் செய்தல் வழக்கு.

மகுடத்தின் முகப்பு அணியான மகர பூரிமத்தை 1,2,3 சுற்றுடைய வளையோடு இணைத்துத் தோள் வளையாக அமைப்பது ஒரு முறை. வளையில் முத்துகள் பதிக்கப்படும். மகரச் சந்தியிலிருந்து வளைமீதும் அதன் கீழும் மணிச்சரங்கள் தாமமாகத் தொங்கவிடப்படும். பூரிமத்தின் அகலம், 3,4 அல்லது 5 விரல் ஆகும்.

தோள்வளையே கேயூரம் எனப்படுகிறது. இங்கு கொடுக்கப்பட்டுள்ள தோள்வளையின் பல்வேறு அமைப்புகளைச் சிற்பிகள் உற்று நோக்கித் தங்களுடைய படைப்புகளில் அமைத்திடலாம்.

பத்ர பூரிமத்தை முகப்பணியாகக் கொண்டு விளங்கும் தோள்வளையைக் கீழே காண்க. மேற்புறத்தில் முத்துமாலை வளைந்து தொங்கி தோளின் பின் புறத்தில் இணைகிறது. இது பெண் படிமங்களுக்கேற்ற வளையாகும்.



தோள்வளை

மகரப் பூரிமத்தை முகப்பாகக் கொண்ட அழகிய தோள்வளையில் தாமங்கள் அதிலிருந்து தொங்கி அசைந்து மேலும் தோளுக்கு அழகு சேர்க்கும்.



தோள்வளை

பத்ர பூரிமத்தை முகப்பாகக் கொண்டு ஒற்றைத் தாமத்தையுடைய மற்றொரு வகைத் தோள் வளையைக் கீழே காண்க.



தோள் வளை

மகர பூரிமத்தை முகப்பாகக் கொண்டு முத்து மாலையும் தாமங்களும் இணைந்து எழில் மிகு தோற்றம் தரும் தோள்வளை இஃதாம்.



தோள் வளை

மகர பூரிமத்துக்கு மாற்றாக, கலைத் தன்மை உடைய இலைப் பூரிமத்தை இணைத்து மற்றவற்றை முன் சொன்னது போல் அமைத்துச் செய்தல் மற்றொரு வகை.

இலைக் கருக்கணியை முகப்பாகக் கொண்டு அமைக்கப்படும் அழகிய தோள் வளையைக் கீழே காண்க.



தோள் வளை

பத்ர'பூரிம முகப்பும் தொங்கு தாமங்களையும் கொண்டு கடக வளையோடு தரும் அழகிய தோற்றத்தை இங்கே காணலாம்.



தோள் வளை

இலைக் கருக்கணி முகப்புடைய தோள் வளைகளின் வேறுவகைத் தோற்றங்களை இங்கே காண்க. தோள் மாலைக்கு அருகே அமைத்த வாகு மாலைகளின் சிறப்பமைதிகளையும் நோக்குக.



தோள் வளை முழங்கையில் — கடக வளை

## கடக வளை

இது முழங்கையில் அணியப்படும் கை வளையாகும். இது மூன்று யவை கனமுள்ள கம்பி போன்ற வளையலாகும். இக் கம்பியில் மூன்று அல்லது ஐந்து மணிகள் கோர்க்கப்பட்டிருக்கும். அல்லது கொடிக் கருக்கு வேலைப்பாடுகள் அமைந்த முகப்பும், குஞ்சமும் கொண்டு விளங்கும். ஆண்களுக்கும், பெண்களுக்கும் இது பொதுவான அணியாகும். இதனை இரண்டு கைகளிலும் அணியலாம்.

அருகிலுள்ள சித்திரங்களிலிருந்து கடக வளையின் பல்வேறு அமைப்புகளைப் பார்த்துத் தெளிக. தோள் வளையும் கடக வளையும் தோளுக்கும் முழங்கைக்கும் எவ்வளவு அழகு சேர்க்கின்றன வென்பதை உற்றுநோக்கிப் பின்பற்றுக.




1. தோள் மாலை 2. தோள் வளை 3. கடக வளை

## கை வளை

மணிக்கட்டுக்கு அருகில் அணியப்படுவது கை வளைகள் ஆகும். இவை 3,5,7,9,11 என அடுக்கடுக்காய் அணியப்படும். சிற்ப வடிவங்களில் வளைகளை ஒரே வகையாகவும் பல வகைகளாகவும் அணிவித்தல் வழக்கு. கை வளையின் கனம் இரண்டு அல்லது மூன்று யவை அளவும், அதன் அகலம் கனத்தைப் போல் இரு மடங்கும் இருத்தல் வேண்டும். சிறு வளையல்களை இரட்டையாக அணிதல் வேண்டும். ஒற்றையாக அணியப்படும வளையல் சிறு விரல் கனம் இருத்தல் வேண்டும்.

சிறப்பாக, கை வளைகள் ஐந்து வகைப்படும். அவை முறையே சூடகம், செம்பொற் கைவளை, நவமணி வளை, சங்கு வளை, பவள வளை ஆகும். இவற்றுக்கெல்லாம் பொதுப் பெயர் கடகம் அல்லது வளை ஆகும்.

### (அ) சூடகம்

இரண்டு விரல் அகலம் கொண்ட தங்கப் பட்டிகை மீது இலை, கொடி, கருக்கு வேலைப்பாடுகள் அமைந்தும் இரண்டு ஓரங்களிலும் முத்துகளை வரிசையாகப் பொருத்தியும் கருக்கு வேலைப்பாடுகளுக்கு இடையே வைரக் கற்களைப் பதித்தும் அமைந்த கைவளை சூடகம் எனப்படும். இது கைவலைகளில் பெருமதிப்பும், சிறப்பும் கொண்டது. இது சிற்பப் படிமங்களுக்குக்கேற்றதாம்.



சூடகம்

### (ஆ) செம்பொற் கை வளை

செம்பொன்னால் செய்யப்பட்ட கைவளை இஃதாகும்.

### (இ) நவமணி வளை

நவமணிகள் பதிக்கப் பெற்ற கைவளை இஃதாகும்.

### (ஈ) சங்கு வளை

சங்கை வளையமாக அறுத்து வளையல்களாக அணிவது சங்குவளை ஆகும். வளை என்ற சொல்லே சங்கிலிருந்து பிறந்ததுதான்.

### (உ) பவள வளை

பவளக் கொடியை அதன் கனத்தைப் போல் இரண்டு பங்கு நீளமுடையதாக நறுக்கி, கம்பியில் கோத்துக் கைவளையாக அணிவதுண்டு அல்லது பவளக் கொடியையே வளையாக வளைத்தும் அணிதலுண்டு.

### பரியகம்

வளையல்களின் கீழே உள்ள சூடகத்திலிருந்து தொடங்கி, சங்கிலி போன்ற மணிச்சரம் நடுவில் உள்ள பரியகத்தைப் பொருந்தி, அங்கிருந்து மூன்று சரமாகப் பிரிந்து சுட்டு விரல், அணிவிரல், சிறுவிரல் ஆகியவற்றிலுள்ள மோதிரங்கள் மூன்றையும் பிணைத்துக் கொண்டு விளங்குவது இது. புறங்கையில் 2 விரல் அகலத்தில் பூச்சித்திர வேலைப்பாடுகள் அமைந்ததும் பலவித மணிகள் பதிக்கப் பெற்றதுமான கொடி போன்ற ஒன்றே பரியகம் எனப்படும். அதைப் பிணைத்து நிற்கும் மணிச்சரம் அல்லது சங்கிலி, கைச்சரி எனப்படும். இதனை நாட்டியப் பெண்களின் புறங்கைகளில் காணலாம்.

## கைவிரல் அணிகள்

மோதிரங்களில் பூச்சித்திர வேலைப்பாடு பொறிக்கப்பட்ட மோதிரங்களும், மணிகள் பதிக்கப் பெற்ற மோதிரங்களும் சிற்பப் படிமங்களின் நடுவிரல் தவிர்த்த மற்ற கைவிரல்களில் அணியப்படும். இவ் வகை மோதிரங்களில் வாளைப் பகுவாய் மோதிரம் என்பது சிறப்புடையதாகும். வாய் பிளந்தவாறுள்ள வாளை மீனை உணர்த்தும் முடக்கு மோதிரமாகும். இஃது அணிவிரலில் அணியப்படும். இரத்தினக் கற்கள் பதிக்கப் பெற்ற மோதிரம் அடுக்காழி என்று சொல்லப்படும். மோதிரங்களின் கனம் ஒரு யவை அளவாகும்.

## இடை–தொடை அணிகள்

ஆண் வடிவங்களிலும், பெண் வடிவங்களிலும் இடுப்பில் பல அழகிய அணிகள் சூட்டப்படுகின்றன. இடையழகை இவை சிறப்பித்துக் காட்டுவதோடு, அரையிலணிந்த ஆடைகளை இறுகப் பிணைப்பதும் இவற்றின் பணி. சிற்ப வடிவங்களில் இவை மிகக் கவர்ச்சிகரமாகவும், பல்வேறு தோற்றங்களிலும் அமைக்கப்படுகின்றன.

இடை அணிகளில் மூன்று சிறப்பு மிக்கன. அவை முறையே மேகலை, அரைஞாண், அரைப் பட்டிகை என்பனவாம். இம் மூன்றையும் அரை ஞாண் அல்லது கடிசூத்ரமென்று ஒரு சில ஆசிரியர்கள் குறிப்பிடுவர்.

### மேகலை

இலைக்கருக்கு-அணி அணைந்ததும், மையத்தில் மணி பதிக்கப்பட்டதுமான முகப்பு-அணியை யோனித்தடத்தை ஒட்டியவாறு

அமைத்து, முறுக்கிய மூன்று வடங்களால் அதனைப் பிணைத்து, இடுப்பைச் சுற்றிக் கட்டப்படும் இவ்வணி மேகலை என்று சொல்லப்படும். இதனையே ஒட்டியாணம் என்பர் ஒரு சிலர். இது மூன்று அல்லது நான்கு விரல் அகலம் கொண்டு அமையும். இஃது எளிமையான அமைப்பாகும். இது பெண்களுக்குரிய சிறப்பணியாகும்.



மேகலை




1. மேகலை 2. இடைக்கட்டு

மேலும், இலைக்கருக்கு முகப்பு அணியை மூன்று வடங்களால் பிணைத்தலில் நடுவடத்தை பட்டிகையாகவும், எஞ்சிய இரு வடங்களை முறுக்கிய கயிறாகவும் அமைப்பது ஒரு வழக்கு.

மேலும், முன்சொன்ன முறுக்குக் கயிற்றை முத்துவடங்களாகவும், அமைக்கலாம். இது முன்னைய அமைப்பின் வளர்ந்தோங்கிய நிலையாகும்.



மேகலை

இலைக்கருக்கு முகப்பு அணிக்கு மாற்றாக கற்பனை நயத்தோடு அமைந்த முடிச்சு ஒன்றைப் பிணைத்துச் செய்வதுமுண்டு. முடிச்சையும், முகப்பு அணியையும் சேர்த்தும் அமைக்கலாம்.



முடிச்சு அணி பொருத்திய மேகலை

முன்புறத்தில் இலைக்களுக்கு முகப்பு அணியை அமைப்பது போல் நேர்பின்புறத்திலும் இதனையே எளியதொரு அமைப்பில் செய்தல் வேண்டும். இது மேகலையின் கொக்கியை மறைத்து அழகூட்டும்.



மேகலைவின் பின்புறத் தோற்றம்



அரைப்பட்டிகையின் பின்புறத் தோற்றம்

## அரைப்பட்டிகை

ஆண் படிமங்களில் இடையணியாக அரைப் பட்டிகை என்ற அழகிய ஓர் அணியை அமைத்தல் வழக்கு. இவ் வணி 3 அல்லது 4 விரல் அகலம் கொண்டிருக்கும். முன்புறத்தில் நடுவே அமையும் முகப்பு அணி சிம்ம முகமுடையதாயும், அதன் கடைவாயிலிருந்து மடக்கித் தொங்கும் பட்டிகைகள் இரண்டு




1. அரைப்பட்டிகை 2. தாரகைச்சும்மை 3. மரவுரி ஆடை




1. அரைப்பட்டிகை 2. தாரகைச்சும்மை 3. உதரபந்தம்

உடையதாயும் அமைந்திருக்கும். இப்பட்டிகையானது இலை, பூக்கருக்கு வேலைப்பாடுகள் அமைந்ததாகவும், அதன் இருமருங்கில் வடக்கயிறுகள் பொருந்தியதாகவும் இருக்கும். கயிறுகளை முத்துவடமாகவும் இயற்றலாம். சிம்ம முகங்கொண்ட முகப்பணிக்கு *கீர்த்திமானனம்-கிருத்திமானனம்-கீர்த்திமுகம்* என்று பல பெயர்கள் உண்டு. கைவினை முற்றியமுகம் என்பதே அவற்றின் பொருளாகும்.

## குறங்கு செறி

அரைப்பட்டிகைக்குக் கீழே ஒன்று, இரண்டு அல்லது மூன்று வடங்களால் ஆனதும், மணிகள் பதிக்கப் பெற்றதும், பூச்சித்திர முகப்பு அணி கொண்டதுமான அரைஞாண் ஒன்றோ அல்லது ஒன்றன் கீழ் மற்றொன்றாக இரண்டோ அணியப்படும். இத்தகைய அரை வடத்திலிருந்து முத்துச்சரங்கள் வரிசையாகத் தாமங்களாகத் தொங்கும். இதற்கு 'ஊரு தாமம்' (ஊரு-தொடை) என்று பெயர். குறங்கு செறி என்பது மற்றொரு பெயர் (குறங்கு-தொடை) இது தொடையணியாதலால் இப்



1. குறங்கு செறி 2. மரவுரி ஆடை

பெயர் பெற்றது. கவான் என்பது தொடை என்று பொருள்படுமாதலால் அதன் மீது அணிந்த இவ் அணியை 'கவான் செறி' என்றும் சொல்வது வழக்கு.

குறங்கு செறியானது தாம வடிவினதாக அமைவுறாமல் சங்கிலித் தொடராக நேரியதாகத் தொங்குமாறு அமைப்பதும் மற்றொரு வழக்கு.


குறங்கு செறி


குறங்கு செறி



குறங்கு செறி

## விரிசிகை

இடையில் முத்துவடங்களை அழகிற்காக அணியுங்கால் ஏழுவடம் கொண்டதை மேகலை என்றும், எட்டு வடம் கொண்டதை காஞ்சி என்றும், பதினாறு வடம் கொண்டதை கலாபம் (தோகை) என்றும், பதினெட்டு வடம் கொண்டதை பருமம் என்றும், முப்பத்திரண்டு வடம் கொண்டதை *விரிசிகை* என்றும் பண்டை நூலோர் கூறுவர்.

இவை சிறு சிறு முத்துக்களைக் கொண்டு கற்றையாக-மொக்கைச் சோளக் கதிர் போல் அணியப்படும் இடையணிகளாகும் என்பர்.

## தாரகைச்சும்மை

தாரகை (நட்சத்திரங்) களை வரிசையாக ஒரு வடத்தில் கோத்து அமைத்தாற் போன்ற அரையணியே தாரகைக்சும்மை எனப்படும். இது



தாரகைச்சும்மை

மேகலை அல்லது அரைப்பட்டிகைக்குக் கீழேவரும் அணியாகும். இதனை எல்லாச் சிற்பவடிவங்களிலும் காணலாம்.

## கால் அணிகள்

## வீரக்கழல்

கெண்டைக் காலில் வீரத்திற்கு அடையாளமாக மணியொன்று கட்டப்படும். இதற்கு வீரக்கழல் என்று பெயர். இது கழல் என்றும் சொல்லப்படும். சிறுமணியைக் கயிற்றில் கட்டி, காலில் அணிவது இஃதாம்.

## பாடகம்

காற்பரட்டுக்கு மேல் மூன்று, அல்லது ஐந்து அடுக்குகள் கொண்ட தண்டைகளை ஒன்றன்மீது ஒன்றாக இணைத்து அமைந்த அணிக்குப் பாடகம் என்று பெயர். இதனைப் *பாதகடகம்* என்றும் சொல்வர்.

ஒற்றையாக அணியப்படும் போது இது தண்டை எனப்படும்.

மேலும் இவ்விடத்தில் பாம்புபோல் வளைத்துக் காலைச் சுற்றிமைக்கப்படும் காலணி *புஜங்க கடகம்* என்று பெயர் பெறும்.

## பாத அணிகள்

பாதத்திற்கு அணியாக அரியகம் (பாதசாலம்) சிலம்பு (நூபுரம்), *காற்சதங்கை*, பரியகம் (காற் சவடி) என்பவை பூட்டப்படுகின்றன. அவற்றுள் சிலம்பும் பாதசாலமும் சிறப்பானவை.

## சிலம்பு

கால்பெருவிரல் அகலம் கொண்டதும் குழாய் போன்றதும், நீண்ட வட்ட வடிவினதும் முத்து அல்லது மணிகளைப் பரல்களாக உட்கொண்டதும் மேல் மட்டத்தில் முன்னும் பின்னும் முகப்பு அணிகளைக் கொண்டதும் வரிசையாக முத்துகள் பதிக்கப்பெற்றதும் ஆன கால் அணிக்குச் சிலம்பு என்று பெயர்.

நீண்ட வட்டமான இவ் வணி முன்புறத்திலும் பின்புறத்திலும் சிறிது தூக்கம் உடையதாக மேல் நோக்கி வளைவுற்று இருக்கும். மேலும் மற்றொரு வகையில் நீண்ட வட்ட வடிவமுடையதாகவும் பக்கங்களில் சிறிது உள் அழுந்தியும் இருக்கும். இலை, பூக்கருக்கு ஆகிய கைவினைகள் முற்றியதாகவும் இஃது அமைக்கப்படும். இத்தகைய சிலம்பணி பாதத்தில் இருந்து கழன்று

விடாமல் இருப்பதற்கு அதன் முன்புறத்தை ஒரு சங்கிலித் தொடரோடு இணைத்து அச் சங்கிலியானது விரல் மோதிரத்தோடு இணைக்கப்படும். பின்புறத்தில் அங்ஙனமே காற் தண்டையோடு சங்கிலியால் பிணைக்கப்படும்.

சிலம்பு அணிவதற்கு முன்பாக (கழுத்தில் அணியும் சவடி போல) சிலம்பின் அகலத்தில் மூன்றில் ஒரு பங்கு அகலம் உடைய சவடி ஒன்று கட்டப்படும். இது காலில் இருந்து கழன்று விடாதபடி கால்விரல் மோதிரத்தோடு சங்கிலியால் பிணைக்கப்பட்டிருக்கும். அச் சவடியோடு அதன் மீது அமையும் சிலம்பு பொருத்தப்பட்டு கழன்று விழாதபடி செய்வதும் உண்டு. காற்சவடிக்குப் *பரியகம்* என்று பெயர்.

இது பெண்களுக்குரிய சிறப்பான அணியாகும்.

## அரியகம்

இது வலை போன்ற பின்னலை உடைய, பாதத்தில் அணியும் ஆபரணம் ஆகும். இது *பாதசாலம், பாதஜாலகம்* என்றும் பெயர் பெறும். இஃது ஒரு விரல் அகலம் கொண்டது. நாலு யவை அகலப்பட்டிகையும், எட்டு யவை அகலம் கொண்ட கவான் செறி போன்ற அமைப்பு உடையதுமாகும். இக் கவான் செறி முத்துத் தாமங்கள் போல அசைந்து தொங்கும் தன்மை உடையது.

## காற் சதங்கை

ஒரு விரல் அகலமும் அதில் மூன்றில் ஒரு பங்கு அகலம் பட்டிகையும் மூன்றில் இரண்டு பங்கு கனம் கொண்ட சதங்கையும் சேர்ந்தது இக்காலணியாகும். இதனை நாட்டியப் பெண்களும் குழந்தைகளும் அணிவர்.

## விரல் அணிகள்

கால் விரல்களில் மிஞ்சி, பீலி, காலாழி, மகர வாய் முதலிய மோதிரங்களைப் படிமங்களில் அமைப்புதுண்டு.

# 13

# ஆடைகள்



சிற்பக்கலைத் துறையினைச் சேர்ந்த உருவங்களில் பஞ்சாடை, பட்டாடை, தோலாடை, மரவுரி ஆடை ஆகிய நான்கும் குறிப்பிடத் தக்கவை. இவற்றில் முதல் இரண்டினை ஆண், பெண் படிமங்களிலும் அடுத்த இரண்டினை ஆண் படிமங்களிலும் காணலாம்.

அணிகலன்களை அமைப்பதில் இலக்கண வழக்கு ஒன்று நிலவுவது போல படிமங்களில் ஆடைகளை அணியும் முறையிலும் இலக்கண மரபு ஒன்றுண்டு.

ஆடைகளைச் சிற்ப வடிவங்களில் மிதமாக அணிவித்தல் வேண்டும். அவை உடலை ஒட்டியும் அமைந்திருத்தல் வேண்டும். இதன் மூலம் உடலின் இயல்பான மேடு பள்ளங்கள், திரட்சிகள் நன்கு புலப்படும். ஆடைகளில் இயற்கையாக ஏற்படும் சுருக்கங்களையும், தொய்வுகளையும் அழகுறப் புலப்படுத்தல் வேண்டும். ஆடை உடலை ஒட்டியவாறு அமைக்கப்படும் போது ஆடை இல்லாத தோற்றத்தை அது கொடுக்குமாதலால் ஆடைகளின் கரைகளை உருட்டிச் செய்தல் வேண்டும். தொய்வுகளையும், சுருக்கங்களையும் உடலின் திரட்சிக்கு ஒப்ப நன்கு வகுத்து அமைத்தல் வேண்டும். சுருங்கக் கூறின் ஆடைகள் படிமத்தின் மேனி அழகை மறைக்காமல் அதனை நன்கு புலப்படுத்துவதாக அமைதல் வேண்டும்.

பஞ்சாடை, பட்டாடை, தோலாடை, மரவுரி ஆடை ஆகிய ஒவ்வொரு வகை ஆடைக்கும் தனித்தனிச் சிறப்பியல்புகள் உள்ளன. எடுத்துக் காட்டாக, பட்டாடையானது நூலாடையைக் காட்டிலும் அதிக பளுவானதால் இடுப்பில் உடுத்தியவுடன், ஆடையின் ஓரங்கள் பளுவான தொய்வுடையதாகக் காணப்படும். இது பட்டாடையின் தனி இயல்பு. இதனைப் படிமங்களில் மிக வினையமாகக் காட்டுதல் வேண்டும். எவ்வாறெனின், பட்டாடையின் ஓரங்களை கனமாக அமைத்தும், தொடை, கால் ஆகிய பகுதிகளில் திரண்டு ஒட்டியவாறு செய்தும், பக்கங்களில் ஆடை பிதுங்கித் தொங்கியவாறும் காட்டுவது வழக்கு. இத்தகைய ஆடையமைதியினை விஷ்ணுப் படிமத்தில் காணலாம். அங்ஙனமே



பட்டைடையின் அமைதி
இடைக்கட்டுகளின் தொங்குநிலை

தோலாடையை உடலோடு ஒட்டியவாறு அமைத்துத் தொடையின் திரட்சியைப் புலப்படுத்துவ தோடல்லாமல் தோலின் இயல்பை ஆடையின்

ஓரத்தில் சிறிது நெளிவுகளைப் புகுத்தி உணர்த்துதலும் மரபு. சிவபெருமான் படிமத்தில் இதனைக் காணலாம்.



தோலாடை



தோலாடை

மரவுரி ஆடையை அங்ஙனமே தொடையோடு ஒட்டியணிந்து மரவுரியின் சமதளமான உட்பகுதியையும் திகட்டான மேற்பகுதியையும் பிரித்துக் காட்டுவதின் மூலம் மரவுரி ஆடை என்பது புலப்படும். கோதண்டராமன் படிமத்தில் இதனைக் காணலாம்.



மரவுரி ஆடை

நூலாடையினை உடலோடு ஒட்டியமைத்துக் கரையினைமட்டிலும் புலப்படுத்திச் சுருக்கங்களின்றிச்



பஞ்சாடையின் அமைதி

செய்து நூலாடையின் தன்மையினை உணர்த்துதல் வேண்டும்.

தோல், மரவுரி ஆடைகளைத் தவிர மற்ற ஆடைகளில் ஆடைத் தொய்வுகளை ஒரு சீரான திட்டத்திற்குள் அமைத்துச் செய்தல் வேண்டும். இலை, பூ, கொடிக்கருக்கு வேலைப்பாடுகளையும், முத்துச் சரங்களையும் அச் சீரான திட்டத்திற்குள்ளேயே வகுத்துக் கொண்டு அணிபெறச் செய்தல் வேண்டும்.



பஞ்சாடையின் அமைதி

இடுப்பில் உடுத்தும் ஆடையைத் தவிர அழகிய இடைக்கட்டுகளை (கச்சை)யும் படிமங்களில் அமைத்தல் வேண்டும். இடுப்பணிகளை மறைக்காமல், அவற்றுக்குக் கீழே தொடைகளின் திரட்டிக்கு ஒப்ப, தொடையோடு ஒட்டியவாறு அமைத்துப் பக்கங்களில் இடுப்பை ஒட்டிக் கவர்ச்சிகரமான முடிச்சுகளை அமைத்தல் வேண்டும். அம் முடிச்சுகளிலிருந்து ஆடை முந்தானையைப் பல கவர்ச்சிகரமான அமைதிகளில் தொங்கிடச் செய்தல் வேண்டும்.

கற்படிமங்களில் இம் முடிச்சுகள் மேல் நோக்கிச் சென்று முழங்கையை ஒட்டியவாறு அமைந்து கைகளுக்கு உறுதி சேர்க்கும்.

சிற்ப வடிவங்களில் மேலாடைகளைக் காட்டுவது பெரும்பாலும் வழக்கு அன்று. உடலின் கவர்ச்சியான பகுதிகளை நன்கு புலப்படுத்துவதற்காக இது பெரும்பாலும் தவிர்க்கப்படுகின்றது. பெண் படிமங்களில் மார்பில் வார் அல்லது கச்சு மட்டும் அணிவதுண்டு. அங்ஙனம் அஃது அமையும் பொழுது கொங்கைகளின் எடுப்புக்கும் திரட்சிக்கும் ஏற்ற முறையில் அதனை ஒட்டியவாறு அமைத்துக் காட்டுதல் வேண்டும். அன்றி, மேலாடையே உடுத்துவதானாலும் உடல் அழகிற்கும் கவர்ச்சிக்கும் இடையூறின்றி உடலின் மேடு பள்ளங்கள் புலப்படுமாறு உடலை ஒட்டியதாகவே அமைத்தல் வேண்டும். மேலாடை அணிந்த ஆண் படிமங்களிலும் அங்ஙனமே உடலோடு ஒட்டியமைந்த பாவனையிலேயே அமைத்தல் வேண்டும்.



இடைக்கட்டும் முத்தானையும்



இடைக்கட்டின் பின் அமைதி



கொசுவமும் இடையணியும்



இடுப்பில் கொசுவமும் பிற அணிகளும்

பொதுவாக, எல்லா உருவங்களிலும் அரையில் அணிந்த ஆடை, இடையில் அணிந்த இடைக்கட்டு ஆகிய இரண்டும் அமைக்கப்படும். கவிஞர்கள், முதுபெரும் ஞானிகள் முதலிய மாந்தர்க்கு மேலாடை இடது தோளிலிருந்து வலது இடுப்பு வரை தொங்கிச் சென்று, முதுகை ஒட்டி மேல் நோக்கிச் சென்றடையுமாறும், அவ்வாடையின் நுனி, தோள் மீது கொய்து தொங்கியதாகவும் செய்தல் வேண்டும். அந்த ஆடையின் ஓரங்களை உடலிலிருந்து பிதுக்கமுடையதாகச் செய்து உடலுக்கு மேலே சார்த்தியிருப்பதைக் காட்ட வேண்டும்.

பெண் வடிவங்களில் இடது அல்லது வலது பக்கத்தில் ஆடை நுனியை இடுப்பில் இருந்து கொசுவமாக அமைத்துக் காட்டுவதும் ஒரு மரபு.

இடுப்பில் உடுத்திய ஆடையின் மீதே இடுப்பு அணிகலன்களைப் பூட்டிடல் வேண்டும்.

ஆடை அமைதிகளால் சிற்ப வடிவங்களில் பலவகைக் கோலங்களைக் காட்டலாம். விரைந்து செல்லும் நிலை, சுழன்று ஆடும் நிலை, பறந்து செல்லும் நிலை ஆகியவற்றை ஆடையின் தொங்கல், சரிதல், நீட்டி நிற்றல் முதலியவற்றின் மூலமாகக் காட்டுதல் வேண்டும். சாத்விகப் படிமங்களின் ஆடைகள் விரைப்பு இன்றி தொய்வுடையதாக அமைதல் வேண்டும்.

உடலின் பின்புறத்திலும் பின் அழகைப் புலப்படுத்துமாறு உடலை ஒட்டியவாறு ஆடை அமைதல் வேண்டும். தொடைகளுக்கு இடையில் ஆடையைத் தொங்கவிட வேண்டும். அத் தொங்கலில் செயற்கை அணிகளை இணைத்து அழகுற அமைத்தல் வேண்டும்.



இடைக்கட்டுகளும் இடையணிகளும்



உடலின் பின்னழகு துலங்கிடச் செய்யும் ஆடையமைதி

# 14

# கருக்கணிகள்

தெய்விக வடிவங்களையும் மனித உருவங்களையும் விலங்குகளையும் உணர்ச்சி வடிவங்களாகவே சித்தரித்தல் சிற்பக்கலையின் மரபு என்பது பல இடங்களில் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது.

அம் முறையிலேயே மரங்களையும், செடி, கொடிகளையும், இலை, பூக்களையும் கூட இயற்கையின் பிரதியாகச் செய்வதில்லை.

அதற்கு மாற்றாக, செடி கொடிகளின் நெளிவு, சுழிவு, மடிப்பு, விரிப்பு, கோவை, அடுக்கு, மினுமினுப்பு, மென்மை, இயல்பான தன்மை, இயல்பான இயக்கங்கள் இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து உணர்ந்து அவற்றை மனங்கவர் தோற்றங்களில் சித்திரித்தல் கலை மரபு. இத்துறையில் சிற்பியின் கற்பனை வளமும், கைத்திறனும் சிறப்பாக வெளிப்படும்.

அத்தகைய கற்பனை நயமும், கலைத்திறனும் கொண்ட இலை, கொடி அணிகளை, கலைமொழியில் கருக்குகள் என்று சொல்வது வழக்கு. இவ்வணிகள் தச்சன் வாள், உழவன் கருக்கரிவாள் போன்ற ஆயுதங்களின் பற்கூருகளையும், பனைமட்டையின் கருக்கையும் ஒத்ததாய்த் தோன்றுவதால் இப்பெயர் பெற்றது.

சிற்ப வடிவங்களில் அமையும் ஆடை அணிகளை அலங்கரிக்கவும், விலங்குகளின் உறுப்புகளை அணிபெறச் செய்யவும், சிற்பக் கட்டடங்களின் பல்வேறு உறுப்புகளை அழகுபடுத்தவும் இத்தகைய கருக்கணிகளை உபயோகித்தல் வேண்டும். இக் கருக்கணிகள் பல்வேறு தோற்றங்களில் அமையும். அவை ஒவ்வொன்றும் தோற்றுவிக்கும் அமைப்பை, ஆதாரமாக கொண்டு ஒன்பது வகையாகப் வகுக்கப் பட்டிருக்கின்றன. அவை பின்வருமாறு:—

1. சுடர்க் கருக்கு
2. குதிரைவால் கருக்கு
3. அன்னவால் கருக்கு
4. கோடிப்பாளைக் கருக்கு
5. மையப் பாளைக் கருக்கு
6. கொடிக் கருக்கு
7. ஓடு கருக்கு
8. வட்டக் கருக்கு
9. அடைப்புக் கருக்கு

### 1. சுடர்க் கருக்கு

திருவாசியின் வெளி எல்லையிலும், கோபுர மகா நாசியின் விளிம்பிலும், தோரணங்களிலும்



சுடர்க் கருக்கு


240-1—17

வரிசையாகவும், சீராகவும், இலையின் தோற்றத்தை ஒத்ததாகவும், சுடர்போலவும், இலையின் இயல்பான தன்மைகளை வலியுறுத்தியும், கவர்ச்சிகரமாகவும் அமைக்கப்படுகின்ற இலையணி, சுடர்க் கருக்கு என்று சொல்லப்படும்.



சுடர்க் கருக்கு

## 2. குதிரைவால் கருக்கு

இது குதிரை வாலின் பொது அமைப்பைத் தழுவி அமைந்த கருக்காகும். குதிரைவாலின் தொய்வு. அடர்த்தி ஆகியவற்றின் சாயலாக இஃதமையும்.



குதிரைவால் கருக்கு

மயில், மகரம் ஆகியவற்றின் தொங்குகின்ற வால் பகுதியை இதனால் சித்தரித்தல் வேண்டும்.



குதிரைவால் கருக்கு

## 3. அன்னவால் கருக்கு

கற்பனை வடிவமான அன்னத்தின் வாலில் விசித்திரமான நரம்புகளும், இலைகளும் அடர்ந்து அழகுற அமையும். இஃது அன்ன வால் கருக்கு எனப்படும். மகரத்தின் வாலிலும்,



அன்னவாசல் கருக்கு

கபோதகக் கூடுகளின் அடிப்பகுதியிலும், மயிலின் வாலிலும், சங்கின் பின்புறமுனையிலும் இத்தகைய அன்னவால் கருக்கணியைச் செய்யலாம்.



அன்னவாசல் கருக்கு



அன்னவாசல் கருக்கு



அன்னவாசல் கருக்கு



அன்னவாசல் கருக்கு

**4. கோடிப்பாளைக் கருக்கு**

இரண்டு மட்டங்கள் அல்லது நெற்றிகள் ஒன்று கூடும் மூலைக்குக் கோடி என்று பெயர். அத்தகைய கோடிகளில் ஏற்படும் சந்தை மறைப்பதற்குச் செய்யும் அணி அல்லது

உத்தியே கோடிப்பாளை எனப்படும். இலை, தளிர், பூக்கள் ஆகியவை அமைந்த இவ்வணியால் இவ்விணைப்பு மூடப்படும். இது கபோதகம் அல்லது வேறொன்றின் கோடியிலிருந்து பட்டிகையாக அமைந்து கீழ்நோக்கி இறங்கி இருமருங்கிலும் பரவி அவ்விடத்தை அணிபெறச் செய்யும். இது கோடிப்பாளைக் கருக்கு என்று சொல்லப்படும். இதனை கர்ண பாலிகா என்று நூலோர் கூறுவர். இங்ஙனமே கட்டடப்பகுதியில் வெவ்வெறு கோடிகளில் அணிதிகழ் கோடிபாளைகளை அமைத்துக் கட்டடத்தை அலங்கரித்தல் வேண்டும்.



கோடிப்பாளைக் கருக்கு



கோடிப்பாளைக் கருக்கு



கோடிப்பாளைக் கருக்கு



மையப்பாளைக் கருக்கு



கொடிக் கருக்கு

### 5. மையப்பாளைக் கருக்கு

கோடிகளில் எங்ஙனம் கோடிப்பாளை அமைக்கப்படுகிறதோ அங்ஙனமே கட்டட உறுப்புக்களின் மையங்களிலும் இவ் வணியை அமைத்தல் வேண்டும். கோடிப்பாளையின் அமைதிகளையே இதுவும் கொண்டிருக்கும். நாசித்தலையின் வாயிலிருந்து கொடிகளும், இலைகளும் வளைந்து, மடிந்து, விரிந்து அழகுற அமையும். இது மையப்பாளை என்று சொல்லப்படும். விமான சிகரங்களிலும், அவற்றின் கோடிகளிலும், பட்டங்களிலும், கபோதகம், கொடுங்கைகளிலும் கோடிப்பாளை, மையப்பாளைக் கருக்குகளை அமைத்து அவற்றை அலங்கரித்தல் வேண்டும்.

### 6. கொடிக் கருக்கு

பட்டிகை போன்ற நெட்டோடிய (நெடிய) இடங்களிலும், தூண்களிலும், வாயில் நிலைகளிலும், கொடியும், இலையும், சேர்ந்த தொடர்க் கருக்கணிகளை அமைத்தல் வழக்கு. இதற்குக் கொடிக் கருக்கு என்று பெயர். இதில் கொடிகள் வளைந்தும், நெளிந்தும் செல்ல, அக்கொடிகளைத் தழுவியும். இடையிலும் தலை நயம் பொருந்திய இலைகளை அடைப்பாக அமைந்திருக்கும். இத்தகைய கொடிகள் வளைந்தும், சுருண்டும் செல்வதால் ஏற்படும் வெற்றிடங்களில் அன்னங்களையும், நாட்டியச் சிற்பங்களையும், வரலாற்றுச் சிற்பங்களையும் ஒன்றோடொன்று தொடர்புடைய படிம வரிசைகளையும் அமைக்கலாம். இத்தகைய அமைப்பினை கோபுர நிலைக்கால்களில் சிறப்பாகக் காணலாம்.

### 7. ஒடு கருக்கு

நெட்டோடிய பட்டிகைகளிலும், விமானங்களிலும், பிற கட்டடப் பகுதிகளிலும் அலங்காரத்திற்காகச் செய்யப்படும் பிறிதொரு கருக்கணி இஃதாகும். இது கொடியும், இலையும், பூக்களும் அழகுற அமைந்த அணியாகும். இதில் கொடி மெலிந்தும், தளிர்கள் பெருத்தும் இடையிடையே பூக்களும் விரவிவரும். இதுவும் கொடிக் கருக்கு போல நீண்டும், நெளிந்தும், சுருண்டும் அமையும். கொடிகள் வளைந்து செல்லும் போக்கில் விரைவும் காணப்படும். இதன் மூலம் கொடிகளின் வேகத்தன்மையும் புலப்படுத்தப் படுகிறது. எனவே இஃது ஒடு கருக்கு என்று பெயர் பெற்றது. இஃது ஒற்றைக் கொடியோடு கூடிய கருக்காகவே அமையும்.

## 8. வட்டக் கருக்கு

ஒரு வட்டத்திற்குள் இலை, கொடி ஆகியவை செறிந்த கருக்குக்கு வட்டக் கருக்கு என்று பெயர். இத்தகைய கருக்குகளை, குதிரை, சிம்மம் ஆகியவற்றின் தொடைகளிலும், தூண்களிலும், போதிகைகளிலும் செய்தல் வேண்டும்.



வட்டக் கருக்கு



வட்டக் கருக்கு

## 9. அடைப்புக் கருக்கு

கட்டடங்களின் குறிப்பிட்ட ஒரு சில வெற்றிடமான பகுதிகளை இலை, கொடி, பூக்கள் செறிந்த கருக்கமைப்பால் நிரப்பி அணிபெறச் செய்தல் ஒருவித கலை வழக்காகும். இதற்கு அடைப்புக் கருக்கு என்று பெயர். உத்தரக் கீழ்தாரியிலும், தூணின் அடிப்பகுதியின் நெற்றிகளிலும், ஏற்படும் வெற்றிடத்தை இத்தகைய கருக்குகளால் நிரப்பி தூணை அலங்கரித்தல் வேண்டும். நெட்டோடிய பாந்துகளிலும், கண்டப்பகுதிகளிலும் அடைப்புக்காக லவங்கப்பூ அணியும் வழக்கத்தில் உள்ளது.



அடைப்புக் கருக்கு



அடைப்புக் கருக்கு

தாமரை மலர் சிற்பத்துறையில் மிக விரிவாக நீக்கமற கையாளப் பெற்றிருக்கிறது. இம் மலரை படிமங்களின் பீடமாகவும், படிமங்களின் பண்பை யுணர்த்தும் அடையாளங்களாகவும், சிற்பக் கட்டடங்களின் பல்வேறு உறுப்புகளாகவும் காணலாம். கட்டச் சிற்பத்தில் இதன் செல்வாக்கும் பயனும் அளப்பரியது. அங்ஙனம் அங்கங்களாகவும், அணிகளாகவும் வரும் தாமரை மலரானது, இயற்கையின் பிரதியாக அமைக்கப்படுவதில்லை. அதன் இயல்பே வடிவத்தில் வலியுறுத்தப்படும். அங்ஙனமே குவளை மலரின் அமைப்பும், நீலோற்பலத்தின் அமைப்பும் தத்தம் இயல்பைப் புலப்படுத்துகின்ற முறையிலேயே அமைக்கப்படும்.

கொடி, இலை, பூக்கள் ஆகியவற்றைப் பல்வேறு கோலங்களில் அமைத்து பல்வேறு அணிகளை உருவாக்கியது போல பூக்களையே கொண்டு மாலைகளாகத் தொடுத்து அவற்றையும் அணிகளாகச் சிற்பக் கட்டடங்களிலும் சிற்ப வடிவங்களிலும் அமைப்பது உண்டு. சிற்பங்களிலும், சிற்பகக்கூடங்களிலும் அணியாக புகுத்தப்படும் மாலைகள் பலவகையாகக் காணப்படினும் அவை மூன்று வகையினவாக வகுக்கப்படும். அவை முறையே, 1. சத்திப் பூமாலை, 2. திரிசூல மாலை, 3. குழறு மாலை.

2. திரிசூல மாலை

புறத் தோற்றத்தில் திரிசூலத்தை ஒத்ததும் தனித்தனியாக கோக்கப்பட்டதும், திரட்சி யுடையதுமான மாலை *திரிசூல மாலை* என்று சொல்லப்படும். இம் மாலையில் வரும் ஒவ்வொரு பூவும் திரிசூலம் போல் அமைவதே இதற்குக் காரணமாகும். இது படிமங்களை அலங்கரிப்பதற்கும், கோபுர விமான சிகரங்களை அழகுபடுத்துவதற்கும் பயன்படுகிறது. இவ்வமைப்பிலேயே தாமரை மாலையும் அமைக்கப்படுகின்றது.



அடைப்புக் கருக்கு

1. சத்திப்பூ மாலை

இது வட்ட வடிவமானது. மையத்தில் பருமணி பதிக்கப்பெற்ற தோற்றமுடையது. அதன் விளிம்பில் தச்சன் வாளின் பற்கள் போன்ற அமைப்புடையது. அத்தகைய மலருக்கு ‘சத்திப்பூ’ என்று பெயர். இது சத்தி வேலின் தோற்றத்தைப் புலப்படுத்தும். இத்தகைய பூக்களை ஒன்றின்மீதொன்று வரிசையாக ஏற்றியமைத்து மாலைபோல் திரட்டிச் செய்தல் வழக்கு. இது விமான சிகரத்தின் கட்டுமாலையாகத் திகழ்கின்றது.

3. குழறு மாலை

பேச்சுத் தெளிவின்றித் தடுமாறுதலை குழறுதல் என்கிறோம். அங்ஙனமே, இன்ன மலரென்று குறிப்பிட்டுச் சொல்ல இயலாதவாறு குழறுபடியானதும், ஆனால் தொடுக்கப்பட்ட பல்வேறு இலைகள், பூக்களின் இதழ்கள், அவற்றின் நெளிவு சுழிவுகள் ஆகிய இயல்புகளையே வடிவமாகவும் கொண்டு அமையும் மாலை *குழறு மாலை* எனப்படும். செங்கல்லால் கட்டப்படும் விமான கோபுர சிகரங்களில் இத்தகைய மாலை சுதையால் செய்யப்படும்.

# 15

# சின்னங்கள் ஆயுதங்கள்



ஒரு கவிதைக்கு வடிவழகும், பொருளழகும், இன்றியமையாதன. அங்ஙனமே ஒரு சிற்ப உருவத்திற்கும் வடிவழகும், கருத்தழகும், இன்றியமையாதனவாம். கவிதையிலானாலும், சிற்பத்திலானாலும் வடிவ அமைதியும், பொருள் அமைதியும் ஒன்றை ஒன்று தழுவியனவாக அமைதல் வேண்டும்.

கவிதைக்குச் சொற்கள் வடிவம் தருகின்றன. அச் சொற்கள் இலக்கண விதிக்கும் மொழி மரபுகளுக்கும் ஏற்ப முறையோடும், ஓசை நயத்தோடும் அமையும். மேலும் அச் சொற்களே கருத்தையும் வெளியிடும் என்றாலும் பல உத்திகளையும் கையாண்டே கருத்துக்கு முழுவடிவம் கொடுக்க முடிகிறது.

அங்ஙனமே, சிற்பக்கலைத்துறையில் படிம இலக்கணத்திற்கும், தொழில் மரபுகளுக்கும் ஏற்ப உருவத்தை சிற்பியானவன் அமைக்கிறான். அப் படிமமே கருத்தைத் தெரிவிக்கும். எனினும், தன் கருத்து முழுவடிவம் பெறுவதற்கு இவனும் சில உத்திகளைக் கையாள வேண்டியவனாகிறான். இதனைக் கொஞ்சம் விரிவாக நோக்குவோம்.

சிற்ப வடிவங்கள் இயற்கை உடற்கூறுகளைக் கொண்டிருப்பினும் அவற்றின் புறத்தோற்றத்தை, அகக்காட்சியைக் கொண்டே அமைப்பது முதற்படியாகும். அதாவது இயற்கையைப் பார்த்து, உள்ளது உள்ளபடியே இவன் வரைவதில்லை. அதற்கு மாறாக, *இயற்கை இவன் உள்ளத்தில் தோற்றுவித்த வடிவத்தையே 'வெளிப் படுத்துகிறான்*. இது வடிவழகு ஆகும்.

இரண்டாவதாக கருத்தைப் புலப்படுத்த அவ் வடிவத்தில் தக்க அணிகலன்களையும், தலைக் கோலங்களையும், ஆடைகளையும் அமைக்கின்றான். இவையும் போதாதென்று தலை, உடம்பு, கை, கால் ஆகியவற்றை அபிநய அமைதிக்கு உள்ளாக்குகின்றான். தன் உட்கோளை மேலும் தெளிவுபடுத்த வேறு பல பொருள்களையும் கொண்டு வந்து சேர்க்க வேண்டியவனாகிறான். அவையே சின்னங்கள்-ஆயுதங்கள் எனப்படும்.

இதனை ஓர் உதாரணத்தால் விளக்குவோம். திரண்ட தோளும், கட்டுக்கோப்பான உடல் அமைப்பும் கொண்ட உருவம் ஒன்றின் தலையில் கிரீடத்தைச் சூட்டித் தக்க அணிகளைத் தக்க இடங்களில் பூட்டி, பட்டாடையையும் உடுத்தி, ராஜஸ பாவத்தில் அமைத்தால், அஃது ஓர் அரசனின் உருவம் என்பதைத் தெரிவிக்கும். பின்னணியில் ஒரு வெண்கொற்றக் குடையினை இணைத்தால் அவன் ஒரு பேரரசன் என்பதை உணர்த்தும். அவனது கரங்களில் கத்தி, கேடயம் இரண்டையும் கொடுத்தமைத்தால் அவ்வரசன் போர்த்திறம் படைத்தவன் என்பதை அறிவிக்கும். அங்ஙனமின்றி அரச கோலத்தில் ஒரு யாழைக் கொடுத்தமைத்தால் அவன் இசை வல்லுநன் என்பதைக் காட்டும். மாறாக, அவனது கரத்தில் ஒரு கோவில் கட்டச் சின்னத்தைக் கொடுத்தமைத்தால் அவ்வரசனைச் சிற்பக்கலைப் புரவலனாகக் காட்டியதாகப் பொருள்படும். கையில் ஏடு இருப்பின் அவனொரு புலவன், கவிஞன், ஞானி என்பதைப் புலப்படுத்தும். அவற்றையும் உடலணிகளையும் நீக்கி, கைகளை அஞ்சலி முத்திரையில் அமைத்து, தோளிலும், கழுத்திலும் ருத்ராக்ஷ மாலைகளை அணிவித்து அமைத்தால் அவன் ஒரு சிவ பக்தன் என்பதை உணர்த்தும். அத்துடன் தாடியும், மீசையும் கொண்டமைப்பின்

அவனை 'ராஜ ரிஷி' என்றும் புலப்படுத்தி விடும். மற்றொரு உதாரணத்தையும் காண்போம்.

ஓர் அரசன், பெரியதோர் சாம்ராஜ்யத்தின் தலைவன், சிவபெருமானிடம் அளப்பற்ற பக்தி கொண்டவன், உலகங்களைப் படைத்து காத்து ஒடுக்கும் பேராற்றல் வாய்ந்த தனது தலைவனின் பெருமைக்கேற்றவாறு பெருங்கோவில் ஒன்றைப் படைக்க விரும்பி, தன்னுடைய தலைமைச் சிற்பியாகிய பெருந்தச்சனிடம் பொறுப்பைக் கொடுக்கிறான். பரம்பொருளான உலகப் பெருந்தச்சனுக்கு வானுயர்ந்த விமானம் எழுகிறது. அதனுள் மாபெரும் சிவலிங்கமும் எழுந்தருளுகிறது. நாட்டிலுள்ள விமானங்களுக் கெல்லாம் பெரியது அவ் விமானம். அங்ஙனமே லிங்கங்களுக்கெல்லாம் பெரியது அந்த மகாலிங்கம். ஆனால் பெருந்தச்சனுக்கோ இப் பெரிய வடிவமைப்பு ஈஸ்வரனின் பெருமையை முழுமையாகக் காட்டியதாக கொள்ள மனம் இடம் தரவில்லை. ஆழ்ந்த சிந்தைனைக்குப் பின், தனது உட்கிடையைப் பெருந்தச்சன் ஓர் உத்தியின் மூலமாகவே உணர்த்துகிறான். இஃது எங்ஙனம் என்று இனி நோக்குவோம்.

கோவிலின் வாயிலில் வாயிற்காப்போனின் சிலையைப் பெரியதாகச் செய்து நிறுத்துகிறான். ஒரே கல்லாலான மாபெரும் சிலை. இவனை பெரியோனாகக் காட்டி இவன் மூலம் உள்ளிருக்கும் பெருவுடையானை (பிருஹதீச்வரனை) அவனது பெருமையை-பேராற்றலை-பேருருவைக் குறிப்பால் உணர்த்த முற்படுகிறான்.

வாயிற்காப்போன் படிமமோ மிகப் பெரியது! அவனுக்கோ நான்கு கைகள்; சிவச் சின்னங்களையெல்லாம் தரித்திருக்கின்றான். ஒரு காலை ஊன்றி மற்றொரு காலைக் கதையின் மீது மிதித்து நிற்கின்றான். ஒரு கையால் உள்ளிருக்கும் ஈஸ்வரனைச் சுட்டியும் காட்டுகின்றான். மற்றொரு கையை கதையின் பிடி மீது பதித்துக் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கின்றான். அவனது தண்டத்தில் பாம்பு ஒன்று சுற்றிக் கொண்டிருக்கிறது. அப் பாம்பின் வாயிலிருந்து யானையொன்று இடையூறின்றி வெளியேறுகிறது. வாயிலோனின் முகத்தில் கோரமான சிரிப்பு. உருண்டு திரண்ட கண்கள் முகத்திலிருந்து வெளியே தெறித்துக் கொண்டு நிற்கின்றன.

இனி, இச்சிற்ப வடிவத்தில் சிற்பி செய்து வைத்திருக்கும் கற்பனை நயத்தையும், உட்கருத்தையும் பார்ப்போம்.

யானை விலங்கினங்களில் மிகப் பெரியது. அது பாம்பின் வாயிலிருந்து வருமாயின் அப் பாம்பு எவ்வளவு பெரியதாயிருக்க வேண்டும்? அவ்வளவு பெரிய பாம்பு ஒரு தடியைச் சுற்றிக் கொண்டிருக்குமெனில், அத் தடிதான் எவ்வளவு பெரியதாக இருக்க வேண்டும்? அத் தடியோ வாயிற்காப்போனின் கைத்தலத்தில் அடங்குமானால் அவனது கை எவ்வளவு பெரிதாக இருக்க வேண்டும்? அத்தகைய கையுடைய வாயிலோனின் உடல், அளப்பரிய தன்றோ! இத்தகையோனை வாயிலோனாய்க் கொண்டு உள்ளே எழுந்தருளியிருக்கும் இறைவன் எத்தகையோன்? அவனே பெருவுடையான். உலகத்தை எல்லாம் உடைமையாக்கிக் கொண்டவன்.

சிற்பிகள் தங்கள் உட்கிடையை எத்தகைய உத்திகளைக் கொண்டு உணர்த்துகிறார்கள் என்பதற்கு இஃதொரு அழகிய எடுத்துக் காட்டாகும்.

எனவே, ஒரு வடிவத்தில் பலவிதப் பொருள்களை, பொருத்தமான இடத்தில், பொருத்தமாக, அமைத்தால் அவ்வடிவம் அதற்கேற்ற உட்பொருளையும் உணர்த்துமல்லவா? அங்ஙனம் ஒரு சில அடையாளப் பொருள்களை, சின்னத்தை, வடிவத்தோடு தொடர்புபடுத்துவதன் மூலம் சாதாரணச் செய்திகளை அல்லது கருத்துகளை வெளியிடுகின்றோம்.

அங்ஙனம் வெளிப்படும் கருத்துகள் இரண்டு வகைப்படும். முதல்வகை எளிமையானவை. மற்றொரு வகை ஆழ்ந்தவை.

ஆழ்ந்த கருத்துகள் எங்கும் எப்பொழுதும் எல்லோராலும் ஒப்புக் கொள்ளக் கூடிய உண்மை. அதாவது நிலைபெற்ற-என்றுமுள்ள-கருத்துகள் ஆகும். இந்த ஆழ்ந்த கருத்துகள் இவ்வுலக வாழ்க்கையைப் பற்றியதாகவோ அல்லது ஆன்மிகக் கருத்துகளாகவோ இருக்கலாம். ஓர் உதாரணத்தால் மேலும் விளக்குவோம்.

அழகிய உடற்கட்டினை உடைய பெண்ணொருத்தி ஒய்யாரமாக நின்று கண்ணாடியில் தெரியும் தன் முக அழகைப் பார்த்து புன்முறுவல் பூக்கிறாள். இச்சிற்பத்தைக் *கண்ணாடிப் பெண்* என்று கூறுகிறோம். இச்சிற்ப வடிவத்தைப் பார்ப்பவர்கள் அப் பெண்ணின் அழகில் மனதைப் பறிகொடுத்துவிடுவர். ஆனால், இது பிரதிபலிக்கும் கருத்து மிக ஆழமானது; உண்மையானது. பூத்துக் குலுங்கும் இம்மங்கையின் அழகு நிலையில்லாதது; மாயத்தன்மையது. உலகத்தில் காணப்படும் எல்லாம் அழியக் கூடியனவே; மாயத் தன்மை உடையவையே எங்ஙனமெனின், கண்ணாடியில் பிரதிபலிக்கும் மாயபிம்பம் போன்றது என்ற இக்கருத்தினை இச்சிற்பம் ஒரு சின்னத்தாலும் புன்முறுவலாலும் உணர்த்துகிறது. இம்மெய்ஞானக் கருத்தை

இச்சிற்பம் எவ்வளவு அழகோடு மனதில் ஆழப்பதிய வைக்கிறது! அழகிய பெண்ணோடு ஒரு கண்ணாடியைத் தொடர்பு படுத்தி ஓர் உண்மை, கலைப்பாங்குடன் புலப்படுத்தப்பட்டு விடுகிறது, இல்லையா?

கலை, கலைக்காகவன்றி வாழ்க்கைக்கு, வாழ்க்கையின் மேம்பாட்டிற்கு என்ற அடிப்படையில் மெய்ஞானக் கருத்துக்களுக்கும் அனுபவங்கட்கும் உருவளிப்பதையே சிற்பக்கலை தனது தலையாய இலட்சியமாகக் கொண்டிருக்கிறது.

மெய்ஞானக் கருத்துகளை-தத்துவங்களைச் சொற்களால் எவ்வளவு விளக்கிக் கூறிடினும், மனதிலே முற்றிலும் பதிவதும், நிற்பதும் மிகவும் அரிது. அத்தகைய பண்புப் பொருள்களை கலை மூலம் உணர்த்துவதும் எளிதன்று. உடலமைப்பு, அபிநயத் தோற்றங்கள், அணிகள் ஆகிய அத்தனையையும் கையாண்டாலும், கருத்தைத் தெளிவாகப் புலப்படுத்திவிட முடியாது. எனவே சிற்பிக்கு வேறு சில பொருள்களை எடுத்தாள வேண்டிய கட்டாயநிலை ஏற்படுகிறது. அப் பொருள்களும் ஏற்கெனவே மக்கட்கு அறிமுகமான பொருள்களாகவும் இருத்தல் வேண்டும். தெரிந்த பொருள்களைக் கொண்டே அரிய கருத்துகளை உணர்த்துதல் கலை முறை ஆகும். அது மட்டுமல்ல; தத்துவக் கருத்துகளை விளக்கிக் காட்ட கீழ்க்கண்ட பெருள்கள் சிற்பக்கலைக்கு தேவையாகின்றன. இவற்றில் ஒரு சில போர்க்கருவிகள், மற்றும் சில தொழிற்கருவிகள், இதை விடுத்து, இசைக் கருவிகள், மலர்கள், தருக்கள், கனிகள், உயிரினங்கள், வண்ணங்கள், வெவ்வெறு விதமான அன்றாட உபயோகப் பொருள்கள் ஆகியவையும் இப்பட்டியலில் இடம் பெறுகின்றன. அவையன்றி வேறு சில கற்பனை வடிவங்களும் உள. சுமார் 120 பொருள்கள் கருத்தை விளக்குவதற்குப் பயன்படுபவைகளாக-உத்திகளாகப் பயன்படுகின்றன.

அங்ஙனம் சிற்ப வடிவங்களில் கையாளப்படும் பொருள்களை, சின்னங்களை-ஆயுதங்கள் என்றே சிற்ப நூல்கள் குறிப்பிடுகின்றன. ஆயுதம் என்ற சொல் கருவி என்று பொருள்படும். ஆனால் மலர், கனி, குடை, வீணை, மீன் முதலிய பொருள்களையும் ஆயுதமாகவே சிற்பத் துறை கொள்கிறது. ஆகமங்களும் இங்ஙனமே கொண்டுள்ளன. உதாரணமாக, தசாயுதங்களைப் பற்றிப் பேசும் வாதுளாமகம், பத்மமாகிய தாமரையையும் ஆயுதமாகவே குறிப்பிடுகிறது. காரணம் யாதெனில், கருத்தை விளக்கத் தாமரையைக் கருவியாகக் கொண்டமையே தவிர தாமரை ஒரு படை ஆகாது. எனவே, கருத்தைத் தெரிவிக்கக் கருவியாக உதவும் அனைத்தும் 'ஆயுதம்' எனப்பட்டது.

முகம் பார்க்கும் கண்ணாடியும் ஓர் ஆயுதமே. இதனை அழகிய பெண்ணின் கையில் அமைத்தால், அவள் அழகின் நிலையற்ற தன்மையை அது பிரதிபலிக்கும். எனவே நிலையற்ற தன்மைக்குக் கண்ணாடி ஓர் அடையாளப் பொருள் அல்லது அக்கருத்தை உணர்த்தும் ஒரு கருவி என்று கொள்ளப்பட வேண்டும்.

அங்ஙனம் கீழ்க்காணும் பொருள்கள் ஒவ்வொன்றும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பொருளைத்தரும். இடத்திற்கேற்றவாறு பொருள் கொள்ளுதல் வேண்டும். இவற்றின் அத்தகைய பொருள்களை விளக்கிடும் தனி நூல் ஏதுமில்லை. ஒரு சில, ஆகமங்களில் காணப்படுகின்றன. இன்னும் சில, தத்துவ நூல்களிலிருந்து பெறப்படுகின்றன.

### 1. போர்க் கருவிகள்

1. சக்தி
2. சூலம்
3. சங்கு
4. சக்கரம்
5. வஜ்ரம் (இருதலைச்சூலம்)
6. தண்டம் (தடி)
7. உடைவாள்
8. கத்தி (சுரிகை)
9. கேடயம்
10. வில்
11. அம்பு
12. மழு
13. கதை
14. சம்மட்டி (செண்டு)
15. ஈட்டி
16. வேல்.

### 2. தொழிற் கருவிகள்

1. கலப்பை
2. உலக்கை
3. கொட்டாப்புளி
4. கரண்டிகள் (சிருக் - சிருவம்)
5. தந்தம்
6. கத்தரி
7. எழுத்தாணி
8. தாளம்
9. உழவாரப்படை
10. அங்குசம் (துறட்டி)
11. பரசு (கோடாரி)
12. குந்தாளி
13. அரிவாள்
14. சாட்டை
15. யோக தண்டம்
16. முழக்கோல்
17. உளி

## 3. இசைக் கருவிகள்

1. யாழ்
2. வீணை
3. குழல்
4. முரசு
5. மத்தளம்
6. பஞ்சமுக வாத்தியம்
7. உடுக்கை
8. எக்காளம்
9. மிருதங்கம்
10. தம்புரா.

## 4. உயிரினங்கள்

1. ரிஷபம்
2. சிம்மம்
3. குதிரை
4. மான்
5. ஆடு
6. பசு
7. வராகம்
8. பெருச்சாளி (மூஷிகம்)
9. நாய்
10. யாழி (கற்பனை)
11. மகரம் (கற்பனை)
12. மீன்
13. ஆமை
14. அன்னம் (கற்பனை)
15. மயில்
16. சேவல்
17. கிளி
18. கருடன் (கற்பனை)
19. காக்கை
20. பாம்பு
21. அட்டை
22. முயலகன் (கற்பனை)
23. வேதாளம் (கற்பனை)
24. காமதேனு (கற்பனை)

## 5. மலர்கள்

1. செந்தாமரை
2. குவளை (நீலோத்பலம்)
3. அல்லி
4. வெண்தாமரை
5. ஊமத்தை
6. எருக்கு
7. கற்பகக் கொடி (கற்பனை)
8. செங்கழு நீர்
9. கொன்றை.

## 6. கனிகள்

1. மா
2. பலா
3. வாழை
4. மாதுளை
5. கொய்யா
6. அன்னாசி
7. விளாம்பழம்.

## 7. தருக்கள்

1. அரசு
2. ஆல்
3. கற்பகம் (கற்பனை)
4. புன்னை

## 8. வண்ணங்கள்

1. வெள்ளை
2. சிவப்பு
3. கருப்பு
4. நீலம்
5. மஞ்சள்
6. பச்சை

## 9. பிற பொருள்கள்

1. மணி
2. கண்ணாடி
3. தீபம்
4. கலசம்
5. கமண்டலம்
6. கெண்டி
7. அஷமாலை
8. துளசி மாலை
9. ஸ்படிக மாலை
10. ஏடு
11. கொடி
12. கபாலம்
13. கட்வாங்கம்
14. குடை
15. வீரக்கழல்
16. சாமரை
17. சிலம்பு
18. தலைக்கோல்
19. செங்கோல்
20. தீ வட்டில்
21. கரும்புவில்
22. மலர்க் கணை
23. மோதகம்
24. கொக்கிறகு

25. கங்கை
26. சிரசு
27. நெற்கதிர்
28. கும்பம்
29. மலை
30. நூல்
31. பாசம்
32. லிங்கம்
33. ஆவுடையார்
34. ஸ்ரீவத்ஸம்
35. கௌஸ்துபம்
36. பலிபீடம்
37. துவஜ ஸ்தம்பம்
38. திருவாசி
39. முகங்கள்
40. கைகள்
41. கண்கள்.

படிமங்கள் எந்தப் பொருள்களால் செய்யப்படுகின்றனவோ அந்தப் பொருள்களைக் கொண்டே ஆயுதங்களையும் செய்தல் வேண்டும்.

மேற்கண்ட பொருள்களில் ஒரு சிலவற்றை மங்கலப் பொருள்களாகவும், மற்றும் சிலவற்றைச் சிறப்பான ஆயுதங்களாகவும் தொகுத்துள்ளார்கள்.

முன்னையதை அஷ்ட மங்கலம் என்றும் பின்னையதை தசாயுதம் என்றும் கூறுவர். இப் பாகுபாட்டினையும் சிற்பிகள் தெரிந்திருத்தல் நன்றாகும். எனவே, அவையும் இங்குத் தொகுத்துக் கூறப்படுகின்றன.

### சிவபெருமான் குணங்களை உணர்த்தும் பொருள்கள்

| | | |
|---|---|---|
| சூலம் | - | முக்குணம் |
| பரசு | - | சத்யம் (உண்மை) |
| கட்கம் (வாள்) | - | பேராண்மை |
| வஜ்ரம் | - | (முழுமை) பிரிக்க வொண்ணாதது |
| அபயம் | - | பேரருளுடைமை |
| நாகம் | - | பாசங்களினின்று நீங்கிய தன்மை |
| பாசம் | - | மாயை வடிவம் |
| அங்குசம் | - | நிறமின்மை |
| மணி | - | நாதமயம் (ஒலி வடிவு) |
| அக்னி | - | ஒடுக்கம் |

## தசாயுதங்கள்

(கீழே நான்கு தொகுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன).

| | (1) | (2) | (3) | (4) |
|---|---|---|---|---|
| 1. | வஜ்ரம் | கடகம் | வஜ்ரம் | நாராசம் |
| 2. | சக்தி | கபாலம் | சக்தி | நாகம் |
| 3. | தண்டம் | தண்டம் | பாசம் | சூலம் |
| 4. | கத்தி | நாராசம் (இருப்புச் சலாகை) | கத்தி | குந்தாலி |
| 5. | பாசம் | துடி | சாமரை | அங்குசம் |
| 6. | அங்குசம் | கொடி | அங்குசம் | வேதாளம் |
| 7. | கதை | வேதாளம் | கதை | தண்டம் |
| 8. | திரிசூலம் | சுரிகை | சூலம் | பாசம் |
| 9. | சக்கரம் | பாசம் | பத்மம் | வில் |
| 10. | பத்மம் | அங்குசம் | சக்கரம் | குடை |

## அஷ்டமங்கலம்

(கீழே ஐந்து தொகுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன)

| | (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|---|
| 1. | கண்ணாடி | கண்ணாடி | கண்ணாடி | சக்கரம் | கஜம் |
| 2. | பூர்ண கும்பம் | பூர்ண கும்பம் | பூர்ண கும்பம் | ரத்னகும்பம் | கும்பம் |
| 3. | ரிஷபம் | சிம்மம் | மயூரம் | மூஷிகம் | துவஜம் |
| 4. | இரட்டைச் சாமரம் | நீலோத்பலம் | சாமரை | பத்மம் | தீபம் |
| 5. | ஸ்வஸ்திகம் | ஸ்ரீவத்ஸம் | கமலம் | தந்தம் | சங்கு |
| 6. | சங்கு | பேரி | தீபம் | கத்தி | பத்மம் |
| 7. | தீபம் | சக்கரம் | சங்கு | சக்கரம் | ஸ்வஸ்திகம் |
| 8. | ஸ்ரீவத்ஸம் | இரட்டைச் சாமரம் | குங்குமம் | வில் | இரட்டைச் சாமரம் |

### அஷ்டமங்கல தேவதைகள்

கண்ணாடி - உமாதேவி
பூர்ண கும்பம் - கங்கை
விருஷபம் - பூமி
இரட்டைச் சாமரம் - காவேரி
ஸ்ரீவத்ஸம் - தேவி
ஸ்வஸ்திகம் - சரஸ்வதி
சங்கு - சசி தேவி
தீபம் - ஆகாயம்

### அஷ்டமங்கலம் உணர்த்தும் பொருள்கள்

சங்கு - படைப்பு
ஸ்ரீவத்ஸம் - லஷ்மி
கண்ணாடி - சூரியன்
பூர்ண கும்பம் - ஜலேஸ்வரன் (வருணன்)
இரட்டைச் சாமரம் - சப்த மாதர்கள்
ஸ்வஸ்திகம் - சரஸ்வதி
தீபம் - ஆகாயம்
வாகனம்/ரிஷபம் - கர்மம்.

## ஒருசில ஆயுதங்கள்

### 1. சக்தி

இவ் ஆயுதம், மூன்று சாய் சதுரங்களின் கோடிகள் ஒன்றோடொன்று நெருங்கியிருக்குமாறும், வரிசையாகவும் அமையப் பெற்று அப் பகுதி ஒரு தண்டத்தின் நுனியில் பொருத்தப்பட்ட அமைப்பில் இருக்கும். இவை யிரண்டும் பொருந்துமிடத்தில் ஒரு குண்டலம் அமைந்திருக்கும். மேலும், அச் சாய் சதுரங்களின் நெற்றியில் 4,6 அல்லது 8 இதழ்கள் கொண்ட இலைச் சின்னங்கள் இரு பக்கங்களிலும் பொறிக்கப் பட்டிருக்கும். இதுவே சக்தி ஆயுதம் வேலாயுதம் அல்லது சக்திவேல் என்று சொல்லப்படும். மேற்பகுதி இச்சா சக்தியையும், நடுப்பகுதி ஞான சக்தியையும், கீழ்ப்பகுதி கிரியா சக்தியையும் குறிக்கும் என்று இவ் அடையாளங்களுக்குப் பொருள் கொள்ளப் பட்டிருக்கிறது. இது முருகனின் சிறப்பான ஆயுதமாகும். இச்சை, கிரியை, ஞானம் ஆகிய மூன்று சக்திகளும் அவனுள் அடங்கும் என்பது பொருள். இக்காரணம் பற்றி சக்தியாயுதமே முருகனின் வடிவமெனக் கருதப்படும். இது தனித்து வழிபடு பொருளாகவும் கொள்ளப்படும்.

சத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் ஆகிய முக்குணங்களையும், பிரம்மன், விஷ்ணு, ருத்ரன் ஆகிய மூவரையும், மூன்று தத்துவங்களையும், கார்ஹபத்யம், ஆஹவனீயம், தாஷிணாத்யம் ஆகிய மூன்று அக்னிகளையும் இது குறிப்பிடும் என்பர். மேலும் மூன்று வேதங்களைக் குறிப்பதாகவும் கொள்ளப்படும்.

சக்தி ஆயுதத்தை, பொன், வெள்ளி, தாமிரம், இரும்பு, கல் ஆகிய பொருள்களில் செய்யலாம்.

தனித்த சக்தி ஆயுதத்தை வழிபடுவதும் ஒரு வழக்காகையினால் இவ் ஆயுதத்தை இயற்றிட அளவு முறைகளையும் சிற்ப ஆகம நூல்கள் விரிவாகக் கூறுகின்றன. கர்பக்கிருஹத்தின் உள் அளவால் சக்தி ஆயுதத்தின் உயரத்தை மூன்று விதமாகக்

கொள்ளலாம். அவை கர்பக் கிருஹ உள் அகலம், அதன் 7/8 பங்கு அல்லது 6/7 பங்கு ஆகியவையாகும்.



சக்தி ஆயுதம்

ரத்னி என்ற கை முழத்தாலம் 3 வகை உயரங்களைக் கொள்ளலாம்.

4, 3 அல்லது 2 ரத்னி அளவினதாக சக்தி வேலின் உயரம் இருக்கலாம். இங்ஙனம் கொண்ட உத்தேச அளவுக்கு ஆயாதிப் பொருத்தம் காண வேண்டும். நற்பயனைத் தரும் அளவைத் தேர்தல் வேண்டும். தேர்ந்தெடுத்த உயர அளவில் ஐந்தில் ஒரு பங்கு சக்தி ஆயுதப் பகுதியும், மீதி அதைத் தாங்கும் தண்டத்தின் நீளமுமாகும்.

சக்தி ஆயுதத்திற்குரிய பகுதியை மூன்று பாகங்களாகப் பிரித்து அதன் மேல் முன்பு குறிப்பிட்ட வண்ணம் இலைகளைப் பொறித்தல் வேண்டும். இலை வடிவம் சாய் சதுரத்தை நிறைந்திருக்க வேண்டும். பத்ர (இலை) அகலத்தில் பத்தில் ஒரு பங்கு அதன் கனம் ஆகும். அவ் அளவை மையத்திற்கொண்டு, பக்கங்களை கூர்மையுடையதாகச் செய்தல் வேண்டும்.

இலை ஒன்றோடொன்று நெருங்கியிருக்குமிடம் சக்தி எனப்படும். இச் சந்தியில் அதன் அகலம் இலை அகலத்தில் ஐந்தில் ஒரு பங்கிருத்தல் வேண்டும். சந்திப் பகுதியின் அடியில் தாழி, குடம், பலகை என்ற தூண் அணிகளை அமைத்தல் வேண்டும். பலகையின் கோடிகளில் அரசிலைகளை உலோகத்தால் செய்து தொங்கவிட வேண்டும்.

சக்தியாயுத்தின் தண்டத்தை, உபானம், பத்மம், கம்பு ஆகிய சித்து வர்க்கங்கள் கொண்ட பத்ம பீடத்தின் மீது உறுதியாக நிறுத்தி அமைக்க வேண்டும். சக்தி தண்டம் உருண்டிருத்தலும் வேண்டும்.

இத்தகைய சக்தி ஆயுதம், யௌகிகம் என்றும் லௌகிகம் என்றும் இருவகையாகும். அரசன், ஊர்மக்கள், செய்விப்போன் ஆகியோருக்கு நன்மை அளிக்கும் பொருட்டு நிறுவப்படும் சக்தி ஆயுதம் யௌகிகம் எனப்படும். இஃது ஆலயங்களில் தனித்த இடத்தில் நிறுவப்படும். பிற வேலைகளுக்குரிய சக்தி ஆயுதங்கள் எல்லாம் லௌகிகம் என்று சொல்லப்படும்.

படிமங்களில் சக்தி ஆயுதத்தைக் கையில் பிடித்திருக்கச் செய்யும் போது அதனை ஒரு முக நீளமுடையதாகச் செய்வது வழக்கு. இது கர்த்தரீ முக ஹஸ்தத்தில் தாங்கப்படும். இதற்கு நாளம் இல்லை. அங்ஙனமின்றி, கடக முத்திரையோடு தனித்துப் பிடிக்கும்போது அதன் கீழே நாளமுடையதாகச் செய்தலும் மற்றொரு வழக்கு. முருகனைச் சக்தி தரனாகச் சித்திரிக்கும்போது இங்ஙனம் அமையும்.

சக்திவேலை கல்லால் ஆன மூல விக்ரஹத்தோடு சேர்த்து வைத்து வழிபடுவதும் ஒரு வழக்கு. முன் சொன்னபடி கர்பக்கிருஹ அளவால் நீளம் கொள்ளலாம். அல்லது முருகனுடைய படிம உயரத்திற்குச் சம நீளமுடையதாகவோ, முக்கால் பங்கினதாகவோ அல்லது இரண்டிற்கும் உள்ள வித்தியாச அளவை எட்டுக் கூறுகளாக்கி முக்கால் பங்கோடு ஒவ்வொரு கூறு ஏற்றி ஒன்பது விதமான நீளமாகவோ கொள்ளலாம்.

சக்தி வேற்பகுதியின் நீளம் 12 விரல்; அகலம் 4 விரல்; இதன் நாளம் 5 விரல். இதில் 12 பட்டங்கள் அல்லது முகங்கள் அமையும். நாளத்தின் கனம் 2 விரல்.

## 2. சூலம்

ஒரு தண்டத்திலிருந்து மூன்றாகக் கிளைத்த அமைப்புடையது சூலம். இது பிறைச்சந்திரன் போன்ற வட்டப் பகுதிகள் நடுவில் கூரிய கத்தி செருகிய தோற்றமுடையதாம். இதனை மூவிலை நெடுவேல், முத்தலைவேல் என்றும் கூறுவர். முக்கிளைகளானவை ஆரணி, ஜெனனீ, ரோதயித்ரி என்ற மூன்று சக்திகளைக் குறிக்கும் என்பர் நூலோர். ஜெனனீ ஆக்கலையும், ஆரணி அழித்தலையும், ரோதயித்ரி காத்தலையும் குறிக்கும். உயிர்களுக்குத் தனு, கரண, புவன போகங்களை உண்டாக்குவது-ஜெனனீ ஆகிய படைப்பாற்றல். உயிர்களைப் போகங்களில் நிறுத்தி துய்க்கச் செய்வது ரோதயித்ரியாகிய காக்கும் ஆற்றல். உயிர்களைத் தத்துவத்தினின்றும் நீக்கி தத்துவாந்தத்தை அடைவிப்பது ஆரணியாகிய துடைக்கும் ஆற்றல். இது சிவபெருமானின் சிறப்பாயுதமாகும். கொற்றவை போன்ற பராசக்திகட்கும் இவ்வாயுதம் உரியதாகும். மேலும், பிரம்மா, விஷ்ணு, ருத்ரர்களையும் சாத்விக, ராஜஸ, தாமஸமாகிய முக்குணங்களையும் உணர்த்தும்.

சூலத்திற்குத் தேர்ந்த உயரத்தை 16 கூறுகளாக்கி, 9 கூறு சூலதண்டம். அதன் மீதுள்ள கர்ணிகை உயரம் 1 கூறு, சூலத்தின் உயரம் 6 கூறு. சூலத்தின் அகலம் 6 அல்லது 9 கூறு இருக்கலாம்.



சூலம்

## 3. கத்தி

இது சிறு கத்தியாகும். சுரிகை என்பது மற்றொரு பெயர். வீரர்கள் தற்காப்புக்காக உபயோகிக்கும் ஆயுதமாகும். இஃது ஒருமுக



சுரிகை

நீளமிருத்தல வேண்டும். இதன் உயரத்தை 12 கூறுகளாக்கி, கைப்பிடி 4 கூறு. கர்ணிகை 2 கூறு, கத்தி 6 கூறு, கத்தியின் அகலம் 3 கூறு இருத்தல் வேண்டும். கத்தி நீண்ட முக்கோண வடிவினில் அமைதல் வேண்டும். நடுவே கனத்தும், ஓரங்களில் கூரியதாகவும் இருத்தல் வேண்டும்.

இஃது உயிர் மீது படிந்த பாசங்களை அறுக்கும் கருத்தை உணர்த்தும்.

## 4. தண்டம்

இது தடியாகும. இதன் நீளம் 16 விரல்; கனம் 2 விரல்; மரணத்தையும், தண்டனையையும் இது சுட்டிக்காட்டும்.

## 5. வஜ்ரம்

இருபக்கங்களிலும் சூலமும் இடையில் மூன்று சுற்றுகளும் கொண்டு விளங்கும் ஆயுதம் வஜ்ரம் ஆகும். இருதலைச் சூலம் என்றும் இது பெயர் பெறும். கையில் பிடிக்கக் கூடிய அளவினதாக இதனை அமைந்தல் வழக்கு.



வஜ்ரம்

இப்படை 36,26,18 அல்லது 10 விரல் நீளமுடையதாகவும் 8,7 அல்லது 5 விரல் அகலமுடையதாகவும் இருக்கலாம். தக்க அளவை இடத்திற்குப் பொருத்தமாகத் தேர்ந்து செய்தல் வேண்டும்.

வஜ்ரம் இறைவனின் அபேத நிலையைக் குறிக்கும். மேலும், சிவசக்தியின் பிரிக்க முடியாத ஒருமைப்பாட்டையும் உணர்த்தும்.

## 6. பாசம்

இது மூன்று வடமாகவுள்ள கயிறை வளைத்துப் பிடித்த அமைப்பாகும். இதனை முறுக்கியும், முடிச்சுடனும் அமைப்பதுண்டு. பிரிந்து விடாத வண்ணம் சிறு கயிறால் கட்டியும் அமைக்கப்படும். பாசத்தின் உச்சியில் மலர் ஒன்றைச் செருகி அழகூட்டுதல் வேண்டும்.



பாசம்

பாசத்தின் உயரம் 16 விரல்; அதன் மேற் பகுதி அகலம் 6 விரல்; வளைந்தும் வட்டமாகவும் அமையும். கடக முத்திரையில் பிடிக்கப்படும் கருவி.

மூன்று பிரிகள் (பாசத்திரயம்) ஆணவம், கன்மம், மாயை, ஆகிய மும்மலங்களைக் குறிக்கும். இறைவன் உயிர்களுக்குப் போகங்களைக் கொடுத்து, அதனோடு கட்டுண்டிருக்கச் செய்யும் கருத்தைப் பாசம் என்று கயிறு காட்டுகிறது.

## 7. அங்குசம்

துரக்கோலின் மேற்பகுதியில் கொக்கியோடு கூடிய கருவி இஃதாகும். இது துறட்டியென்றும் சொல்லப்படும். யானையை அடக்குவதற்கு யானைப்பாகன் உபயோகிக்கும் ஆயுதம். விநாயகர் பிடிக்கும் ஆயுதங்களில் இஃதும் ஒன்று.

இது வயப்படாத பொருளை வளைத்து வயப்படுத்தும் ஆயுதம். இதனைக் கடவுட் படிமம் தாங்கி, உயிர்களின் சித்த மலமாகிய ஆவணத்தை

அடக்கி இறுதியில் உயிர்களைத் தன் வயப்படுத்துதலை உணர்த்தும் சின்னமாக விளங்குகிறது.




அங்குசம்

படிமங்களில் இதனை 16 விரல் நீளமுடையதாகச் செய்தல் வேண்டும். சிவபெருமானின் பத்துக் குணங்களில் ஒன்றான நிறமற்ற தன்மையை அங்குசம் குறிப்பிடும்.

## 8. கொடி

கொடியும் தண்டமும் சேர்ந்த அமைப்புடையது. தண்டத்தின் நீளம் 12 விரல், அதன் அகலம் 1 விரல், கொடியின் அகலம் 6 விரல், நீளம் 8 விரல். கொடியானது வெற்றியின் சின்னமாகும். அதிகாரத்தையும் உணர்த்தும். இதைச் சேவற் கொடியோனாகிய முருகன் படிமத்தில் காணலாம்.

## 9. கதை

இஃது ஒரு தண்டமும் அதன் மீது உருண்டையான அல்லது நீண்ட உருண்டையான பகுதியும் சேர்ந்த ஆயுதமாகும். இது கைவிடாப் படையைச் சேர்ந்தது (சஸ்திரம்); (கைவிடு படை-அஸ்திரம்)

கதையின் மொத்த நீளமான 16 விரலில் தண்டம் 10 விரல் நீளமும், உருண்டையான பகுதியின் நீளம் 4 விரலும், அதன் மீதுள்ள காம்பு 2 விரலும் இருத்தல் வேண்டும். தண்டத்தின் கனம் 1 விரல்; உருண்டைப் பகுதியின் கனம் 4 விரல், காம்பின் அடிப்பகுதி 2 விரல்.

விஷ்ணுவின் கதைக்கு *கௌமோதகி* என்று பெயர்.

அடி பெருத்து, முறையே நுனி வரை சிறுத்து, பூண்கள் பொருந்திதாகவும் கதையை அமைப்பதுண்டு. இதனை துவார பாலகர் படிமத்தில் காணலாம். படிம உயரத்திற்கேற்றபடி நீளத்தைக் கொள்ளலாம்.




கதை

## 10. வில்

எப் படிமத்திற்கு வில் ஆகிய ஆயுதம் செய்யப்பட வேண்டுமோ அப் படிமத்தின் தேகாங்குலத்தால் அளவு கொள்ள வேண்டும். இங்ஙனம் 100 அங்குல அளவினதாக வில்லைச் செய்தல் வேண்டும். மேலும், இவ் வளவிலிருந்து 9,7,5,3 அங்குல அளவினைக் கூட்டியோ, அல்லது குறைத்தோ செய்யலாம். அதாவது வில்லின் நீளம் 109,107,105,103, 100,97,95,93, 91 ஆகிய அளவுகளில் ஏதேனும் ஒன்றாக இருக்கலாம்.

வில்லானது மையத்தில் பருத்தும், அங்கிருந்து இருபக்கங்களிலும் முறையே கரைந்தும் அமையும். கைப்பிடிக்குள் அடங்கும் கனமுடையதாக வில்லின் மையப்பகுதி அமைதல் வேண்டும். இந் நடுப்பகுதிக்கு நாபி என்று பெயர். இது வில்லின் நீளத்தில் மூன்றிலொரு பகுதி நீளமுடையதாகும். வில்லின் நுனிகள் அரை அங்குல கனமுடைதாக இருத்தல் வேண்டும். இம் முனைகளில் முன் மூன்றங்குலம் மடங்கி வளைந்து வட்டமாக அமைதல் வேண்டும்.

வில் மூன்று வளைவுகளுடனோ அல்லது பிறைச் சந்திரன் போன்ற ஒரே வளைவுடையதாகரோ இருக்கலாம்.



வில்

வில்லின் நீளத்தில் எட்டில் ஒரு பங்கு குறைந்ததாக நாணின் நீளமிருத்தல் வேண்டும்.

விஷ்ணுவின் வில்லுக்கு சாரங்கம் என்றும், இராமனின் வில்லுக்கு கோதண்டம் என்றும், சிவபெருமானின் வில்லுக்கு பினாகம் என்றும் அர்சுனனின் வில்லுக்கு காண்டீபம் என்றும் பெயர்.

## 11. அம்பு

அம்பின் (கணையின்) முகம் 5 அங்குல அகலமும் அவ் அளவு நீளமும் கொண்டு கூரிய தாயும் இருக்கும். அம்பின் மொத்த நீளம் படிமத்தின் தேகாங்குலத்தால் 21 அல்லது 42 ஆக இருக்கலாம். அம்பின் கனம், படிமத்தின் சுண்டு விரல் கனத்துக்குச் சமமாகும்.

அம்பின் அடிப்பகுதி பலவகை சிறகுகளால் அலங்கரிக்கப்பட வேண்டும். இறகின் அகலம் ஓர் அங்குலமாகும். இவ் அடிப்பகுதியில் அம்பை நாண கயிற்றில் நிலைக்க வைத்து எய்வதற்கு ஏதுவாக நாபி என்ற பெயரில் ஒரு பள்ளம் உண்டு. இது அம்பின் அடி அகலத்தில் மூன்றில் ஒருபங்கு ஆழமும் அகலமும் கொண்டிருக்கும். அம்பறாத்தூணி (புட்டில்) அம்பின் நீளத்திற்கேற்றவாறு அமைத்தல் வேண்டும்.

## 12. பரசு

இது *டங்கம்* என்றும் *கோடரி* என்றும் மழு என்றும் சொல்லப்படும். இதன் நீளம் 12 விரலாகும். மரத்தாலான காம்பின் மீது உருண்டையாகவோ, முட்டை வடிவினதாகவோ உள்ள தலைப்பகுதியின் மையத்தில் கூரிய கோடரி செருகி அமைக்கப்படும். இதுவே மழுவின் அமைப்பாகும். தலையிலும்,




பரசு

காம்பிலும் அணிகளைச் செய்து அழகுற அமைத்தல் வேண்டும். இது சிவபெருமானின் ஆயுதங்களில் ஒன்று. இது கர்த்தரீமுக ஹஸ்தத்தில் பிடிக்கப்படும். கோடரி வெளிமுகமாக இருத்தல் வேண்டும். இது தத்துவப் பொருளை உணர்த்தும் கருவி. சிவபெருமானின் சத்யம் (உண்மை)-என்ற குணத்தை மழு உணர்த்தும். பராசக்தியின் உருவமாகவும், லயத்தானமாகவும் கொள்ளப்படுகிறது. சிவ பெருமானின் கையிலிருக்கும்போது, அவர் தன்னைப் பராசக்திக்கு மேலானவராகவும் லயசிவமாய் இருப்பவராகவும் உணர்த்துகிறார் என்பது பொருளாகும்.

## 13. உடுக்கை

இது துடி, டமருகம் என்ற பெயர்களை உடையது. இரண்டு பத்ம வடிவமான கிண்ணங்களின் வாயை பசுமாட்டின் தோலால் மூடி அக் கிண்ணங்களின் அடிவாரங்கள் ஒன்றையொன்று நெருங்கி இருக்குமாறு அமைத்து,

கிண்ணத்தின் வாயில் உலோக வளையங்களைப் பொருத்தி, அதிலிருந்து தோல் வார்களால் அல்லது நரம்பால் வாயை இழுத்துக் கட்டி விரைப்பாக்கி அமைத்ததே உடுக்கையாகும். உடுக்கையில் நடுப்பகுதி சுருங்கி இருக்கும். அவ் இடத்தில் இரண்டு கயிறுகளைக் கட்டி அவற்றின் நுனியில் முடிச்சிட்டு அமைக்க வேண்டும்.



உடுக்கை

துடியானது இறைவனின் படைத்தற் சக்தியைக் குறிக்கும்.

### 14. சக்கரம்

சக்கரம் (ஆழி) விஷ்ணுவின் சிறப்பான ஆயுதம். விஷ்ணுவின் சக்கரத்திற்குச் சுதர்சனம் என்று பெயர். இது வட்ட வடிவமாகவும் நான்கு திசைகளில் தீச்சுடர்களை கொண்டதாகவும் விளங்கும்.

விஷ்ணுவின் வலது மேற்கரத்தில் கர்த்தரீமுக முத்திரையோடு இக் கருவியைப் பிடிக்கச் செய்வது வழக்கு. எனினும் ஆகம வழிபாட்டு முறையில் உத்ஸவத்திற்காகத் தங்கம், வெள்ளி, செம்பு, எஃகு அல்லது மரத்தால் செய்வதுண்டு. இதை *சக்கரத்தாழ்வார்* என்றோ *சுதர்சன ஆழ்வார்* என்றோ வழங்குவது மரபு.

## அளவு கொள்முறை

மானாங்குலம் அல்லது மாத்ராங்குலத்தினால் அளவிட்டுச் செய்வது ஒரு முறை. துருவ பேரம் அல்லது கௌதுகபேரம் ஆகிய இவ்விரண்டில் ஏதேனுமொன்றின் தேகாங்குலத்தினாலும் செய்யலாம். எங்ஙனமாயினும் 16, 12, 8 அங்குல விட்டமுடையதாகவும், வட்ட வடிவமாகவும் இருத்தல் வேண்டும். மேற் பட்டத்தின் அகலம் மூன்று, இரண்டு அல்லது ஒரு அங்குலம் இருக்கலாம். சக்கரத்தின் நடுவில் கனம் ஓரங்குலமாகும். வட்ட மையத்தில் ஆரங்கள் வந்து கூடுமிடமாகிய ஆரகூடத்தின் விட்டம் 3 அல்லது 2 அங்குலமாம். இது பத்ம வடிவினதாம். ஆரங்கள் மூங்கில் இலை போல நீண்டிருத்தல் விசேடமாகும். நீளமும் அகலும் சமமான இலை வடிவாகவும் ஆரங்களைச் செய்யலாம். 24 ஆரங்கள் உத்தமம்; 20 ஆரங்கள் மத்திமம், 16 ஆரங்கள் அதமம் ஆகும்.




ஆழி

மேலும், சக்கரத்தின் தலை, அடி, பக்கங்கள் ஆகிய நான்கு இடங்களில் 3 அங்குல நீளமுடை அக்னிச் சுவாலைகளை அமைத்தல் வேண்டும். சக்கரத்தின் பட்டத்தில் கொடிக்கருக்கு அணிகளைப் பொறித்தல் வேண்டும். அங்ஙனம் சக்கரத்தைச் செய்து அதனடியில் ஆதாரப் பலகை அமைத்துப் பொருத்துதல் வேண்டும். இது பத்மபீடமாக இருத்தலோடு இரண்டு சிம்மங்கள் அல்லது மதலைகள் அச் சக்கரத்தைத் தாங்கிப் பிடிப்பதுபோல் செய்தல் வேண்டும். விஷ்ணுவின் துடைக்கும் ஆற்றலைச் சக்கரம் குறிப்பிடும்.

சக்கரமானது காலச் சக்கரம், கிரஹச் சக்கரம், சௌரச் சக்கரம், தர்மச் சக்கரம், உலகச் சக்கரம், ஆக்ஞா சக்கரம் ஆகியவற்றையும் உணர்த்தி நிற்கும்.

### 15. சங்கு

சங்கின் உயரம் 12 அங்குலமும் அவ்வளவு அல்லது 9 அங்குலம் அகலமும் இருத்தல்

வேண்டும். சங்கு வலம் சுழித்ததாகவோ இடம் சுழித்ததாகவோ இருக்கலாம். அடியிலும் உச்சியிலும் பக்கங்களிலும் சுடர்களோடும், மேற் பகுதியில் சித்திர வேலைப்பாடுகளோடும் செய்தல் வேண்டும். இதனை கர்த்தரீமுக ஹஸ்த முத்திரையால் இடது பக்கம் பிடித்தல் வழக்கு.




சங்கு

சங்கின் உயரத்தில் முக்கால் பங்கு அகலம் கொண்டு அமைத்தால் சங்கு பெறும் அழகிய தோற்றத்தைக் காண்க.




சங்கு

விஷ்ணு மூர்த்தம் பிடித்திருக்கும் சங்கிற்கு பாஞ்சஜன்யம் என்று பெயர்.

சங்கிலிருந்து ஓங்கார ஒலி எழுப்புவதால் இஃது ஆக்கல் தொழிலைக் குறிக்கும் சின்னமாகும்.

## 16. கமண்டலம்

இது தண்ணீர் வைத்துக் கொள்ளும் பாத்திரம். மேற்பகுதியில் வளைவான கைப்பிடியும் பாத்திரத்தின் அடிவயிறில் வளைவுடன் கூடியதும். மூக்கெனப்படுவதுமான ஒரு சிறு குழாயும் பொருத்தப்பட்டிருக்கும். அடிப் பகுதியில் கலவடை வளையம் ஒன்றும் பொருத்தப்பட்டிருக்கும்.

கமண்டலத்தின் அகலம் 9 விரலும், உயரம் அதில் பாதி அல்லது முக்கால் பங்கினதாகவும் இருத்தல் வேண்டும். முனிவர்தம் கையில் எப்பொழுதுமுள்ள பொருள். குடுவையில் தண்ணீர் அடங்கியுள்ளது போல் தம்முள் நிறைந்தவர் முனிவர்கள் என்பது பொருள்.




கமண்டலம்

இக் கமண்டலம் கைப்பிடியில்லாமல் நீர் கொள்ளும் உடற்பகுதியும் சிறு குழாயும் கைக்குள் அடக்குவதுமான அளவில் சிறியதாகவும் இருக்கும். அது குண்டிகை எனப்படும்.



குண்டிகை

கலைமகள் தனது கரத்தில் இக் குண்டிகையைப் பிடித்திருப்பாள். பூமியின் மீது பரந்து விரிந்து

ஆழ்ந்து கிடக்கும் நீர், குண்டிகையில் அடங்கியிருப்பது போலக் கலைமகளிடம் எல்லாக் கலை ஞானங்களும் அடங்கியுள்ளன என்பதை இஃது உணர்த்தும்.

உலகமனைத்தும் தண்ணீர் மயமாக இருந்தது என்றும், இத்தகைய உலகம் தன் கையினின்றும் வெளிப்படுகிறது என்ற கருத்தையுணர்த்த பிரமதேவனின் கையில் கமண்டலம், குண்டிகை கொடுக்கப்பட்டிருக்கிறது.

## 17. மணி

ஒலியே உலகின் முதல் தோற்றம். ஒலியின் வடிவம் ஓம். இதுவே மூலமந்திரம் எனப்படும். எனவே, மணி, ஒலியை உணர்த்தும் சின்னமாகும். இஃது இறைவனின் மந்திர (ஒலி) வடிவைக் குறிப்பதாயிற்று. நாத தத்துவத்திற்கு இறைவனே தலைவன் என்பதை உணர்த்தத் தெய்விகப் படிமங்களில் அடையாளப் பொருளாகக் கொள்ளப்படுகிறது.

இஃது 6 விரல் அகலமும் 6 விரல் நீளமும் கொண்டு பூசை மணிபோல் அமையும். இதன் மீது 6 விரல் நீளமும் ஒரு விரல் கனமும் கொண்ட காம்பு ஒன்று பொருத்தப்பட்டிருக்கும். அரை விரல் கனமும் 3 விரல் நீளமுமுடைய நாக்கு இதனுள் பிணைக்கப்பட்டிருக்கும். இவ்வளவினதாக மணி எழுப்புவது ஓங்கார ஒலியாக அமையும்.

## 18. பாம்பு

இது குண்டலினி சக்தியின் சின்னம். யாவற்றையும் நியமிக்கும் ஆற்றலையும் குறிக்கும். உலகம் தோன்றவும் ஒடுங்கவும் இறைவனே நிமித்த காரணம் என்பதைப் படிமத்தில் காட்டிட பாம்பை அணியாகவோ, கருவியாகவோ அமைத்தல் வழக்கு. மூன்று தலையுள்ள நாகத்தை மும் மலங்கள் படிந்த ஆன்மா என்று கூறுவர். இஃது ஆணவமலம் கொண்ட உயிரையும் குறிக்கும். ஐந்துதலை ஐம்புலன்களையும்,ஏழுதலை ஐம்புலன்களுடன் புத்தி, அகங்காரம் சேர்ந்த ஏழினையும் சுட்டுவதாகும். இவை திருமாலின் பீடமாகவும், சயனப் பாயாகவும் காட்டப்பெறும். தவிர்த்து, இது நடராஜப் பெருமான் காலடியில் அழுந்திக் கிடக்கும் முயலகனின் கரத்திலும் காட்டப்படும்.

வாசுயென்ற பாம்பை சிவபெருமான் அணிந்திருப்பார். இது மூவுலகையும் சாம்பலாக்கும் அவரது கொடுஞ்சினத்தைப் புலப்படுத்தும்.

## 19. திருவாசி

தோரணமே திருவாசி எனப்படும். இது மகர தோரண வகையைச் சார்ந்தது. அரை வட்ட வடிவினது. அதன் உச்சியில் நாசித்தலையும்,. இரு நுனிகளில் இரு மகரங்களும் அமையும். மகரவாயிலிருந்து கட்டுமாலையும், முத்துத் தாமங்களும், விளிம்பில் சுடர்க்கருக்குகளும் அமைந்திருக்கும். இத்தகைய அரைமதி வடிவங் கொண்ட அமைப்பு இரு தூண்களின் மேல் நிறுத்தப்பட்டிருக்கும். இதற்குத் *திருவாசி* என்று பெயர்.

## 20. மகரங்கள்

திருவாசியின் இரு பக்கங்களிலும் உள்ள மகரங்கள் தனிப் பொருளுடைய கற்பனை வடிவம். மீன் உடலும், யானைத் துதிக்கையும், சிம்மக் கால்களும், குரங்கின் கண்களும், பன்றியின் காதுகளும், கோரைப் பற்களும், பறவையின் இறக்கைகளும், பல்வகை இலை,



மகரம்

தழைகளும் கொண்ட வாலும் உடைய ஓர் உருவம். இதை எந்த இனத்தில் சேர்ப்பது என்பதை அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. இது பல்லுயிரினங்களின் கூட்டு. இது குழப்ப நிலையை-பிரளயக் காலத்துக் குழம்பிய நிலையைக் காட்டும். இதன் வாயிலிருந்தே கட்டு மாலைகள், சுடர்கள், முத்துத் தாமங்கள் வெளி வருவதாக உளதல்லவா? இது, லயத்திலிருந்தே பிரபஞ்சம் தோன்றியது என்பதைக் காட்டும். திருவாசியின் உச்சியில் உள்ள நாசித்தலையானது, இளித்த வாயும், உருண்ட விழிகளும், கோரைப் பற்களும் கொண்டு அமையும். இது உலகம் தோன்றி வளர்ந்து பராக்கிரம நிலையின் உச்சக்கட்டத்தைக் காட்டும். அந் நிலையிலிருந்து பிரபஞ்சப் பொருள்கள்

அனைத்தும் சாய்ந்து, சரிந்து, மீண்டும் மகர வாயில் அதாவது லயநிலை அடைகிறது. இதற்கு நாயகமாக இறைவன் உள்ளான் என்ற கருத்தையுணர்த்த கடவுட் படிமத்தின் பின்னணியில் இது வைக்கப்படுகிறது.

ஆனந்த நடம் புரியும் நடராஜப் பெருமானின் திருவாசியில் நாசித்தலை அமைப்பதில்லை. திருவாசியின் விளிம்பில் தீச்சுடர்களே வரிசையாக அமைந்து விளங்கும். இத் திருவாசி, ஓங்கார வடிவினதென்ற கருத்தையுணர்த்தும். வட்ட வடிவமான இத் திருவாசி உலகத்தை யுணர்த்துகிறது. அதற்குள் காணப்படும் பரம்பொருள் அண்டசராசரம் அனைத்தின் உள்ளிருந்து அனைத்தையும் இயக்கி ஆட்டிக் கொண்டிருக்கிறது என்ற தத்துவத்தை உணர்த்தும்.

## 21. கௌஸ்துபம்

விஷ்ணு அணியும் அணி. பிரபஞ்சத்தினுள் ஆடும் பரஞ்ஜோதியாகிய அந்தராத்மாவை இஃது உணர்த்தும் என்பர் சிலர். ஞானத்தை உணர்த்தும் என்பர் வேறு சிலர்.

## 22. அக்னி

இறைவனின் அழிக்கும் ஆற்றலைக் குறிக்கும். ஆன்மாவின் மீது படிந்துள்ள பாசங்களைச் சுட்டு, ஆன்மாவைத் தூய்மைப்படுத்துகிற இறைவனின் ஆற்றலைக் குறிக்கும் அடையாளம்.

அக்னியின் உயரம் 7,8 அல்லது 9 தேகாங்குலமாகும். அகலம் 5 அங்குலம். அக்னியின் நாக்காகிய சுடர்கள் 3,5 அல்லது 7 ஆக இருத்தல் வேண்டும். இதில் நடுச்சுடர் வலம் சுழித்ததாக இருத்தல் வேண்டும்.

## 23. வீரக்கழல்

இது கயிற்றில் கட்டிய சிறு மணி. இது கண்டை எனவும் பெயர் பெறும். இது போர் வீரர்களின் வெற்றிச் சின்னம். இதனைக் கெண்டைக் காலில் அணிந்து கொள்வர். தலையில் வாகை மாலை சூடிக் கொள்வதும், கழுத்தில் புலிப்பல்தாலி அணிந்து கொள்வதும், கையில் கொடி பிடிப்பதும், காலில் மணிகட்டிக் கொள்வதும், வீரத்தைப் புலப்படுத்திக் கொள்ளும் முறையாகும். நடராஜப் பெருமானின் காலில் கட்டப்பட்டிருக்கும் வீரக் கழல் தத்துவப் பொருளுடையது. உயிர்களின் பழவினைகளை அறுத்து வேகம் கெடுத்தாண்டு வீடுபேறளிக்கும் வேந்தன் சிவபெருமான் என்பதை இஃது உணர்த்தும். இராமன் போன்ற வெற்றி வீரத்திருவுருங்களிலும் இக்கழல் அணிவித்தல் மரபாகும்.

## 24. கட்வாங்கம்

இது கால் அல்லது தொடை எலும்பைத் தண்டமாகக் கொண்டு அதன் உச்சியில் மண்டை ஓட்டைச் செருகி வைத்து, அத் தண்டத்தை பாம்பு ஒன்று சுற்றி வளைத்து மேல் நோக்கி எழுந்து, மண்டை ஓட்டின் கண் வழியாக வெளிக் கிளம்பி, படமெடுத்து நிற்கும் அமைப்புடைய ஓர் ஆயுதம். இது கதை போன்ற ஆயுதமே. கால் எலும்பைத் தண்டமாகக் கொள்வதற்கு மாற்றாக மரத்தாலான தண்டத்தையும் அமைக்கலாம். காபாலிக சைவ சமய படிமத்தைச் சேர்ந்தது. இது சிவபெருமானின் ஆயுதமாகும். யோகிகள் கையில் பிடித்திருக்கும் தண்டமாகவும் கொள்ளப்படுகிறது.



கட்வாங்கம்

இரண்டு முக உயரமும் இரண்டு விரல் கனமும் கொண்டதாக இவ்வாயுதம் இருத்தல் வேண்டும். ஐந்து விரல் அகலமும் 7 விரல் உயரமும் கொண்டு தலைக்கூடு அமைத்தல் வேண்டும்.

## 25. உடைவாள்

இது நீண்ட கத்தியும், கைப்பிடியும் கொண்டுள்ள போர்க்கருவியாகும். இது கட்கம் என்றும் சொல்லப்படும். இதன் நீளம் 32 விரலாகும். கத்தி, நடுவில் கனத்து இருபக்கங்களிலும் சரிந்து கூர்மையுடையதாக

இருக்கும். கடக ஹஸ்த முத்திரையில் இக் கத்தியைச் செங்குத்தாகப் பிடித்தல் வேண்டும். இது வீரத்தின் அடையாளம். மேலும் இஃது ஆன்மாக்களின் அஞ்ஞானத்தை வெட்டி வீழ்த்தி, ஞானம் பெறச் செய்வதாக விளக்கம் கூறி ஞானத்தின் அடையாளமாகவும் படிமத்தில் கொள்ளப்படுகிறது.



கட்கம்



உடைவாள்

## 26. கேடயம்

உலோகத் தகட்டால் ஆனதும் வட்டம் அல்லது நீண்ட சதுர வடிவம் கொண்டதும். வெளிமுகத்தில் குவிந்து உள்முகத்தில் குழிந்து, குழிந்த உட்பகுதியில் கைப்பிடியும் கொண்டமைந்த கருவி, கேடயம் ஆகும். இது தோலாலும் செய்யப்படும். இதற்குக் *கேடகம்* என்று மற்றொரு பெயருமுண்டு. இஃது இன்னல்-இடைறுகளைத் தடுத்து நிறுத்தும் தன்மையுடையது. இது தர்மத்தின் அடையாளமாகக் கொள்ளப்படுகிறது.



கேடயம்

## 27. ஸ்ரீ வத்ஸம்

இது விஷ்ணுவின் வலது மார்பில் ஸ்தன வட்டத்துக்கு மேற்பகுதியில் சுயமாகத் தோன்றி அமைந்த மரு அல்லது மச்சம் ஆகும். இதனைப் படிமத்தில் ஒரு முக்கோணத்திற்குள் மூன்று இலைகளைக் கொண்டதாகச் சித்தரிப்பதொரு வழக்கு. இதனை *அரூபலக்ஷ்மி* என்றும் சொல்வர். மார்பிலிருந்து ஒரு யவை அளவு அம் மச்சம் தடித்திருக்குமாறு செய்யப்படும்.



ஸ்ரீ வத்ஸம்



ஸ்ரீ வத்ஸம்

ஸ்ரீ எனப்படும் லக்ஷ்மி, விஷ்ணுவிடம் அபின்னையாக (பிரிக்க முடியாதவளாக) இருக்கின்றாள் என்பதைக் காட்டும். இதனால் விஷ்ணுவானவர் ஸ்ரீ நிவாசன் (திருவாளன்) என்ற திருநாமம் பூண்டிருக்கிறார்.

## 28. வேல்

இஃது அரசிலை போன்ற தலைப் பகுதியை, கோலின் நுனியில், கொண்டமைந்த கருவி, இதனையும் முருகனுடைய ஆயுதமாகக் கொள்ளுவதுண்டு. இது பெரும்பாலும் வெள்ளி, தங்கம், தாமிரம் ஆகிய உலோகங்களால் செய்யப்படும். வேல் பகுதியில் மணிகள் பதிக்கப்படின் *ரத்ன வேல்* என்றும் சொல்லப்படும். இது ஞானத்தின் சின்னமாகக் கொள்ளப்படுகிறது.

## 29. சிருக்–சுருவம்

இவை பிரம்மாவின் கருவிகள். வேள்வித் தீயில் நெய் வார்க்கும் கரண்டி (அல்லது) துடுப்பு ஆகும். வேள்வி நிகழ்த்தும் காலை பூர்ணாஹுதி என்ற இறுதிச் சடங்கில் வேள்வித் தீயில் வேள்விக்குரிய பொருள்களைச் சமர்ப்பித்தலுக்குரிய துடுப்பு ஆகும். சிருக் என்பது சாதாரணக் கரண்டியே. இது மரத்தாலானது. ஆனால் சுருவம் என்பது காம்பும் அகண்ட கரண்டியும் கொண்ட அமைப்பாகும். இதன் கரண்டிப்பகுதி சதுரமாகவும், கோமுகம், யானை முகம் போன்ற பல்வேறு வடிவங்களில் ஏதேனும் ஒன்றைக் கொண்டு விளங்கும்.



சிருக்–சுருவம்

பிரம்மன் புரோகிதனாக-வேள்விக்குத் தலைவனாக-கொள்ளப்படுவதால் இக் கருவிகளைக் கொண்டு விளங்கும் பிரம்மன், ஒரு வேதியன் என்பதைக் குறிப்பிடும். இது வேள்வியின் சின்னமாகவும் கொள்ளப்படும். இவ் விரண்டு துடுப்புகளும் கைமுழத்தால் ஒரு முழ நீளம் கொண்டிருக்கும்.

## 30. சம்மட்டி

இது குதிரைச் சவுக்கு ஆகும். ஐயனாரின் விசேட ஆயுதமாகும். இதற்குச் *செண்டு* என்னும் பெயருமுண்டு. சவுக்கு கயிற்றாலானது. பிரம்பில் இணைக்கப்பட்டிருக்கும், சவுக்கு, அப்பிரம்பின் நுனியில் மடித்துக் கட்டப்பட்டிருக்கும்.

## 31. ஈட்டி

இது மூங்கில் அல்லது உறுதியான கோலில், கூர்மையானதும் உலோகத்தாலானதுமான நுனிப்பகுதியை உடையதாகும். இஃதோர் போர்க்கருவி. கைவிடு படையைச் சேர்ந்தது (அஸ்திரம்).

கூர்மையான புத்தியின் அடையாளமாகக் கொள்ளப்படுகிறது.

## 32. தந்தம்

இது யானை முகத்தனாகிய விநாயகனின் கருவி. ஒடிந்த தன் கொம்பு விநாயகரின் பெண் பகுதியைக் குறிப்பிடும். ஒடியாத கொம்புள்ள பகுதி ஆண் பகுதியைக் குறிக்கும். இரண்டும் ஒரே முகத்தில் அமைவதால் விநாயகரை ஆண் பெண் தத்துவங்கள் ஒரு சேரமைந்த மூர்த்தமாகக் கொள்ளப்படுகிறது. ஒடிந்த தந்தம் வலது புறத்திலோ அல்லது இடது புறத்திலோ அமைந்தாலும் இக்கருத்தையே அஃது உணர்த்தும்.

## 33. குதிரை

குதிரை முகம் கொண்ட படிமங்கள் யோகி என்பதைக் காட்டும், மூச்சை உள்ளிழுத்து நிறுத்தி வெளியிடும் தன்மையுடையதால் யோக மூர்த்திகளுக்கு குதிரை முகம் கொள்ளப்படுகிறது என்னும் கருத்தொன்றும் உண்டு.

## 34. கண்ணாடி

இது கைப்பிடியுடன் கூடிய வட்டம் அல்லது நீண்ட வட்டமான முகம் பார்க்கும் கண்ணாடி.

இது நிர்மல ஞானத்தைக் குறிக்கும்; சூரியனைக் குறிப்பிடும்.

உலகத்தின் நிலையற்ற மாயத் தன்மையையும் புலப்படுத்தும்.

## 35. சிலம்பு

சிலம்பால், கற்புக்கரசி கண்ணகியும்; தலைக்கோலால், கலைத்துறையில் தன்னிகரற்ற



சிலம்பு

புலமையினையும் உணர்த்தியிருப்பதை சிற்பங்களில் காணலாம்.

### 36. தலைக்கோல்

பெரும் புகழ் கொண்டவனும், பேரரசனும், போரில் புறமுதுகிட்டவனும் ஆகிய பகை அரசனுடைய வெண்கொற்றக் குடையைக் கவர்ந்து கொணர்ந்து அதனை ஏற்ற அளவில் நறுக்கி, கணுக்களின் நடுவாகிய இடங்களைப் பொன் தகட்டால் போர்த்தி, கணுக்கள் தோறும் நவமணி வடங்களால் சுற்றி அலங்கரித்து உருவாக்கப்படுவது தலைக்கோல் எனப்படும். இதனை தேவேந்திரன் மகனாகிய ஜெயந்தனாக நினைத்து, நாட்டியக் கலைஞர் வழிபடுவர்.



தலைக்கோல்



செங்கோல்

### 37. செங்கோல்

இது நீதி பரிபாலனம் செய்யும் குறிப்பை உணர்த்தும் தண்டம் ஆகும். இது தர்மத்தின் வடிவமாகவும் கொள்ளப்படும். இது 33 விரல் அளவு முதல் 35 விரலளவு வரை நீளமுள்ளதாகவும் கைக்குள் அடங்கும் கனமுடையதாகவும் அமைதல் வேண்டும். பாலுள்ள மரத்தால் தண்டத்தைச் செய்து, பொன்தகட்டால் போர்த்தி, பூச்சித்திர வேலைப்பாடுகளால் அதனை அலங்கரித்து, அரசனின் சின்னத்தை அக்கோலின் தலையில் பொருத்தி, அழகுற அமைத்தல் வேண்டும்.

### பல்வகைச் சின்னங்கள்

புலித்தோல் விசித்திரமானதும் விசாலமானதுமான ஆசைகளை உணர்த்தும். வெள்ளையும் கறுப்புமான புள்ளிகளையுடைய மான் தோல், சுக்லகிருஷ்ண யஜுர் வேத யாகத்தைக் காட்டும்.

குடை புகழையும், புத்தகம் அல்லது ஏடு அனைத்து அற நூல்களையும், அட்சமாலை காலத்தையும், கமண்டலம் அனைத்து நூல்களின் சாரத்தையும் குறிக்கும்.

கலப்பை காலத்தையும், உலக்கை மரணத்தையும் குறிக்கும்.

பிரம்மனின் சடைகள் மூலிகைகளையும், சரஸ்வதியின் கைகள் வேதங்களையும் குறிக்கும்.

தெய்வப் படிமங்களின் இரு கண்கள் சூரிய, சந்திரனையும், மூன்று கண்களிருப்பின் சூரிய, சந்திர, அக்னியையும் குறிக்கும்.

சிம்மம் வீரத்தையும், குதிரைகள் திசைகளையும் புலன்களையும், ரிஷபம் தர்மத்தையும் குறிக்கும். ரிஷபத்தின் நான்கு கால்கள் சமம், விசாரம், சந்தோஷம், சாதுரங்கம் என்ற நான்கு கணங்களைக் குறிக்கும். இறைவன் இதன் மீது ஆரோஹனித்திருப்பது அக்குணங்களைக் கொண்டுள்ள உயிரிடத்தே மட்டும் எழுந்தருளி அருள் செய்வர் என்பதைக் காட்டும்.

பிரம்மனின் நான்கு முகங்கள் நான்கு வேதங்களையும், சதாசிவ மூர்த்தத்தின் ஐந்து முகங்கள் அவனது ஐந் தொழில்களையும் குறிக்கும். மேலும், சத்யோஜாதம் பூமியையும், வாம தேவம் நீரையும், அகோரம் நெருப்பையும், தத்புருடம் காற்றையும், ஈசானம் வானத்தையும் குறிக்கும் என்று கூறுவர் ஒரு சாரார்.

விஷ்ணுவின் கைகளில் கொடுத்து அமைக்கும் சங்கு, சக்கரம், கதை, பத்மம், ஆகியவை வானம், காற்று, தீ, நீர் ஆகியவற்றையும் குறிக்கும் என்பர் ஒரு சாரார்.

புருஷன் மணி ஆரமாக (கௌஸ்துபமாக) மூலப் *பிரகிருதி* மருவாக (ஸ்ரீ வத்ஸம்). மஹத் கதையாக, ஞானம் *அஞ்ஞானம்* கத்தியும் உறையுமாக, சாத்துவிக, தாமஸ அகங்காரங்கள் சாரங்கம் சங்காக, *மனம்* சக்கரமாக, *ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள்* அம்புகளாக *பஞ்சதன் மாத்திரைகள், பஞ்ச பூதங்கள்* வன மாலையாக, *கருடன்* மறையாகக் கொள்ளப்பட்டிருப்பதாக வைணவ சமயாசாரியர் மிக அழகாக விளக்குவர்.

விஷ்ணுவின் தூக்கம் *யோக நித்திரை* எனப்படும். அதாவது, எல்லாவற்றையும் தம்முள் அடக்கி அவற்றை செவ்வனே நடைபெறச் செய்து அதிலிருந்து நீங்கி ஆனந்தமயமாய் இருப்பதை இஃது உணர்த்தும்.

ஆணவம், மாயை, கன்மம், ஆகிய பாசத்தால் கட்டுண்ட உயிரை முயலகன் என்ற பூத வடிவம் காட்டு, விரும்பியவற்றையெல்லாம் தரும் சின்னமாகக் காமதேனுவும், அங்ஙனமே கற்பகத் தருவும் கொள்ளப்பட்டுள்ளன. கருடன் மனதைக் குறிப்பிடும்.

அரசமரம் ஞானத்தையும், விழுதுகளோடும் கூடிய ஆலமரம் சூக்ஷமத்திலிருந்து ஸ்தூலமாக ஓங்கி விரிந்திருக்கும் பிரபஞ்சத்தையும் உணர்த்தும்.

வண்ணங்களில், வெள்ளை சாத்விக குணத்தையும்; சிவப்பு, இராஜஸ குணத்தையும்; கருப்பு, தாமச குணத்தையும் உணர்த்தும் மஞ்சள், செல்வத்தையும், மங்களத்தையும்; நீலம் வானமும் கடலும் போன்ற இறைவனின் பரந்த தன்மையையும்; பச்சை, வளம் அல்லது செழிப்பையும் குறிப்பிடும். எங்கும் எப்பொழுதும் நீக்கமற நிறைந்த பொருளாகிய விஷ்ணுவின் நீல மேனியை நீல வானிற்கும், அவரது பொன்வண்ண வில்லினை வானில் தோன்றும் மின்னல் கீற்றுக்கும் ஒப்பிட்டு கவிஞர் மகிழ்வார். தாமரை, தெய்வத் தன்மையையும், செல்வத்தையும் நீலோற்பலம் வயிராக்கியத்தையும், குமுதம் (ஆம்பல்) மகிழ்வையும் குறிக்கும்.

## ஆயுத புருஷர்

ஆயுதங்களின் ஆற்றலைக் கருத்திற்கொண்டு அதற்கு மனித உருவம் அளிக்கப்பட்டிருக்கிறது. அவ் வுருவத்திற்கே ஆயுத புருஷர் என்று பெயர்.

ஆயுத புருஷர்களை ஆண் வடிவத்தில், அல்லது பெண் வடிவத்தில், இயற்ற வேண்டும். அங்ஙனம் இரண்டிலும் அகப்படாதவற்றை அலி என்று நூலாசிரியர் கூறுவர். உதாரணமாக, வஜ்ராயுதத்தை ஆண் என்றும், சத்தியா யுதத்தை பெண் என்றும், பாசத்தை அலி என்றும் கூறுவது வழக்கு.

ஆயத புருஷர்களை அஷ்ட தாளத்திலோ அல்லது நவ தாளத்திலோ இயற்றலாம்.

அப் படிமங்களை நின்ற கோலத்தில் இரண்டு



கற்பகத் தரு

கைகளும், இரண்டு கண்களும், கரண்ட மகுடமோ அல்லது பொருத்தமான தலைக் கோலமோ கொண்டதாக அமைத்தல் வேண்டும். மேலும் கைகளைக் கூப்பியவாறு அமைத்து முடியில் அல்லது மகுடத்தில் அவ் வடிவத்திற்குரிய ஆயுதத்தை அடையாளமாகக் காட்ட வேண்டும். அல்லது, கூப்பிய கரத்திற்கு இடையிலோ, தனியே வலது கரத்திலோ அதனதனுக்குரிய ஆயுதத்தைக் கொடுத்துச் செய்யலாம். இவ் விலக்கணப்படியே அலி வடிவங்களையும் செய்தல் வேண்டும்.

| ஆயுதங்கள் | நிறம் | | உருவம் |
|---|---|---|---|
| வஜ்ரம் | பல வண்ணங்களின் கலப்பு | | ஆண் |
| சக்தி | பொன் | | பெண் |
| தண்டம் | நீலம் | | ஆண் |
| கத்தி | நீருண்ட மேகம் | | ஆண் |
| பாசம் | சிவப்பு | | அலி |
| அங்குசம் | பதுமராகம் | | ஆண் |
| கதை | பனி | | பெண் |
| சூலம் | இந்திர நீலம் | | ஆண் |
| சக்கரம் | நெருப்பு | | ஆண் |
| பத்மம் | சிவப்பு | | அலி |
| வில் | செந்தாமரை | | பெண் |
| அம்பு | சிவப்பு | | ஆண் |
| சங்கு | பால் | | பெண் |
| கொடி | சிவப்பு | | அலி |
| நந்தகி (வாள்) | சிவப்பு | | ஆண் |
| சாரங்கம் (வில்) | கறுப்பு<br>வெள்ளை<br>சிவப்பு<br>பச்சை<br>மஞ்சள் | வண்ணங்கள் சேர்ந்தது | பெண் |

# 16

# விலங்குகள் ✦ பறவைகள்



சிற்பக் கலை உலகிலே, பல்வகைப் பறவைகளும், விலங்குகளும், கற்பனை நயத்தோடு இயற்றப்படுகின்றன. உதாரணமாக, சிம்ம வடிவ அமைப்பினை இங்குச் சிறிது நோக்குவோம்.

சிம்ம வடிவம், இயற்கைச் சிம்ம வடிவத்தை ஏதோ ஓரளவு ஒத்திருப்பினும் பெரிதளவு மாறுபட்டிருப்பதையே காணலாம். சிற்பக் கலைஞன் அவ் வடிவத்தில், சிம்மத்தின் உடற்சாயலை உணர்த்தி அதற்கே உரிய சிறப்பியல்களையும், பண்புகளையும், ஍ளிப்படுத்தியதே இதற்குக் காரணம்.

சிம்மம் உடல் உறுதி மிக்கது; வல்லமை வாய்ந்தது; வேகமாய்ப் பாய்வது; பார்ப்போர் உள்ளத்தில் பய உணர்ச்சியைக் கிளறுவது. எல்லாவற்றுக்கும் மேலாக வீரம் மிக்கது. இதுவே சிம்மம்.

எனவே, கலைஞனானவன் வீரத்தின் சின்னமாக சிம்மத்தைப் பாவித்து, சிம்மத்தின் பொதுத் தோற்றத்தை அகத்திலே கொண்டு மேற் சொன்ன சிறப்பியல்களையெல்லாம் துலக்கமாகவும், சுவை படவும், அவ் வடிவத்தின் மீது ஏற்றியமைக்கின்றான்.

நெரிந்த புருவம், கக்கிப் பிதுங்கிய கண்கள், கோரப்பற்கள், இளித்த வாய், மடித்த உதடு, சுருங்கிய நுதல், ஆகியவற்றை முகத்தில் முறையாக அமைக்கின்றான். உடல் உறுதிப்பாட்டினைத் திரண்டு பருத்த சதைப் பற்றினாலும், புடைத்த நரம்புகளினாலும் புலப்படுத்துகிறான். அவற்றுடன் அதனுடைய இயல்பான கோலங்களிலேயும் வைத்துக் காட்டுகின்றான். அங்ஙனமே பிற விலங்குகளையும், பறவைகளையும் சிற்பக் கலைஞன் கவிதைகளாகப் படைக்கின்றான். படிம அளவுகளும், இலக்கணங்களும், இதற்குத் துணையாக நின்று உதவுகின்றன.

## சிங்கப் படிமத்தின் அமைப்பிலக்கணம்

சிற்பக் கலைத் துறையில் சிங்கத்தை வாகனமாகவும், தூணாகவும், தூண் அணியாகவும், இயற்றுதல் வழக்கு.

மேலும், பெண் தெய்வங்களின் கர்பக்கிருஹத்தின் முன் புறத்தில் வாகனமாகவும், விமான கோபுரக் கட்டடங்களில் அடையாளங்களாகவும் சிங்கத்தை அமைப்பதுண்டு.

சிங்கப் படிமத்தை நின்ற நிலை, அமர்ந்த நிலை, கிடந்த நிலை, ஆகிய மூன்று நிலைகளில் செய்தல் பெரிதும் வழக்கு.

நான்கு கால்களையும் தரையில் ஊன்றி இயல்பாக நிற்கும் நிலையே அதன் நின்ற நிலையாகும். பின்னங்கால்களை மடக்கியமர்ந்து முன்னங்கால்களைக் கீழே ஊன்றி, தலையை நேராக வைத்து நேர் நோக்குடையதாய் அமைதி கொண்டதே அமர்ந்த நிலையாகும். அங்ஙனமின்றி, முன்கால்களை உயர்த்தி மார்போடு நெருக்கி வைத்து, உடலை முன்னோக்கி வளைத்து, தலையை பின்னோக்கி இழுத்து, விழிகளை உருட்டி அமைத்த நிலையிலும் இதனை இயற்றலாம். இஃது அமர்ந்த நிலையில் மற்றொரு கோலமாகும்.

இந்நிலையில் கொடிக்கருக்கை வாயினால் கவ்வி முன்கால்களால் பிடித்திருக்குமாறு செய்தலும் இவ்வகையையே சேரும். இவ் வமைதியை மண்டபத்தூண்களில் அமைத்தல் வழக்கு. இதற்குக் *குந்து சிம்மம்* என்று பெயர்.

இத்தகைய கோலத்தைத் தூண்களின் அடியிலே அமைத்து தூண்களைத் தாங்கியிருப்பது போலச் செய்தலும் கலைவழக்கு.

திருக்கோயில் கர்ப்பக்கிருஹத்தின் முன்புறத்தில் முன் கால்களை நீட்டிப் புட்டத்தைச் சிறிது உயர்த்தி, அமர்ந்த நிலையில் வாகனமாக இயற்றுதல் வேண்டும்.

முன் கால்களையும், பின் கால்களையும், பீடத்தில் மடித்தபடி அமர்த்தி, உடலைச் சிறிது பக்கவாட்டில் சரித்துத் தலையை முன்னோக்கியதாகவோ, சாய்த்து நோக்கியதாகவோ இயற்றுவது கிடந்த நிலை ஆகும். இவ்வமைதியில் முன் கால்களை சிறிது நீட்டியும் அமைக்கலாம்.

சிங்கத்தின் நிறம் வெள்ளை. கழுத்து, வாய், காது ஆகியவை கருஞ்சிவப்பு.

சிங்கத்திற்கு உறுதி செய்து கொண்ட உயர அளவை இருபத்தைந்து கூறுகளாகப் பிரித்துக் கொண்டு, கீழ்க்கண்டவாறு அவற்றை உறுப்புகளில் பகிர்ந்துக் கொள்ள வேண்டும்.

அளவுகளை விரல்—யவை என்றும் கொள்ள வேண்டும்.

**உயரக் கணக்கு**

| | | |
|---|---|---|
| உச்சந்தலை | - | 2'-0" |
| முகம் | - | 7'-0" |
| உடல் | - | 10'-0" |
| கால் | - | 6'-0" |
| | | 25'-0" |
| வாயிலிருந்து வால் வரை நீளம் | - | 25'-0" |
| முன் கால் ஒவ்வொன்றும் நீளம் | - | 6'-0" |
| பின் கால் ஒவ்வொன்றும் நீளம் | - | 5'-0" |
| காது மட்டத்தில் முக அகலம் | - | 9'-0" |
| அதன் கீழ் முகத்தின் முன்புற அகலம் | - | 5'-0" |
| நெற்றியின் உயரம் | - | 1'-0" |
| புருவத்தின் உயரம் | - | 1'-0" |
| கண் அகலம் | - | 1'-0" |
| மூக்கின் அகலம் | - | 1'-0" |
| மூக்குப்புடையின் அகலம் | - | 0'-4" |
| கண் மட்டத்திற்கு இரண்டு கூறு அளவிற்குக் கீழே முக உயரம் | - | 5'-0" |
| மேலுதடு | - | 0'-4" |
| கீழுதடு | - | 1'-0" |

கண் மட்டத்திறகுக் கீழே ஒரு கூறளவு தூரத்தில் கீழுதட்டின் விளிம்பு துவங்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| கன்னம் | - | 2'-0" |
| காது நீளம் | - | 1'-0" |
| காது அகலம் | - | 0'-4" |
| பற்களின் நீளம் | - | 1'-0" |
| பற்களின் அகலம் | - | 0'-4" |

வாயில் ஆறு பற்களைத் தெரிய அமைத்தல் வேண்டும். பிறைச் சந்திரனை ஒத்த வடிவில் பற்கள் அமைதல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| நாக்கின் நீளம் | - | 3'-0" |
| நாக்கின் அகலம் | - | 1'-0" |
| நாக்கின் கனம் | - | 0'-4" |
| மூக்கின் கனம் | - | 0'-4" |
| இரு கண்களின் இடைவெளி | - | 1'-0" |

கன்னத்தில் இலையும், கொடியும், கொண்ட கருக்குகளை அணியாகச் செய்தல் வேண்டும். தலையில் கேசங்கள் சுருண்டும், பிடரி மயிர்களும் அங்ஙனமே மார்பின் பாதிவரை சுருண்டும், மார்பிற்கும் பிடரிக்கும் அணியாகத் திகழ வேண்டும்.

| | | |
|---|---|---|
| மார்பின் அகலம் | - | 9'-0" |
| முதுகின் அகலம் | - | 10'-0" |
| முதுகின் உயரம் | - | 6'-0" |
| தொடை அகலம் | - | 10'-0" |
| வயிற்றின் அகலம் | - | 5'-0" |
| வயிற்றின் கனம் | - | 5'-0" |
| வாலின் கனம் | - | 1'-0" |

வாலின் நீளம் சிம்ம உயரத்திற்குச் சமமாக இருத்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| விரைப்பை அகலம் | - | 3'-0" |
| குறியின் நீளம் | - | 3'-0" |
| குறியின் கனம் | - | 0'-4" |

பிற அளவுகளைப் பொருத்தமாகக் கொண்டு அழகுற அமைத்தல் வேண்டும்.

## குதிரையின் உருவ அமைப்பிலக்கணம்

திருக்கோயில்களிலே திருவிழாக்காலங்களில் உத்ஸவ மூர்த்திகளுக்கு வாகனமாகப் பயன்படும் மிருகங்களில் குதிரையும் ஒன்றாகும். ஐயனாரின் சிறப்பான வாகனமாகவும் இது விளங்குகின்றது.

குதிரையானது மூன்று விதமான கோலங்களில் வாகனமாகக் கொள்ளப்படும். நின்ற கோலம், பாய்ந்து நிற்கும் கோலம், நாட்டியக் கோலம் ஆகியவை அம் மூன்று கோலங்களாகும்.

ரதங்களில் பாய்ந்து செல்லும் நிலையிலும், உத்ஸவப் படிமங்களைத் தூக்குவதற்கு நாட்டியக் கோலத்திலும் அமைத்தல் வேண்டும்.

திருக்கோயில் உத்ஸவ மண்டபங்களைத் தேராகப் பாவித்து, சக்கரங்களை இணைத்து அம் மண்டபத்தை இழுத்துச் செல்லுமாறு கல்லாலும், செங்கல்லாலும், குதிரைகளை அமைக்கலாம். மேலும், மண்டபங்களைத் தாங்கும் தூண்களில் அணியாகவும் குதிரை வடிவங்களைச் செய்யலாம். இவற்றையெல்லாம் அந்தந்த இடங்களுக்கும், அந்தந்தக் கட்டடங்களின் அளவுக்கும் அமைப்புக்கும் ஏற்றவாறு இயற்றுதல் வேண்டும்.

ஆனால் வாகனமாகக் கொள்ளும்போது, மூலப் படிமத்தின் அளவுக் கேற்றவாறே உயரம் கொள்ளுதல் வேண்டும். மூலப் படித்தின் முழங்கால் மட்டம், தொடை மையத்திற்குச் சமம், குய்ய மட்டம், நாபி மட்டம் ஆகிய நான்கு அளவுகளில் பொருத்தமானதைத் தேர்தல் வேண்டும். அவ் வளவுகள், தனி வாகனமாகவோ அல்லது மூலப் படிமத்துடன் சேர்ந்தனவாகவோ கொள்ளப்பட வேண்டியனவாம்.

விழாக்களுக் குரிய படிமமானது உத்ஸவப் படிமத்தை விடப் பெரியதாக இருத்தலே சாலும். உத்ஸவப் படிமத்தின் உயர அளவைப் போல் 11/2, 2,3, அல்லது 4 மடங்கு வரை குதிரை வாகனத்தின் உயர மிருத்தல் வேண்டும்.

குதிரையின் உயரக் கணக்கு தாள அளவிலேயே குறிக்கப்படுகிறது. மொத்தக் கூறு 108 (நவதாளம்) ஆகும்.

**கணக்கு**

| | | |
|---|---|---|
| தலை உச்சியிலிருந்து தாடை வரை உயரம் | - | 12'-0" |
| தாடையிலிருந்து கழுத்து வரை | - | 24'-0" |
| கழுத்திலிருந்து மார்பு வரை | - | 24'-0" |
| தொடையின் நீளம் | - | 18'-0" |
| முன்கால் (மொழியுடன்) நீளம் | - | 18'-0" |
| குளம்பின் மேற்பகுதியிலுள்ள முட்ட | - | 6'-0" |
| குளம்பு | - | 6'-0" |
| மொத்தம் | - | 108'-0" |

**முகம், காது, கண்**

| | | |
|---|---|---|
| தலை உச்சியிலிருந்து மேல் உதடு வரை நீளம் | - | 36'-0" |
| தலை உச்சியிலிருந்து கண் மட்டம் வரை | - | 9'-0" |
| கண்ணிலிருந்து மூக்குத் துளை வரை நீளம் | - | 16'-0" |
| மூக்குத் துளை மட்டும் | - | 6'-0" |
| உதடு நீளம் | - | 5'-0" |
| கீழுதட்டின் நீளம் | - | 4'-0" |
| காதின் நீளம் | - | 8'-0" |
| அடிக் காதின் அகலம் | - | 3'-0" |
| காதின் நடுவே அகலம் | - | 4'-0" |
| அதன் மேல் அகலம் | - | 1'-0" |

குதிரையின் காது வெற்றிலையின் வடிவத்தை ஒத்திருக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| காது சேருமிடத்தில் முக அகலம் | - | 6'-0" |
| காது மட்டத்திற்கும் கண் மட்டத்திற்கும் மையத்தில் முக அகலம் | - | 8'-0" |
| கண் மட்டத்தில் முக அகலம் | - | 12'-0" |
| மூக்கு மட்டத்தில் முக அகலம் | - | 4'-6" |
| அதற்கு மேலிடத்தின் அகலம் | - | 3'-0" |
| கண் நீளம் | - | 4'-0" |
| கண் அகலம் | - | 2'-0" |
| புருவ நீளம் | - | 6'-0" |
| புருவக் கனம் | - | 2'-0" |
| மூக்குத் துளையின் அகலம் | - | 1'-0" |
| மூக்குத் துளையின் நீளம் | - | 6'-0" |
| அடித்தொடையின் அகலம் | - | 10'-0" |
| அதன் கீழே தொடை அகலம் | - | 8'-0" |
| முன்காலின் முட்டி அகலம் | - | 6'-0" |
| கணுக்கால் அகலம் | - | 6'-0" |
| முன்கால் அகலம் | - | 4'-0" |
| குளம்பின் அகலம் | - | 6'-0" |

சுற்றளவுகள்: முன் உடலின் சுற்றளவு 100 கூறும். பின் உடலின் சுற்றளவு 90 கூறும் இருத்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| யோனிக்கும் புட்டத்திற்கும் உள்ள தூரம் | - | 20'-0" |
| புட்டத்தின் அகலம் | - | 48'-0" |
| தொடையின் கனம் | - | 8'-0" |

பெண் குதிரைகளுக்கு மார்பும், புட்டமும் பருத்திருக்க வேண்டும். குதிரையின் வால் குட்டையாகவும், வெண் சாமரத்தை ஒத்ததாகவும், அடர்த்தியாகவும் இருத்தல் வேண்டும்.

## விருஷபப் படிம அமைப்பிலக்கணம்

சிவபெருமானின் வாகனமாகிய விருஷபத்தின் உயர அளவை சிவனாரது மூலப் படிமத்தின் உயரத்திலிருந்து கொள்ளுதல் வேண்டும்.

அப்படிமத்தின் சம உயரம், காது மட்ட உயரம், தோளுயரம், ஆகிய மூன்று உயரங்களில் ஏதேனுமொன்றைத் தேர்தல் வேண்டும்.

மேலும், மூலப் படிமம் அமைக்கப் பெற்றுள்ள கர்ப்பக்கிருஹ வாயிலின் உயரத்திற்குச் சமமாகவோ, முக்கால் பங்காகவோ அல்லது அரைப் பங்காகவோ விருஷப உயர்ம் இருக்கலாம்.

அவற்றை விடுத்து, முழ அளவினாலும், விரல் அளவினாலும், விருஷப உயரத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம்.

ஒரு முழம் முதல் ஒவ்வொரு முழமாகக் கூட்டி ஒன்பது முழம் வரை ஒன்பது விதமான உயரங்களைக் கொள்ளலாம்.

இருபத்தோரு விரல் தொடங்கி, இரண்டு இரண்டு விரல்களாகக் கூட்டி முப்பத்தோரு விரல் வரை, ஆறு விதமான உயரங்களைப் பெறலாம்.

மேற் குறிப்பிட்ட பதினெட்டு விதமான உயரங்களில் தேவைக்கேற்ற ஏதேனுமோர் அளவைப் பொருத்தமாகத் தேர்தல் வேண்டும்.

திருக்கோயிலுக்குரிய விருஷபத்தை, மண், மரம், கல், உலோகம், சுக்கான் ஆகிய பொருள்களில் வசதிக்கேற்ற ஒன்றினால் அமைக்கலாம்.

உயரக் கணக்கு

விருஷபத்தின் உயரத்தை 50 கூறுகளாகப் பிரித்து, பின்வருமாறு பங்கீடு செய்து கொண்டு உருவத்தைச் செய்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| தலையின் உயரம் | - | 10'-0" |
| கழுத்து | - | 8'-0" |
| உடல் | - | 16'-0" |
| தொடை | - | 6'-0" |
| முழங்கால் | - | 2'-0" |
| முன்கால் | - | 6'-0" |
| குளம்பு | - | 2'-0" |
| | | 50'-0" |
| கொம்பின் உயரம் | - | 4'-0" |
| அடி அகலம் | - | 3'-0" |
| நுனி அகலம் | - | 0'-3" |
| கழுத்து முதல் வால் வரை நீளம் | - | 40'-0" |
| நெற்றியின் அகலம் | - | 9'-0" |
| முக அகலம் | - | 5'-0" |
| முகக் கனம் | - | 5'-0" |
| கண் மட்டத்தில் முக அகலம் | - | 8'-0" |
| கண் நீளம் | - | 2'-0" |
| கண் அகலம் | - | 1'-4" |
| கண் களத்தி | - | 1'-4" |
| தலையின் பிடரி அகலம் | - | 6'-0" |
| இரு கொம்புகளின் இடைவெளி | - | 4'-0" |
| கண்ணிலிருந்து நெற்றி வரை | - | 4'-0" |
| கடைக் கண்ணிலிருந்து காது வரை | - | 4'-0" |
| காதின் நீளம் | - | 5'-0" |
| காதின் அடி அகலம் | - | 2'-0" |
| காதின் மைய அகலம் | - | 4'-0" |
| காதின் நுனி அகலம் | - | 1'-0" |
| காதின் கனம் | - | 0'-4" |
| முகத்தின் முன்பக்க அகலம் | - | 5'-0" |
| மேலுதட்டின் கனம் | - | 3'-0" |
| கீழுதட்டின் கனம் | - | 2'-0" |
| நாக்கின் நீளம் | - | 3'-0" |
| நாக்கின் அகலம் | - | 2'-0" |
| நாக்கின் கனம் | - | 0'-4" |

## யானைப் படிம அமைப்பிலக்கணம்

சிற்பக் கலைத் துறையில் நடமாடும் விலங்குகளில் யானையும் முக்கியமானதொரு வடிவம் ஆகும். பொதுவாக விலங்குகளானாலும், பறவைகளானாலும், அவ் வினங்களைச் சார்ந்த கற்பனை வடிவங்களானாலும், அவற்றை இலக்கணத்துடன் அமைத்திட அங்கங்களின் அளவுகளைத் தனித்தனியாக விளக்கிக் கூறியதையே இது வரை கண்டோம். ஆனால், யானையின் உருவ அமைப்பைப் புதியதொரு முறையில் இங்கு விளக்கியிருப்பதைக் காண்க1.

இம் முறையில், யானைப் படிமத்தை இயற்ற, தொங்கு நூல்களையும், மட்ட நூல்களையும் பெரிதும் கையாண்டு, பிற நுணுக்க அளவுகளைச் சிறிதே கூறி, வடிவத்தைத் தெளிவாகக் கொண்டு வர இயலுமென்பதையும் காணலாம். அஃது எவ்வாறெனக் காண்போம்.

தொங்கு நூல்கள் பதிமூன்றும், மட்ட நூல்கள் பதினொன்றும் கொண்டு யானையின் படத்தை வரைதல் வேண்டும். இந் நூல்களைச் சுவரிலோ திரைச் சீலையிலோ, அடித்துக் கொள்ள வேண்டும். தாளிலே வரைவதானால் செங்குத்துக் கோடுகளாகவும், படுக்கைக் கோடுகளாகவும், அந்நூல்களை அமைத்துக் கொண்டு படத்தை வரைதல் வேண்டும்.

பதிமூன்று தொங்கு நூல்களையும், பதினொரு மட்ட நூல்களையும், அமைத்து 120 சம சதுரங்கள் கிடைக்குமாறு நூல்களின் இடைவெளிகளைச் சமமாக்கிக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு கட்டத்தின் அகலத்தை ஒரு தாளமாகக் கொண்டு, அவ் வளவைப் பன்னிரண்டு கூறுகளாக்கி, ஒவ்வொன்றையும் விரலளவாகக் கொண்டு, நுட்பப் பகுதிகளை அளவிட்டு வரைதல் வேண்டும்.

தொங்கு நூல்களில் அமையும் உறுப்புகளை இனி விளக்குவோம்.

2-வது தொங்கு நூலில் யானை மத்தகத்தின் புறவாய், அடித் தந்தம் அமையும்.

3-வது தொங்கு நூலில் மத்தகத்தின் மையப் பகுதி, வாய் ஒழுங்கு அமையும்.

4-வது தொங்கு நூலில் கழுத்தும், கீழுதடும், மத்தகத்தின் புறத்தியும் அமையும்.

5-வது தொங்கு நூலில் அடிக் காது, முன்கால் நகத்தின் மையம் அமையும்.

6-வது தொங்கு நூலில் தோள் பட்டை, காதின் ஒழுங்கு, முன்காலின் பின்புற நகம் அமையும்.

7-வது தொங்கு நூலிலிருந்து 10வது நூல் வரை நடுவுடல் ஆகும்.

11-வது தொங்கு நூலில் கால் நகத்தின் மையம் அமையும்.

12-வது தொங்கு நூலில் புட்டத்தின் ஒழுங்கு, வால் ஆகியவை அமையும்.

இதுவரை, யானையின் மத்தகம் தொடங்கி புட்டம் வரை உள்ள முக்கிய உறுப்புகளின் எல்லைகளைக் கண்டோம். இனி, மட்ட நூல்களிற் பொருந்தும் உறுப்புகளைக் காண்போம். மேலிருந்து கீழாக அவை குறிப்பிடும் முக்கிய இடங்களைக் குறித்தலை வேண்டும்.

3-வது மட்ட நூலில் கண் மையம், மத்தக மையம், காது மையம் அமையும்.

4-வது மட்ட நூலில் முக மையம், கடை வாய், புட்டத்தின் மையம் அமையும்.

5-வது மட்ட நூலில் தாடையின் கீழ்மட்டம் அமையும்.

6-வது மட்ட நூலில் தந்தத்தின் நுனி, கீழுதடு, கக்கம் அமையும்.

7-வது மட்ட நூலில் துதிக்கையின் மையம்,அடிவயிறு அமையும்.

8-வது மட்ட நூலில் முழங்கால் மையம் அமையும்.

9-வது மட்ட நூலில் கணுக்கால் மையம் அமையும்.

10-வது மட்ட நூலில் கெண்டைக்கால் அமையும்.

11-வது மட்ட நூலில் பாதம் அமையும்.

பொதுவாக யானையின் உடலின் உயரம் 5 பாகங்களும், காலின் உயரம் 5 பாகங்களும், இருத்தல் வேண்டும். அடிவயிறு மேற் குறிப்பிட்ட எல்லையிலிருந்து 1 விரல் அளவு தொங்கியிருத்தல் வேண்டும். வால், கெண்டைக்கால் வரை நீண்டிருக்கும். முக நீளத்தைப் போல் மூன்று மடங்கினதாக உடல் நீளமிருத்தல் வேண்டும். அதாவது, முக நீளம் 3 பாகமும் உடல் நீளம் 9 பாகமும் (தாளம்) இருத்தல் வேண்டும். வாலின் அடிச்சுற்றளவு 1 விரல் அதிலிருந்து வால் நுனி வரை கரைந்து செல்ல வேண்டும்.

வால், தன் நுனியில் தடித்த ரோமங்கள் கொண்டதாயிருத்தல் வேண்டும்.

காது, கண், தத்தம், உதடு துதிக்கை ஆகியவற்றை அதனதன் இயற்கை வடிவத்தை ஒத்ததாகவும், கலைத்தன்மையோடும் செய்தல் வேண்டும்.

## யாளிப் படிம அமைப்பிலக்கணம்

பாம்பின் முகமும், சிங்கத்தின் உடலும், சேர்ந்தமைந்த கற்பனை வடிவே யாளி எனப்படும். வியாழம் என்பது பாம்பு ஆகும். எனவே இம் முகத்தைப்பெற்ற வடிவம் வியாழம் எனப்படுகிறது. இதுவே யாழி எனப்பட்டு, பிறகு யாளி என்ற இறுதி வடிவம் பெற்றிருக்கிறது.

இவ் வியாழ முகத்தில் யானையின் துதிக்கையினையும் இணைத்து, துதியாளி என்ற பிறிதொரு வடிவமும் தோன்றியுள்ளது.

யாளிகளில் துதியாளியே மிகச் சிறந்த வடிவழகு கொண்டதாகும். யாளியின் துதிக் கையையும், பாம்பின் முகத்தையும், சிம்மத்தின் பற்களையும், கண்களையும், உடலையும், புலி நகங்களையும், கொண்டதாய் விளங்கும். இத் துதியாளி, சிற்பிகளின் வளமான கற்பனைத் திறனுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும்.

இத்தகைய யாளியும், துதியாளியும், திருக்கோயில் கட்டடங்களின் பல்வேறு பகுதிகளை அலங்கரிக்கவே பெரிதும் பயன்படுகின்றன.

யாளிகள் தூண்களைத் தலையில் தாங்கும் அமைதியிலும், வாயிற்படிகளின் கைப்பிடிச் சுவரிலும்,

யாளிகள் தூண்களைத் தலையில் தாங்கும் அமைதியிலும், வாயிற்படிகளின் கைப்பிடிச் சுவரிலும், அமைக்கப்படுகின்றன.

திருக்கோயில் கட்டடத்தில் பிரதிபந்த அதிஷ்டானம் என்ற கட்டடப் பகுதியில் சிறு வியாழங்கள் அணியாக அமைக்கப்படுகின்றன. அங்ஙனமே பிரஸ்தரம் என்ற பகுதியிலும் அவை இடம் பெறுகின்றன. அவை யாளிக் குட்டிகள் ஆகும். அவை அவ் விடத்தில் வியாழ முகங்களென்று சொல்லப்படும். பிரதி என்ற பகுதியில் அம் முகங்கள் அமைவதால் அதுவே பிரதிமுகம் என்றும் பெயர் பெறும். மேலும் அத்தகைய முகங்களை வரிசையாக அமைக்கப் பெற்ற கட்டப்பகுதி வியாழவரி என்றே வழங்கி வருகிறது.

## அன்னத்தின் உருவ அமைப்பு இலக்கணம்

அன்னப் பறவை ஓர் அழகிய கற்பனை வடிவம். இது பிரம்மனின் வாகனமாகக் கொள்ளப்படுகிறது. மாளிகைகளிலும், திருக்கோயில்களிலும், பிற கலைக் கட்டடங்களிலும் அன்னப் பத்திகளை அணியாகவும் அமைத்தல் வழக்கு. மஞ்சங்களிலும், யோகாசனங்களிலும் இதனைப் பொறித்தலுமுண்டு.

அன்னத்தை ஹம்ஸம் என்பர் நூலோர். இச் சொல்லை 'அஹம்' என்றும் 'ஸ' என்றும் பிரிப்பர். இதன் பொருள் நான்-அவன் ஆகும். நான் ஜீவாத்மாவையும், அவன் பரமாத்மாவையும் குறிப்பிடும். பரம்பொருளை உணர்ந்த யோகிகள் அஹம் ஸ: என்று பல முறை ஜபிக்கும் போது அச் சொல் ஹம்ஸ என்று தொனிப்பதை உணரலாம். எனவே, ஹம்ஸமாகிய அன்னம் ஜீவாத்ம பரமாத்ம தத்துவத்தைக் குறிப்பிடும் என்பர் பெரியோர்.

எனவே, யோகிகள் அமரக்கூடிய ஆசனங்களில் ஹம்ஸங்களையும் ஹம்ஸ் பங்க்திகளையும் பொறித்தல் இன்றியமையாததாகும்.

| | | |
|---|---|---|
| முகம் | - | 4'-0" |
| கழுத்து | - | 8'-0" |
| மார்பு | - | 11'-0" |
| தொடை | - | 1'-6" |
| முழங்கால் | - | 1'-0" |
| முன்கால் | - | 1'-6" |
| பாதம் | - | 0'-4" |
| | - | *28'-0"* |

| | | |
|---|---|---|
| தலையின் நீளம் | - | 3'-0" |
| தலையின் அகலம் | - | 4'-0" |
| மேற் கழுத்து அகலம் | - | 2'-0" |
| அடிக்கழுத்து அகலம் | - | 3'-0" |
| வயிற்றின் அகலம் | - | 8'-0" |
| மார்பு அகலம் 8'-0" மார்பிலிருந்து வால் வரை நீளம் | - | 16'-0" |
| இறக்கை அகலம் | - | 5'-0" |
| இறக்கை நீளம் | - | 8'-0" |
| ஒவ்வொரு இறகின் அகலம் | - | 2'-0" |
| ஒவ்வொரு இறகின் கனம் | - | 1'-0" |
| நுனி அகலம் | - | 1'-0" |
| அடித்தொடை அகலம் | - | 1'-4" |
| முழங்கால் அகலம் | - | 0'-6" |
| முன்கால் அகலம் | - | 1'-0" |
| பாத அகலம் | - | 2'-0" |
| நடு விரலின் நீளம் | - | 4'-0" |
| மற்ற விரல்களின் நீளம் | - | 2'-0" |
| பின் விரலின் நீளம் | - | 1'-0" |
| மூக்கின் நீளம் | - | 3'-0" |
| மூக்கின் அகலம் | - | 1'-0" |
| கண் நீளம் | - | 0'-4" |
| கொண்டையின் உயரம் | - | 2'-0" |
| கொண்டையின் நீளம் | - | 6'-0" |
| கொண்டையின் கனம் | - | 1'-0" |

அன்னத்தின் உடலும், தலையும், கொண்டையும் இவற்றுக்கும் மேலாக வாலும் மிகக் கவர்ச்சிகரமான அமைப்புடையன. வால் பகுதியை பலவித இலை, கொடி ஆகியவை கொண்ட கருக்கணியாகவே சித்தரித்தல் கலை வழக்கு. அன்னத்தின் உடல் வெள்ளையாகவும், வால் பல வண்ணங்கள் கொண்டதாகவும், மூக்கும், காலும் சிவப்பாகவும் இருத்தல் வேண்டும்.

## மயிலின் உருவ அமைப்பிலக்கணம்

கந்தனின் வாகனம் மயில். எனவே கந்தப் படிமத்தின் உயர அளவை ஆதாரமாகக் கொண்டே மயிலின் உயர அளவைத் தேர்தல் வேண்டும். மூலப் படிமத்தின் உயர அளவிற்குச் சம அளவோ, முக்கால் அளவோ அல்லது அரை அளவோ இருக்கலாம்.

மயிலின் பாதம் முதல் தலையுச்சி வரைக் கொண்ட உயரத்தை ஐந்து கூறுகளாகப் பிரித்து கீழ்க் கண்டவாறு பகிர்ந்து கொள்ளல் வேண்டும்.

### தலை, உடல், கால்

| | | |
|---|---|---|
| தலையும் கழுத்தும் | 2 | கூறு |
| உடலின் உயரம் | 1 | கூறு |
| பாதமும் காலும் சேர்ந்த உயரம் | 2 | கூறு |

### தோகை

மயிலின் உயரத்தால் தோகையின் நீளத்தைக் கணக்கிடல் வேண்டும். மார்பின் புறவாயிலில் இருந்து அவ் வளவைக் கொண்டிட வேண்டும்.

தோகையின் நீளம், மயிலின் உயரத்தைப் போல் 1¼. 1½ அல்லது 1¾ மடங்கு இருத்தல் வேண்டும். இங்ஙனம் கொண்ட நீளத்தின் மூன்றிலொரு கூறு முதுகின் அகலமாகும். அவ் வளவுக்கு ஏற்றவாறு அடிக்கழுத்தை உறுதி செய்து கொண்டு, அதில் பாதி அளவினதாய் மேற் கழுத்தின் அகலத்தைக் கொள்ளுதல் வேண்டும்.

தலையின் மீது கருக்கணிக் கொண்டையையும் அமைத்தல் வேண்டும்.

---

1. சில்ப ரத்னம்

# 17

# கலையும் சுவையும்



ஆகம நூல்களும் பிற ஞான நூல்களும் கடவுளுக்குப் பல நிலைகளைக் கற்பிக்கின்றன. அவற்றுள் இறுதியான நிலையைச் *சுத்த சத்துவ நிலை* என்று அவை கூறுகின்றன. இது தூய உண்மை நிலை என்று பொருள்படும். இஃதொரு பேரின்ப நிலையாகும். கடவுளை அடைய விரும்பும் ஜீவான்மா அப் பேரின்ப வெள்ளத்திலேயே கலந்துவிடும் என்றும் அவை முழங்குகின்றன.

எங்கும் நிறைந்துள்ள இறைவன் நம் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் குடி கொண்டிருக்கிறான். பரமான்மாவாக-உயிர்க் குயிராக-அவன் விளங்குகின்றான். ஓடி, ஆடி, அலைந்து கொண்டிருக்கும் மனம், ஒடுங்கி ஆன்மாவில் ஒன்றுமானால் அந் நிலையில் மனத்திற்கு இன்பம் அனுபவமாகிறது.

மனம் ஆன்மாவில் ஒன்றும் நேரத்தில், நம்மைச் சுற்றிலுமுள்ள அனைத்தும் மறைந்து விடுகின்றன. அவற்றிலிருந்து விடுபட்ட மனமே அத் தூய உண்மையைத் துய்க்க முடிகிறது.

இவ்வுலகில் வாழும் ஒவ்வொரு மனிதனும் மூன்று வகையான குணங்களைக் கொண்டவனாகவே விளங்குகிறான். அக் குணங்களே சத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்று சொல்லப்படும். தமோ குணம், அறியாமையை அல்லது மயக்கத்தை உண்டு பண்ணும். ரஜோ குணம், செயலைத் தூண்டிவிடும். சத்துவ குணம், அமைதியின்பத்தை ஊட்டும். இம்மூன்று குணங்களில் சத்துவ குணமே சிறந்தது. அது மட்டுமல்ல, பேரின்ப அனுபவத்திற்கு அஃதே இன்றியமையாததுமாகும். ஒருவனது உள்ளத்தில் இக்குணங்கள் வெவ்வேறு அளவிலே அமைந்திருக்கும். இந்த நிலையில், முக்குணங்களில் ரஜோ குணமும் தமோ குணமும் அடங்கி, சத்துவ குணம் மேலோங்குமானால் மனம் ஆன்மாவில் ஒன்றிப் பேரின்ப அனுபவத்தைப் பெறும். அதாவது, உள்ளத்திலிருந்து ராஜஸ, தாமஸ குணங்கள் அகன்று, உள்ளம் தூய்மை யடைந்து, ஆன்மாவை மூடிக் கொண்டிருக்கும் அஞ்ஞானத் திரை விலகி, அழியாத அறிவான ஆனந்த ரூபமாய் விளங்கும். இதுவே முன்பு சொன்ன சத்துவ நிலை ஆகும். இந்த நிலையினை அடைந்த உள்ளத்திற்கு அனுபவமாகிற உணர்வே ரஸம் எனப்படும்.

நாம் உண்ணும் உணவில் சேரும் உவர்ப்பு, புளிப்பு, உறைப்பு, இனிப்பு, துவர்ப்பு, கசப்பு ஆகியவை ஒவ்வொன்றும் ஒருவகைச் சுவையே. எனினும் இச் சிறு சுவைகள் ஒன்று கலந்தால் நாவுக்குப் புதியதோர் இனிய உணர்ச்சி அல்லது இனிய ஓர் அனுபவம் ஏற்படுகிறது. அவ் வனுபவமே சுவை எனப்படும். அதுபோலவே மனத்தில் பலவித உணர்ச்சிகள் தோன்றி ஒன்று சேர்ந்து மனத்திற்குப் புதியதோர் இனிய உணர்ச்சி அல்லது இனிய அனுபவத்தைக் கொடுக்கின்றது. அதுவே ரஸம் என்று சொல்லப்படும்.

இலக்கண நூலோர் நமது உள்ளத்தில் முளைத்துக் கிளைக்கும் அவ்வுணர்ச்சிகளை *விபாவம், அனுபாவம், சாத்விக பாவம், சஞ்சாரி பாவம், ஸ்தாயீ பாவம்* என்று பெயரிட்டுக் கூறுகின்றனர். இவை நாம் பார்க்கும் கலைக் காட்சிகளினால் நமது உள்ளத்தில் தோன்றும் மன நிலைகளைக் குறிப்பிடும் கலைச் சொற்களே.

மாந்தர்தம் ஒவ்வோர் உள்ளத்திலும் சுவை உணர்வைத் தட்டி எழுப்பி, வளர்த்து, பெருக்கெடுத்து வழியச் செய்வதே கலைக் காட்சிகளின் பணியாகும்.

அத்தகைய சுவை ஒன்பது வகைப்படும். இஃது ஒன்பான் சுவை என்றும் நவரஸங்கள் என்றும் சொல்லப்படும். அவை முறையே *சிருங்காரம், கருணம், வீரம், ரௌத்திரம், ஹாஸ்யம், பயானகம், பீபத்ஸம், அத்புதம், சாந்தம்* ஆகும். இவற்றை முறையே உவகை, அழுகை, பெருமிதம், வெகுளி, நகை, அச்சம், இளிவரல், மருட்கை, சமநிலை என்பர் நூலோர்.

உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சி அல்லது உளமாறுபாடு *பாவம்* எனப்படும். இஃது இரண்டு வகையினவாம். ஒன்று, தோன்றிய உடன் மறையும். மற்றொன்று தோன்றி வளர்ந்து, நீடு நிலைத்து நிற்கும்.

உறங்கிக் கிடக்கும் சுவையுணர்வைத் தட்டி எழுப்பி அதை அனுபவிப்பதற்குரிய அடிப்படையை அமைத்துத் தரும் உணர்ச்சிக்கு *விபாவம்* என்று பெயர். இதனை ஓர் உதாரணத்தால் இங்கு விளக்குவோம். நவரசங்களில் தலையாய ரசமான சிருங்கார ரசத்தை உதாரணமாக இங்கு மேற்கொள்ளுவோம். இந்தச் சிருங்கார ரசத்தை அனுபவிப்பதற்குத் தேவையான விபாவ, அநுபாவ, சாத்விக பாவ, சஞ்சாரி பாவ, ஸ்தாயீ பாவங்கள் யாவை எனக் காண்போம்.

சிருங்கார ரசத்தை அனுபவிக்கக் காரணமாக இலக்கியத்திலோ நாடகத்திலோ, அமைபவர் தலைவனும், தலைவியும் ஆவர். தலைவன் தலைவி ஆகியவர்களின் உடலமைப்பும், தோற்றச்சிறப்பும், காண்போர் உள்ளத்தில் எழுப்பிவிடும் உணர்வே விபாவம் எனப்படும். மேலும் அத்தகைய விபாவம் இரண்டாக பாகுபடுத்திக் கூறப்படும்.

தலைவனையும் தலைவியையும் பற்றிய உணர்வு இஃது ஆதலால் தலைவன்-தலைவியை *ஆலம்பன விபாவம்* என்பர். ஆலம்பனம் என்றால் தொற்றித் தொங்குதல் என்று பொருளாகும். உணர்வானது இவர்களைத் தொற்றியே-பற்றியே-எழுவதால் இப்பெயர் பெற்றது. இவர்கள் இருவரும் ஒரு சோலையில் முழுநிலவு, தென்றல் காற்று அல்லது தனிமை முதலிய சூழ்நிலைகளில் இருப்பார்களேயானால் அவர்களிடம் ஏற்படும் காதல் உணர்வு மிகும். அதைக்காட்டும் தலைவன் தலைவியர் பற்றி நமது உள்ளத்தில் ஏற்கனவே ஏற்பட்ட உணர்வு, மேலும் தூண்டி விடப்படும். எனவே, இஃது *உத்தீபன* (தூண்டிவிடப்பட்ட) *விபாவம்* எனப்படும்.

எனவே, நமது உள்ளத்தில் உறைந்திருந்த சுவையுணர்வைக் கிளர்ந்தெழச் செய்ததோடு அல்லாமல் அதனை வளர்த்தும் விடுவது, விபாவம் எனக் கொள்ளப்படுகிறது. அதாவது இறுதியில் சுவையுணர்வை அனுபவிப்பதற்கு, தொடக்கத்தில் விபாவமானது சிறந்த முறையில் உணர்ச்சியை எழுப்பி விடுகிறது.

அங்ஙனம் தோன்றியதும், தொடக்க நிலையில் உள்ளதுமான, உணர்ச்சியை அனுபவிக்கும் நிலைக்கு எது கொண்டு வருகிறதோ அஃது அநுபாவம் என்று சொல்லப்படும். அதாவது விபாவத்தின் மூலம் உள்ளத்தில் முளைத்த சுவையை அதற்கு அடுத்த கட்டமான அனுபவ நிலைக்கு நம் மனத்தைப் பக்குவப்படுத்துவது இஃதாம்.

தலைவன், தலைவி ஆகியோரிடையே ஏற்பட்ட காதலுணர்வை, பலவிதச் செய்கைகளால் நமக்கு அவர்கள் அறிவித்திடுவர். கடைக்கண் நோக்குதல், கண்ணீர் விடுதல், முத்தமிடுதல், முதலிய புறச் செய்கைகளினால் நம்முடைய உள்ளத்தில் சுவையுணர்வை அனுபவ நிலைக்கு கொண்டு வருவர். அது மட்டுமல்ல. அகத்திலேயும் அந்த உணர்வை பெற்றிருத்தலை மெய்மயிர் சிலிர்த்தல், பெருமூச்சு முதலிய செய்கைகள் மூலம் வெளிப்படுத்துவர். இப் பாவத்தைச் *சாத்விக பாவம்* என்று இலக்கண நூலோர் குறிப்பிடுவர். சத்வம் என்றால் சரீரமாகும். சரீரத்தினுள் இது நிகழ்வதால் சாத்விக பாவம் எனப்படும். மனத்தில் சத்வ குணம் இந்நிலையில் மேலிடுவதாலும் இது சாத்விக பாவம் எனப்படுகிறது. இந்த நிலையில் இக் காட்சியைக் காண்போர், அவ்வுணர்ச்சி தமக்கு ஏற்பட்டிருப்பதாகவே உணர்ந்து, அக்காட்சியோடு ஒன்றி மெய் மறந்த நிலையை அடைவர். இந்த மனோ நிலையை ஏற்படுத்தும் சாத்விக பாவம், அனைத்துப் பாவங்களிலும் மிக முக்கியமான தாகுமல்லவா?

அதைத் தொடர்ந்து மற்றொரு உணர்வானது உள்ளத்தில் தோன்றிடும். இப் பாவம் இது வரை ஏற்பட்ட உணர்வுகளுக்கு முரணாக நின்று சுவையை மிகுவிக்கும். இது *வியபிசாரி பாவம்* எனப்படும்.

இனிப்பினிடையே காரத்தைப் புகுத்தி இனிப்பை மேலும் சுவையுடையதாகச் செய்வது போல, இப்புதிய பாவத்தின் தலையீட்டால் மனதில் சுவை உணர்வு நன்கு மிகுவதாகிறது. சுவையை உள்ளத்தில் நன்கு பரப்புதல் காரணமாக இப்பாவம் சஞ்சாரி பாவம் என்றும் சொல்லப்படும். தலைவனிடம் காணும் சிரிப்பு முதலியனவும் தலைவியிடம் காணும் நாணம் முதலியனவும் இப் பாவத்தை மிகுவிப்பனவாம்.

மேற் குறிப்பிட்ட விபாவம், அனுபாவம், சாத்விக பாவம், சஞ்சாரி பாவம் ஆகிய நான்கும், இக்கலைக் காட்சி யொன்றைக் காண்போர் உள்ளத்தில் சுவையுணர்வுக்கு வேண்டிய உணர்ச்சிப் பெருக்கை ஏற்படுத்திவிட்டது எனலாம். அதாவது, சிருங்காரச் சுவையை அனுபவிப்பதற்குச் சற்று முந்திய, முதிர்ச்சியான-பக்குவமான-உச்சமான-மன நிலையை அந் நான்கு பாவங்களும் ஒன்றையொன்று வளர்த்துக் கொண்டு, அமைத்து விடுகின்றன.

இந்த மனநிலை, இக் கட்டத்தில் நிலைபெற்றதாகவும் ஆகின்றது. எனவே உணர்வுகளின் இக்கூட்டு நிலைக்கு அல்லது கூட்டு உணர்ச்சிக்கு *ஸ்தாயீ பாவம்* என்று பெயர். இங்ஙனம் தோன்றிய உணர்ச்சிப் பெருக்கே அனுபவ நிலையில் ரஸம் அல்லது சுவை எனப்பெயர் பெறுகிறது.

இந்தச் சிருங்காரச் சுவைக்கு ஸ்தாயீ பாவமாக அமைவது *காதல்* என்று சொல்லப்படும்.

தலைவன், தலைவி, மெய் சிலிர்த்தல், கடைக்கண் நோக்குதல், பெருமூச்செறிதல், வியர்த்தல், கண்ணீர் சொறிதல், முதலிய செய்கைகளெல்லாம் உள்ளுணர்வின் வெளித் தோற்றங்களே. அவற்றையே இலக்கண நூலோர் விபாவம், அனுபாவம் முதலிய சொற்களால் இலக்கணமாக வகுத்துக் கூறுகின்றனர். சுருங்கக் கூறின் விபாவம், அனுபாவம் முதலியன இலக்கணங்கள்; அவற்றை வெளியிடும் செய்கைகளே இலக்கியங்களாம்.

சிருங்காரச் சுவைக்கு எங்ஙனம் காதல் ஸ்தாயீ பாவமாகக் கொள்ளப்படுகிறதோ, அங்ஙனமே ஒவ்வொரு சுவைக்கும் ஒவ்வொரு ஸ்தாயீ பாவத்தைக் கண்டறிந்து இலக்கணம் வகுத்துள்ளார்கள். உவகைக்குக் காதலும், அழுகைக்குச் சோகமும், பெருமிதத்துக்கு உற்சாகமும், வெகுளிக்குக் குரோதமும், நகைக்கு ஹாஸ்யமும், அச்சத்திற்குப் பயமும், இளிவரலுக்கு அருவருப்பும், மருட்கைக்கு ஆச்சரியமும், சாந்தத்திற்கு விரக்தியும் ஸ்தாயீ பாவங்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன. தமிழ் மரபிலே ஸ்தாயீ பாவங்களே ரஸங்களின் பெயராகக் கொள்ளப்படுகின்றன.

காவியப் புலவனாயினும், ஓவியக் கலைஞனாயினும், நாட்டிய விற்பன்னனாயினும், எந்தச் சுவையை வெளியிட வேண்டும் என்று விரும்புகிறானோ அந்தச் சுவைக்குரிய விபாவ, அனுபாவ, சாத்விகபாவ, சஞ்சாரி பாவங்களைத் தன்னுடைய படைப்புகளில் வைத்துக் காட்ட வேண்டும். அங்ஙனம் காட்டப்படுமானால் காண்போர் உள்ளத்தில் அதே பாவங்கள் தோன்றி, காண்போரே ரசானுபவம் பெறுமாறு செய்துவிடும். இங்ஙனம் பிறருள்ளத்தில் ரசானுபவம் தோன்றிடச் செய்யும் ஆற்றல் பெற்றவனே சிறந்த கலைஞானவான். அவனால் வெளியிடப்படுவதே கலை எனப்படும். அனுபவத்தின் வெளிப்பாடன்றோ கலை!

காட்சிகளை நன்கு அனுபவிக்கத் தெரிந்தவனே ரசிகன் அல்லது சுவைஞன் எனப்படுவான்.

ஒரு கலைக் காட்சியையோ, கலைப் பொருளையோ, எல்லா ரசிகர்களும் ஒரே மாதிரியாக ரசிப்பதில்லை. இது ரசிகர் தம் அனுபவ முதிர்ச்சியையும், விரிவையும் பற்றியதாம். அதாவது ரசிகனுடைய உளப்பக்குவத்தைப் பொறுத்தே ரசிகத் தன்மை காணப்படும். நிறமற்ற சூரியக் கதிரானது வெவ்வேறு விதமான வண்ணக் கண்ணாடிகளில் பட்டுச் செல்லும் பொழுது எங்ஙனம் நிறமாறுபாடு அடைகின்றதோ, அங்ஙனமே ஒரு கலைக் காட்சி, ரசிகனுடைய உளத் தன்மையைப் பொறுத்து மாறுபடும்.

உலக வாழ்க்கையில் ஒருவன் துய்க்கும் இன்பம், சுவையெனக் கொள்ளப்படாது. காவியம், நாட்டியம், சிற்பம் ஆகியவற்றிலிருந்து கிடைத்திடும் இன்பமே சுவை எனப்படும். உலக வாழ்க்கையில் சந்திக்கும் துன்ப நிகழ்ச்சியில் நாம் துன்பமே அடைகின்றோம். ஆனால் கவியின் சொற்களிலும், நடிகனின் நடிப்பிலும், துன்ப நிகழ்ச்சிகள் தோன்றினாலும், இன்பமே அனுபவமாகிறது. எங்ஙனமெனில், ரசானுபவத்தினால் ஏற்படும் பேரின்பம், சத்வ குணமேலீட்டால் ஏற்படுவதோடல்லாமல் தூய்மை பெற்று ஆன்மாவுடன் கலந்தும் விடுகிறது. எனவே, கலையால் விளையும் அச்சம், சோகம், கோபம், முதலிய நவசரங்கள் துன்பத்தைத் தோற்றுவிக்காமல் இன்பத்தையே ஊட்டுகின்றன. கலைகளால் அனுபவிக்கப்படும் சுவைகள் எவ்வித உணர்ச்சிகளை உண்டாக்கினாலும் ரசிகன் பெறும் அனுபவம் இன்பமே ஆகும்.

கலைக் காட்சிகளில் சந்திக்கும் இன்ப துன்பங்களை இன்பமாகக் கொண்டு மகிழப் பழகியவனுக்கு இவ்வுலக வாழ்க்கையில் சந்திக்கும் இன்ப துன்பங்களையும், சமமாக நோக்கும் மன இயல்பு ஏற்படுகிறது என்று ஒரு கருத்து கலையுலகில் தத்துவ ரீதியாக நிலவுகிறது.

எனவே, அதை வளர்ப்பதே கலையின் தலையாய நோக்கம் என்பர் பெரியோர்.

மேலும், ரசானுபவத்தைப் பற்றிப் பேசும் பெரியோர், ஆழ்ந்த பிறிதொரு கருத்தினையும் நமக்கு நினைவுபடுத்துகிறார்கள். அதாவது, ஆன்மாவுக்குப் பூர்வகால ரசானுபவம் உண்டு என்றும், அஃது அவனிடம் உறங்கிக் கிடக்கின்றது என்றும் சொல்லி, மரத்தில் மறைந்துள்ள தீயைக் கடைந்து வெளிப்படுத்துவது போல உறங்கிக் கிடக்கும் சுவையுணர்வைக் கலைக் காட்சிகள் எழுப்பிவிடுகின்றன என்பர். அன்றியும், ரசானுபவம் பெறுகின்றவன் இதன் மூலம் முற்பிறவியோடு உள்ளத்தால் தொடர்பு கொள்வதாகவும் அவர்கள் கூறுகிறார்கள்.

சிற்பக்கலை, காவிய, நாட்டிய மரபுகளைத் தழுவி வளர்ந்த கலை.

இவ்விரு மரபுகளில் சிற்பக் கலைத்துறைக்கு முற்றிலும் உகந்தது நாட்டிய மரபே ஆகும். நாட்டியத்தில் முழுக்க, முழுக்க உள்ளத்தில் ஏற்படும் சுவையுணர்வை-அதற்குத் துணையான நான்கு வகையான பாவங்களை-கை, கால், தலை, கழுத்து, இடுப்பு, முதலியவற்றின் அசைவுகளினால் வெளிப்படுத்த முடிகின்றது. எனவே, நாட்டியத்திற்கு உயிர், சுவையே ரசமில்லா நாட்டியமே இல்லை யெனலாம். இம் மரபை யொட்டி வளர்ந்த சிற்பக் கலைக்கும் சுவையே உயிர் என்றால், மிகையாகாது அன்றோ?

உடலுக்கு உயிர்போல, கலைக்கு உயிராக அமைவது, சுவையே ஆகும். இறைவனே உடலில் உயிராக நின்கின்றான்; கலையில் சுவையாகவும் அவனே நிற்கின்றான்.

இறைவனைச் *சுவையன்* என்று அடியார்களும் *இறைவனே ரஸம்* என்று தத்துவ ஆசிரியர்களும் கூறுவர்.

# 18

# ஆகமக் கொள்கை விளக்கம்

## பாஞ்சராத்ரம் - வைகானசம்



வழிபாட்டுக்குரிய படிமங்களைக் கலை நயத்தோடு கற்பித்தாலும் சமயத்தின் பல்வேறு கருத்துகளுக்கும் அவை கொண்டுள்ள உருவ அமைதிகளுக்கும் வழிபாட்டு முறைகளுக்கும் ஏற்றவாறும் சிற்ப இலக்கண மரபு வழுவாமலும் இயற்றுதல் வேண்டும். இதனைச் சாதிக்க சிற்பிக்கு இலக்கண அறிவும், தொழில் திறமையும் கலாரசனையும் மட்டும் இருந்தால் போதா. விரிந்த சயம தத்துவ ஞானமும், மேலான ஒழுக்கமும், பக்தி பூர்வமான ஈடுபாடும் இன்றியமையாதனவாகும். கருத்தை-சொற்களை-வடிவமாக்குவது எளிய செயலன்று. அதிலும் பண்புகளுக்கு-அருவமான குணங்களுக்கு-அறிவு மயமான, உணர்ச்சி பூர்வமான ஒன்றுக்கு-உருவம் இயற்றுதல் மிக மிகக் கடினம். இதற்கு ஒரு யோகிக்கு உள்ளது போன்ற ஒருநிலைப்பட்ட உள்ளமும், செம்மையான, செயலாற்றலும் சிற்பிக்கு இருக்க வேண்டும். அப்பொழுதுதான் சிறந்த படைப்பைக் காண முடியும்.

இறைவனுக்கு 'ஒருருவம் ஒரு நாமம்' இல்லை என்ற தத்துவ அடிப்படைக் கருத்து ஒன்று இருப்பினும் சமயப் பெரியோர்களும், ஞானிகளும், சிந்தனையாளர்களும் இறைவனைப் பற்றி, கொண்டுள்ள கருத்துகளை-இறை இயல்புகளை-பாசுர வடிவிலும் நூல் வடிவிலும் நமக்கு வழங்கியுள்ளார்கள். மனம், மொழி, ஆகியவற்றால் அளவிட்டும், அறுதியிட்டும் கூறமுடியாத முழுமுதலை அப்பெரியார்கள் யோக பலத்தாலும் பக்தியீடுபாட்டாலும் உணர்ந்து அனுபவித்து நாமும் இறை அருளையும், பேரின்பத்தையும் அடைவதற்கான ஒரு சில வழிமுறைகளையும் வகுத்து அளித்து உதவியுள்ளார்கள்.

பிரபஞ்ச ரகசியத்தை ஆய்ந்துணரத் தலைப்பட்ட சிந்தனையாளர்கள், பிரபஞ்சத்தின் இயக்கத்தையும், பிரபஞ்சத்தின் வெளித் தோற்றத்தையும், அதன் தேய்வையும் வளர்ச்சியையும், ஊடுருவிப் பார்த்து அவர்தம் தெள்ளிய கருத்துக்களையும் நமக்கு வழங்கியுள்ளார்கள்.

இத்தகைய பிரபஞ்ச ரகசியத்தையும், அதற்கு மூலமாய் உள்ள இறைவனையும், ஜீவர்களின் தன்மையையும் நமக்குச் செம்மையாக அறிமுகப்படுத்துவன ஆகம நூல்கள் ஆகும். அவை நம்மால் காணப்படாத ஒன்றிற்கு உருவம் தருகின்றன; குணம் ஏதுமில்லானை குணக்குன்றெனக் காட்டுகின்றன. ஒரு நாமமும் இல்லானை பல பெயர்களால் அழைகின்றன; அசைவற்றுச் சார்ந்த நிலையில் உள்ளானை அசைத்து, நகரச்செய்து, மண்மீது வந்திறங்கச் செய்கின்றன.

ஆனால் இத்தகைய பின்னணியில் நின்று பார்க்கும்போது நமது சமயங்கள் இறைவனை மக்கட்கு அறிமுகப்படுத்தும் முறையிலும், அவனைச் சித்திரிக்கும் முறையிலும் அருமையான பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு சமயமும் தனது கடவுளைத் தனியொரு கோலத்தில் அமைக்கின்றன. சடைமுடி விளங்க, மான் மழுத்தாங்கி, முக்கண்ணனாக ஒரு சமயமும், கிரீட மகுடம் விளங்க, சங்கு சக்கரம் தாங்கி, நீல மேனியனாகப் பிறிதொரு சமயமும், யானை முகத்தனாக, ஆறுமுகத்தனாக, அம்மையாக இப்படியே பிற பல சமயங்களும் தமது முழு முதற் பொருளைச் சித்திரிக்கின்றன.

தலைவன் புகழ்பாடுவதுடன் நின்றுவிடாமல் ஆகம சிற்ப நூல்கள், அவனது பேராற்றற் பெருமையை மக்கட்குப் புலப்படுத்தும் முறையில் பல்வேறு தோற்றமுடைய திருவுருவங்களையும்

எடுத்துரைத்து மூர்த்திகளுக்குத் தனியொரு சாம்ராஜ்யத்தையே படைத்துத் தருகின்றன. மேலும், அவ் இறைவனுக்கு மனித வடிவம் சமைத்து, மக்கள் வாழ்க்கையோடு இணைத்து, மக்களுக்கும் இறைவனுக்கும் உள்ள தூரத்தையும் அகற்றி விடுகின்றன.

இறைவனை நாம் நமது தியானத்தால் அணுக முடிகிறது; நமது அன்பு கலந்து ஒருநிலைப் பட்ட தியானம் இறைவனை நம்மிடம் கிட்டச் செய்கிறது. அதற்குக் கருவியாக, பற்றுக் கோடாக, துணையாக, உள்ளிருந்து வழி நடத்தும் ஆற்றலாக, தலைவனாக, அப் பொருளை ஆகமங்கள் நமக்கு அறிவுறுத்துகின்றன. அவற்றுள் ஒரு சில ஆகமங்கள் நாம் வழிபடும் படிமங்களில் இறைவன் வியாபித்து நிற்கிறான் என்றும், மேலும் ஒரு படி மேற் சென்று அப் படிமமே இறைவன் (அர்ச்சாவதாரம்) என்றும் கூறுகின்றன.

பொதுவாக, இறைவனின் அரும்பெருங் குணங்களே (தன்மைகள்) வழிபடு படிமங்களாக இயற்றப்படுகின்றன. மேலும் இறை பற்றிய பிற தத்துவக் கருத்துகளும் சித்தரிக்கப்பட்டு தத்துவ விளக்கங்களாகவும் அவை அமைகின்றன.

உருவ வழிபாட்டை வலியுறுத்தும் பெரும் சமயங்களுள் சைவம், வைணவம், சாக்தம், காணாபத்யம், கௌமாரம், சௌரம் ஆகிய ஆறு சமயங்கள் குறிப்பிடத்தக்கவைகளாகும். சிவனை முழுமுதற் பொருளாகக் கொண்டது சைவம் என்றும், அங்ஙனமே விஷ்ணுவைக் கொண்டது வைணவம் என்றும், சக்தியைக் கொண்டது சாக்தம் என்றும், கணபதியைக் கொண்டது காணாபத்யம் என்றும், குமரனைக் கொண்டது கௌமாரம் என்றும், சூரியனைக் கொண்டது சௌரம் என்றும் சொல்லப்படும். இவ் ஆறு சமயங்களில் சாக்தம், காணாபத்யம், கௌமாரம், சௌரம் ஆகிய நான்கும் சைவச் சார்புடையனவாதலால் சைவத்தில் அடங்கும். எனவே சுருக்கிப் பார்க்கின், சைவமும் வைணவமுமே நமக்கு இரு பெரும் தலையாய சமயங்களாகத் துலங்குகின்றன.

இறைவனை வழிபடும் முறையினை விளக்கும் நூல் *ஆகமம்* எனப்படும். ஆகமம் என்ற சொல் வழிவழியாக வந்த (இறைவனைப் பற்றி முழுமையாக விளக்கும்) நெறி எனப் பொருள்படும். ஆன்மாக்கள், உலக வாழ்க்கையை ஒரு நெறியில் நின்று துய்த்து, உலக பந்த பாசங்களிலிருந்து விடுதலை பெற்று, வீடு பேறாகிய பேரின்ப நிலையை அடையச் செய்வது. அதாவது "ஆன்மாக்கள் மோஷமடைய மலநாசம் செய்விப்பது ஆகம நெறி" என்பர் சைவர். சிவனை வழிபடும் முறையினை விளக்குவது சிவாகமம். விஷ்ணுவை வழிபடும் நெறியினை வகுத்துக் கூறுவது வைணவாகமம். இதனைச் *சம்ஹிதைகள்* என்றும் கூறுவர். வழிபடும் தெய்வத்தின் பெயரை வைத்தும் ஆகமங்கள் பெயர் பெறும்.

வைணவ சமயத்தில் இரண்டு முறைகள் இருக்கின்றன. ஒன்று *பாஞ்சராத்திரம்* என்றும், மற்றொன்று *வைகானசம்* என்றும் சொல்லப்படும்.

பாஞ்சராத்திரம் என்பது ஐந்து இரவுகள் என்று பொருள்படும். ஸ்ரீ மன் நாராயணனே இவ் வழிபாட்டு முறையினை வகுத்து ஐந்து நாட்களில் அதனை பிரமன் மூலம் வெளிப்படுத்தியமையால் இப் பெயர் ஏற்பட்டதென்பர் ஒரு சாரார்.

'சாங்கியம், யோகம், பௌத்தம், ஜைனம், பாசுபதம் ஆகிய ஐந்து சமயக் கொள்கைகள் இவ்வாகமத்தின் எதிரில் ஒளி இழந்து இருண்டு விடுகின்றன' என்ற கருத்தில் இப்பெயர் பெற்ற தென்பர் பிறிதொரு சாரார்.

பஞ்ச என்ற சொல் ஐந்தையும், ராத்ரம் என்பது ஞானத்தையும் குறிக்கும் என்று சொல்லி, இவ்வாகமம் ஐந்துவித ஞானங்களைக் கூறுவதால் பாஞ்சராத்ரம் எனப்பெயர் பெற்றதென்ற ஒரு விளக்கமும் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ மன் நாராயணன் தன்னை, *பரம், வியூகம், விபவம், அந்தர்யாயமி, அர்ச்சா* என்ற ஐந்து வகைகளில் வெளிப்படுத்திக் கொள்கிறார் என்பது வைணவ ஆகமங்களின் உயிர் போன்ற கொள்கையாதலால், இதனை உள்ளடக்கிய வழிபாட்டு முறையினை இவ்வாகமம் விளக்குவதால் பாஞ்சராத்ரம் எனப்பட்டதெனவும் அழகிய விளக்கம் தருவர் மற்றொரு சாரார். இத்தகைய பாஞ்சராத்ர முறையின் முக்கியமான *சம்ஹிதைகள்* 108 ஆகும்.

*விகனசர்* என்ற மகரிஷியினால் வகுக்கப்பட்ட வைணவ வழிபாட்டு நெறிக்கு வைகானசம் என்றும் பெயர். இவரை விஷ்ணுவின் மானச புத்ரர் என்பர். இவர்தம் வழிச்செல்வோர் *வைகானசர்* எனப்படுவர். இவரின் சீடர்கள் நால்வர். மரீசி, அத்ரி, பிருகு, காஸ்யபர் என்பன அவர்தம் பெயர்கள். இந் நால்வரும் தத்தம் பெயரில் ஆகம நூல்கள் இயற்றி உள்ளார்கள்.

## பாஞ்சராத்ர தத்துவ ஞானம்

இறைவன் ஒருவனே. அவனே முதலும் முடிவும் எல்லாமும் ஆனவன். அவன் நிர்குணன் அல்லன். நிராகாரம் என்ற உருவமற்றவனும் அல்லன். உருவம் உடையவனே. அவனே எல்லாம். எல்லாவற்றிலும் அவனே.

அவன் தரித்துக் கொண்ட திருமேனி *விக்ரகம்* எனப்படும். அத் திருமேனி மண். நீர். நெருப்பு. காற்று. வெளி ஆகிய ஐம்பூதச் சேர்க்கையால் ஏற்பட்ட-பிரகிருதி சம்பந்தப்பட்ட-சத்வ. ரஜ. தமோ குணங்கள் உள்ள பிராகிருத உருவம் அன்று. வினைப் பயனால் விளைந்த, இன்ப துன்பங்களுக்குட்பட்ட, கர்ம சரீரமும் அல்ல.

வினையால் விளையாத பஞ்ச பூதக் கலப்பற்ற இன்ப துன்பங்களுக்கு அப்பாற்பட்ட, தூய்மையான, முழுமையான, உண்மையான அலகிலா ஆற்றலுடைய. *சுத்தசத்வம்* என்ற ஒரே குணத்தையுடைய, தெய்வத் திருமேனியான இவ்வுருத்தை *அப்பிராகிருத திவ்ய மங்கள விக்ரகம்* என்பர் ஞானாசிரியர்.

அவனது இவ் வுருவம். அவனுடைய இச்சையால். அவனேயே ஏற்படுத்திக் கொண்டதாகும். உயிர்கள் மீது கருணை கொண்டு, அவற்றை நல்வழிப்படுத்திக் காத்தற் பொருட்டு மேற்கொண்ட திருவுருவமே இதுவாம். இவன் *வாசுதேவன்* என்ற திருநாமம் கொண்டவன் ஆவான்.

இறைவன் தன் இச்சையால் திருமேனி தரித்துக் கொண்டுள்ளான் என்ற கருத்தின் அடிப்படையில் வாசுதேவனாகிய இறைவன்

1. பரம்
2. வியூகம்
3. விபவம்
4. அந்தர்யாமி
5. அர்ச்சா

ஆகிய ஐந்து திருமேனிகளை ஏற்றருளுகின்றான் என அறிஞர் கூறுவர். இதனை இறைவனின் *சுத்த ஸத்துவ ஷாட்குண்ய ரூபங்கள்* என்று ஆகமங்கள் முழங்குகின்றன.

## 1. பரம்

'பரம்' என்ற சொல் மிக மேலானது. மிக உயர்ந்தது என்று பொருள்படும். சொற்களால் வருணிக்க முடியாத மிக மேலானதான இறை நிலை இப் பரநிலை. இந் நிலையில் இருப்பவன் பரவாசுதேவன்; இவன் இருக்குமிடம் பரமபதம். இதனையே வைகுண்டம் என வைணவ சமயத்தினர் கூறுவர். இங்கு அமைதி-ஆனந்தம் இவற்றின் மொத்த உருவமாகவே வாசுதேவன் வீற்றிருக்க, நித்ய முக்தர்களான அனந்தன். கருடன். விஸ்வக்சேனன், ஜெயன். விஜயன் முதலியோரும் சம்சாரம் நீங்கப் பெற்று முத்தியடைந்தவர்களும் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கியிருப்பர். இவ் வானந்த நிலையைச் சொற்களைக் கொண்டு அளந்து விளக்கிடல் இயலாது. இஃது ஓர் அனுபவ நிலை. பரநிலையை அறிவாலும் தியானத்தாலும் ஆர்வம் தோய்ந்த முயற்சியினாலுமே உணர முடியும்.

வைகுண்ட நாதனாகிய பரவாசுதேவன் பரம பதத்திலிருந்து படிப்படியாக இறங்கி வியூகம். விபவம். அந்தர்யாமி. அர்ச்சா ஆகிய அவதார நிலைகளை மேற்கொள்ளுகிறான்.

## 2. வியூகம்

'வியூகம்' என்ற சொல்லுக்கு அணிவகுப்பு அல்லது தொகுதி என்று பொருள்.

இது பரமபத வாசுதேவன் தனது குணங்களை வகுத்துக் கொள்ளும் சுத்த ஷாட்குண்ய நிலை ஆகும். இவ் வியூக நிலை பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணமாகும்.

இவ் வணியில் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்னன். அநிருத்தன் ஆகிய அறுவகைக் குணங்களின் திருமேனிகள் நான்கும் அடங்கும்.

வியூகத்தில் இடம் பெறும் வாசுதேவனை *வியூக வாசுதேவன்* என்பர். இவர் அமைதியான-அசைவற்ற நிலையில் அமைந்து. பிரபஞ்ச சிருஷ்டிக்குரிய சிந்தனையில் இருப்பார். இந் நிலைக்கு *விஸ்ராம அவஸ்தை*-சாந்த நிலை-என்று பெயர்.

இரண்டாவதான சங்கர்ஷண நிலையில் இச்சையானது வெளிப்படுவதால் இதனை *உதய அவஸ்தை* என்பர்.

மூன்றாவதான பிரத்யும்ன நிலையில் உள்ளம் ஆனது மேலும் விரிவடைகிறது; அதாவது செயல்படுகிறது. இதற்கு *வியாபார அவஸ்தை* என்று பெயர்.

நான்காவதான அநிருத்த நிலையில் அத் திருவுளத்தின் உட்கிடக்கை வடிவம் கொள்கிறது. இவ் வடிவே பிரபஞ்சம் எனப்படும். இதனை *வியக்தாவஸ்தை* என்று கூறுவர்.

ஞானம், பலம். ஐஸ்வரியம், சக்தி, வீர்யம் தேஜஸ் என்ற ஆறு குணங்களைத் தோற்றுவிக்கும் வடிவே வாசுதேவன். ஞானமும் பலமும் மட்டும் தோன்ற சங்கர்ஷணனாகவும்; ஐஸ்வரியமும். வீர்யமும் மட்டும் தோன்ற பிரத்யும்னனாகவும்;

சக்தியும் தேஜசும் தோன்ற அநிருத்தனாகவும் அவதரிக்கிறார். இந்நான்கு நிலைகளை முறையே *சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம்* என்றும், ஜீவான்மாவின் தியானத்தின் நான்கு நிலைகளோடு ஒப்பிட்டு, இந்நான்கு நிலைகளை ஓர் ஆத்மா அனுபவித்தாலும் அவ்வாத்மா மாறுபடாதிருப்பது போல் இந்நான்கு நிலைகளை உடைய இறைவன் தானும் மாறாது இருக்கிறான் என்று ஞானாசிரியர்கள் கூறுகின்றனர். எனவே, இந் நான்கு நிலைகளிலும் இருப்பது ஒன்றே என அறிதல் வேண்டும்.

சங்கர்ஷண, பிரத்யும்ன, அநிருத்த நிலைகளை முறையே மஹேசன் (நீக்கல்) பிரம்மன் (ஆக்கல்), விஷ்ணு (காத்தல்) ஆகியோருடன் இணைத்து வியூக நிலையில் முத்தொழில் நிகழ்வதாக ஞானிகள் உணர்த்துவர்.

இதிலிருந்து தனித்திருக்கும் வாசுதேவனின் கோலத்தை, வீடுபேறு பெற்றோர் அனுபவித்தற் பொருட்டு எடுத்த திருமேனி என்பர்.

### 3. விபவம்

விண்ணிலிருந்து மண்மீது வந்திறங்கிய அவதாரக் கோலத்தையே விபவம் என்பர். விசேடத் தோற்றம் (ஒப்பற்ற பிறப்பு) என்பதே இதன் பொருள். விபவ அவதாரங்களில் சிறப்பாக உள்ளவை பத்து ஆகும். அவை முறையே மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, ராம, பலராம, கிருஷ்ண, கல்கி ஆகும்.

இவ் அவதாரங்கள் உண்மை என்றும், அவதாரத்தில் அறிவு குறைவில்லை என்றும், அவதாரக் காரணம் கருணையுள்ளம் என்றும், அறம் தேய்ந்து மறம் ஓங்கிய காலமே அவதாரக் காலம் என்றும், இறைவனை விட்டு நொடிப் பொழுதும் நீங்கா அடியவர்களைக் காப்பதே அவதாரத்தின் பலன் என்றும், திருமேனி சுத்தசத்துவப் பொளுளாலானது என்றும், ஞானாசிரியர்கள் கூறுவர்.

இத்தகைய அவதாரக் காலங்களில் வாழ்ந்தோர் விபவத்தை அனுபவிப்பர். ஆனால் மற்றவர்கட்கு அர்ச்சை என்ற வழிபடு படிமத்தில் வியாபித்து அவ்வனுபவத்தை இறைவன் அருளுகிறான் என்பர் நூலோர்.

### 4. அந்தர்யாமி

உபாசனம் செய்யத் தகுதி படைத்தோர் உள்ளத்தில் உறையும் திருமேனி அந்தர்யாமி எனப்படும். அடக்கி ஆளும் தன்மைக்கு அந்தர்யாமித்வம் என்று பெயர். மேலும் பிரபஞ்சத்தின் கண் அறிவுள்ள (சித்து) அறிவற்ற (அசித்து) பொருள்களிலும், நிற்பன, நடப்பன, கிடப்பன ஆகிய மூவகைப் பொருள்களிலும் கலந்து உறைந்து உள்ள இறைவனின் திவ்ய ஆத்மாவை அடைவதற்குத் துணையாக இந்தத் திருவுருவம் இருப்பதால் இஃதும் அந்தர்யாமி எனப்படுகிறது.

### 5. அர்ச்சா

அர்ச்சிக்கப்படுவது அதாவது வழிபடப் படுவது அர்ச்சை எனப்படும். இது சிற்ப இலக்கணங்களுக்கு உட்பட்டுச் சிற்பிகளால் இயற்றப்படும் வழிபடு படிமம் ஆகும். இதனை இறைவனின் அவதாரமென்றும், இதில் இறைவன் உறைகிறான் என்றும், இதற்குச் செய்யும் பூசனை வாசுதேவனுக்கே செய்த பூசனை ஆகும் என்றும் வைணவ ஆகம நூல்கள் கூறுகின்றன. எனவே பரவாசு தேவனுடைய பிரதிநிதியாகவே அர்ச்சை கொள்ளப்படுகிறது. இதுவரைக் கூறிய விவரங்களைச் சுருக்கிக் கூறினால், பர, வியூக, விபவம் என்பன, பரம் பொருள் எப்பொழுதும் எங்கும் வியாபித்துள்ள சூக்கும நிலைகளாகும்.

அந்தர்யாமி நிலை, நம் உள்ளத்திலும் பிற வஸ்துக்களிலும் பரம்பொருள் குடிகொண்டிருக்கும் நிலை. இதுவும் சூக்கும நிலையே. யாவரும் எளிதில் கண்டு வணங்குவதற்கு ஏற்ற ஸ்தூல நிலை அர்ச்சா நிலையேயாகும்.

மேலும், இந்தச் சூக்கும தூல நிலைகள் இரண்டும் அண்டத்துக்கும் பிண்டத்துக்கும் தொடர்புடையன என்று அறிதல் வேண்டும். இறைவன் அணுவுக்கும் அணுவாயும் பெரிதுக்கும் பெரிதாயும் (மலைக்கு மலையாயும்) விளங்குபவனன்றோ?

மனிதனின் புலன்கள் அங்குமிங்கும் அலையக் கூடிய தன்மையுடையது (பலவீனமானது). அத்தகைய புலன்களைக் கட்டுப்படுத்தி அணுக முடியாத-அறிய முடியாத ஒரு பொருள் மீது மனத்தை நிலை நிறுத்துவது எளிதன்று. இஃது ஆர்வம் தோய்ந்த இடையறா முயற்சியினாலேயே கைவரப் பெறும். அஃதும் ஒரு சிலருக்கே கிட்டும். அவர்களே யோகிகள் எனப்படுவர்.

புலன்கள் பிறந்த நாள் தொட்டுத் தூலமான பருப் பொருள்களையே பற்றி நின்று பழக்கப் பட்டவை. எனவே, அவை சூக்குமப் பொருளைப் பற்றி நிற்றல் அரிது. எனவே மனம் பற்றி நிற்பதற்கு ஒரு பருப்பொருள் தேவை. பல பொருள்களைப் பார்த்துக் களைப்புற்ற மனம் எதில் நிரந்தரமாகப் பற்றி நிற்க முடியும்? உருவத் திருமேனியில் மனம் லயமாதல் எளிது. அதுவும்

கருத்தோடும் கலைநயத்தோடும் கூடிய திருமேனியில் மனம் லயமாவது மிக எளிது. எனவே, இறைவனின் குணங்களுக்கு மனோகரமான மனித வடிவத்தை நமது ஆகம சிற்ப வல்லுநர்கள் அளித்துள்ளார்கள்.

மரம், கல், உலோகம், சுதை ஆகிய பொருள்களால் உருவான படிமங்களில் இறைவன் வியாபித்து நிற்கிறான் என்றும், மக்கள் இதனை வழிபடுவதை இறைவன் மன நிறைவோடு ஏற்றுக் கொள்கிறான் என்றும், ஆகமங்கள் முழங்குகின்றன.

நன்கு ஸ்தாபிக்கப்பட்ட உருவத் திருமேனியை *பேரம்* என்றும், அருவத்தை *இலிங்கம்* என்றும், உலோகத்தால் அமைந்ததை *பிம்பம்* என்றும், கையினால் செதுக்கியமைத்த உருவத்தை *பிரதிமை* என்றும் ஆகமங்கள் பாகுபடுத்திக் கூறுகின்றன. இவற்றின் பொதுப் பெயர் அர்ச்சை அல்லது படிமம் ஆகும்.

மேலும், படிமங்கள் இருவகைப்படும். திருவுண்ணாழியில் உறுதியான நிலையில் ஸ்தாபிக்கப்பட்டது *துருவ பேரம்* என்றும், இதனொடு தொடர்பு கொண்டதும் வெவ்வேறு பூசை முறைகளுக்கென இயற்றப்பட்டதும், தேவையான இடங்களுக்கு மாற்றிக் கொள்ளத் தக்கதுமான-பொதுவாக உலோகத்தினால் செய்யப்பட்டதான-படிமம் *கர்ம பிம்பம்* என்றும் சொல்லப்படும். முன்னையதை *ஸ்தாவரம்* என்றும் பின்னையதை *ஜங்கமம்* என்றும் பகுத்துக் கூறுவது ஆகம வழக்கு.

ஜங்கமப் படிமங்கள் ஆறுவகைப்படும். அவை முறையே:

1. கர்மார்ச்சை
2. உத்ஸவார்ச்சை
3. பலியர்ச்சை
4. ஸ்நபனார்ச்சை
5. தீர்த்தார்ச்சை
6. சயனார்சசை என்று சொல்லப்படும்.

ஒரு சில ஆகம நூல்கள் *மஹோத்ஸவார்ச்சை* என்று மேலும் ஒரு படிமத்தையும் சேர்த்து ஏழாகவும் கணக்கிடும்.

வைணவ மரபில் துருவ பேரமானது கல்லால் செய்யப்பட்டிருப்பின் திருநீராட்டல் முதலிய பூசனைகள் இதற்கு நிகழும். அங்ஙனம் இன்றி மரத்தாலோ, சுதையாலோ இயற்றப்பட்டிருப்பின், *திருமஞ்சனம்* என்ற திரு நீராட்டல் முதலிய பூசனைகள் உலோகத்தால் செய்யப்பட்ட தனித்ததொரு பிம்பத்திற்கு நிகழும். இதற்குக் *கர்மார்ச்சை* என்று பெயர்.

இதற்குக் கர்மகௌதுகம் என்ற பிறிதொரு பெயருமுண்டு.

திருவிழாக் காலங்களில் திருஉலாக் கொள்ளும் படிமம் *உத்ஸவார்ச்சை* எனப்படும். பரிவார தேவைகளுக்குப் பலி சாதிப்பதற்குரிய படிமம் *பலியர்ச்சை* என்றும், திருமஞ்சனத்திற்கென இருக்கும் தனித்தொரு படிமத்திற்கு *ஸ்நபனார்ச்சை* என்றும், தீர்த்தவாரிக்குரியது *தீர்த்தார்ச்சை* என்றும், சயனக் கோலத்தில் உள்ளத்திற்கு சயனார்ச்சை என்றும் பெயர். மஹோத்ஸவ காலங்களில் மட்டும் உபயோகமாகும் படிமம் *மஹோத்ஸவார்ச்சை* எனப்படும்.

பெரிய ஆலயங்களில் ஐந்து அல்லது ஆறு பிம்பங்களும், நடுத்தர ஆலயங்களில் மூன்று பிம்பங்களும் சிறிய ஆலயங்களில் ஒன்றே ஒன்றும் கொண்டிருப்பது நடைமுறை வழக்கு.

மூலபேரத்தோடு தொடர்பு கொண்டவை கர்ம பிம்பங்கள் என்றாலும் மூல பேரத்திலிருந்து கர்ம பிம்பம் வேறுபடுவதுண்டு. மேலும், மூல பேரம் ஸ்தானகமானால் கர்ம பிம்பம் நிற்கும். அமருதல் கூடாது. மூல பேரம் அமர்ந்திருப்பின் கர்ம பிம்பம் அமர்ந்தோ நின்றோ இருக்கலாம். மூல பேரம் சயனத்தில் இருப்பின் கர்ம பிம்பம் சயன நிலையில் இருத்தல் ஆகாது. நின்றோ, அமர்ந்தோதான் இருக்க வேண்டும்.

மேலும், வைணவ மரபில் படிமங்கள் மூன்று வகைப்படும். அவை *பாலம், யௌவனம், விருத்தம்* ஆகும். அதாவது, அவை முறையே *குழந்தைத் திருமேனி,* வாலிபத் திருமேனி, முதிய திருமேனி எனப்படும். பாலத்திருமேனி சயன பிம்பமாகும். இஃது இன்பம் (காம்யம்) பெறுதற் பொருட்டும், யௌவனத் திருமேனி வீடுபேறு பெறுதற் பொருட்டும் வழிபடப்படுவதாம். முதிய திருமேனியானது போக மூர்த்தமாகும். இது சுகபோகங்களைப் பெறுதற் பொருட்டு வழிப்படப்படும் என்று நூல்கள் கூறுகின்றன.

அத்துடன், நின்ற கோலப் படிமம் ராஜஸ பாவம் என்றும், அமர்ந்த கோலப் படிமம் தாமஸ பாவம் என்றும், சயனப்படிமம் சாத்விக பாவம் என்றும் படிமங்கள் குணத்தால் மூன்று வகைப்படும்.

கைகளின் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டு படிமங்கள் மூன்று வகையாகச் சொல்லப்படுகின்றன. எட்டு அல்லது பதினாறு கரங்களைக் கொண்ட படிமம் ஸ்தூலம் என்றும், நான்கு கைகளைக் கொண்டது சூக்ஷ்மம் என்றும், இரண்டே கைகளைக் கொண்டது பரம் என்றும் இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது.

*ஏக பேரம்* என்றும் பகு பேரம் என்றும் படிமங்கள் மேலும் இரண்டு வகையினவாகும்.

சக்திப்படிமங்களோ, மற்றுமுள்ள துணைப் படிமங்களோ உடனில்லாது தனித்து திருவுண்ணாழியில் ஸ்தாபிக்கப்படும் பேரமானது ஏகபேரம் எனப்படும். இது திருவுண்ணாழியில் பதவிந்யாச இலக்கணத்திற்கிணங்க வகுக்கப்பட்ட *பிரம்ம பதத்தில்* ஸ்தாபிக்கப்படும்.

அப்படிக்கின்றிச் சக்திப்படிமங்களோடும், பிற துணைப் படிமங்களோடும், மேலும் கர்மார்ச்சை, உத்ஸவார்ச்சை முதலிய படிமங்களோடும் ஸ்தாபிக்கப்படும் பேரம், *பகு பேரம்* எனப்படும். இது தெய்வீக பதத்தில் இடம் பெறும்.

செயலாற்றும் சிற்பிகள் மேற்சொன்ன பாஞ்சராத்ர ஆகமத் தத்துவக் கருத்துக்களையும் படிம வகைகளையும் மனத்திற்கொண்டு படிமங்களைச் சமைத்தல் வேண்டும்.

**வைகானச தத்துவ ஞானம்**[1]

"*அவனது* பாவம் தத்துவம் எனப்படும். அதாவது பரப்பிரம்மத்தின்-பரமாத்வின்-நாராயணனின்-பாவம் தத்துவமாகும். பாவம் என்பது சுயத்தன்மை ஆகும். (இறைத் தன்மையே தத்துவம் எனப்படும்).

அவனை அறிதலே ஞானம் எனப்படும். அவ் அறிவு அல்லது வித்யை *பிரம்ப வித்யை* எனப்படும்.

எனவே, பரமாத்மா அறியத்தக்கவன், *பரமாத்மா* ஆனவன் *ஞேயன்* எனப்படுவான். ஜீவாத்மா அறிபவன், ஞாதா எனப்படுவான்.

சுருதிகள்-(வேதவாக்கியங்கள்) ஞானம் ஆகும்.'' இங்ஙனம் பரமாத்மாவைப் பற்றிப் பேசுவோர் கூறுவர்.

அத்தகைய பிரம்மம், *நிஷ்களம்* என்றும் *சகளம்* என்றும் இருவகையாகச் சொல்லப்படும். அவை *'அருவம்'* என்றும் *'உருவம்'* என்றும் முறையே பொருள்படும்.

விஷ்ணுவின் நிஷ்களத்தன்மையினை வைகானச ஆகமம் கீழ்க்கண்டவாறு விளக்கிக் கூறுகிறது.

**நிஷ்களம்**

"பரமாத்மாவைத் தவிர மேலானது வேறு ஒன்றுமே இல்லை; பாலில் நெய் போல, எள்ளில் எண்ணெய் போல, பூவில் மணம் போல, பழத்தில் சுவை போல, மரத்தில் தீ போல, உள்ளும் புறமும் ஆகாசம் போல வியாபித்திருக்கிறான். எல்லாவற்றிலும், உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்து நிற்கிறான். ஆகாசத்தைச் சரீரமாக உடையது பிரமமம். சரீரமில்லாத அவன் வியாபித்து நிற்கிறான். விஸ்வத்தை வியாபித்திருப்பதால் விஷ்ணு எனப்படுகிறான். புலன்களுக்கு எட்டியும் எட்டாமலும் இருப்பவன்-மிகத் தூயன்-அழுக்கற்றவன்-என்றுமுளன் (நம்மால்) நினைக்க முடியாதவன் அளப்பரியவன் துணையில்லாதவன்-அசைவற்றவன்-அவயங்களில்லாதவன்-தோற்றமும் ஒடுக்கமும் இல்லாதவன்-மாறாதவன்-இரண்டற்ற ஏகன்-வருணிக்கப்பட முடியாதவன்-புலன்களுக்கு அப்பாற்பட்டவன்-சூக்ஷமமாக இருப்பதால் இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாதவன்-சத்து ஆனவன்-அசத்து ஆனவன்" இங்ஙனம் பிரம்ம வித்யை அறிந்தோர் பேசுகின்றனர்.

"உயர்ந்த இடத்தில் (நிலையில்) உள்ளோன்-மேலான ஒளி மயமானவன் (பரஞ்சோதி)-எங்கும் நிறைந்தவன் (சர்வகன்)-சர்வ சக்தி மயன்-சர்வ தேவமயன்-எல்லாவற்றுக்கும் ஆதாரமானவன்-மிகப் பழமையானவன்-அறிபவன், அறியத்தக்கது, ஞானம் இம் மூன்றும் இல்லாதவன்-ஞானகனன் (ஞானமைலை) சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் ஆகிய ஸ்தானங்களைக் கடந்தவன்-வெளிப்புற விஷயங்களை அறிந்தவன்-ஞான நிலையில் இருப்பவன்".

"ஸ்தூல சூக்ஷம பாகுபாட்டால் வைஸ்வானர தேஜஸ் உடையவன்-ஸ்வரூபத்தால் (வைஸ் வானரம் என்ற) அக்னி வடிவில் எல்லாவற்றையும் அனுபவிப்பவன்-எல்லோருக்கும் ஆத்மாவாக இருப்பவன்-எல்லோருடைய இதயத்துள்ளும் இருப்பவன்-பரமாத்மா அணுவுக்கு அணுவாய், மலைக்கு மலையாய் பிராணிகளின் இதய குகையில் வைக்கப்பட்டுள்ளான்."

"அந்த அக்னியின் சிகையில், அதன் மத்தியில் பரமாத்மா இருக்கிறான். அதுவே பிரம்மம் அதுவே சிவம்."

இங்ஙனம் பரப்பிரம்மத்தின் நிஷ்களத்தன்மை விளக்கப்படுகிறது.

## பகவானிடமிருந்து உலகத்தின் தோற்றம்—உலகத்துக்கும் பகவானுக்குமுள்ள வேறுபாடுகள்

**சகளம்**

"மரத்தைக் கடைவதால் மரத்திலிருந்து அக்னி வெளிப்படுவதுபோல (எங்கும் விரிந்து கலந்து நிற்கும்) நிஷ்களமான விஷ்ணு, பக்தி கலந்த

தியானத்தால் கடையப்பட்டு (தன் இச்சையினால்-சங்கல்பத்தினால்) சகளத்திருமேனி கொள்கிறான்'' என்பது ஆகமக் கொள்கை.

''அந்த அக்னியிலிருந்து எழும் பொறிகள் போல பிரம்மன், ஈசன் முதலிய தேவதா உருவ பேதங்கள் ஏற்படுகின்றன.''

''மேலும், குயவனுடைய சக்கரத்தில் இருக்கும் மண்ணானது குடம், சட்டி முதலிய உருவ பேதங்கள் அடைவது போல பகவான் எந்தெந்த வடிவங்களாக வேண்டுமென இச்சை கொள்கிறானோ அந்தந்த வடிவங்களாக மாறி விளங்குகிறான்.''

''அவன் எல்லாப் பக்கங்களிலும் கண்களையுடையவன்-எல்லாப் பக்கங்களிலும் முகமுடையவன்-எல்லாப் பக்கங்களிலும் கைகளையுடையவன்-எல்லாப் பக்கங்களிலும் கால்களையுடையவன்'' அதாவது, கண்களின் தேவையின்றி எங்குமுள்ள பொருள்களைப் பார்க்கிறான். முகத்தின் தேவையின்றி எல்லாப் பக்கங்களிலும் இருப்பவர்களுடன் பேசுகிறான். கைகளின் தேவையின்றி எங்கும் உள்ளதை எடுக்கின்றான். கால்களின் தேவையின்றி எந்தப் பக்கமும் நடக்கின்றான் என்பது இதன் விளக்கம்.

''வானம், பூமி யாவற்றிலும் சமமாக வியாபித்த சரீரத்தையுடைய பரமாத்மா ஒருவனே எல்லாப் பிராணிகளையும் படைத்து, காத்து, அழித்தற் பொருட்டு, நிமித்த காரண சரீரத்தை யுடையவனாகிறான். ஆதலால் அவன் பிரதானன், பரமன், அழிவற்றவன், வியாபித்தவன், அவனே புருஷன், அவனே படைப்பவன், காப்பவன், துடைப்பவன். அதிலிருந்து வேறு பட்டவர்கள் ஜீவர்கள்.''

## லக்ஷ்மி விஷ்ணுவின் துணைவியாக இருக்கும் தன்மை

''விஷ்ணுவின் விபூதி (ஐசுவரியம்) லக்ஷ்மி; அவள் தோற்றமும் முடிவும் இல்லாதவள்; அவ்யக்த வடிவினள். அளவு, அளவின்மை இரண்டிற்கும் பொதுவானவள்; விஷ்ணுவின் எண்ணத்திற்கு (ஸங்கல்பம்) ஒத்திருப்பவள். எப்பொழுதும் ஆனந்த வடிவினள். மூலப் பிரகிருதி வடிவினதான சக்தி, அவளில் வேறுபட்டது. பிரகிருதியின் அம்சமான பௌஷ்ணி[2] அதனில் வேறுபட்டது. ஸ்திரீகள் அவளை அபிமான ஆத்மாவாகக் கொண்டவர்கள்.

மாயா, பிரகிருதி, விஷ்ணுவானவர் மாயி. இந்தப் பிரகிருதி-புருஷன் (ஜீவன்) ஆகிய இருவரும் அனாதி. இவர்களால் உலகின் வளர்ச்சி (பிரவிருத்தி) ஆயிற்று. பிரகிருதியிலிருந்து தோன்றியவைகள் எல்லாம் விகார (மாறுபாடு அடையும்) குணங்கள் கொண்டவை. பிரகிருதியானது காரியம் (உடல்), காரணம் (புலன்கள்) ஆகியவற்றின் செயல்களுக்குக் காரணம் (ஹேது), புருஷன், சுகதுக்கங்களுக்கு போக்தாவாக (அனுபவிப்பவனாக) இருக்கிறான். பிரகிருதியில், சரீரம் புலன்கள் இவற்றுடன் புருஷன் பிரகிருதியில் தோன்றும் ஸத்துவாதி குணங்களின் காரியங்களை தரும் பலனை அனுபவிக்கிறான்.''

## மாறுபாடு அடையும் குணங்களைக் கொண்ட பிரகிருதி இருவிதம்

''பிரளய காலத்தில் இறைவனுடன் ஒன்றி நின்ற சூக்ஷம (சேதன, அசேதனங்களின் கூட்டாகிய) HóA¼FòÈÙ¶. *சேதனம், அசேதனம்* என்ற இரண்டு விதமாகும். அசேதனமானது, மனம், புத்தி, அகங்காரம் மற்றும் பஞ்ச பூதங்கள் ஆக எட்டுவிதமாக ஆகிறது. மற்றொன்றான சேதனம் ஜீவனாக ஆகிறது. அவ்வாறே புருஷர்கள் பிரகிருதியுடன் எப்பொழுதும் (பிரளயகாலத்தில் சூக்ஷம ரூபமாகவும் சிருஷ்டி காலத்தில், உடல், புலன்கள், போக்யப் பொருளாக உருவெடுப்பதாகவும் உள்ள நிலையில்) இணைந்திருப்பவர்கள், பிரகிருதியிலுள்ள ஜீவாத்மாக்கள் க்ஷேத்ரஞர் எனப்படுவர். அவர்கள் ஏராளமானவர்கள். அவர்களும் நித்யர்கள். அநாதியான அவித்யையினால் சேமித்து வைக்கப்பட்ட புண்ணியம், பாபம் இவைகளின் பலனை அனுபவிக்க, பலவிதமான சரீரத்திற்குள் நுழைந்து அந்தந்த ஆத்மாபிமானம் கொண்டவர்களாய் அதில் நல்ல-கெட்ட செயல்களைச் செய்து அந்தந்த பலன்களுக்கு ஏற்ற உடலைத் திரும்பத் திரும்பப் பெற்று உழலுகிறார்கள் என்று அறியப்படுகிறது.''

## வைகுண்டத்தின் தன்மையும் அதில் ஆமோதம் முதலிய பேதமும், அவைகளில் உள்ள பகவானின் ரூபங்களும்

''பரமாத்மாவிடமிருந்து பொன்மயமான முட்டை வடிவத்தில் இந்தப் பிரகிருதியின் தோற்றம் உண்டாயிற்று. அதனுள்ளே இருக்கின்ற எல்லா அண்டங்களுக்கு மேல் பழமையானதும்,

நித்யமானதும் இத் தகையதெனத் துணிய முடியாததும், தேவர்களாலும் காண முடியாததும், நித்ய சுத்தர்களான முக்த ஸ்வபாவத்தைக் கொண்ட புருஷர்களால் அனுபவிக்கப்படுகிற வைஷ்ண வாண்டம் உள்ளது. அதில் ஆமோதம், ஸம்மோதம், பிரமோதம், வைகுண்டம் என்று நான்கு விஷ்ணுலோகங்கள் உள்ளது. முறையே ஒன்றுக்கு மேல் ஒன்று உள்ளன. அதில் பொன்மயமான பிராகாரம், கோபுரம், தோரணம், நூறு ஆயிரக்கணக்கான பொன் தாமரைகள் இவைகளால் அலங்கரிக்கப்பட்டதும், அமுத ஜலங்களால் நிரம்பிய நூறு ஆயிரக்கணக்கான ஆறுகளாலும் விளங்குகின்ற திவ்ய லோகத்தில், ஆயிரம் சூரியனுக்கு ஒப்பான பொன்மயமான பன்னிரண்டு தளங்களுடன் கூடிய விமானம் உள்ளது. நித்யமான ஞானம், கிரியை, ஐசுவரியம், பிரும்மா முதலிய தேவர்கள், ரிஷிகள் இவர்களுடனும், நித்ய பரிஜனங்களுடனும் கூடிய கோயில் உள்ளது. அந்த வியோம நிலையத்தில் (ஆகாயக் கோவிலில்) பரமாத்மா தன்னுடைய ஸங்கல்பத்தால் தேவி, பூஷணம், ஆயுதம் இவைகளுடன் 'ஆமோதத்தில் விஷ்ணுவாகவும் பிரமோதத்தில் மஹா விஷ்ணுவாகவும் ஸம்மோதத்தில் ஸ்தா விஷ்ணுவாகவும் வைகுண்டத்தில் ஸர்வ வியாபி நாராயணனாகவும் அமர்ந்து இருப்பார்."

### துருவ பேரமும் துருவார்ச்சையும்

விஷ்ணுவை இரண்டுவிதமாக ஆராதிப்பது வைகானச ஆகம வழக்கு. ஒன்று அருவமாக வழிபடுவது. இதனை *அமூர்த்தம்* அல்லது *நிராகாரம்* என்பர். மற்றொன்று உருவமாக வழிபடுவது. இதனை *சமூர்த்தம்* அல்லது *சாகாரம்* என்பர். முன்னையதை நீரில், தீயில், உள்ளத்தில், சூரியனில் ஆராதிப்பர். பின்னையதை தலை, உடல், கை, கால்கள் முதலியன முற்றிலும் கொண்டதும் சிற்ப இலக்கணங்களுக்கு ஏற்ப இயற்றப்பட்டதுமான படிமத்தில் ஆராதிப்பர்.

வைஷ்ணவ வழிபாட்டு முறையில் இரண்டு வகையான படிமங்கள் மூல பிம்பமாக திருவுண்ணாழியில் வைத்து ஆராதிக்கப் படுகின்றன. ஒன்று *துருவ பேரம்* என்றும் மற்றொன்று *துருவார்ச்சை* என்றும் சொல்லப்படும்.

### துருவ பேரம்

இது மூல பிம்பமே. ஆனால் இதற்கு எண்ணெய், பால் முதலியவற்றால் ஒவ்வொரு நாளும் *திருமஞ்சனம்* செய்யப் பெறுவதில்லை. இதற்கு மாறாக, உலோகத்தால் செய்த படிமமொன்றில் மூல பிம்பத்திலிருந்து சக்தியை எழுந்தருளச் செய்து (ஆவாஹனம் செய்து), இதற்கே திருமஞ்சனம் போன்ற ஆராதனைகள் நிகழும். அந்தப் படிமத்திற்கு, *கௌதுகம்* என்று பெயர்.

இங்ஙனம் காலையில் ஆவாஹனம் செய்த சக்தியை, அன்றிரவே மூல பிம்பத்திற்குத் திருப்பி அனுப்பிவிடப்படும். இதற்கு *உத்வாஸசனம்* என்று பெயர்.

எனவே, துருவ பேரத்தில் ஆவாஹன உத்வாஸனங்கள் நிகழ்வதாகின்றது.

இத்தகைய துருவ பேரம் மண்ணால், சுதையால் அல்லது மரத்தால் செய்யப்பட்டு வண்ணம் தீட்டப்பட்டிருக்கும். தைலக் காப்பு இதற்கு இன்றியமையாதது.

### துருவார்ச்சை

இதுவும் மூல பிம்பமே. இதற்கு ஒவ்வொரு நாளும் திருமஞ்சன ஆராதனம் நிகழும். ஏனைய நித்ய பூஜைகளும் இதற்கே. எனவே இதற்கு அருகில் கௌதுக பேரம் என்ற தனித்த படிமம் கிடையாது. மேலும் ஆவாஹனம், உத்வாஸனம் என்ற முறையும் இங்கு இல்லை. இத்தகைய மூலபிம்பம், கல்லால் வடிக்கப்பட்டிருக்கும். இங்ஙனம் கல்லால் அமைந்த துருவார்ச்சை, வண்ணம் தீட்டப் பெற்றும் இருக்கலாம். இந்நிலையில் திருமஞ்சனம் செய்தால் வண்ணங்கள் கலைந்து விடுமல்லவா? ஆகவே மீண்டும் மீண்டும் இப்படிமத்திற்கு வண்ணம் தீட்டப்பட வேண்டும். அங்ஙனமின்றி, வண்ணத்திற்கு மாற்றாக வாசனைத் தைலங்களைச் *சாத்தித்* திருமஞ்சனம் செய்வது வழக்கு.

மேலும் இரண்டு முக்கியமான செய்திகளைச் சிற்பிகள் தெரிந்து கொள்ளுதல் நன்றாகும். மேற்கண்ட துருவ பேரத்தை *பகு பேரம்* என்றும், துருவார்ச்சையை *ஏக பேரம்* என்றும் சொல்வது ஆகம வழக்கு. எல்லாவிதமான ஆராதனங்களும் ஒன்றுக்கே (துருவார்ச்சைக்கே) நிகழ்வதால் ஏக பேரம் என்றும், இரண்டு பிம்பங்களுக்கு அவை நிகழ்வதால் (துருவ பேரத்தை) பகுபேரம் என்றும் சொல்வதாயிற்று.

இத்தகைய ஏக பேரத்தை திருவுண்ணாழியில் *பிரம்மபதத்தில்* நிறுவலாம் என்றும் ஆகமங்கள் விதி வகுத்துக் கூறுகின்றன. பகுபேரத்தை அதற்கேற்ற தெய்விக அல்லது மானுட பதத்திலேயே நிறுவுதல் வேண்டும்.

துருவ பேர ஆராதனத்தில் உலோகத்தால் செய்த பிம்பங்களும் உடன் இருக்கும். மொத்தத்தில் ஐந்து பேரங்கள் இருப்பது உத்தமம். அவை முறையே.

| | | |
|---|---|---|
| 1. மூல பேரமாகிய துருவ பேரம் | - | கிராம நலத்திற்காக |
| 2. கௌதுக பேரம் | - | தினசரிப் பூசைக்காக |
| 3. உற்சவ பேரம் | - | திருவிழாவிற்காக |
| 4. ஸ்நபந பேரம் | - | விசேட நாட்களில் தீர்த்தவாரிக்காக |
| 5. பலி பேரம் | - | பரிவார தேவதைகளுக்கு பலி சாதிப்பதற்காக |

அங்ஙனம் ஐந்துக்கு மாற்றாக துருவ பேரம், கௌதுக பேரம், பலி பேரம் என்ற மூன்றும் இருப்பது மத்திமம் ஆகும். துருவ பேரமும் கௌதுக பேரமும் மட்டும் இருப்பின் அதமம் எனப்படும். பகு பேர ஆராதனத்தில் கௌதுகம் இன்றியமையாதது.

துருவார்ச்சை ஆராதனத்தில் கௌதுகம் இல்லையாதலால் மூலவர், உற்சவர், பலி பேரர் ஆகிய மூன்றும் சேர்ந்ததே உத்தமம் எனக் கொள்ளப்படுகிறது. இரண்டிருப்பது மத்திமம்; மூல பேரர் மட்டும் இருப்பது அதமமாம்.

திருவுண்ணாழியைப் பதவிந்யாசம் செய்து அதில் படிமங்களை ஸ்தாபனம் செய்வதில் ஏக பேர, பகு பேர வேறுபாடுகளுக்கேற்றவாறு பதவிந்யாசமும், ஸ்தாபனத்திற்குரிய பதமும் வேறுபடுவதால் அதனை நன்கு சிற்பிகள் தெரிந்திருத்தல் வேண்டும். (பதவிந்யாச இலக்கணம் காண்க).

## சைவாகமக் கொள்கை

ஒரு பொருள் உண்டென்று கொள்வதற்கு மூன்று சான்றுகள் தேவை. அவை முறையே பிரத்யட்சப் பிரமாணம், அனுமானப் பிரமாணம், ஆகமப் பிரமாணம் என்று சொல்லப்படும். ஒரு பொருளை நேருக்கு நேர் காண்பதையே பிரத்யட்சப் பிரமாணம் என்றும், தெரியாத ஒரு பொருளை தெரிந்த வேறொன்றின் மூலம் அறிதலை அனுமாப்ன பிரமாணம் என்றும், ஆகமம் முதலிய அரிய நூல்களின் துணைக்கொண்டு அறிதலே ஆகமப் பிரமாணம் என்றும் சொல்லப்படும். இறைவனை நேருக்கு நேர் பார்த்தல் அரிது. அழ்ந்த பக்தியும், இடையுறா முயற்சியும் கொண்டவர்க்கு, விறகிலிருந்து தீ வெளிப்படுவது போல இறைவன் தோன்றுவன் என்பர் அறிஞர். எனவே இது வருந்தி உழைத்துப் பெற வேண்டியதொன்றாகிறது. உலகில் காணும் அனைத்துப் பொருள்களின் தோற்றம், இயக்கம், ஒடுக்கம் ஆகிய நிகழ்ச்சிகளையும், அதன் அற்புதங்களையும் கொண்டு அறிதலே அனுமானப் பிரமாணம் ஆகும். புகையைக் கண்டு நெருப்பிருத்தலை அறிவது போல இயற்கையின் இயக்கங்களைக் கொண்டு இறைவனை ஓரளவு அறிய முடிகிறது.

பொருள்கள் அனைத்தும் தோன்றுவதற்குக் காரணமான பொருளே கடவுள் எனப்படும். அது பிரம்மம் என்றும் சொல்லப்படும்.

கடவுள் என்ற சொல் எல்லாவற்றையும் கடந்து நிற்பது என்றும் உள்ளது என்றும் பொருள் தரும். (கட+உள்=கடவுள்).

சைவாகமங்கள் கடவுளை இரண்டு நிலைகளில் வைத்து விளக்கும். ஒன்று சொரூபம், மற்றொன்று தடஸ்தம் ஆகும். முன்னையதைத் தன்னியல் பென்றும், பின்னையதைச் சிறப்பியல்பென்றும் கூறுவர். இவற்றையே கடந்த நிலையென்றும், கலந்த நிலையென்றும் விளக்குவர்.

சொரூப நிலையிலுள்ள கடவுளுக்கு குணம், குறி, பெயர் என்று ஏதுமில்லை. இருப்பினும் அந்நிலையிலிருக்கும் கடவுள் பரமசிவம் என்று அழைக்கப்படுகிறது. மனத்திலே இறைவனின் அந்நிலையை இருத்திக் கொள்வதற்காக இட்ட பெயராகும் இது.

அத்தகைய சொரூப நிலையிலுள்ள கடவுள் உயிர்களின் துன்பத்தைப் போக்குவதற்காக தானாகவே பல படிகள் இறங்கி வந்து பல நிலைகளில் உள்ள கடவுளரைச் சார்ந்து நின்று, அவர்கள் மூலமாக ஆணை செலுத்தி ஐந்து தொழில்களைச் செய்கிறார். கடவுளின் இந் நிலைக்கே தடஸ்தம் அல்லது கலந்தநிலை என்று பெயர். தடஸ்தம் என்ற சொல்லுக்கு மத்யஸ்தம் அல்லது நடுவுநிலை என்பது நேர் பொருள்.

காரண காரியங்களோடு இயைந்தது இப் பிரபஞ்சம். கடவுள் காரண காரியங்களுக்கு அப்பாற்பட்டவர். ஆனால் இப்பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரணமாக நின்று அவை இயற்கையாய் நடப்பதுபோல் காட்டுகிறவர் அவரே. இச்செயலையே கடவுளின் அருட்செயல் என்பர் அறிஞர். இவ்வருட்செயலின் வடிவே சக்தி எனப்படுகிறது. சக்தியே பெண் வடிவம் பூண்டிருக்கிறது.

உலகத்தில் காணும் உயிர்கள் அனைத்தும் ஆண், பெண் என்ற தன்மையிலேயே நின்று உலக

போகங்களைத் துய்த்து உலகத்தை வளர்ச்சியுறச் செய்கின்றன. கடவுளும் தன் அருளையே பெண் வடிவமாய்க் கொண்டே போகியாய்த் தோன்றி உயிர்கள் அனைத்தையும் போக நுகர்ச்சியில் ஆழத்துகின்றான்.

சிவமும் சக்தியும், சொல்லும் பொருளும் போல, ஒன்றையொன்று பிரிக்க முடியாத வண்ணம் கலந்திருப்பதையே உமையொரு பாகனாக அமைந்த அர்த்தநாரீஸ்வரத் திரு உருவம் காட்டுகிறது.

சைவ சமய நூல்கள் கடவுளுக்கு மூன்று திருவுருங்களைக் காட்டுகின்றன. அவை நிஷ்களம், சகள நிஷ்களம், சகளம், என்று சொல்லப்படுகின்றன. இவற்றின் பொருள் முறையே அருவம், அருவுருவம், உருவம் ஆகும். அருவ நிலையில் சிவம், சக்தி, நாதம், விந்து என்று நான்கு வகையாகக் கூறப்படும். அருவுருவ நிலையைச் சார்ந்தது சதாசிவம். உருவ நிலையில் மகேசன், ருத்திரன், விஷ்ணு, பிரம்மன் என நான்கு விதமாகப் பெயர் பெறுவர்.

## சைவ சித்தாந்தம்

### முப்பொருள்

உலகில் காணப்படும் எல்லாப் பொருள்களையும் மூன்று பெரும் பிரிவுகளில் அடக்குவர் தத்துவ ஞானிகள். அவை முறையே:

1. பிரிதொன்றின் உதவியின்றித் தானாகவே அறிகின்ற அறிவு மயமான பொருள்.
2. அறிவித்தால் அறிந்து கொள்வதும் அறிவிக்காவிடில் அறிய மாட்டாததுமாகிய பொருள்.
3. அறிவித்தாலும் அறியமாட்டாத பொருள்.

முதற் பொருளை கடவுள் என்றும், இரண்டாவது பொருளை உயிர் என்றும், மூன்றாவது பொருளை உலகம் என்றும் கூறுவர். அவற்றைச் சைவ சித்தாந்த மொழியால் பதி, பசு, பாசம், என்று குறிப்பிடுவர்.

இம் மூன்று பொருள்களும் எங்ஙனம், எப்பொழுது தோன்றின என்பதை எவரும் அறுதியிட்டுக் கூற முடியாது. இம் மூன்றையும் எவரும் உண்டாக்கவில்லை. இவை எக்காலத்திலும் இருப்பன. எனவே சித்தாந்திகள் இவற்றை அனாதி என்பர்.

இம் மூன்று பொருள்களில் கடவுள் தனியானவர். மேலும் அவர் தூய்மையானவர். ஆனால் உயிரும், உலகமும் ஒன்றையொன்று தழுவியிருக்கின்றன. உலகமோ தூய்மையற்றது. மாசுகள் நிறைந்தது. எனவே இம் மாசு உயிர்மீதும் படிந்து, அதனை ஒளியிழக்கச் செய்கிறது.

உயிராகிய பசுவின் மீது மலமாகிய பாசம் படிந்திருக்கிறதல்லவா? உயிராகிய பசுவே இப் பாசத்தை நீக்கிக் கொள்ள முடியாது. இப் பாசத்தை நீக்க வல்லார் கடவுளே ஆவார்.

கடவுள் உயிர்கள் மீது இரக்கங் கொண்டு அவை மீது படிந்துள்ள மாசுகளை நீக்கி தூய்மைப்படுத்துகிறார். கருமுகிலால் மறைப்புண்ட சூரியன் எங்ஙனம் காற்றால் முகில் அகற்றப்பட்டு ஒளிமயமாய் விளங்குகின்றானோ, அங்ஙனமே மலத்தால் கட்டுண்ட ஆன்மா இறைவனால் மல நீக்கம் பெறும். அதன் பின்னே அவ்வுயிர்களை இன்ப நிலை அடையச் செய்கிறான். இதனைக் கடவுள், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்கின்ற ஐந் தொழில்களால் செய்கிறார் என்பர் சித்தாந்திகள்.

உலகிலுள்ள எந்த உயிர்களையும் கடவுள் படைக்கவில்லை. ஏனெனில் கடவுளைப் போல உயிர்களும் அனாதியானவை. செம்பில் களிம்பு போல, பாசமானது அனாதியாக உயிர்கள் மீது படிந்து கிடக்கின்றது.

உயிர்கள் மீது படிந்துள்ள மாசு என்பது, ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்றாகச் சொல்லப்படும். இவ் மும்மலங்கள் என்றும் சொல்லப்படும். இம்மூன்றும் அழிவற்ற ஜடப் பொருள்கள். கடவுள் உயிர்களை படைப்பதில்லை என்று முன்பு கூறினோம். பின்பு எதைப் படைக்கின்றாரெனின் உயிர்களுக்கு உடல்களைப் படைக்கின்றார். ஐம்புலன்களையும், இந்திரியங்களையும் கொடுக்கின்றார். அவ்வுயிர்கள் வாழுமிடங்களையும் வழங்குகின்றார். இறுதியாக அவ்வுயிர்கள் அனுபவிப்பதற்குரிய பொருள்களையும் படைத்துத் தருகின்றார். இந்நான்கு பொருள்களையே சித்தாந்திகள் தனு (உடல்), கரண (இந்திரியங்கள்), புவன (இருக்கை) போகம் (துய்க்கும் பொருள்) என்று சொல்லுவர். தனு, கரண, புவன, போகம் எனும் நான்கையும் சேர்த்து மாயை என்பர் சித்தாந்திகள்.

கடவுளானவர் இம்மாயையை விரித்து உயர்களை இதற்குள் ஈடுபடுத்தியே பாசத்தை நீக்குகிறார். பாசம் நீங்கினால் உயிர்களுக்கு ஞானம் பிறக்கும். இந்த ஞானத்தின் துணை கொண்டே உயிர்கள் இறைவனடி சேரும்.

எனவே, இறைவனின் படைத்தல் என்ற செயல், மேற் குறிப்பிட்ட தனு, கரண, புவன, போகங்களைப் படைத்தலையே குறிக்கும்.

இங்ஙனம் கடவுளால் படைத்துக் கொடுக்கப் பட்ட தனு, கரண, புவன போகங்களை எவ்வளவு காலம் வரை உயிர்கள் அனுபவிக்க வேண்டுமோ, அவ்வளவு காலம் கடவுள் அவ்வுயிர்களை அவற்றில் உழலுமாறு வைக்கின்றார். அச்செயலே கடவுளின் காத்தல் தொழிலாகும். உயிர்கள் வினைப்பயன்களை அனுபவித்து முடிந்தபின் தனு, கரண, புவன போகங்களை உயிர்களிடத்திலிருந்து கடவுள் நீக்கி விடுகிறார். அஃதே அவரது அழித்தல் தொழிலாகும். கடவுள் உயிர்களை அழிப்பதில்லை.

உயிர்கள் நல்வினைகளையும், தீவினைகளையும் செய்யக்கூடும். ஒரு பிறவியில் செய்யும் நல்வினை, தீவினைக்கேற்றவாறு மறு பிறவியில் அவ்வுயிர்கள் மீண்டும், தனு, கரண, புவன போகங்களைப் பெற்று மீண்டும் மீண்டும் இங்ஙனமே பிறந்து பிறந்து, பாசங்களைப் போக்கிக் கொள்ளுகின்றன. ஒவ்வொரு பிறவியிலும் மாசு தேய்கிறது. இங்ஙனம் மீண்டும், மீண்டும் பிறப்பதினால் அடையும் துன்பங்களைக் கண்டு வெறுப்படையாமல் அதிலேயே அழுந்துமாறு கடவுள் ஆழ்த்துகிறார். வினைப் பயனைத் துய்ப்பதற்காக உயிர்களை அழுந்தியிருக்குமாறு கடவுள் செய்யும் தொழிலையே மறைத்தற் தொழில் என்பர்.

உயிர்கள் மீது படிந்துள்ள பாசம், வினை போகத்தால் வலிமை குன்றிவிடும். இதற்கு மல பரிபாகம் அல்லது மல முதிர்ச்சி என்று பெயர். நல்வினையையும், தீவினையையும் உள்ளத்தில் சமநிலையில் உணரும் பக்குவம் இருவினையொப்பு என்று சொல்லப்படும்.

மலபரிபாகமும், இருவினையொப்பும் உயிர்கள் அடைகின்ற போது சிவசக்தியின் அருள் உயிரிடத்தில் படியும். அந்நிலையில் கடவுளை அடைய ஆவல் அல்லது புத்தி உயிர்களிடத்துத் தோன்றும்.

கடவுளைப் போலவும், உயிரைப் போலவும் பாசமும் அனாதியானது. எனவே, இதனை அறவே நீக்கிட முடியாது. அப்பாசத்தின் வலிமையையே கடவுள் குறைத்து விடுகிறார். எஞ்சியிருப்பதை வாசனா மலம் என்பர். முத்தி நிலையடைந்த உயிர்கள் உடலற்றுப் போகும் பொழுது அம்மலம் அவர்களை முற்றிலும் விட்டு அகன்று விடும்.

மாசு நீங்கித் தூயம்மையடைந்த உயிருக்கு கடவுள் இன்பத்தைத் தருகின்றார். அதற்கே அருளல் என்று பெயர்.

கடவுளின் இத்தகைய பஞ்ச கிருத்யங்களையும் அதைச் சார்ந்துள்ள தத்துவங்களையும் உள்ளடக்கிய மூர்த்தமே ஆனந்த நடராஜப் பெருமானின் திருவுருவம். எனவே, இக் கொள்கையான தத்துவக் கருத்துக்களையெல்லாம் சிற்பிகள் தெரிந்திருத்தல் இன்றியமையாததன்றோ?

---

1. மரிசி சம்ஹிதை
2. மஹத், அகங்காரம், பதினோரு இந்திரியங்கள், பஞ்ச பூதங்கள்-இவற்றாலான உலகில் உள்ள எல்லாப் பொருளுமாய் புஷ்டி அடைபவள் பௌஷ்ணி.

# 19

# இலிங்கத் திருமேனி



மனம் வாக்குகளுக்கு எட்டாததாய்; அளவிடற்கரிய பேரொளியாய்; தனக்கு நாயகமில்லாததாய்; குணம் குறியில்லாததாய்; சாந்தமாய் விளங்கும் கடவுள். ஆன்மாக்களின் தியான பாவனா நிமித்தம் திருமேனி கொள்கிறார். அது சகளம், நிஷ்களம், சகள நிஷ்களம் என மூன்று வகைப்படும்.

தலை, உடல், கை, கால் முதலிய அவயங்களோடு விளங்குவது சகளம் எனப்படும். சந்திர சேகர மூர்த்தம், நடராஜ மூர்த்தம் முதலியவை சகளத் திருமேனிகளாகும். அவயவங்கள் ஏதுமில்லா இலிங்கமே நிஷ்களத் திருமேனியாகும். இவ் விரண்டு கூறுகளும் அமையப்பெற்ற முக இலிங்கமே சகள நிஷ்களத்திருமேனி என்று சொல்லப்படும்.

நிஷ்களமாகிய இலிங்கம், ஆழ்ந்த தத்துவப் பொருளை உணர்த்தும் கடவுளின் அடையாளமாகும். இலிங்கம் என்ற சொல் அடையாளம் அல்லது சின்னம் என்று பொருள்படும். சிவத்தின் அடையாளமாகக் கொள்ளப்படுவதால் இது சிவலிங்கம் எனப்படும்.

தோன்றி ஒடுங்கும் தன்மை வாய்ந்தது உலகம். அது தொடக்கத்தில் எங்ஙனம் தோற்றமெடுக்கிறதோ அங்ஙனமே இறுதியில் ஒடுக்கம் கொள்கிறது.

சிவலிங்கம் அவற்றைப் படைக்கும் தன்மை வாய்ந்ததாகக் கொள்ளப்படுவதால் அதற்கு இலிங்கம் என்று பெயர். எனவே இலிங்கம் சிருஷ்டியின் சின்னம் ஆகும்.

'லிங்' என்பது ஒடுக்கமாகிய லயத்தையும் 'கம்' என்பது தோற்றத்தையும் குறிப்பிடும்.

எனவே, இலிங்கம் என்பதைத் தோற்ற ஒடுக்கத்தின் சின்னமாக ஆகமங்கள் விளக்கும்.

உருவமற்ற கடவுள், எல்லாப் பொருள்களிலும் வியாபித்து, அவற்றுள் மறைந்து எல்லாவற்றுக்கும் நாயகமாக விளங்குகின்றது. அதனிடமிருந்து பல தத்துவங்கள் உண்டாயின. சிருஷ்டி காலத்தில் சாந்தி தத்துவமும், சாந்தி தத்துவத்திலிருந்து சக்தி தத்துவமும் தோன்றியது. பிறகு ஒன்றிலிருந்து மற்றொன்றாக முறையே நாதம், பிந்து தோன்றின. நாதமே 'சத்' என்றும் பிந்துவே மனோன்மணி என்றும் கூறப்படுகிறது. இந்த மனோன்மணியிலிருந்து ஈஸ்வரன் தோன்றினான். ஈஸ்வரனிடத்திலிருந்து மஹேஸ்வரனும், மஹேஸ்வரனிடமிருந்து விஷ்ணுவும் உண்டானார்கள். இவை ஒவ்வொன்றும் தத்துவமே. பிறகு விஷ்ணு தத்துவத்திலிருந்து பிரம்மா உண்டானார். பிரம்மாவிடமிருந்து தேவர்கள், ரிஷிகள், தானவர்கள், பல்வேறு ஜீவராசிகள் உண்டானார்கள்.

மேற்கூறிய தத்துவங்களில் முதல் மூன்றாகிய இலிங்கம், சாந்தி, சக்தி ஆகியவை சொல்லால் விவரித்து உணர்த்த முடியாதன, உருவமற்றன. எனவே இதனை நிஷ்களம் என்று சிற்ப ஆகம நூல்கள் கூறும். சிவமே சகளம் எனப்படுகிறது. நாதம் பிந்து ஆகிய இரண்டும் சகள நிஷ்களம் எனப்படுகின்றன. நாதமே இலிங்க வடிவாகும். பிந்துவே பீடம் என்ற ஆவுடையார் ஆகும். மேலும் இலிங்கம் சிவரூபமென்றும், யோனி, சக்தி ரூபமென்றும் இவ் விரண்டும் நெருப்பும், சூடும் போல, சொல்லும் பொருளும் போல ஒன்றாகவே விளங்கும். தியானம், பூஜை செய்தற் பொருட்டு அஃது இலிங்கம்-யோனி என்ற பாகுபாடுடன் விளங்குகிறது.

அத்தகைய இலிங்கம் சலம் (அசைவது), அசலம் (அசையாதது), சலாசலம் (அசைவதும் அசையாததும்) என மூன்று வகைப்படும்.

பொதுவாக இலிங்கம் என்ற தண்டும், யோனி என்ற பீடமும் இணைந்த அமைப்பே இலிங்கத் திருமேனியாகும். தண்டுப் பகுதியில் மூன்றில் ஒரு பாகம் சதுரமாகவும், மற்றொரு பகுதி எட்டுப் பட்டமாகவும், மூன்றாவது பகுதி திரண்டதாகவும் இருக்கும். இவை அடியிலிருந்து ஒன்றன் மீது மற்றொன்றாக அமையும். இம் மூன்றும் ஒரே தண்டிலேயே அடங்கும். இதுவே லிங்க நாளம் அல்லது தண்டு எனப்படும். சதுர வடிவமான அடிப்பகுதியை பிரம்ம பாகம் எனவும், எட்டுப் பட்டமான இடைப்பகுதியை விஷ்ணுபாகம் எனவும், திரண்டதான தலைப் பகுதியை ருத்ரபாகம் எனவும் சொல்ல வேண்டும். இவை கடவுளின் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்ற முத்தொழிலைக் குறிப்பிடும். மூன்றும் சேர்ந்ததே சிவலிங்கம் எனப்படும். யோனி பீடம் என்பது வட்டவடிவமான அடிப் பகுதியையும் இடைப்பகுதியையும் கொண்டு கோமுகம் என்று சொல்லப்படும். இத்தகைய பீடத்தின் நடுவில் இலிங்க அகலத்திற்கு சமமான துளையொன்றைச் செய்து அதனுள் இலிங்கநாளமானது செருகி அமைக்கப்படும். இங்ஙனம் செய்யும்போது இடையிலுள்ள விஷ்ணுபாகம் பீடத்திற்குள்ளேயும், பிரம்ப பாகம் பீடத்திற்குக் கீழேயும் அமைய, ருத்ரபாகம் பீடத்திற்கு மேலே விளங்கி நிற்கும். அங்ஙனம் நாளமும் பீடமும் ஒன்று சேர்ந்தமைந்ததே இலிங்கத் திருமேனியாகும். ருத்ரபாகத்தில் தாமரைமொட்டை உச்சிற்கொண்ட மூன்று ரேகைகளை முன் பக்கத்தில் பொறித்து, அது முகமாகக் கொள்ளப்படும். இத்தகைய அமைப்பு கல்லிலே செய்யப்படும் கிரியா லிங்கம் ஆகும். இஃது ஆலயத்தில் ஸ்திரமாக பிரதிஷ்டை செய்யப்படும் இலிங்கம் ஆதலால் இஃது அசல லிங்கம் எனப்படும். தானாகத் தோன்றிய சுயம்பு லிங்கமும் அசல லிங்கமேயாகும்.

விருப்பமான நேரத்தில் விருப்பமான இடங்களுக்கு எடுத்துச் செல்லத்தக்கதாய் அமைக்கப்படும் இலிங்கம், சலலிங்கம் எனப்படும்.




இலிங்க நாளமும், யோளி பீடமும்
1. பிரம்ம பாகம் 2. விஷ்ணு பாகம் 3. ருத்ர பாகம் 4. சதுரமான பிரம்ம பாகம்
5. எட்டுப்பட்டமான விஷ்ணு பாகம் 6. திரட்சியான ருத்ர பாகம்

மேற்பகுதியானது அரசிலை போன்ற அமைப்பு உடையதாக இருக்கும். அரசிலையும் வட்ட வடிவமாக இருக்குமெனினும் அதில் ஒரு பக்கம் இலை நுனி போல் நீண்டிருக்கும். இந்த நீட்சியே

ரத்னம், ஸ்படிகம், உலோகம், கல், மரம் இவற்றாலாய இலிங்கங்கள் இவ் வகையைச் சாரும். மண்ணால் செய்தமைத்த இலிங்கமும் இதையே சாரும்.

உரிய இடத்தில் நிலையாக நிறுவப்பட்டது போல் தோன்றுவதும் ஆனால் வைக்கவும் எடுக்கவும் கூடியதான இலிங்கம், சலா சலம் எனப்படும். கல்லால் செய்யப்பட்டதும் பீடம் ருத்ர பாகம் ஆகிய இவ் இரண்டுமுடைய இலிங்கம் இவ்வகையைச் சாரும்.



யோனி பீடத்தின் மேல்மட்டத் தோற்றம்



பிரம்ம சிலைகளின் ஸ்வஸ்திக அமைப்பு

மணல், அரிசி, அன்னம், ஆற்று மண், சாணம், வெண்ணெய், சந்தனம், ருத்ராஷம், பூ, கூர்ச்சம், வெல்லம், மாவு ஆகிய பன்னிரெண்டு பொருள்களால் இலிங்கங்களைச் செய்து வழிபட்டு, வழிபாடு முடிந்ததும் நீக்கப்படுவது க்ஷணிக லிங்கம் எனப்படும். குறிப்பிட்ட அந்த நேரத்திற்கே பயன்படுவதால் இஃது இப்பெயர் பெற்றது. இவற்றைச் செய்வதற்கு அளவுகள் தேவையில்லை.

மண்ணால் இலிங்கங்களைச் செய்யலாமாதலால் அஃது இரண்டு வகையாகும். தூய்மையான இடத்தில் மண்ணெடுத்து ருத்ரபாகமும் ஆவுடையாரும் சேர்ந்தாற்போல் இலிங்கத்தைச் செய்யலாம். இதனை நெருப்பி லிடாமல் வைத்துப் பயன்படுத்தினால் *அபக்குவ லிங்கம்* என்றும் நெருப்பிலிட்டு சுட்டு உபயோகப்படுத்தினால் *பக்குவ லிங்கம்* என்றும் பெயர் பெறும்.

அபக்குவ லிங்கத்தைச் செய்யும் போது, யவை, கோதுமை, நெய், பால், கஷாயம், விளாமிபிசின், நல்ல மண் இவற்றை ஒன்றாக்கிப் பிசைந்து, பல மாதங்கள் உலர்த்திச் செம்மையாக்கிய மண்ணொடு ரத்னங்களையும் கலந்து ருத்ரபாகம், பீடம், இரண்டும் சேர்ந்ததாகச் செய்தல் வேண்டும்.

தங்கம், வெள்ளி, செம்பு, வெண்கலம், பித்தளை, உருக்கு, ஈயம், ஆகிய உலோகங்களில் செய்யப்படும் இலிங்கம் *லோஹஜ லிங்கம்* எனப்படும். அங்ஙனமே முத்து, பவழம், வைடூரியம், ஸ்படிகம், புஷ்பராகம், மரகதம், நீலம் இவற்றாலாய இலிங்கம் *ரத்னஜ லிங்கம்* எனப்படும். மேலும் சந்தனம், கருங்காலி, இருப்பை, மரா மரம், வில்வம், தேவதாரு, அசோகம் ஆகிய மரங்களில் அமைக்கப்படுபவை *தாருஜ லிங்கம்* எனப்படும். வைரம் பாயந்ததும் பாலுள்ளதுமான (சத்துள்ள) மரமுமே இதற்கேற்றவை. மற்றரை கூடா.

கல்லிலே அமைந்த இலிங்கங்களே ஆலய வழிபாட்டுக்கு மிகவும் ஏற்றவை. இவை ஒன்பது வகைப்படும். அவை திவ்யம், சுவாயம்புவம், தைவதம், காணபம், ஆசுரம், சுரம், ஆருஷம், ராகஷஸம், மானுஷம், பாணம் எனப்படும்.

திவ்ய லிங்கமும் *சுயம்பு லிங்கமும்* வடிவத்தில் ஒத்தவை. அவை கொடி, நீர்க்குமிழி ருத்ராஷம் ஆகியவற்றின் வடிவத்தை ஒத்திருக்கும்.

*தைவதம்* அல்லது தெய்விக லிங்கமானது தீப வடிவமாகவும், மேடு பள்ளங்களோடும், வரைகள், பொந்துகள், உள்ளதாகவுமிருக்கும். மேலும், மழு, சூலம், அஞ்சலிக் கை போன்ற வடிவினதாகவும் அமைந்திருக்கும். பூஷணிப் பழம், மாதுளம்பழம், வெள்ளரிப்பழம், பலாப் பழம், பனம் பழம் ஆகியவற்றின் வடிவத்தை யொத்திருப்பவை *காணப லிங்கம்* எனப்படும். அடிப்பகுதி பருத்தும் தேங்காயின் தோற்றத்தை யொத்ததுமான இலிங்கம், *ஆருஷம்* எனப்படும் ஆகம சிற்ப

இலக்கணங்களுக்கிணங்க அளவிட்டுச் சிரோவர்த்தனம், பிரம்ம சூத்திரம் வாயந்ததாய் சிற்பிகளால் செய்யப்படும் இலிங்கம் மானுஷ லிங்கம் எனப்படும். இதுவே கிரியா லிங்கம் என்றும் சொல்லப்படும். நர்மதை முதலிய புண்ணிய ஆற்றிலிருந்து பெறப்படும் இலிங்கம் பாண லிங்கம் எனப்படும். பாணம் என்றால் தண்ணீர் என்று பொருள். எனவே இப்பெயர் பெற்றது. பாணாசுரன் வழிபட்டதாகக் குறிப்பிட்டு அதனால் இப்பெயர் பெற்றதென்றும் புராணங்கள் கூறும்.

பாண லிங்கமானது சிறிது நீண்டுருண்ட வடிவமுடையது. இதன் நடுப்பகுதி பருத்தும், அடிப்பகுதியும் தலைப்பகுதியும் சிறுத்தும் வழவழப்பாகவும் இருக்கும். தேன்நிறமும் குளிர்ச்சியும் கொண்டு விளங்கும்.

பாண லிங்கத்தின் பருமனான பகுதியைத் தலையாகவும், இத் தலைப் பகுதியில் உயர்ந்த பாகத்தை முகம் என்றும் கொள்ளுதல் வேண்டும். பாணத்தின் மொத்த நீளத்தில் ஐந்தில் ஒன்று. நான்கில் ஒன்று அல்லது மூன்றில் ஒரு பாகம் ஆவுடையாருக்குள் பதிக்கப்பட வேண்டும். ஆவுடையாரின் மேல் மட்டத்திலிருந்து வெளித்தெரியும் பகுதியே பூஜாம்சம் எனக் கொள்ள வேண்டும்.

## மானுஷ லிங்கம்

மானுஷ லிங்கம் பன்னிரண்டு வகைப்படும். அவற்றைச் செய்தற்கு விரிவான இலக்கணங்கள் உண்டு. கல்லிலே உளி கொண்டு செதுக்கி அமைக்கப்படுவது இந்த இலிங்கம். இதனைச் செய்யும்போது உளியின் ஒலி கேட்கா வண்ணம் இருக்க சுற்றிலும் வாத்ய இசையை எழுப்பி அதில் உளியின் ஓசை மூழ்கிவிடுமாறு செய்தல் பண்டைய ஒரு வழக்கு.

இலிங்கத்திற்கும் பீடத்திற்கும் சிறந்த கற்களையே உபயோகித்தல் வேண்டும். மலை, கடல், புண்ணிய தீர்த்தம், புண்ணிய ஸ்தலம், காடு ஆகிய இடங்களில் தோன்றியுள்ள கற்களிலும்,பாலுள்ள (சத்துள்ள) மரத்தின் அருகிலும், கோயிலருகிலும்,குளத்திற் கருகிலும் கிடைக்கும் கற்களிலும் குற்றங்கள் இல்லாத கற்களையே கொள்ளுதல் வேண்டும். வெள்ளை ரேகை, பொன் ரேகை இருப்பின் நன்மை பயக்கும். கல்லில் நாதமும் இருத்தல் வேண்டும். ஒலியற்ற கல்லை அறவே நீக்கிடல் வேண்டும். மணியோசை போல் ஆழ்ந்த நாதமும் நீண்ட நாதமும் உடைய கல் ஆண் சிலை எனப்படும். இதனால் [illegible] ளத்தைச் செய்தல் வேண்டும். முறித்தாளத்தையொத்ததும் நீண்ட நாதம் உள்ளதுமான கல் பெண் சிலை எனப்படும். இதனால் சக்தி ரூபமான பீடத்தைச் செய்தல் வேண்டும். கரடு. முரடாகவும், உறுதியில்லாமலும் ஒலியற்றதுமான கல் அலிச் சிலை எனப்படும். இதனால் ஆவுடையாருக்கு அடியிலே அமைக்கும் ஆதார சிலையினைச் செய்தல் வேண்டும் இதனைப் பிரம்ம சிலை என்றும் சொல்வதுண்டு. இலிங்க நாளத்தின் பிரம்ம பாகமானது தளமட்டத்தில் பதிந்து அதனைச் சூழ்ந்து பிரம்ம சிலை அமையும். அங்ஙனம் கற்கள் கிடைக்காவிடில் ஆண் சிலையினால் (அல்லது) பெண் சிலையினால் நாளம், பீடம், பிரம்ம சிலை ஆகிய மூன்றையும் செய்யலாம். அலிச் சிலையானது பிரம்ம சிலைக்கு மட்டுமே உரியது.

## இலிங்கத்திற்கு அளவு கொள்ளும் முறை

இலிங்கம் அமையும் கர்ப்பகிருஹம், அதன் வாயில், சுவர், அதிஷ்டானம், ஆகியவற்றின் அளவுகளைக் கொண்டு முழம், தாளம், அங்குலம் ஆகிய அளவுகளைக் கொண்டும் ஏழுவிதமாக இலிங்க நாளத்தின் நீள அளவு நிர்ணயிக்கப்படும்.

## கர்ப்பகிருஹ அளவால்

கர்ப்பகிருஹ அகலத்தில் ஐந்தில் மூன்று பங்கு அல்லது இரண்டில் ஒரு பங்கு இலிங்க நீளம் இருக்கலாம். இவ் விரண்டு அளவுகளுக்குமுள்ள வித்தியாசத்தை எட்டுக் கூறுகளாக்கி அரைப்பங்கோடு ஒவ்வொரு கூறாகக் கூட்டி ஒன்பது விதமாகவும் நீளம் கொள்ளலாம்.

## கர்ப்பகிருஹ வாயில், சுவர், அதிஷ்டானம்

கர்ப்பகிருஹ வாயில் உட்கூட்டின் உயர அளவுக்குச் சமம் அல்லது அவ்வுயரத்தின் மூன்றில் இரண்டு கூறு உயரமிருக்கலாம். அல்லது முன் போல இரண்டு அளவுகளுக்குமுள்ள வித்யாசத்தை எட்டுக் கூறுகளாக்கி மூன்றில் இரண்டு பங்கோடு ஒவ்வொரு கூறாகக் கூட்டிக் கிடைக்கும் ஒன்பது விதமான அளவுகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்தல் வேண்டும். அதே போல், கர்ப்பகிருஹ சுவர் உயரம், அதிஷ்டான உயரம் ஆகிய இரண்டளவுகளிலிருந்தும் ஒன்பதொன்பது உயரங்களைப் பெறலாம். அவற்றில் ஏதேனும் ஒன்றை நிர்ணயம் செய்து கொள்ள வேண்டும்.

## முழ அளவினால்

ஒரு முழம் தொடங்கி மும்மூன்று விரலாகக் கூட்டி 9 முழம் வரை அறுபத்தைந்து விதமான உயரங்கள்

கிடைக்கும். அவற்றில் ஏதேனும் ஒன்றைக் கொள்ளுதல் வேண்டும். இவ்விதி எல்லாக் கோயில்களுக்கும் பொதுவல்ல. கர்ப்பகிருஹக் கால் புறவாய் அகலம் ஐந்து முழத்திற்கு மேற்பட்டிருந்தாலன்றி முழத்தால் இலிங்க நீளம் கொள்ளப் படாது. ஜாதி ஆலயத்திற்கு 6 முழம் முதல் 9 முழம் வரையும், சந்த ஆலயத்திற்கு 3 முழம் முதல் 6 முழம் வரையும், விக்ல்ப, ஆபாச ஆலயங்களுக்கு 1 முழம் முதல் 3 முழம் வரையும் இலிங்க நீளம் கொள்ளலாம்.

### தாள அளவினால்

ஒரு தாளம் முதல் ஒவ்வொரு தாளமாகக் கூட்டி 9 தாளம் வரை ஒன்பது விதமாக இலிங்க நீளம் வைக்கலாம்.

### மானாங்குலத்தால்

13 விரல் தொடங்கி இரண்டிரண்டு விரல் வீதம் கூட்டி 109 விரல் வரை 49 நீளங்களைப் பெற்று அவற்றில் ஏதேனும் ஒன்றைத் தேர்தல் வேண்டும்.

### சிறிய இலிங்கங்கள்

1 முழ அளவிற்குக் குறைந்த நீளமுடையதாக இலிங்க நாளம் இருத்தல் கூடாது. அங்ஙனமின்றி சிறிதாகச் செய்ய் வேண்டுமாயின் சதுரம் எட்டுப்பட்டம், வட்டம் ஆகிய முறையான அமைப்பை விடுத்து அடியிலிருந்து தலைவரை திரட்சியாகவே செய்தல் வேண்டும். அங்ஙனமே திரட்சியான இலிங்க நாளத்தில் மூன்றில் ஒன்று அல்லது நான்கில் ஒரு பாகத்தை பீடத்திற்குள் பதித்தல் வேண்டும். மீதியுள்ள பாகம் பீடத்திற்கு மேலே தெரிய வேண்டும்.

கல்லிலே செய்யும் இலிங்க நாளத்தின் மிகக் குறைந்த நீளம் பதிமூன்று விரலாகும். லோஹஜ, ரத்னஜ லிங்கங்கள், ஒருவிரல் முதல் பதினோரு விரல் வரை நீளமுடையதாக இருக்கலாம். அதற்குமேல் அதிக நீளம் கொள்ளுதல் கூடாது.

### நாகர, திராவிட, வேஸர லிங்கங்கள்

இவை இலிங்க நீளத்திலிருந்து அகலம் கொள்ளும் முறையை அடிப்படையாகக் கொண்டவை. இலிங்க உயரத்தை 10 கூறுகள் செய்து அவற்றில் 2,3,4 அல்லது 5 கூறு அகலம் கொண்டது நாகர லிங்கம் எனப்படும்.

இலிங்க உயரத்தை 18 பாகங்களாக்கி அவற்றில் 3,4,5 அல்லது 6 பாகம் அகல அளவை உடையது திராவிட லிங்கம் என்று சொல்லப்படும்.

இலிங்க உயரத்தை 20 பாகங்களாக்கி அவற்றில் 5,6,7 அல்லது 8 பாகங்களை அகலமாகக் கொண்ட இலிங்கம் வேஸர லிங்கம் ஆகும். நாகர லிங்கம் கொடிபோன்றும், திராவிட லிங்கம் கணிசமாகவும் வேஸர லிங்கம் பருத்தும் இருப்பதைக் காண்க.

மானுஷ லிங்கங்கள் மேலும் எட்டு வகையினவாம். அவற்றில் முதல் நான்கு மட்டும் இலிங்க நாளத்தில் பிரம்ம, விஷ்ணு ருத்ர பாகங்களைப் பங்கீடு செய்வதை அடிப்படையாகக் கொண்டவை.

1. சமகண்ட லிங்கம்
2. வர்த்தமான லிங்கம்
3. சைவாதிக லிங்கம்
4. ஸ்வஸ்திக லிங்கம்
5. சர்வதோபத்ர லிங்கம்
6. சார்வதேசிக லிங்கம்
7. திரைராசிக லிங்கம்
8. தாரா லிங்கம்.

### சமகண்ட லிங்கம்

பிரம்ம, விஷ்ணு, ருத்ர பாகங்கள் ஒவ்வொன்றும் சமநீளமுள்ளனவானால் அந்த இலிங்கம் சமகண்டம் எனப்படும்.

### வர்த்தமான லிங்கம்

இலிங்க நீளத்தை 24 கூறு செய்து 7,8,9-ம்
21 கூறு செய்து 6,7,8-ம்
18 கூறு செய்து 5,6,7-ம்
15 கூறு செய்து 4,5,6-ம்

முறையே பிரம்ம, விஷ்ணு, ருத்ர பாகங்களாகப் கொள்ளின் அது வர்த்தமான லிங்கம் எனப்படும்.

### சைவாதிக லிங்கம்

இலிங்க நீளத்தை 10 கூறு செய்து 3,3,6-ம்
13 கூறு செய்து 4,4,5-ம்
16 கூறு செய்து 5,5,6-ம்
19 கூறு செய்து 6,6,7-ம்

முறையே பிரம்ம விஷ்ணு, ருத்ர பாகங்களாகக் கொள்ளின் அது சைவாதிக லிங்கம் ஆம்.

### ஸ்வஸ்திக லிங்கம்

இலிங்க நீளத்தை 9 பாகம் செய்து பிரம்ம, விஷ்ணு ருத்ர பாகங்கள் 2,3,4 ஆனால் இது ஸ்வஸ்திக லிங்கம் எனப்படும்.

### சர்வதோபத்ர லிங்கம்

இலிங்க நாளம் அடிமுதல் தலைவரை திரட்சியாக அமையின், அந்த இலிங்கம் சர்வதோபத்ர லிங்கம் எனப்படும். மொத்த நீளத்தில் மூன்றில் ஒரு பாகம் பிரம்ம பாகமும், அங்ஙனமே விஷ்ணு பாகமும், ருத்ர பாகமும் அமைதல் வேண்டும். ருத்ர பாகம் பீடத்திற்கு மேலேயும், விஷ்ணு பாகம் பீடத்திற்குள்ளும், பிரம்ம பாகம் தளத்திலும் அமையும்.

### சார்வதேசிக லிங்கம்

இஃது அடி முதல் தலைவரை திரண்ட வடிவானது. இதன் நீளத்தில் 2/5 அல்லது 1/5 பாகத்தைப் பீடத்திற்குள் செருகி எஞ்சிய பகுதியை பீடத்திற்கு மேல் தெரிய அமைப்பது சார்வதேசிக லிங்கம் ஆகும்.

### திரைராசிக லிங்கம்

இது பிரம்ம பாகம், விஷ்ணு பாகம், ருத்ர பாகம் என ஒவ்வொன்றும் வெவ்வேறு சுற்றளவு உடையதாகச் செய்யப்படும் இலிங்கமாகும். சம கண்ட லிங்கத்தின் உயரத்தை 9 பாகம் செய்து ருத்ர பாகத்தின் சுற்றளவு 6 பாகமும், விஷ்ணு பாகத்தின் சுற்றளவு, 7 பாகமும் பிரம்மபாகத்தின் சுற்றளவு 8 பாகமும் இருத்தல் வேண்டும். இது திரைராசிக லிங்கம் என்று சொல்லப்படும்.

### தாரா லிங்கம்

இது மூன்று வகையாகச் செய்யப்படுகின்றது. இலிங்க நாளமானது அடிமுதல் தலை வரை சதுரமாக அமைவது முதல் வகையாகும்.

சமகண்ட லிங்கத்தில் பிரம்ம பாகம் மட்டும் சதுரமாகவும், மற்றவை எட்டுப்பட்ட வடிவில் அமைவது இரண்டாவது வகையாம். சமகண்ட லிங்க நாளத்தில் பிரம்ம பாகத்தை சதுரமாகவும் விஷ்ணு பாகத்தை எட்டுப்பட்டமாகவும் ருத்ர பாகத்தை பதினாறு பட்டமாகவும் அமைத்தல் மூன்றாவது வகையாகும்.

தாரா லிங்கத்தில் கீற்றுகள் போன்ற தாரைகள் செதுக்கப்படும். தாரைகள் 1½ யவை அகலமும், 1 அல்லது ½ யவை களத்தி அல்லது தாழ்த்தி யுடையதாக அமைத்தல் வேண்டும்.

### முக லிங்கம்

இலிங்க நாளத்தின் ருத்ர பாகத்தில் இலிங்கத்தில் இருந்து புடைப்புச் சிற்பமாக மார்பளவு உருவங்கள் அமைக்கப்படும். இவை *சத்யோ ஜாதம், வாமனம், தத்புருஷம், அகோரம், ஈசானம்* என்ற சதாசிவ மூர்த்தியின் முகங்கள் ஆகும். இங்ஙனம் நான்கு முகங்களைக் கொண்டு விளங்குவது முக லிங்கம் எனப்படும். இது *சகள நிஷ்களத்* திருமேனியாகும். *நிஷ்களத்* திருமேனியையும் உணர்த்துவதற்காக ஐந்தாவது முகம் காட்டப்பெறுவதில்லை.



முக லிங்கம்

ருத்ர பாகத்தை (சிரோவர்த்தனம் நீக்கிய பகுதி) 124 கூறுகளாக்கி, ஒரு கூறை விரலாகவும், விரலளவில் எட்டில் ஒன்றை 'யவையாகவும் கொண்டு முகங்களை அளவிட்டுச் செய்தல் வேண்டும்.

உச்சந்தலை 1`-3", நெற்றி 3`-0", கண் மட்டம் 4`-3" மூக்கு மட்டம் 4`-3", மோவாய் மட்டம் 4`-3" கழுத்து 4`-0" எனக்கொண்டு முகத்தைச் செய்தல் வேண்டும். இதன் கீழ் இலிங்கநாளம் தெரியும். ஆவுடையாரின் மேல் மட்டத்தில் அம்முகங்கள் அமையும்.

நான்கு முகங்கள் அல்லது ஒரு முகம் கொண்டதாக அமைக்கலாம். இரண்டு அல்லது நான்கு புயங்கள் கொண்டதாகவும் செய்யலாம். மார்பளவு வடிவமாகவோ அல்லது கண்டமும் முகமும் கொண்டதாகவோ அமைக்கலாம்.

### சிரோவர்த்தனம்

இலிங்க நாளத்தின் தலைப்பகுதியில் வளைவாக உள்ள பகுதி சிரோவர்த்தனம் எனப்படும். இது குடை, கோழி முட்டை, வெள்ளரிப் பழம் அல்லது அர்த்த சந்திரன் போன்று நான்கு விதமாக அமையும்.

இலிங்கத்தின் சுற்றளவை பதினாறு பாகம் செய்து அதில் ஒரு பாகத்தை சிரோவர்த்தனத்தின் உயரமாகக் கொண்டு தாழங்குடை போன்று தலையைச் செதுக்கி அமைத்தல் வேண்டும். இவ்வமைப்பு எல்லா வகை இலிங்கங்களுக்கும், பொதுவும்,.சிறப்பும் ஆகும். மேலும் இலிங்கத்தின் அகலத்தை 32 பாகங்களாக்கி அவற்றில் 14,15,16 அல்லது 17 பாகம் சிரோவர்த்தன உயரமாகும். தலையைக் கோழி முட்டையின் அடியைப் போல் செதுக்கி அமைக்க வேண்டும். இவ் வமைப்பை வர்த்தமான லிங்கத்தில் செய்தல் வேண்டும். இலிங்க அகலத்தை 32 பாகம் செய்து அதில் 10,11,12 அல்லது 13 பாகத்தால் சிரோவர்த்தன உயரம் கொண்டு வெள்ளரிப்பழம் போன்று தலையை அமைத்தல் வேண்டும். இவ்வமைப்பை சைவாதிக லிங்கத்தில் செய்தல் வேண்டும்.

இலிங்கத்தின் அகலத்தை 32 பாகங்களாக்கி அவற்றில் 10,11,12 அல்லது 13 கூறுகளால் அர்த்த சந்திர வடிவமான சிரோவர்த்தனத்தைச் செய்தல் வேண்டும். இவ்வமைப்பு ஸ்வஸ்திக லிங்கத்திற் குரியது.

## இலிங்க பீடம்

இலிங்கமும் பீடமும் செய்வதற்கு, முதலில் இலிங்க நாளத்தில் நீளத்தை இலக்கண முறைப்படி உறுதி செய்து கொள்ள வேண்டும். பிறகு தேர்ந்தெடுத்த நீளம் அளவிலிருந்து அதன் அகலத்தைக் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும். இவ் அகலத்திலிருந்து பீடத்தின் அளவுகளைக் கணித்தல் வேண்டும்.

இலிங்கத்தின் அகலத்திலிருந்து இலிங்கத்தின் சுற்றளவைக் கணக்கிட்டு, சுற்றளவிற்குச் சமமாக இலிங்க பீடத்தின் அகலம் கொள்ளுதல் வேண்டும். இது வட்டவடிவமான பீடத்தின் விட்டமாகும். விட்டத்தில் 5-ல் 4 பங்கு பீடத்தின் உயரமாகும். அவ்வுயரத்தில் பாதி கோமுகத்தின் களத்தியாகும். இது பீடத்தைச் செய்தற் கேற்ற பொது முறையாகும். இனி சிறப்பான முறைகளைக் காண்போம்.

### பீட அகலம்

இலிங்க உயரத்திற்குச் சமமாக இலிங்க பீடத்தின் அகலமிருத்தல் ஒருவகையாகும். இலிங்க பூஜாம்ச உயரத்திற்குச் சமமாக பீடத்தின் அகலம் கொள்வது மற்றொரு வகையாகும். இவ்விரண்டு அளவுகளுக்குள்ள வித்தியாசத்தை 8 பாகங்களாக்கி ஒன்பது விதமாகவும் பீட அகலத்தைக் கொள்ளலாம். இலிங்க பூஜாம்சத்தின் சுற்றளவிற்குச் சமமாகவோ அல்லது 3/4 பங்கினதாகவோ பீடத்தின் அகலத்தை அமைப்பதும் ஒரு முறையாகும். கர்ப்பக்கிருஹத்தின் உள் அகலத்தில் பாதி அல்லது கால் பங்கு பீடத்தின் அகலமாகவும் இருக்கலாம்.

### பீட உயரம்

பீடத்தின் அகலத்நில் 3-ல் 2 பங்கு உயரமுடையது å¼ õ¬èô£° [illegible]. Ý «î dì Ü èô[illegible]F[illegible] ½ பங்கு உயரமுடையது மற்றொரு வகையாகும். இவ்விரு அளவுகளின் வித்தியாசத்தை எட்டுப் பாகங்களாக செய்து ஒன்பது விதமாக உயரம் கொள்ளலாம்.

### கோமுகம்

இலிங்க பீடமானது வட்டமாகவோ அல்லது சதுரமாகவோ இருத்தல் வேண்டும். மேற் பகுதியில் கோமுகத்தை அமைத்தல் வேண்டும். இது பொதுவாக இலிங்க அகலத்திற்குச் சம அளவுடையதாக இருத்தல் நன்றாம். பீட அகலத்தில் மூன்றில் ஒரு பங்கு கோமுகத்தின் களத்தியாகக் கொள்ளுவதும் ஒரு முறையாகும். கோமுகத்தின் அடி அகலம் அதன் நீளத்திற்குச் சமமாகவும், அதன் நுனி அகலமானது அடி அகலத்தில் மூன்றிலொரு பங்காகவும் இருத்தல் வேண்டும். பீடத்தின் மேல் மட்டத்தில் அபிஷேக நீர் செல்வதற்கு ஏற்றவாறு கரைவோடு கூடிய நீர்த்தாரையையும் அமைத்தல் வேண்டும்.

### பீட அலங்காரம்

மேற்கூறிய முறைகளில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்றித் தேர்ந்தெடுத்த பீடத்தின் உயரத்தை 16 பாகங்கள் செய்து உபானம் 2, கீழ் பத்மம் 5, கண்டம் 2, மேல் பத்மம் 4, பட்டிகை 2,



கிருதவாரி 1 என்று பீடத்தின் உறுப்புகளை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். பத்மமானது 16 இதழ்களைக் கொண்டதாக இருத்தல் வேண்டும். *பத்ம பீடம்* என்று இது பெயர் பெறும்.

பீடத்தின் உயரத்தை 16 பங்குகளாக்கி, உபானம் 1, ஜகதி 4, குமுதம் 3, பட்டிகை 1, கண்டம் 3, கம்பு 1, பட்டிகை 1, கிருதவாரி 2, எனக் கொண்டு பீடத்தின் உறுப்புகளை அமைத்தல் வேண்டும். இதற்கு *பத்ர பீடம்* என்று பெயர்.

பீடத்தின் உயரத்தை 16 பாகங்களாக்கி உபானம் 2, ஜகதி 3, குமுதம் 3, கம்பு 1, கண்டம் 3, பட்டிகை 2, கிருதவாரி 1 எனக் கொண்டு பீடத்தின் உறுப்புகளை அழகுற அமைத்தல் வேண்டும். இதுவும் *பத்ர பீட* வகையேயே ஆகும்.



பத்ர பீடம்

பீடத்தின் உயரத்தை 15 கூறுகளாகச் செய்து உபானம் 3, பத்மம் 3, கம்பு 1, கண்டம் 2, கம்பு 1, பத்மம் 2, பட்டிகை 2, கிருதவாரி 1 எனக் கொண்டு பீடத்தின் உறுப்புகள் அழகுற அமைத்தல் வேண்டும். இதற்கு *வேதி பத்ர பீடம்* என்று பெயர். இத்தகைய பீடங்களைச் சதுரமாகவோ, யோனி வடிவமாகவோ அர்த்த சந்திர வடிவமாகவோ, முக்கோண வடிவமாகவோ அல்லது வட்ட வடிவமாகவோ, ஐங்கோண வடிவமாகவோ செய்யலாம். ஆனால் பீடத்தை நீண்ட வடிவமாகச் செய்தல் கூடாது.



வேதிபத்ர பீடம்

## பாத சிலை

இலிங்கத்தையும், பீடத்தையும் கர்ப்பக் கிருஹத்தில் அமைப்பதற்கு முன் கர்ப்பக்கிருஹ தளமட்டத்தில் இலிங்கபீடத்தைத் தாங்குவதற்காக நான்கு கற்களை ஸ்வஸ்திகமாக பதித்தல் வேண்டும். இக் கற்களுக்கு *பாத சிலை* என்றும் *ஆதார சிலை* என்றும், *பிரம்ம சிலை* என்றும் பெயர்.

இந்தப் பிரம்ம சிலையின் நடுவில் இலிங்க நாளத்தின் பிரம்ம பாகம் பதிக்கப்படும். பாத சிலையும் பீடத்தைப்போல் முக்கியத்துவம் வாயந்தது. எனவே இதனையும் இலக்கண விதிகளுக் கிணங்கச் செய்தல் வேண்டும்.

பாத சிலையின் அகலமானது கர்ப்பக்கிருஹ உள் அகலத்தில் பாதியாக இருத்தல் வேண்டும். அல்லது கால் பங்கினதாக இருத்தல் வேண்டும் அல்லது அவ்விரு அளவுகளின் வித்தியாசத்தை எட்டுக் கூறுகளாக்கி ஒன்பது விதமான அளவுகளில் பொருத்தமான அளவு ஒன்றைத் தேர்ந்தெடுத்துச் செய்தல் வேண்டும். பொதுவாக, இது யோனி பீடத்தின் அகலத்தை விட ஒரு விரல் அல்லது இரண்டு விரல் அதிகமிருத்தல் வேண்டும். பாத சிலை சம சதுரமாகவே இருக்கும்.

## இலிங்க முகம்

இலிங்க பூஜாம்சப் பகுதியில் இலிங்கத்தின் முகத்தைக் காட்டுதற்குரிய அடையாளத்தைச் செதுக்கி அமைத்தல் வேண்டும். இலிங்கம் செய்வதில் மிக முக்கியமான பணி இஃதே. இலிங்கத்தின் நடுவில் செங்குத்தான கோடு ஒன்றை காவி நூலால் அடித்தல் வேண்டும். இஃது இலிங்கத்தின் மையமாகும். இலிங்கத்தின் பூஜாம்ச பாகத்தை மூன்று பங்குகளாகச் செய்து, மேலிலிருந்து முதல் பாகத்தை நீக்கி மீதியுள்ள இருபாகங்களுக்குள் முகத்திற்குரிய ரேகைகளை வரைதல் வேண்டும். கீழேயுள்ள இரு பாகங்களின் மொத்த உயரத்தை 8 பாகங்களாகச் செய்து மேற்பகுதியிலுள்ள முதலாவது கூறில் இலிங்கம் போன்ற அடையாளத்தை ஏற்கெனவே நூலடித்த மையத்தில் செதுக்கிக் கொள்ள வேண்டும்.

இங்ஙனம் அடையாளம் இடுவதையே *லக்ஷணோத்தாரம்* என்று சொல்லுவர். இலிங்கம் போல் அடையாளமிடுவதற்குப் பதிலாக இரண்டு கத்திகள், யானைக் கண், குடை, தாமரை மொக்கு, அஞ்சலிக் கை, முக்கோணம், சூலம், நீள்வட்டம் என்பன போன்ற அடையாளங்களில் ஏதேனும் ஒன்றை மையத்தில் செதுக்குதல் வேண்டும்.

இங்ஙனம் செய்த அடையாளத்தின் அடியில் இருந்து செங்குத்தாக ஒரு ரேகையைக் கீழ் நோக்கிக் கீறுதல் வேண்டும். இதற்கு *மணி ரேகை* என்று பெயர். இம்மணி ரேகையைக் கீழிருந்து இரண்டாவது கூறின் எல்லையில் நிறுத்திவிட வேண்டும். அதாவது அடையாளத்திற்குக் கீழ் ஐந்து கூறு நீளமுடையதாக மணி ரேகையை அமைத்தல் வேண்டும். மேலும் மணி ரேகையின் இருமருங்கிலும் இரு ரேகைகளைக் கீழ் நோக்கிச் செல்லுமாறு கீறுதல் வேண்டும். கீழ் நோக்கிச் செல்லும் இந்த ரேகைகள் அடையாளமிட்ட இடத்திலிருந்து துவங்கி நான்கு கூறளவு கீழிறங்கி, பக்கவாட்டில் சரிந்து சென்று பின்புறத்தில் கூடுமாறு செய்தல் வேண்டும். இங்ஙனம் வரைந்த இரு ரேகைகளும் சமமட்டத்தில் சென்று பின்புறத்தில் சேருதல் முக்கியமாகும். மணிரேகை, அதற்கு இருமருங்கிலும் அமையும் இரு ரேகைகள் ஆகிய மூன்றும் தனித்தனியே ஒரு யவை அகலத்திலிருந்து இரண்டு யவை அகலம் வரை பொருத்தமாகக் கொண்டு ரேகைகளைத் துலக்கமாகப் பதித்தல் வேண்டும். மணிரேகையின் அகலத்தில் பாதி அளவு பதிவு இருத்தல் பொருத்தமாகும்.

ரேகையின் பதிவும் அகலத்திற்குச் சமமாகவே இருத்தல் வேண்டும்.



1. ஜாதி, சந்த, விகல்ப, ஆபாசம் என்ற பெயர்கள் திருவுண்ணாழிக் கட்டடத்தின் அகல அளவை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை. விளக்கத்தைக் கட்டடக்கலை நூலில் காண்க.



# 20

# செப்புத் திருமேனிகள்

## [வார்ப்படப் படிமங்கள்]



வழிபடு படிமங்களை கல், மரம், சுதை, உலோகம் ஆகிய பொருள்களால் செய்வது தொன்று தொட்டு வரும் வழக்கமாகும். எப்பொருளால் படிமத்தை இயற்றிடினும் அளவு முறைகளும், உடல் அமைதிகளும், இலக்கணங்களும் எல்லாவற்றுக்கும் பொதுவானவையே. ஆனால் பொருளின் தன்மைக் கேற்றவாறு செய்முறைகள் வேறுபடுகின்றன.

உலோகப் படிமங்கள் பெரும்பாலும் உத்ஸவப் படிமங்களாகவே பயன்படுகின்றன. ஸ்திரப் பிரதிஷ்டைகளுக்கு ஒரு சிறிதே பயன்படுத்தப் பட்டிருக்கின்றன.

உலோகங்களில் படிமங்களை மிக அழகாகவும், நுட்பமாகவும், படிம இலக்கணங்கள் முற்றிலும் அமையுமாறும் செய்யலாம். இடம் விட்டு இடம் நகர்த்தவும் ஏற்றதாகிறதால் உத்ஸவப் படிமங்களுக்கு உலோகம் இன்றியமையாப் பொருளாகும்.

வழபாட்டிற்குரிய கடவுட் படிமங்களைத் தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய மூன்றில் ஏதேனுமொன்றில் இயற்றலாம். ஆனால் தங்கம், வெள்ளி ஆகியவற்றை விடுத்து செம்பிலேயே படிமங்கள் பெரிதும் வடிக்கப்படுகின்றன. சிறிய படிமங்களை வெள்ளியிலேயும், மிகச்சிறய படிமங்களைத் தங்கத்திலேயும் கோவில் வழிபாட்டுக்கும், வீட்டு வழிபாட்டுக்கும் செய்வதுண்டு. பெரிய படிமங்களைச் செம்பினாலேயே வார்த்தெடுத்தல் நீண்ட கால வழக்காகும். செம்பினால் செய்த படிமங்கள் *செப்புத் திருமேனிகள்* எனப்படும்.

வழிபாட்டிற்கில்லாத படிமங்களை பித்தளையால் வார்த்தெடுக்கலாம். விளக்கு நாச்சியார், உருவச்சிலைகள் முதலியன இவ்வகையைச் சேர்ந்தனவாம்.

உலோகப் படிமங்கள் இரண்டு வகையின. ஒன்று கெட்டியானது. மற்றொன்று உள்ளீடற்றது. முன்னையதை *கனம்* என்றும் பின்னையதை *சுஷிரம்* என்றும் நூல்கள் பேசும்.

வழிபடு தெய்வப் படிமங்களைக் கெட்டியாகவே (கனப்பொருளாகவே) செய்தல் வேண்டும். அவ் வடிவங்கள் உள்ளீடற்றதாக இருத்தல் கூடா. ஆனால் தெய்வங்களுக்குரிய வாகனங்களை உள்ளீடற்றதாகச் செய்தல் வழக்கு. செப்புத் திருமேனிகளை வார்த்தெடுக்கும் முறை எளிமையானது. எனினும் அது பல தொழில் நுட்பங்களைத் தன்னகத்தே கொண்டது. மெழுகினால் படிமத்தைச் செய்து உருவாக்குவதே இத் தொழிலில் முதலிடம் வகிக்கின்றது. மெழுகுப் படிமம் எங்ஙனம் அமைகின்றதோ அங்ஙனமே உலோகப் படிமமும் அமையும் அல்லவா? எனவே சிற்பியின் திறமை முழுவதும் மெழுகுப் படிமத்திலேயே வெளிப்பட்டு விடும்.

மெழுகினால் படிமத்தை செய்து, அதனை மண் பூச்சுக்களால் கவசமாக மூடி அது நன்றாகக் காய்ந்தபின் அதைச் சுட்டு, மெழுகை உருக்கி, வெளியேற்றி, உள்ளீடற்ற மண், அதாவது கரு தயாரிக்கப்படுகிறது. உரிய உலோகங்களைக் கலந்து உருக்கி, அக்கருவிற்குள் ஊற்றி, அவ் வுலோகம் ஆறியபின் மண்கருவை நீக்கி, உலோகப் படிமம் வெளிக் கொணரப்படுகிறது. இத்தகைய செயல் முறையில் அடங்கிய தொழில் நுட்பங்களை இனி விரிவாகக் காண்போம்.

உலோகத்தில் படிமங்களை வடிப்பதற்கான செயல்முறையானது ஐந்து நிலைகளைக் கொண்டது. அவை முறையே:

1. மெழுகு பிடித்தல்
2. கருக்கட்டுதல்
3. வார்த்தல்
4. வெட்டி ராவிச் சீவுதல்
5. தீர்மானம் செய்தல் ஆகும்.

## மெழுகு பிடித்தல்

மெழுகினால் படிமங்களை உருவாக்குவதற்கு தேன் மெழுகு, குங்கிலியம், எண்ணெய் ஆகிய மூன்று மூலப் பொருள்கள் தேவைப்படுகின்றன.

ஆச்சா மரத்திலிருந்து உண்டாகும் 'பால்' அல்லது பிசினே குங்கிலியம் ஆகும். இஃது எளிதில் தீப்பற்றிக் கொள்ளும் தன்மையுடையது. புகையும் பொழுது நறுமணத்தைத் தரும். நாட்டுமருந்துக் கடைகளில் கிடைக்கும். இக்குங்கிலியம் கருப்பாகவும், சாம்பல் நிறமுடையதாகவும் இருக்கும். முன்னயதை *கருங்குங்கிலியம்* என்றும் பின்னையதை *நுரைக்குங் குங்கிலியம்* என்றும் சொல்லுவர். இருவகைக் குங்கிலியமும் இத்தொழிலுக்கு ஏற்றதே.

## குங்கிலியக் கலவை

இக் குங்கிலியத்தை உரலிலிட்டு இடித்துப் பொடித்தல் வேண்டும். இப்பொடியை ரவைச் சல்லடையிலிட்டுச் சலித்துப் பொடியைப் பிரித்தெடுத்தல் வேண்டும். இங்ஙனம் சலித்துக் கிடைத்த குங்கிலியப் பொடியுடன், கடலை எண்ணெயைச் சேர்க்க வேண்டும். குங்கிலியப் பொடியும், கடலை எண்ணெயும் அதனதன் எடையில் 4:1 என்ற விகித அளவில் கலக்கப்படுதல் வேண்டும்.

இக் கலவையைப் பாத்திரத்திலிட்டு மரத்துடுப்பால் கிளறுதல் வேண்டும். இதற்கு ஒரு *பக்குவம்* அல்லது *பதம்* இருக்கின்றது. கிளறிய கலவையைக் கையில் அள்ளிப் பிடித்தால் அக் கலவை ஒன்று சேர வேண்டும். அதே சமயத்தில் அது, சிறிது அதிர்வுக்குள்ளானால் பொல பொலத்து உதிரும் தன்மையுடையதாகவும் இருத்தல் வேண்டும். இதுவே இக்கலவையின் பதமாகும். கிட்டதட்ட இப்பதம் ஈர மணலுக்கு ஒப்பாகும்.

இக் குங்கிலியக் கலவையுள்ள பாத்திரத்தைச் சாதாரண விறகு அடுப்பில் வைத்து, சீராகத் தீ வளர்த்து, உருக்குதல் வேண்டும். இஃது உருகிப் பக்குவமடைய அரைமணி நேரம் பிடிக்கும். உருகிய திரவத்தின் பக்குவநிலை வெல்லப் பாகுவின் நிலைக்கொப்பாகும். கலவையின் அளவிற்கு ஏற்ப உருகும் நேரம் கூடுவதும், குறைவதுமுண்டு. அங்ஙனம் உருகிய பின், இக்கலவையைத் துடுப்பால் கிளறிச் சோதித்து, உருகாத நிலையிலுள்ள கட்டிகளை மேலும் கிளறிவிட்டு, ஒரே சீரான பாகாக ஆகும் வரை உருக்குதல் வேண்டும. இக் கலவை இப் பக்குவநிலை அடைந்த பிறகு மேலும் உருக்கப்படின் அதிலுள்ள குங்கிலியம் புகையவோ, எரியவோ நேரிடும். ஆதலால் முன்னெச்சரிக்கையுடன் இக் குறை ஏற்படாமல் கவனித்து மேற்கூறிய பக்குவநிலையில் அத்துடன் தேன் மெழுகைக் கலத்தல் வேண்டும். இப்பக்குவ நிலையை அறியாமல் தேன் மெழுகைச் சேர்க்க நேரிட்டால் குங்கிலியத்தின் உருகும் தன்மை தடைபட்டுக் கேடுறும். இதனால் படிமம் பிடிப்பதற்கு ஏற்ற மெழுகைப்பெற இயலாது. எனவே குங்கிலியப் பாகின் உருகு நிலையைத் துல்லியமாக அறிந்த பின் தேன் மெழுகினைச் சேர்த்தல் வேண்டும்.

## வெட்டை மெழுகு

மெழுகு பல வகையின. அவற்றுள் தேன் மெழுகே இவ்வேலைக்கு மிகவும் ஏற்றது. இது தேன் அடையிலிருந்து பெறப்படும் தூய்மையான மெழுகாகும். இது மென்மையாகவும், தேன் வாடையுள்ளதாகவும், நயமான களி மண்ணின் நைப்புடையதாகவும் இருக்கும். குங்கிலியம் கலவாத மெழுகைக் கொண்டு ஒரு தாள அளவுள்ள சிறு படிமங்களைச் செய்வது நடைமுறை வழக்காகும்.

இத்தகைய குணமுடைய தேன் மெழுகையே குங்கிலியக் கலவையுடன் சேர்த்து உருக்குதல் வேண்டும். தேன்மெழுகின் எடையும் குங்கிலியத்தின் எடையும் சமமாகும். இஃது எண்ணெய் போல் திரவமாகிவிடும். இத்திரவத்தில் தூசுகள் கலந்திருக்கக் கூடுமாதலால் இதனைச் சல்லடை கொண்டு தண்ணீர் உள்ள பாத்திரத்தில் வடிகட்டுதல் வேண்டும். சூடான மெழுகுத் திரவம் தண்ணீருக்குள் குளிர்ந்து கெட்டியாகிவிடும். இதற்குக் *கெட்டி மெழுகு* என்றும், *வெட்டை மெழுகு* என்றும் பெயர்.

குங்கிலியமும், தேன்மெழுகும் உருக்கப்படுவதால் ஒன்றாகிக் குளிர்ச்சியினால் கெட்டியாகிறது. மேலும் மெழுகின் மென்மை மறைந்து, ஓரளவு விறைப்பும் உறுதியும் பெறுகிறது. இதனைக் கையால் வலுவாக அழுத்தினாலும்-முறிக்க முயன்றாலும் உடையும். இதுவே வெட்டை மெழுகின் பக்குவமறிவதற்குரிய நடைமுறைச் சோதனையாகும்.

இத்தகைய தன்மை வாய்ந்த வெட்டை மெழுகைக் கொண்டே படிமத்தில் தலை சேர்ந்த உடல் (உடல் கட்டை), கால், கை ஆகிய உறுதியான பகுதிகளைச் செய்தல் வேண்டும். இஃது எங்ஙனம் என்று இனி விரிவாக நோக்குவோம்.

## மெழுகுப் படிமம்

கெட்டியான வெட்டை மெழுகை வெட்டிரும்பால் சிறு சிறு துண்டுகளாக்கி, அத்துண்டுகளைத் தண்ணீர் உள்ள மற்றொரு பாத்திரத்திலிட்டு, அதனைக் கரி அடுப்பில் ஏற்றிச் சூடுபடுத்த வேண்டும். இதனால் கெட்டி மெழுகு இளக்கங் கொண்டு அதாவது *வெதும்பி* உருவங்களைப் பிடிப்பதற்குரிய பதம் அல்லது பக்குவம் அடையும். இப்பக்குவ நிலையிலுள்ள மெழுகிற்கு *வெதும்பிய மெழுகு* என்று பெயர். தலையும் உடலும் சேர்ந்த உடல் கட்டையை இம் மெழுகால் பிடித்தல் வேண்டும். தொடை, கால், பாதம் மூன்றும் ஒன்றாக இணைக்கப்பட்டமைந்த இரண்டு கால்களைத் தனித்தனியாகவும் மேற்கை, முன்கை ஆகியவற்றையும் அங்ஙனமே தனித்தனியாகவும் பிடித்தல் வேண்டும். அளவுகளும், அமைதிக்கு ஏற்ப அங்கங்களும் அமைந்திடப் பிடித்தல் வேண்டும். இங்ஙனம் பிடித்த அங்கங்களைக் கத்தியினால் சீவியும், நறுக்கியும் அழகுறச் செய்தல் வேண்டும்.

இப்பொழுது முழுமையான படிமத்தின் உறுப்புகள், தனித்தனியாக மெழுகினால் பிடித்துச் செதுக்கிய அழகிய அமைப்புடையதாக செய்யப்பட்டிருப்பதைக் காணலாம் என்றாலும் கண், மூக்கு, வாய் முதலிய சிறு உறுப்புகள் தோன்றாத நிலையிலேயே இஃது இருக்கும்.

இனித் தனித்தனியே செய்த கால் இரண்டை அளவிட்டு நறுக்கி உடலோடு ஒட்டியமைத்தல் வேண்டும். இங்ஙனம் ஒட்டுவதற்குப் பொறுத்து வாயைக் காய்ச்சிய பற்றுக்கோல் கொண்டு தீய்த்து உறுப்புகளை இணைத்தல் வேண்டும். இங்ஙனம் அமைந்த மெழுகுப் பிம்பத்தின் கால்கள் அகன்று விடாமலும், நிலைமாறி விடாமலும் உறுதியாக அமைவதற்குப் பாதத்தின் அடியில் வட்டவடிவமானதும், தகடு போன்றதுமான மெழுகு வில்லையைப் பொருத்துதல் வேண்டும். இதற்கு *ஜடிவில்லை* என்று பெயர். இக்கட்டத்தில் படிமத்தின் பின்புறத்தைத் தவிர மற்ற எல்லாப் பக்கங்களும் தத்தம் அமைப்பைக் கொண்டிருக்கும். பின்புறத்தில், பின் உறுப்புகளின் மேடு பள்ளங்கள் காட்டப்படாமல் சம மட்டமாக இருக்கும். இந்நிலையில் மேற்கையை அளவிட்டு நறுக்கி தோளுடன் முன்போல் பொருத்த வேண்டும். பிறகு முதுகு, குண்டிக்காய் ஆகிய பகுதிகளை மெழுகு வைத்து உருக்கொடுத்துச் செம்மையாக அமைத்தல் வேண்டும்.

## நயம் மெழுகு

மேற்கண்ட விதமாக, எடையால் குங்கிலியம் ஒரு பங்கும், தேன் மெழுகு ஒன்றரைப் பங்கும் சேர்த்து உருக்கிக் கிடைத்த பாகு *நயமெழுகு* எனப்படும். அல்லது மேற்கூறிய வெட்டை மெழுகுடன் அரைப் பங்கு தேன்மெழுகு கலந்து வெதுப்பி அல்லது உருக்கியும் நயமெழுகு தயாரிக்கலாம்.

இந் நயமெழுகைக் கொண்டு ஒட்டிய மெழுகு பிம்பத்தின் மேல் நயமெழுகை வெதுப்பி (மென்மையாக்கி) *நீவி* அங்கங்களை அழகுற அமைத்தல் வேண்டும் (வழித்தல் வேண்டும்). கைகளுக்கு ஏற்ப விரல்களை அளவுடனும், அழகுடனும் அமைத்தல் வேண்டும். நயம் மெழுகைக் கொண்டு கம்பிகள் உருட்டி, அணிகளையும், பூரிமங்களையும், ஆடைகளையும் ஒட்டுதல் வேண்டும். மேற்கைகளோடு தன் கைகளை ஒட்டி இடுக்குகளை மெழுகு வைத்து அடைத்து நீவுதல் வேண்டும். இதன் பிறகு தான் முழுமையான மெழுகுப் பிரதிமை கிடைக்கிறது.

இப் பிம்பத்தை வார்த்தெடுக்க முன்கை, ஆயுதங்கள், முழங்கை ஆகிய இடங்களில் ஓடு *தாள்களை* (பிடிப்பிற்காகவும் உலோகம் ஓடிப் பாய்வதற்காகவும்) ஒட்ட வேண்டும். பின்பு, வெட்டை மெழுகைக் கொண்டு உருட்டுக் கட்டையினால் மெழுகுத் தகடுகளைத் தயாரித்து பீடத்தைத் தனியாகச் செய்தல் வேண்டும். இதுவே மெழுகில் படிமம் பிடிக்கும் முறையாகும்.

## கருக்கட்டுதல்

இங்ஙனம் உருவாக்கிய மெழுகுப் படிமத்தைப் பலவகையான மண் பூச்சுக்களால் மூடி, உலர்த்தி, அதனை நெருப்பிலிட்டுச் சுட்டு அதற்குள் அமைந்த மெழுகுப் படிமத்தை உருக்கி வெளியேற்றிய பின் எஞ்சும் மண் கூடே கருவெனப்படும். இக்கரு எங்ஙனம் தயாரிக்கப்படுகிறது என்பதை இனிக் காண்போம்.

படிமத்தின் நீள அகல அளவிற்குச் சற்று பெரிய அளவினதாக பலகை ஒன்றைத் தயாரித்து, அதன் மீது மணலைக் கொட்டிப் பரப்பி, வெண்மையான துணி ஒன்றை அதன் மேல் விரித்து அமைத்தல் வேண்டும். இம் மணற் படுக்கையின் மீது மெழுகுப்

படிமத்தை இலேசாக வைத்து அரக்கி அசைவின்றிப் பதித்தல் வேண்டும். படிமத்தின் பின்புறம் மணற்படுக்கையில் பதிந்திருக்க, முன்புறமும் முன் உறுப்புகளும் வானோக்கி அமைந்திருக்கும். இப்பொழுது கருக்கட்டுவதற்கெனத் தயாரிக்கப்பட்ட பின்கண்ட இருவகையான மண் பூச்சுக்களைப் பூசுதல் வேண்டும்.

### முதல் பூச்சு

ஆற்றுப் படுகையில் கிடைக்கும் வண்டல் மண்ணை வழித்தெடுத்து அத்துடன் பசுஞ் சாணத்தை நாலுக்கு ஒன்று என்ற விகிதத்தில் சேர்த்து கையால் பிசைந்து இப் பூச்சு மண்ணைத் தயாரித்தல் வேண்டும். இது பூச்சு மண் (அல்லது) *கட்டு மண்* எனப்படும். இத்தகையக் கலவையை விரல்களினால் எடுத்து மெழுகுப் படிமத்தின் மீது வைத்து சந்து பொந்துகள் அடையுமாறு மெதுவாக ஒற்றியும் தடவியும் அம் மெழுகுப் படிமத்தை முற்றிலும் பூசிட வேண்டும். இது *பூச்சுமண் கட்டுதல்* எனப்படும். மெழுகுப் படிமத்தின் மீது பூசப்பட்ட இம் மண்ணின் கனம், படிமத்தின் சிறிய அளவிற்கேற்ப ஒரு யவை முதல் நான்கு யவை வரை இருக்கலாம்.

வண்டல் மண்ணுக்கு மாற்றாக இத்தகைய பூச்சு மண்ணைச் செயற்கையாகத் தயாரிக்கும் ஒரு முறையுண்டு. சுட்ட செங்கல்லை இடித்து, பொடித்து, சலித்த பொடியோடு அரைப்பங்கு களிமண்ணும், கால்பங்கு சாணமும் சேர்த்து நன்றாகப் பிசைந்து அம்மியிலிட்டு வெண்ணெய் போல் அரைத்து இப்பூச்சு மண் தயாரிக்கப்படுகிறது. இம்மண் தகுந்த பக்குவம் அடைந்திருக்கின்றதா என்பதைச் சோதனை செய்து தேர்தல் வேண்டும். அரைத்த மண்ணை இரு விரல் அகலத்தில் அடையாகத் தட்டி ஈரத்தோடு நெருப்பிலிட்டால் நீர்வற்றிய பின்னும் வெடிப்புகள் ஏற்படக் கூடாது. வெடிப்புகள் ஏற்படின் கலவையில் *களிப்பு* அதிகம் என்பது பொருள். களிமண்ணின் களிப்புத் தன்மையின் வேறுபாட்டால் இது நிகழும். இக்களிப்பைக் குறைப்பதற்கு நிதானமாக மேலும் செங்கற் பொடியைக் கலந்து அரைத்தல் வேண்டும். இது *செயற்கைப் பூச்சுமண்* எனப்படும்.

### படிமண்

படிமண் கட்டுதல் என்பது இரண்டாவது பூச்சாகும்.

மெழுகுப் படிமத்தின் மீது முதல் பூச்சைப் பூசி அஃது அரைக் காய்ச்சல் நிலையை அடைந்தபின் படிமண் கட்டுதல் வேண்டும். களிமண் ஒரு பகுதியும், மணல் இருபகுதியும் சேர்த்து, நன்கு கிளறி, தண்ணீர் விட்டு காலால் மிதித்து மணலும் களிமண்ணும் நன்கு சேர்ந்து கலக்குமாறு செய்தல் வேண்டும். இது மட்பாண்டங்கள் தயாரிப்பதற்குரிய களி மண்ணுக்கு ஒப்பான பதமுடையது. அரைக் காய்ச்சலில் உள்ள கருவின் மீது சுமார் ஓர் அங்குலத்திற்குக் குறையாமல் கருவின் பருமனுக்கு ஏற்றவாறு கனமாக இப்பூச்சை ஏற்ற வேண்டும். ஓர் அடி அளவிற்கு உட்பட்ட அளவுடைய கருவானால் இவ் அளவிலேயே மண்பூசுதலை நிறுத்திக் கொள்ளலாம். அங்ஙனமின்றி பெரிய கருக்களைக் கெட்டிப்படுத்துவதற்காக அக்கருவின் மீது இருப்புப் பட்டங்களை நீளவாக்கில் பதித்து அதன் மீது படி மண்ணால் மேலும் பட்டம் மறையும் அளவிற்கு மண் கட்டுதல் வேண்டும். நின்ற கோலத்தில் அல்லாமல், தாண்டவக் கோலத்திலோ, திருவாசியுடன் சேர்ந்தமைந்தோ இருக்கும் படிமமானால் குறுக்கிலும், நெடுக்கிலும் பட்டங்களைப் பதிப்பதோடு, திருவாசியின் வாட்டத்திற்கேற்ப பட்டத்தை வளைத்துப் பதித்துப் படிமண் கட்ட வேண்டும். பொதுவாக, கருவிரிந்து சிதைந்துவிடாமல் இருப்பதற்கே இப்பட்டைகள் பதிக்கப் பெறுகின்றன. இக் கருவை வெயிலில் வைத்து நன்றாக உலரச் செய்தல் வேண்டும்.

இதுவரை மெழுகுப் படிமத்தின் முன்பகுதியில் மட்டுமே கரு உருவாகியிருப்பதை நினைவில் கொள்ள வேண்டும். மெழுகுப் படிமத்தின் பின்புறத்தை மணற்படுக்கையின் மீது பதிய வைத்திருந்தோமல்லவா? இப்பொழுது முன் செய்தவாறு பின்புறத்திலும் பூச்சு மண்ணையும், படிம மண்ணையும் கட்டுதல் வேண்டும். இக் கட்டத்திலும் சில தொழில் நுட்பங்கள் இருப்பதால் அவற்றையும் இனிக் காண்போம்.

முன்புறம் காய்ந்துவிட்ட 'கருவைப் புரட்டி அதே மணற் படுக்கையின் மீது கிடத்தி கீழ்க் கண்ட வேலைகளைச் செய்தல் வேண்டும். மெழுகுப் படிமத்தின் பின்புறத்தில் மெழுகினால் ஆடை அணிகளை ஒட்டிச் சிரச்சக்கரத் தாளையும் ஒட்ட வேண்டும். அடுத்து உள்ளே உள்ள மெழுகை உருக்கி வடித்தெடுப்பதற்கு வழி செய்தல் வேண்டும். இதற்கென மெழுகில் புனல் போன்ற அமைப்பு ஒன்றைச் செய்து வெளித் தெரியும் ஜடிவில்லையில், இரு குதிகால்களுக்கிடையில் ஒட்ட வேண்டும். இதனைச் சாய்வாக ஒட்டுதல் வேண்டும். இதன்பின் முன்போல இரண்டு வகையான பூச்சு மண்ணையும் பூசிடல் வேண்டும். இங்ஙனம் பூசும்பொழுது கருவின் கீழ்ப்பகுதி பிரிந்து விடாது அணைத்துக் கட்டுதல்

வேண்டும். இது கிண்ணம் ஒன்றுக்கு மூடி அமைப்பதற்கொப்பாகும். முன்போலவே, தேவைக்கேற்றவாறு பட்டாக்கள் இன்றியோ அல்லது பட்டாக்களுடனோ பின்புறக் கருவை அமைத்தல் வேண்டும். கடைசியில் இணைத்த புனலையும் மூடியவாறு மண்ணைக் கட்டுதல் வேண்டும். புனல் வாயை அடைத்து மண் கட்டுதல் கூடாது. இதன் பிறகு மீண்டும் முன் கண்டபடி கருவினை உலர்த்துதல் வேண்டும்.

இக்கரு நன்றாக உலர்ந்த பிறகு இக்கருவை மேலும் உறுதிப்படுத்த அதனை மெல்லிய துத்தநாகக் கம்பியால் நெருக்கமாகவும், பதனமாகவும் சுற்றி அதன் மேல் மீண்டும் ஒருமுறை படிமண்ணால் கம்பிகள் மறையும் வரை பூசுதல் வேண்டும். கரு பெரியதானால் புனல் போன்ற தாள்கள் இரண்டினை அடுத்தடுத்து இடைவெளிவிட்டு முன்னதாகவே ஒட்டி, பூச்சுமண், படிமண் வகைகளைக் கட்டி விடுதல் வேண்டும்.

இனி கருவிற்குள்ளிருக்கும் மெழுகுப் படிமத்தைச் சூடேற்றி மெழுகை வடித்துக் கருவைத் தயாரிக்கும் முறையினை நோக்குவோம்.

## மெழுகு வடித்தல்

தரையில் பள்ளம் வெட்டி அதற்குள் வாயகன்ற பாத்திரம் ஒன்றைப் பதித்து, நன்றாய் உலர்ந்த கருவினை அப்பாத்திரத்தில் சாய்வாக வைத்தல் வேண்டும். இங்ஙனம் வைக்கும் பொழுது தாள்வாய் கீழ்நோக்கிப் பாத்திரத்திற்கு உள்ளே அமையுமாறு செய்தல் வேண்டும். அடுத்துக் கருவைச் சுற்றியும் பாத்திர வாயைச் சுற்றியும் ஓடு அல்லது தகடு ஒன்றால் இடைவெளியின்றி மூடி, படிமண்ணால் சந்துகளையும், கருவின் அடிவாயைச் சுற்றியும் அதே மண்ணால் அடைத்துத் தூசிகள் ஏதும் உள்ளே சென்றுவிடாதபடி செய்திடல் வேண்டும்.

பிறகு, கருவின் அடிப்பகுதியைச் சுற்றி, கரி, வறட்டி இவற்றை அடுக்கித் தீ மூட்டிச் சூடேற்றிட வேண்டும். இங்ஙனம் செய்வதால் கருவின் தாள் வாயின் அருகேயுள்ள மெழுகு வடியத்துவங்கும். மேன்மேலும் கருவைச் சுற்றிச் சிறிது சிறிதாக கரியையும், வறட்டியையும் அடுக்கித் தீ வளர்த்து கருவைச் சிறுகச் சிறுக சூடேற்ற வேண்டும். இறுதியில் கரு முழுவதையும் வறட்டியினால் மூடி சூடேற்றி எல்லா மெழுகையும் வடித்திடல் வேண்டும். உள்ளிருந்த மெழுகெல்லாம் உருகி அடியில் உள்ள பாத்திரத்தில் வடிந்து விடும்.

உள்ளிருந்த மெழுகெல்லாம் முற்றிலும் வெளி வந்ததும், கருவைச் சுற்றித் தணல் சூழ்ந்திருப்பதால் புகையத் தொடங்கும். இதுவே மெழுகு முற்றிலும் வெளியேறிவிட்டதென்பதைக் குறிக்கும். இந்நிலையில் நெருப்பை அகற்றிடல் வேண்டும். இனி கரு குளிரத் துவங்கும். முற்றிலும் குளிர்ந்த பிறகு மிகுந்த கவனத்தோடு அக்கருவை அவ்விடத்திலிருந்து பதனமாக நகர்த்திப் பாதுகாப்பான இடத்தில் அசைவின்றி வைத்திடல் வேண்டும். இந்நிலையில் உள்ள கரு கிடைத்தவுடனேயே உலோகத்தை உருக்கி ஊற்றும் பணியைத் தொடர்ந்து மேற்கொள்ளலாம். அல்லது பொருத்தமான வேறொரு நாளிலும் அதனைச் செய்யலாம்.

## வார்த்தல்

இங்ஙனம் தயாரித்த மண் கருவுக்குள் உலோகத்தை உருக்கி ஊற்றி எங்ஙனம் பிம்பத்தை வடித்திட வேண்டுமென்பதை இனி நோக்குவோம்.

உலோகப் படிமங்களில் கீழ்க்கண்ட ஐந்து வகையான உலோகங்கள் சேர்க்கப்படுகின்றன.

1. செம்பு, 2. பித்தளை, 3. ஈயம், 4. வெள்ளி, 5. தங்கம் இவ்வைந்தும் சேர்ந்த கலவைக்கு பஞ்ச லோஹம் அல்லது பஞ்ச தாது என்று பெயர். இவ்வைந்து உலோகங்களில் தங்கம், வெள்ளி ஆகியவை மிகச் சிறிய அளவிலேயே சேர்க்கப்படும். இறைவன் பஞ்ச பூத ஸ்வரூபமாக உள்ளான் என்றும், எனவே பஞ்ச லோகங்கள் பஞ்ச பூதங்களை உணர்த்துவன என்றும் இதற்குத் தத்துவ விளக்கம் சொல்லப்படுகிறது.

தேவையான உலோகங்களின் எடையைக் கணக்கிடுவதற்கு, கருவிலிருந்து வடித்தெடுத்த மெழுகின் எடையை முதலில் கணக்கிட்டு அதைப் போல் பத்து மடங்கு உலோகக் கலவையின் எடை என்று கொள்ள வேண்டும். அதாவது மெழுகின் எடையைப் போல 10 மடங்கு உலோகத்தின் எடையாகும். இங்ஙனம் கொண்ட எடையைச் செம்பு, பித்தளை, ஈயம், ஆகியவற்றிற்கு விகிதாச்சாரத்தில் பிரித்துக் கொள்ள வேண்டும். குறிப்பிட்ட எடையில் 20 பங்கு செம்பும், 5 பங்கு பித்தளையும், 1 பங்கு ஈயமும் சேர்த்தல் வேண்டும்.

எஞ்சியுள்ள தங்கம், வெள்ளி ஆகிய உலோகங்களை விகிதாச்சாரத்தில் கலப்பதில்லை. பஞ்சலோகக் கலவைக்காக-ஓர் அடையாளமாகவே-இவை சேர்க்கப்படுகின்றன. எனவே செய்விப்போன் விருப்பத்திற்கும், வசதிக்கும் ஏற்றவாறு இதனைச் சேர்த்தல் வழக்கு.

இவ்விரண்டு உலோகங்களை அதிகமாகவோ அல்லது குறைவாகவோ சேர்ப்பதால், கலவையின் நிறமோ அல்லது உறுதியோ மாறுவதில்லை.

விகித அளவில் சேர்ந்த உலோகக் கலவையை (குவை) மூசையிலிட்டு உருக்குதல் வேண்டும். இதிலும் ஒரு முறையுண்டு. குவையை உலையில் ஏற்றுவதற்கு முன்பாக மூசையில் உலோகங்களை அடுக்கியமைத்தல் வேண்டும். முதலில் சிறிது ஈயமும், அவ் அளவிற்கு சிறிது அதிகமாகப் பித்தளையும், அதற்கு மேல் தாமிரத்தையும் வைக்க வேண்டும். பிறகு இதனை உலையில் ஏற்றி உஷ்ணப்படுத்த வேண்டும். முதலில் ஈயம் உருகும். அதைத் தொடர்ந்து பித்தளையும் உருகும். மூன்றாவதாக செம்பு உருகும். ஈயம் விரைவில் உருகுவதுடன், அடுத்துள்ள பித்தளை உருகுவதற்கும் வேண்டிய சூடு தந்து பித்தளையை விரைவில் உருக்குகிறது. அப்படியே பித்தளையும் உருக்கிச் செம்பை விரைவில் உருகுவதற்கு உதவுகிறது. தாமிரத்தோடு ஈயமும், பித்தளையும் சேர்க்கப்படாமல் உருக்கினால் தாமிரம் துரிதமாக உருகாமற் போவதோடு உருகிய செம்பானது குழம்பாகவே நிற்கும். இதனைக் கருவுக்குள் ஊற்றுவதும், எல்லா இடத்திற்கும் பரந்து பாயுமாறு செய்வதும் கடினம். செம்பும், ஈயமும், பித்தளையும் சேருவதால் தாமிரக் குழம்பு நீர் போல் உருகிக் கருவுக்குள் விரைந்து ஓடி எல்லா இடுக்குகளிலும் பாயந்து கருவை நிரப்பி நிற்கும். எனவே மேற்கண்ட முறையில் ஈயம், பித்தளை, செம்பு ஆகிய கலவைகளை வரிசைக்கிரமமாக அடுக்கி, உலையில் இட்டு உருக்க வேண்டும். சரக்கின் அளவிற்கு ஏற்றவாறு ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட குவைகளில் சரக்கைப் பகிர்ந்து வைத்தல் வேண்டும். ஈயம், பித்தளை, செம்பு ஆகியவற்றின் உருகு நிலைகள் முறையே $328^0$, $900^0$, $1083^0$ சென்டிகிரேடு ஆகும்.

**உலைக்கூடம்**

அரைக் கிலோ முதல் ஐம்பது கிலோ சரக்கு வரை உருக்குவதற்கேற்ற குவைகள் இன்று கிடைக்கின்றன. இவையே படிம வேலைக்குத் தேவையான தக்க குவைகள் ஆகும்.

உலைக்களத்தின் அமைப்பு, அளவுகள் குவையின் அளவுக்கேற்றவாறு அமையும். பூமி மட்டத்திற்குக் கீழ் தகுந்த ஆழமுடைய குழி வெட்டி அக்குழியின் பாதி ஆழத்தில் கம்பிகளைச் செருகி உலைக்களத்தை அமைக்க வேண்டும். குழி சரிந்து விடாமலிருக்கச் சுற்றிலும் பூமி மட்டத்திற்குச் செங்கலால் தடுப்புச் சுவர் கட்ட வேண்டும். கம்பிகளுக்குக் கீழ் துருத்தியின் வாயைப் பொருத்த வேண்டும். கம்பிகளுக்குக் கீழுள்ள வெற்றிடம் கம்பிகளுக்கு மேலிருந்து விழும் சாம்பல் தங்கும் குழியாகவும் செயல்படும். கம்பியின் மேல்மட்டத்தில் அடுப்புக் கரிகளை நிரப்பி அதன் மீது குவையை இருத்தி இடை வெளிகளைக் கரித்துண்டுகளால் நிரப்ப வேண்டும். குவையின் மேல் மட்டமும், தரை மட்டமும் சமமாக இருக்கும். கம்பிகளுக்குக் கீழே பொருத்தியுள்ள காற்றுக் குழாய் வழியாகக காற்று செலுத்தப்படும். குவையின் வாயையும், உலையின் வாயையும் ஒரே தகட்டினால் மூட வேண்டும். இதனால் உலோகங்கள் உருகுவதற்கு வேண்டிய வெப்பம் கீழ்ப்பகுதியிலும் மேல் மட்டத்திலும் ஒரே சீராகப் பரவிக் கிடைக்க ஏதுவாகின்றது. இங்ஙனம், மேலும் கீழும் வெப்பத்தால் தாக்குண்ட உலோகம் நன்றாக உருகி நீர்போல மாறும் வரை காய்சுதல் வேண்டும்.

இதே சமயத்தில் தனியாகக் கருவை நெருப்பிட்டு பழுக்கக் காய வைக்க வேண்டும். மட்டமான தரையில் வறட்டிகளை அடுக்கி அதன் மீது கருவைச் சாய்வாக வைத்து அணைவுக்குச் செங்கல்களை இடையே செருகி, இடைவெளிகளில் அடுப்புக்கரிகளை நிரப்பித் தீ மூட்ட வேண்டும். கருவைச் சுற்றிலும் வறட்டிகளை அடுக்கடுக்காக வைத்து கருவின் அடியிலும், தலையிலும், சுற்றிலும் சூடேற்றி கரு பழுக்கும் வரை தீ வளர்த்துக் கொண்டிருக்க வேண்டும். தேவையான அளவு மீண்டும் மீண்டும் வறட்டிகளை இட்டுக் கொண்டும் இருக்க வேண்டும். உள்ளும் புறமும் பழுக்கக் காயும் அளவிற்குக் கருவைக் காய வைத்தல் வேண்டும். கருவானது தீப்பிழம்பாக மாறிவிடும். இங்ஙனம் காய்ந்த கருவை ஏற்கெனவே வெட்டப்பட்டக் குழியில் புதைத்துக் கருவின் தாள்வாய் வெளியே தெரியுமாறு மண்ணால் சுற்றிலும் மூட வேண்டும். கருவைச் செங்குத்தாக வைக்காமல் சாய்வாகவே பதித்து அமைத்தல் வேண்டும்.

இப்பொழுது ஏற்கெனவே பக்குவ நிலை அடைந்த உலோகத் திரவமுடைய ஒரு குவையின் வாயைச் சாக்கினால் மூடித் தகுந்த கருவிகளைக் கொண்டு குவையைத் தூக்கி தாள் வாய் எனப்படும் புனலின் வழியாக உலோகத்தை ஊற்ற வேண்டும். குவையின் வாயில் சாக்கு இருப்பதால் உருகிய திரவம் ஆறி விடாமல் இருக்கும். மேலும் கசடுகள் திரவத்தோடு கலந்து விடாமற் காத்து வடிகட்டிய தெளிவைச் சீராக ஊற்றுவதற்கும் உதவியாகிறது.

கருவும், உலோகமும், கிட்டத்தட்ட சமவெப்பத்தில் இருப்பதால் உலோகமும் திடீரென குளிர்ந்து விடாமலும், கருவும் திடீரென விரிந்து விடாமலும் இருக்க ஏதுவாகிறது. மேலும் கருவுக்குள் நிறைந்திருந்த காற்று வெளியேறவும் இஃது உதவுகிறது.

ஏற்கெனவே கருவின் அடியில், கருவோடு இரண்டு புனல் வாய்களை அமைத்தோம் அல்லவா? அதில் ஒன்றின் வழியாக உருக்கிய உலோகத்தை ஊற்றும்போது, திரவத்தின் பரவிய நிலையையும் திரவ மட்டத்தையும் எளிதில் கண்டு கொள்ள இரண்டாவது புனல்வாய் பயன்படுகிறது. மேலும், எஞ்சியிருக்கும் காற்று வெளியேறுவதற்கும் இது வழியாக அமைகிறது. எனவே முதல் வாய்க்கு *ஊற்றுவாய்* என்றும், இரண்டாவது வாய்க்குக் *காற்றுவாய்* என்றும் பெயர்.

கருவும், உலோகமும் இயல்பாகவே நன்கு ஆறும்படி விட்டுவிட வேண்டும். இவை இரண்டும் தாமாகவே காற்றில் ஆறிட வேண்டுமேயல்லாமல் வேறு குளிர் சாதனங்களால் ஆறும்படி செய்யக் கூடாது. நன்றாகக் குளிர்ந்தவுடன் கருவை உடைத்து அக்கருவுள் உண்டான சிசு போன்ற படிமத்தைப் பெற்றிட வேண்டும்.

வெளிக் கொணர்ந்த உலோகப் படிமத்தைக் கழுவிச் சுத்தப்படுத்தல் வேண்டும். இந்த நிலையில் படிமமானது அளவு, இலக்கணங்களுக்கு ஏற்றவாறு அமைந்திருப்பினும், கண், மூக்கு, வாய், அணிகள் துலக்கமின்றிக் காணப்படும். இதனைத் தக்க கருவிகளைக் கொண்டு செதுக்கி, ராவி, சீவி, மெருகேற்றி நகாசு வேலைகள் செய்து அப்படிமத்தைத் தீர்மானம் செய்தல் வேண்டும். இங்ஙனமே படிமத்திற்கு ஏற்ற பீடத்தையும் அளவிட்டு, மெழுகினால் பிடித்து, கருக்கட்டி, வார்த்து, சுத்தம் செய்து படிமத்தின் ஜடியோடு பிணைத்தல் வேண்டும். இதற்கு *ஜடிபந்தனம்* என்று பெயர்.

பீடத்தின் மேல் மட்டத்தில் நவரத்தினங்களை முறைப்படிப் பதித்து, அதன்மீது ஜடியை வைத்து, இரண்டையும் சேர்த்து மருவிப் பிணைத்து, முடித்தல் வேண்டும்.

வார்த்து வெளிப்பட்ட படிமத்தின் உபாங்கங்களில் ஏதேனும் குறைபாடு காணப்படின் அதனை உலோகத்தால் ஒட்டிக் கடைந்து செப்பனிட்டுக் கொள்ளலாம் என்று நூல்கள் கூறுகின்றன. ஆனால், தலை, உடல் ஆகிய முக்கிய உறுப்புகளில் குறையேற்படின், மீண்டும் அப்படிமத்தை வார்த்தே செய்து கொள்ள வேண்டும். இது வழிபடு படிமங்களுக்குரிய முறையாகும்.

## உள்ளீடற்ற வார்ப்படப் படிமம்

மெழுகில் பிரதிமையைச் செய்து அதன்மீது மண்கட்டி, மெழுகை வடித்தெடுத்து, அதனுள் உலோகத்தை வார்த்து ஊற்றிப் படிமம் வடித்தல் ஒரு முறை. இது கனமான படிமத்தைத் தரும். வழிபடு படிமங்களைக் கனமாக வார்த்தலே தொன்று தொட்டு வந்த வழக்காகும். ஆனால் வாகனங்களைக் கனமாக வார்த்தெடுத்தல் வழக்கன்று. மெல்லிய செப்புத் தகட்டால் அடித்து உருவாக்கியதுபோல் உள்ளே வெற்றிடமும் கொண்டதாய்-கூடானதாய்-செய்தல் வழக்கு. இஃது எங்ஙனம் செய்யப்படுகிறது என்று இனி விளக்குவோம்.

இம்முறையில் படிமத்தை மண்ணால் செய்து அதன்மீது தகடுபோல் மெழுகை எங்கணும் ஒட்டி, அதன் மீது பூச்சு மண், படிமண் ஆகியவற்றை முன்போல் கட்டியமைத்து, இடையிலுள்ள மெழுகை உருக்கி வெளியேற்றி, உள்ளீடற்ற மண்கரு தயாரிக்கப்படுகிறது. இங்ஙனம் கிடைத்த கருவின் உட்கூட்டில் உலோகத் திரவத்தை ஊற்றி, முன்போல் கூட்டை உடைத்துப் படிமம் வெளியேற்றப் படுகிறது.

## செய்முறை

களிமண்ணையும், மணலையும் 1:2 என்ற விகிதத்தில் கலந்து, பிசைந்து, அக்கலவையால் முதலில் படிமத்தைச் செய்து கொள்ள வேண்டும். இப்படிமத்தின் மீது எவ்வளவு கனமுடைய செப்புத் தகடு தேவையோ அவ் அளவிற்குச் சமமான கனத்மைண்படிமத்தில் குறைத்துக் கொள்ள வேண்டும். இது பெரும் பாலும் ஒரு யவை முதல் நாலு யவை வரை கொள்ளப்படும்.

இங்ஙனம் உருவாக்கிய மண் படிமத்தின் மீது மெழுகாலாய தகட்டை எல்லாவிடத்திலும் போர்த்தி இணைத்து உறுப்புகளை துலக்கமாக மெழுகினாலேயே தீர்மானம் செய்து கொள்ள வேண்டும். மண்ணால் செய்த படிமத்திற்கு உட்கட்டை என்று பெயர். இவ் உட்கட்டையின் மீது போர்த்திய மெழுகு நழுவாமல் இருப்பதற்கு தக்க இடங்களில் செப்பு ஆணிகளை அறைதல் வேண்டும். ஆணிகள் உட்கட்டையில் இறங்கியும், மெழுகு வெளியே நீட்டியும் இருக்குமாறு அறையப்பட வேண்டும்.

பிறகு முன்போல் பூச்சுமண் படிமண் ஆகியவற்றைத் தயாரித்து அவற்றை முறையே மெழுகுப் போர்வையின் மீது கட்டியும், பூசியும், கருவை வளர்த்தல் வேண்டும். இருப்புப் பட்டங்களைக் கொண்டு கருவை உறுதிப்படுத்த வேண்டும். படிமத்தின் அடிப்பகுதியில் *ஜடி வில்லை* அமைத்து ஊற்றுவாய், காற்றுவாய் ஆகிய புலன்களையும் அமைத்தல் வேண்டும். இங்ஙனம் அமைத்த கருவை நன்றாக வெயிலில் காயவைத்து உலர்த்தியபின் கருவைத் தீயில் இட்டுச் சுட்டு மெழுகை வெளியேற்ற வேண்டும். முன்போல் கருவைத் தக்க வெப்ப நிலையில் வைத்து உருகிய உலோகத்தை புனல் வழியாக ஊற்றி நிரப்பி, கருவை இயல்பாக குளிர வைத்து, பின் கருவைப் பிரித்து படிமத்தை வெளியேற்ற வேண்டும். இப்பொழுது மண்ணால் ஆகிய உட்கட்டை படிமத்திற்கு உள்ளிருந்து கொண்டே இருக்குமல்லவா?

இதை வெளியேற்றுவதற்காக, மெழுகுப் போர்வையை அடிக்கட்டையின் மீது போர்த்தும் நேரத்தில், சதுரமான ஓட்டை ஒன்றை உடற் பகுதியில் தக்க இடத்தில் செய்து, பூச்சு மண்ணால் பூசிடல் வேண்டும். அந்த ஓட்டையை அடைப்பதற்கு அதே அளவுடைய மூடியை மெழுகில் செய்து அதனைத் தனியே வார்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

படிமத்திற்கான கருவை நீக்கியபின் உடற் பகுதியில் செய்த சதுரமான ஓட்டையானது படிமத்தில் இருக்குமாதலால், அதன் வழியாகக் கருவிகளைச் செலுத்தி, மண்ணாலான உட்கூட்டைப் பெயர்த்து நீரால் கழுவி முற்றும் போகச் செய்தல் வேண்டும். இறுதியாக அப் படிமத்தைக் கருவிகளைக் கொண்டு வெட்டி, ராவி, சீவிய பின் அத்துளையை அதற்கென வார்க்கப்பட்டுள்ள தகட்டால் மூடிச்சடைதல் வேண்டும்.

# 21

# கடுசர்க்கரைப் படிமங்கள்



பகுத்தறிவும், கடவுட் பற்றும் கொண்ட மனிதன் தன்னை, இந் நிலவுலகிலே படைத்திட்ட கடவுளை, தன்னையொத்த உருக்கொண்டதாகவே கருதுகிறான். அக் கடவுளின், விளக்கவொண்ணாக் குணங்களையும், ஆற்றல்களையும் அவ் வுருவத்திலே அமைத்துக் காட்ட விரும்பி அவ்வுருவத்தில் பல தலைகளையும், கைகளையும், சின்னங்களையும் இணைத்து, அதைச் சிறப்பு மிக்க கருத்தோவியமாகவும், கலைப்படைப்பாகவும், விளங்கச் செய்கிறான்.

மனித உருவம் தாங்கும் கடவுளை சிற்பியானவன் கல்லிலும், செம்பிலும், மரத்திலும் இயற்றும்போது, அவ்வுருவத்தில் மனித உடலமைப்பின் புறத்தோற்றத்தையே கொண்டு கருத்தும், அழகும் ஒருங்கிணைந்த திருவுருவாகப் படைத்தளிக்கின்றான். ஆனால், மண், சுதை போன்ற உறுதியற்ற பொருள்களைக் கொண்டு வடிவங்களை இயற்றுங்கால் அதனை, உறுதிப் படுத்தும் முகத்தான் பல உத்திகளையும் மேற்கொண்டு செய்யவேண்டிய வனாகின்றான். இந்நிலையில் மனிதவுடலின் புறத்தோற்றத்தையும், உள் அமைப்புகளையும் ஒருங்கே அமைத்து முழு உருவமாகச் சமைக்கும் வாய்ப்பினைப் பெறுகிறான்.

உடலுக்கு உறுதியளிப்பன எலும்புகளும், நரம்புகளும் ஆகும். அழகிய தோற்றத்தை அளிப்பன சதையும், தோலும் ஆகும். எனவே மண்ணால் வடிவங்களை அமைக்கும்போது, எலும்புகளுக்கு மரக்கோல்களையும், நரம்புகளுக்கு கயிறுகளையும், சதைப் பற்றுக்கு மண்சாந்தையும், தோலுக்குத் துணியையும் கொண்டு வடிவத்தை ஒரு புதிய முறையில் அமைக்கின்றான். இத்தகைய உருவத்தின் மீது பல வண்ணங்களையும் தீட்டி, அதனை ஜீவனுள்ள வடிவமாகவும் இயற்றுகிறான்.

அங்ஙனம் மரத்தண்டுகள், கயிறுகள், மண் சாந்துகள், துணி முதலிய பொருள்களைக் கொண்டு Ü ¬ ñ̃▒F ´ ▒ F¼¾¼õ «ñ̃ *கடுசர்க்கரைப் படிமம்* என்று சொல்லப்படும்.

சர்க்கரை என்ற சொல்லானது மணல், சுக்கான் தூள், உணவுப் பொருளான சர்க்கரை ஆகியவற்றைக் குறிப்பிடும் பொதுச் சொல் ஆகும். இங்கே கடுசர்க்கரை என்பது, கடினமான சுக்கான் கற்களைப் பொடித்துக் கிடைக்கும் சிறு மணலாகும். சுக்கான் பொடியினை மண்ணோடு கலந்து பக்குவமான சாந்து தயாரித்து, அதைக் கொண்டு படிமம் அமைக்கப்படுவதால் இது கடுசர்க்கரைப் படிமம் என்று பெயர் பெறலாயிற்று. கடுசர்க்கரையினைக் *கண்ட சருக்கரை* என்றும் பண்டைச் சிற்பிகள் கூறுவர். கலைப் படிமங்களும், கடவுட் படிமங்களும் நீண்ட காலத்துக்கு நிலைத்திருக்க வேண்டிய பொருள்களாதலால் அவற்றை கடுசர்க்கரையால் இயற்றுங்காலை அதில் கையாளப்படும் மரம், கயிறு, மண், சாந்து, துணி ஆகிய பொருள்களைத் தரமான பொருள்களாகவே கொள்ள வேண்டும். எனவே, கடுசர்க்கரைப் படிமங்களைச் செய்தற்குரிய மூலப் பொருட்களை தேர்ந்தெடுக்கும் விவரங்களையும், செய்முறைகளையும் விளக்கக் கூறுதல் பயனுள்ளதாகுமல்லவா?

கடுசர்க்கரைப் படிமம் செய்வதில் பல கட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அமைகின்றன. அவை முறையே:

1. மரத்தால், படிமத்திற்கேற்ற சூலக் கூட்டைத் தயாரித்தல்

2. எட்டு விதப் பொருள்களாலான அஷ்ட பந்தனக் கலவை தயாரித்தல்
3. மரத்தண்டங்களின் மீது கயிறு சுற்றுதல்
4. மண் சாந்தினால் உடலுறுப்புகளை உருவாக்குதல்
5. சுக்கான் சாந்து தயாரித்துப் பூசுதல்
6. உறுப்புகளின் மீது துணி போர்த்துதல்
7. வெள்ளை வைத்தல்
8. வண்ணம் தீட்டுதல்

மனித உடலுக்கு எலும்புக்கூடு எங்ஙனம் வலுவூட்டுகிறதோ அங்ஙனமே கடுசர்க்கரைப் படிமத்திற்கு, மரத்தாலான சூலம் உறுதியூட்டுகிறது. மரத்தால் கை, கால், முதுகு, தொடை ஆகிய முக்கிய சூலங்களைச் செய்தல் வேண்டும். சூலம் என்ற சொல் தண்டு, கொடி, கரு என்ற பொருள்களைக் குறிக்கும். கரு நிகர் மரக் கோல்களை சூலம் என்று சொல்வது சிற்பத் துறை வழக்கு. மரத்தால் சூலம் அமைப்பதற்கு மாற்றாக, கல்லாலும், சூலங்கள் அமைப்பதுண்டு. முன்னையதை தாரு சூலம் என்றும், பின்னயதை சிலா சூலம் என்றும் சொல்ல வேண்டும்.

### சூலத்திற்கு ஏற்ற மரங்கள்

பொதுவாக பாலுள்ளதும், தைலச் சத்து உள்ளதுமான மரங்கள் உறுதியும், நீடு நிலைத்திருக்கும் தன்மையும் பெற்றிருக்கும். அத்தகைய மரங்கள் சூலங்களுக்கு மிக ஏற்றனவாம். அம் மரங்களில் சந்தனம், செண்பகம், செஞ்சந்தனம், தேக்கு, கருங்காலி, மருது, பலா, தும்பிலி, ஏழிலைப்பாலை, செம்மரம், மிக ஏற்றவையாகும்.

### ஆண் மரம்

நைப்பான நிலத்தில் செவ்வியதாய், உரைத்ததாய், கெட்டியாய், கனத்ததாய், பழம், பூ, இலை உடையதாய் குளிர்ச்சியும் வெக்கையும் கலந்ததாய், குறைந்த தைலப்பசையும் சாறும் உடையதாய் காணப்படும் மரங்கள் ஆண் மர வகையைச் சாரும்.

### பெண் மரம்

மிருதுவான நிலத்தில் முளைத்ததாய், நேரியதாய், அடி முதல் நுனிவரை முறையே கரைந்து மெலிந்ததாய், பூ, காய், இலை, மென்மையாய், மிகவும் குளிர்ந்ததாய், தைலமும், சாறும் மிக்கதாய் காணப்படும் மரங்கள் பெண் மர வகையைச் சாரும்.

### அலிமரம்

மெலிந்த தூருடையதாய் பூ, இலை, காய் குறைந்ததாய் உறுதியற்றதாய்க் காணப்படும் மரங்கள் அலி மரம் எனப்படும்.

ஆண் மரங்கள், ஆண் படிமங்களுக்கும், பெண் மரங்கள் பெண் படிமங்களுக்கும், சூலங்களுக்கு ஏற்றதாம். ஆனால் அலி மரத்தை சூலங்களுக்குக் கொள்ளலாகா. எம்மரத்தை எப்படிமத்திற்கு ஏற்பினும், அலி மரத்தைப் பெண் படிமங்களுக்கு உபயோகித்தலாகாது.

மேலும், சூலங்களுக்கு கைக்கொள்ளும் மரங்கள் கீழ்க்கண்ட குற்றங்கள் இல்லாதனவாக அறிந்து நல்ல மரங்களைத் தேர்தல் வேண்டும்.

இலைகள், சரிக்கப்பட்டதும், தானாகவே விழுந்ததும், தானாகவே பட்டுப்போனதும், வளைந்த கொம்புகளை உடையதும், காற்றில் விழுந்ததும், இடியால் அழிவுற்றதும், பல கொடிகளால் சுற்றப்பட்டதும், பாம்புகள் வாழ்வதும், பறவைகள் அடைவதும், தூரைச் சுற்றி புதர்கள் சூழ்ந்ததும் கூடா மரங்கள். தொழிற்பட்டரை, நாற்சந்தி, இடுகாடு ஆகிய இடங்களில் உள்ள மரங்களும் கூடா. மேலும் வண்டு துளைத்த மரம், பொந்து விழுந்த மரம், மொட்டை மரம், காய்ந்த மரம், வயதான மரம், இள மரம், காய்க்காத மரம்-இவைகளும் சூலத்திற்கு ஏற்றதன்று.

மரத்தை கோடரியால் வெட்டும் பொழுது வெட்டு வாயிலிருந்து பாலோ, நீரோ, சாரோ, கசியின் அது சிறந்த மரம் என்றும், மாற்றாக, இரத்தம் கசியுமாயின் அதனை நீக்குதல் வேண்டும் என்றும் எல்லாச் சிற்ப நூல்களும் ஒருமுகமாய்க் கூறுகின்றன.

அங்ஙனம் வெட்டிக் கொணர்ந்த மரத்தைச் சிற்பியின் தொழிற் கூடத்தில் மணல் பரப்பி அதன் மீது படுக்கையாய் கிடத்தி, நீர் வற்றும் வரை காற்றில் உலர்த்துதல் வேண்டும். அங்ஙனம் பக்குவமாக உலருதற்கு மரத்தின் இயல்புக்கு ஏற்றவாறு ஒன்று முதல் ஆறு மாதங்கள் வரை ஆகும். இத்தகைய மரங்கள் கடவுட் படிமங்கள் இயற்றுதற்குரியனவாதலால் நல்ல நாளில், நல்ல நேரத்தில் தலைமைச் சிற்பியானவன் அடர்ந்த காட்டுக்குச் செய்விப்போனுடனும், வழிபாடு நிகழ்த்தும் பூஜகருடனும் சென்று முறைப்படி பூசனைகள் செய்து வெட்டிக் கொணர்தல் வேண்டுமெனவும் சாத்திரங்கள் வலியுறுத்துகின்றன.

மரத்தின் கிழக்குப் பக்கத்தை அதன் முகமாகவும், மேற்குப் பக்கத்தை முதுகாகவும், தெற்கு வடக்குப்

பக்கங்களைக் கைகளாகவும், பாவித்தல் வேண்டும். வெட்டுண்ட மரம் கிழக்கு நோக்கியோ அல்லது வடக்கு நோக்கியோ சாய்ந்து விழுதலே நன்றென சாத்திரங்கள் மேலும் கூறும்.

மரங்களை அங்ஙனம் பலவகையாலும் சோதித்து அம்மரத்தின் வைரம் பாய்ந்த பகுதியினையே சூலத்திற்குக் கொள்ளுதல் வேண்டும்.

படிமத்தின் உடலமைப்பினை உறுதிப் படுத்துவதற்காக மனித உடலில் அமைந்த எலும்புக் கூடு ஒன்று அமைத்தல் வேண்டுமென்று முன்பே கண்டோம். முதுகெலும்பு, கை, கால்களுக்குரிய எலும்புகள் முதலியவை எங்ஙனம் இயற்கையாக உடலில் அமைந்திருக்கின்றனவோ அங்ஙனமே படிம உடலிலும் அமைக்கப்படுகின்றன. மரத்தி னாலாக்கப்படும் சூலம், மரச்சூலம் என்றும், கல்லால் ஆக்கப்படின் சிலா சூலம் என்றும் முன்பு சொன்னோம். இச்சூலங்களைத் தனித் தனியே குறிப்பிடும்போது, *தண்டம்* என்ற சொல்லாலும் உணர்த்துவதுண்டு.

எடுத்துக்காட்டாக முதுகந்தண்டை *வம்ச தண்டம்* என்றும், மார்புத் தண்டத்தை *வக்ஷோ தண்டம்* என்றும், தொடை தண்டத்தை *ஊரு தண்டம்* என்றும், இடுப்பில் இணையும் தண்டத்தை *கடி தண்டம்* என்றும் சொல்வது வழக்கு. தண்டங்கள் ஒவ்வொன்றும் மரத்தினால் ஆன கோல் அல்லது தண்டேயாகும்.

இயற்கை உடலுக்கு முதுகந்தண்டு எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானதாகப் படிமத்துக்கு அமைவது வம்ச தண்டமாகும். இது பிரம்ம சூலம் என்றும் சொல்லப்படும். இது குய்யத்திலிருந்து நேராகத் தலை வரை செல்லக் கூடியது. இதற்கு அடுத்ததாக (இதோடு இணைவது) தோள் மட்டத்தில் வம்ச தண்டத்திற்குக் குறுக்கே அமைவது மார்புத் தண்டமான வக்ஷோ தண்டமாகும். மார்புத் தண்டத்தைச் சமநிலைப் படுத்தி உறுதி பெறச் செய்ய இரண்டு தண்டங்கள் இடுப்புத் தண்டத்திலிருந்து சரிந்து மேல் நோக்கிச் சென்று மார்பு தண்டத்தோடு பிணைக்கப்படும். பிணைப்புண்ட இவ்விரண்டும் பக்க தண்டங்கள் அல்லது *பக்ஷ தண்டங்கள்* என்று சொல்லப்படும். மேலும் தொடைக்குரிய தண்டங்களாகிற ஊரு தண்டங்களும் கைகளுக்குரிய பாகு தண்டங்களும் சூலக்கூட்டில் இடம் பெறுகின்றன.

இனி ஒவ்வொரு தண்டத்தின் நீள அகலங்களையும், வடிவங்களையும் இங்கே காண்போம்.



தாகு சூலம்

1. வம்ச தண்டம் 2. வக்ஷோ தண்டம் 3. கடி தண்டம் 4. பக்ஷ தண்டம் 5–6. பாகு தண்டம் 7–8. ஊரு தண்டம்

பிரம்ப தண்டமானது குய்யத்தின் அடியிலிருந்து தலை உச்சி வரை நீண்டு செல்லும் தண்டமாகும். இதன் அகலம் மேல் உடலின் அகலத்தில் நான்கில் ஒரு பங்காகும். இத் தண்டம் குய்யத்தினின்று கொப்பூழ் வரை சதுரமாகவும், அங்கிருந்து கழுத்துவரை எட்டுப் பட்டமாகவும், எஞ்சிய மேற் பகுதி வட்டமாகவும் அமைக்கப்படும். இதற்கு மாற்றாக, குய்யம் முதல் தலை வரை உருளை வடிவமாகவும் அமையும்.

பிரம்ம தண்டத்தின் மேற்பகுதியில் கழுத்து மட்டத்திற்குச் சிறிது கீழே, அதற்குக் குறுக்காக மார்பு தண்டத்தைப் பொருத்த வேண்டும். இரண்டு தோள்களுக்கும் இடையிட்ட குறுக்கு அளவில் ஐந்தில் நான்கு பங்கு மார்புத் தண்டத்தின் நீளமாகும். இதனகலம் மார்பகலத்தில் ஐந்தில் ஒருபங்காகும். மார்புத் தண்டத்தின் கோடிகளில் புஜங்களை இணைப்பதற்குத் தகுந்த முளைகளைச் செதுக்கி அமைத்தல் வேண்டும். இம்மார்புத் தண்டம் அடிக்கழுத்திலிருந்து இரண்டு விரல் தாழ்ந்தும் அமைய வேண்டும்.

மார்புத் தண்டம் எங்ஙனம் குறுக்காக அமைகிறதோ அங்ஙனமே குய்யப் பிரதேசத்தில் பிரம்ம தண்டத்திற்குக் குறுக்காகக் *கடிதண்டம்* அமைக்கப்பட வேண்டும். இக்கடிதண்டம் பிரம்ம தண்டத்தின் நாபியிலிருந்து ஐந்து விரல் அளவிற்குக் கீழிறங்கி ஊன்றப்பட வேண்டும். இக் கடிதண்டத்தின் நீளமானது இடுப்பின் அகலத்தில் ஐந்தில் நான்கு பங்கு ஆகும். அதன் கனம் இடுப்பின் அகலத்தில் ஐந்தில் நான்கு பங்காகும். அதன் கனம் இடுப்பின் உயரத்தில் பாதி அல்லது காற் பங்காகவும் இருக்கலாம். அக் கடிதண்டத்திலிருந்து பிரம்ம தண்டத்தின் இருபக்கங்களிலும் ஊன்றப்பட்டு அதன் எதிர் முனைகள் மார்புத் தண்டத்தின் முனைகளோடு பொருத்தப்பட வேண்டும். இவ்விரண்டு தண்டங்களே பக்க அல்லது பக்ஷ தண்டங்களாகும். இவைகள் இரு முனைகளிலும் முளைகளோடு அமைந்திருத்தல் வேண்டும்.

படிமமானது நின்ற நிலையில் அமைக்கப்படுமானால், ஊரு தண்டத்தின் அகலம் தொடை அகலத்தில் மூன்றில் ஒரு பங்குடையதாக அமைதல் வேண்டும். ஊரு தண்டத்தின் மேற்புறத்தில் அமைக்கும் முளையின் அகலம் அதில் பாதி அளவாகும். ஊரு தண்டத்தை கடிதண்டத்தில் செருக வேண்டும்.

ஊரு தண்டத்தின் நீளத்தில் முழங்கால் முட்டியின் அளவும் சேருதல் வேண்டும். அங்ஙனமே கெண்டைக்காலுக் குரிய தண்ட நீளத்தோடு கணுக்கால் நீளமும் சேரும். இதனையும் முளை உடையதாகவும் பொருத்தமாகவும் அமைத்தல் வேண்டும். நின்ற கோலப் படிமங்களுக்கு ஊரு தண்ட நீளத்தை எட்டு விரல் அளவு கூடினதாகவே கொள்ளுதல் வேண்டும். ஊரு தண்டத்திற்குக் கொண்ட அகலத்தில் முக்கால் பங்கினதாக அதன் நுனி இருத்தல் வேண்டும். அங்ஙனமே முன்கால் தண்டத்தின் அகலத்தில் மூன்றில் ஒரு பங்கினதாக அதன் கீழ் நுனி இருத்தல் வேண்டும். பாத நீளத்தில் மூன்றில் இரண்டு பங்கு பாத தண்டத்தின் நீளமாகும். பாத சூலத்தின் அகலம் அசல் அகலத்தில் முக்கால் பங்கினதாக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். இப்பாதச் சூலத்தில் துளையிட்டு அதற்குள் ஊரு தண்டம் நுழைக்கப்பட வேண்டும். பாத சூலம் உறுதிமிக்கதாய் இருத்தல் வேண்டும்.

இனி கைகளுக் குரிய சூலங்களைப் பற்றிக் காண்போம். மேற்கையின் அகலம் மூன்று விரலும், அடிக் கையின் அகலம் இரண்டுவிரலும், முழங்கையின் அகலம் இரண்டரை விரலும், முன்கை அகலம் இருவிரலும் இருத்தல் வேண்டும். கைகளுக்குரிய தண்டங்களில் தகுந்த முளைகளையும் துளைகளையும் அமைத்துக் கொண்டு தேவையான அமைதிகளில் சூலங்களைப் பொருத்த வேண்டும்.

கைத்தளம், பாதம், ஆகியவற்றின் முன் பகுதியைத் தாமிரத் தகட்டினால் இணைத்தல் வேண்டும்.

அமர்ந்த கோலப் படிம மாயின் வம்ச தண்டத்தின் நீளத்தை எட்டுவிரல் அளவு கூட்டிக் கொண்டு அதில் ஐந்து விரல் பீடத்தினுள் ஊன்றப்படவேண்டும். வெளித்தெரியும் மூன்று விரல் ஆசனமானத்தற் குரிய கனமாகும்.

இணைக்கப்பட்ட சூலத் தண்டங்கள் அசையாமல் நிற்க தகுந்த தாமிரப் பட்டங்களைச் சூலங்களின் பொருத்துவாயில் இணைத்தல் வேண்டும்.

கடுசர்க்கரைப் படிமத்திற்குத் தக்க சூலங்களைத் தயாரித்த பிறகு அதன் மீது எட்டு விதமான பொருள்கள் சேர்ந்த ஒரு வகைக் கலவையைப் பூசுதல் வேண்டும். அக் கலவைக்கு *அஷ்ட பந்தனம்* என்று பெயர். மரச் சூலமானது உளுத்து விடாமல் நீண்ட காலம் உறுதியோடிருப்பதற்காகவே இப்பூச்சு பூசப்படுகிறது.

அஷ்ட பந்தனக் கலவையில் சேர்க்கப்படும் பொருள்கள் பின். வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவட்டப் பிசின் | - | 4 பங்கு |
| 2. | பூனைக் கண் குங்கிலியம் | - | 3 பங்கு |
| 3. | குங்கிலியம் | - | 5 பங்கு |
| 4. | வெல்லம் | - | 1 பங்கு |
| 5. | கல் காவி | - | 3 பங்கு |
| 6. | சர்ஜா ரஸம் (பிசின்) | - | 8 பங்கு |
| 7. | நல்லெண்ணெய் | - | |
| 8. | நெய் | | |

மேற்கண்ட வற்றில் முதல் ஆறு பொருள்களை நன்கு பொடித்து அவ்வளவிற்கு ஈடான எண்ணெயும், நெய்யும் வார்த்து நன்கு பிசிறி, ஏற்ற ஏனத்தில் இட்டு, இதனை அடுப்பில் ஏற்றி, பாகுபோல் காய்ச்சிட வேண்டும். பிறகு அப்பாகைச் சூலத்தின் மீது தூரிகையினால் நன்கு பூசிடல் வேண்டும். இங்ஙனம் பூசப்பட்ட சூலத்தின் மீது நாடிகளைப் பொருத்தி *ரஜ்ஜூ பந்தனம்* செய்தல் வேண்டும்.

### ரஜ்ஜூ பந்தனம்

திருவுண்ணாழியில் படிமத்தை நிறுவுவதற்கு வகுக்கப்பட்ட ஸ்தானத்தில் சூலத்தை ஊன்ற வேண்டும். இதற்கு அடியில் நவரத்தினங்களைப்

பதித்திடல் வேண்டும். வம்ச தண்டமாகிய பிரம்ம சூலத்தை அவ்விடத்தில் ஊன்றி அதில் இருந்து கிளைத்துச் செல்லும் அனைத்துத் தண்டங்களையும் செப்புப் பட்டங்களினால் இணைத்தும் சுற்றியும் சூலக் கூட்டை உறுதிப் படுத்துதல் வேண்டும்.

சூலங்களின் மீது அஷ்டபந்தனக் கலவையைப் பூச வேண்டும். தேங்காய் நாரினால் ஆன கயிற்றினாலும், தாமிரக் கம்பியினாலும் சூலங்களைக் கட்டுதல் வேண்டும். இக் கயிறுகளையும் தாமிரக் கம்பிகளையும், பிரதிமையின் நரம்புகளாகக் கொள்ளப்பட்டிருப்பதை நினைவு கூர்க.

நாபியின் நடுவிலிருந்து மூன்று ரஜ்ஜுகள் மூன்று கிளைகளாக மேல் நோக்கிச் செல்லும். இம் மூன்று நாடிகள் என்ற சொல்லாலும் குறிக்கப்படும். மனிதவுடலில் இருப்பது போல நடுவிலிருந்து புறப்படும் நாடியைச் *சுழி முனை* நாடியென்றும், வலது பக்கம் செல்வதைப் பிங்கலை என்றும், இடது பக்கம் செல்வதை இடை என்றும் சொல்ல வேண்டும். இடை, பிங்கலை ஆகிய நாடிகளை *சந்திர நாடி, சூரிய நாடி* என்றும் நூலோர் கூறுவர். இம் மூன்று நாடிகள் ஒவ்வொன்றும் ஆறு யவை கனம் இருத்தல் வேண்டும். இந்நாடிகள் அடிப் பக்கத்தில் குறி வரை நீண்டிருத்தலும் வேண்டும்.

சுழிமுனை நாடியானது பிரம்ம சூலத்திலிருந்து இருபக்கங்களிலும் மும்மூன்று நாடிகளாகப் பிரிந்து சென்று மார்புத் தண்டத்தின் நுனிகளில் ஒன்று கூடுகின்றன. அங்கிருந்து ஒவ்வொரு நாடியிலும் எட்டுப் பிரிவுகள் முழங்கையைச் சுற்றிக் கொண்டு கைத்தலம் வரை வந்தடைகின்றன. இங்ஙனம் இடது, வலது கைகளில் நாடிகள் சுற்றப்பட வேண்டும்.

மேற்கையும், மார்பு தண்டமும் சேருமிடங்களில் சூரிய சந்திர நாடிகள் சேர்ந்து கழுத்து, காது வழியாக புருவத்தின் நடுவிடத்தில் சேர்தல் வேண்டும்.

குறியின் அடிப்பகுதியில் உள்ள சூரிய, சந்திர நாடிகள் ஆறு, ஆறு நாடிகளாகப் பிரிந்து தொடை வழியாகக் கணுக்கால் வரைச் சுற்றிச் செல்லுதல் வேண்டும். இந் நாடிகளின் கனம் மூன்று யவை ஆகும். பிரம்ம சூலத்தோடு இணைக்கப்பட்ட சுழிமுனை நாடியானது மேல் நோக்கிச் சென்று இதயத்தின் நடுவில் எட்டு இதழ்களையுடைய தாமரை மலர்போல அழகுற அமைக்கப்பட வேண்டும். இஃது இதய கமலம் என்றும் பிரதிமையின் உயிர்நிலை என்றும் சொல்லப்படுகின்றது. மேலும் சுழிமுனை நாடியானது இங்கிருந்து புறப்பட்டு மேல் நோக்கிச் சென்று இரு புருவங்களுக்கு நடுவே சென்றடைதலும் வேண்டும். இங்ஙனம் முக்கியமான நாடிகளை அமைத்து சிறிய நாடிகளையும் அமைத்தல் வேண்டும். பிறகு நாடிகளின் மீது தேங்காய் நாரில் திரிக்கப்பட்ட கயிறுகளை மேலிருந்து கீழாக நெருங்கச் சுற்றுதல் வேண்டும். இங்ஙனம் கயிறு சுற்றுவதற்கு ரஜ்ஜு பந்தனம் என்று பெயர். *ரஜ்ஜுபந்தனம்* செய்த பின்பே சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட மண் சாந்தினைப் பூசுதல் வேண்டும்.

சூலத்தின் மீது அஷ்டபந்தனக் கலவையைப் பூசி ரஜ்ஜு பந்தனம் செய்தபின் படிமத்தின் உடல் உறுப்புகளுக்கேற்றவாறு தக்க அளவில் மண் சாந்தை ஏற்றிப் பூசி உருக்கொடுத்தல் வேண்டும்.

அங்ஙனம் படிமத்தை உருவாக்குவதற்கு ஏற்ற மண்ணைத் தயாரித்தல் பல நுட்பங்களையும் செயல் முறைகளையும் கொண்டது. இனி அதனைக் காண்போம்.

### மண் சாந்து

தூய்மையானதும் வற்றாத நீரையுடையதும் ஆன ஆறு, ஓடை, குளம் மூன்றிலொன்றில் மண் எடுக்கலாம். இத்தகைய மண் வெள்ளையாகவோ, சிவப்பாகவோ, பொன்னிறமாகவோ அல்லது கருநிறமாகவோ இருக்கலாம். இது சேறாக இருக்கும். இச்சேற்றை புதுத்துணியால் வடிகட்டி தக்க பாத்திரத்தில் திரட்டிக் கொண்டு அச்சேற்றை உலர்த்துதல் வேண்டும். பால் தரும் நான்கு வகை மரத்தின் பட்டைகளைக் கொணர்ந்து இடித்து, சாறு பிழிந்து அந்தச் சாற்றோடு *கருங்காலி நீரும், மருத நீரும்* சேர்த்து அக்கலவையை வடிகட்டிய சேற்றோடு கலந்து நன்றாகப் பிசைதல் வேண்டும். அங்ஙனம் பிசையுண்ட சேறானது பிண்டமாகும் பக்குவம் அடையும் வரை உலர்த்திட வேண்டும்.

மேலும் கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக் காய் ஆகிய மூன்றையும் இடித்து நீரிலே ஊற வைத்து அந்த நீரை பிண்டத்திலே வார்த்துப் பிசைந்து மூன்றாவது முறையாக உலர்த்துதல் வேண்டும். இதனை இளகு பதத்தில் எடுத்து உருகைளாக திரட்டிக் கொள்ள வேண்டும். இவ்வுருளை பதினோரு விரல் சுற்றளவும் பதினோரு விரல் நீளமும் கொண்ட நாழி அளவில் அமையும்.

இங்ஙனம் ஒரு நாழி மண்ணோடு மேலும் கல்பொடி, சுக்கான் பொடி ஆகிய இரண்டையும் ஒவ்வொரு நாழியளவு சேர்த்து நன்றாகப் பிசைந்து மீண்டும் கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக்காய்

ஆகிய மூன்றும் ஊறிய நீரை வார்த்து 10.8 அல்லது 7 நாட்கள் தொடர்ந்து இடிக்க வேண்டும்.

மூங்கில் அரிசி, கோதுமை, உளுந்து ஆகிய மூன்றையும், தனித் தனியே பொடி செய்து கலந்து ஏற்கனவே பக்குவப்படுத்தியிருக்கும் மண்ணோடு அரைக்கால் பங்கு அப்பொடிக் கலவையைச் சேர்த்து, இளநீர் விட்டு.பாத்திரத்தில்கொட்டி 10 நாட்கள் இடிக்க வேண்டும். நாளொன்றுக்கு ஒன்று, இரண்டு அல்லது மூன்று முறை தொடர்ந்து இடிக்க வேண்டும்.

திருவட்டப்பிசின், வெல்லம், குந்துறுக்கம், நறும் பிசின் ஆகிய நான்கையும் பொடி செய்து முன்பு தயாரித்த மண்ணளவில் பதினாறிலொரு பங்கு சேர்த்து அதில் தயிர் ஊற்றி மீண்டும் நன்றாக இடிக்க வேண்டும்.

மேலும், சுக்கு, மிளகு, திப்பிலி, மஞ்சள் ஆகியவற்றை தனித் தனியே இடித்து அப் பொடிகளைச் சம அளவில் கலந்து மண் அளவில் பத்தில் ஒரு பங்கு சேர்த்து, தேன், பால், நெய் இவற்றை வார்த்து மேலும் ஒரு முறை இடிக்க வேண்டும்.

விளாம்பிசினை பொடியாக்கி மண் அளவில் பதினைந்தில் ஒரு கூறு சேர்த்து அக்கலவையில் எண்ணெய் விட்டுப் பிசைந்து கொள்ள வேண்டும். மேலும் குங்குமம், சந்தனம், அகில், கர்ப்பூரம், கோரோசனை ஆகியவற்றை உறைத்து நல்லெண்ணெய் ஊற்றி அச்சாந்தை மேலும் இடிக்க வேண்டும்.

சிறிதளவு தங்கப் பொடி, வெள்ளிப் பொடி ஆகியவற்றையும் சேர்க்க வேண்டும். மேலும் புற்று மண், நண்டு வளை மண், விளை நில மண், ஓடை மண், ஆற்று மண், மலை முகட்டு மண், கடல் மண், கலப்பை மண், யானைக் கொம்பு மண், எருதுக் கொம்பு மண் ஆகிய பத்து வகை மண்களையும் சமமாகக் கலந்து பதவிதமான வாசனைப் பொருள்களையும் சேர்த்து விளாம்பிசினுடன் கூட்டி இறுகின தேன்போல இடித்தல் வேண்டும். ஐந்து நாட்கள் கழித்து தேங்காய் மட்டைச் சாற்றை பாத்திரத்திலிருக்கும் மண்ணின் மீது ஊற்றிட வேண்டும். இச் சாறு ஒரு விரல் அல்லது ஒன்றரை விரல், இரண்டு அல்லது இரண்டரை விரல் அளவு மண் மீது நிற்க வேண்டும். அச்சாற்றில் மூழ்கியவாறு அம் மண்ணானது ஐந்து நாட்கள் இருத்தல் வேண்டும். இந்தக் கலவையில் காற்பங்கை அந்த மண்ணுடன் சேர்த்து இடித்து சூலத்தின் மீது பூச வேண்டும். பிறகு ரஜ்ஜூ பந்தனம் செய்ய வேண்டும். இதற்கு மேலே மறுபடியும் ஒன்று முதல் மூன்று விரல் வரை பூசி மீண்டும் ரஜ்ஜூ பந்தனம் செய்ய வேண்டும். அதன் பிறகு மூன்று வகையான மண்களைப் பதத்தோடு மெல்ல மெல்லப் பூசி உறுப்புகளைத் தக்க வடிவத்தில் திரட்டி அமைக்க வேண்டும்.

இப்பூச்சுக்கு ஏற்ற மண் மூன்று வகையான நிலங்களிலிருந்து திரட்டிடல் வழக்கு. அம் மூவகை நிலங்கள் *ஜாங்கலம்* என்று *அநூபம்* என்றும், மிஸ்ரம் என்றும் சொல்லப்படும்.

குழி தோண்ட அரிதாயும், கெட்டியாயும் இருக்கின்ற நிலம் ஜாங்கல வகையைச் சாரும். ஜாங்கலம் என்பதற்கு மாமிசம் என்று பொருளாகும்.

குழி தோண்ட எளிதாயும், நுண்ணியமணலை உடையதாயும், மூன்று முழ ஆழத்தில் நல்ல நீரைக் கொண்டதாயும் இருக்கின்ற நிலம் அநூப வகையைச் சாரும். அநூபம் என்ற சொல் நீர் நிறைந்த இடம் எனப் பொருளாகும்.

மேற்குறிப்பிட்ட இருவகை நிலங்களின் தன்மைகள் ஒன்று கலந்து காணப்படின் அந்நிலம் மிஸ்ரம் (கலப்பு) என்று சொல்லப்படும்.

அங்ஙனம் மூன்று விதமான மண்களைத் தனித் தனியாகக் கொணர்ந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

சூலத்திற்கு மேலே பூச வேண்டிய மண்ணின் கனத்தை நான்கு கூறு செய்து ஒரு கூறளவு ஜாங்கல மண்ணால் பூசிட வேண்டும். அடுத்து அநூப மண்ணால் ஒரு கூறளவும், மேலும் மிஸ்ர மண்ணால் ஒரு கூறளவும் பூசுதல் வேண்டும்.

அந்தந்த பூமியில் கிடைக்கும் மண்ணை இங்ஙனம் ஒவ்வொரு கூறாகப் பூசிய பிறகும் ஒரு கூறு கனம் மீதி இருக்கும் அல்லவா? இவ்விடத்தில் ஒரு வகைச் சிறப்புச் சாந்தினால் பூச வேண்டும். இச் சாந்து கல்கம் எனப்படும்.

கல்கம் அடையும் ஒரு பாகத்தை (கனம்) நான்கு கூறு செய்து ஒரு கூறு கல்கத்தினாலும் இரண்டு கூறு பஞ்சு கூட்டின் கல்கத்தினாலும் எஞ்சியுள்ள ஒரு கூறளவை மீண்டும் முன் கூறிய கல்கத்தினாலும் பூச வேண்டும்.

### கல்கம்

ஆறு, ஏரி, வயல் ஆகிய இடங்களில் கிடைக்கின்ற சுக்கான் கற்களைப் பொறுக்கி எடுத்து, தண்ணீரால் கழுவி, நன்கு உலர்த்தி, அக் கற்களை இடித்துப் பொடித்தல் வேண்டும். இப்பொடியோடு, தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய் ஆகிய இம்மூன்றால் ஆன கஷாயத்தைச் சேர்த்து நன்கு பிசைந்து உருளையாகவோ அல்லது உருண்டைகளாகவோ திரட்டிக் கொள்ள வேண்டும்.

அத்துடன் விளாம்பிசின் தண்ணீரைக் கலந்து பருத்திப் பஞ்சுத் தூள்களைச் சேர்த்து. எல்லாவற்றையும் அம்மியிலிட்டு நன்கு அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். இக்கலவைக்கு கல்கம் என்று பெயர்.

உருவாக்கப்படும் படிமத்தின் மீது இத்தகைய கல்கத்தைப் பூசி உறுப்புகளுக்குத் தக்க வடிவம் கொடுத்தல் வேண்டும்.

விளாம்பிசின் அளவிற்கு 2½ அல்லது 3 மடங்கு நீர் விட்டு அப்பிசினைக் கரைத்து அதில் புதுத் துணியை நனைத்து படிமத்தின் உறுப்புகளைச் சுற்ற வேண்டும். இதற்குப் *படாச் சாதனம்* என்று பெயர். அங்ஙனம் சுற்றிய துணியின் மீது பிசின் கலந்த நீரைத் தூரிகையினால் பூசிட வேண்டும். மீண்டும் அதன் மீது கல்கத்தினால் அணிகளைச் செய்து 10 நாட்கள் கழித்து மீண்டும் பிசின் நீரைத் தூரிகையினால் பூசிட வேண்டும். அதன் மீது கல்கக் குழம்பைத் தூரிகையினால் பூசி பின்பு அதன் மீது வெள்ளை வண்ணம் தீட்ட வேண்டும்.

இறுதியாக படிமத்தின் மீது பஞ்சவர்ணம் தீட்டி அழகு செய்தல் வேண்டும். எந்தெந்தப் படிமத்திற்கு எந்தெந்த வண்ணம் நூல்களில் அல்லது தியான சுலோகங்களில் குறிப்பிடப்படுகின்றதோ அந்த வண்ணங்களையே தீட்டுதல் வேண்டும்.

மரத்தில் சூலம் அமைத்து மண் சாந்தும், கல்கமும் கொண்டு படிமத்தை இயற்றுவது போல, கல்லாலேயே பிம்பம் செய்து அதன் மீது கல்கம் அல்லது வெண் சுதையைப் பூசி வண்ணம் தீட்டி படிமத்தினை இயற்றுவதும் உண்டு. கற்பகுதியை சிலா சூலம் என்று சொல்வது வழக்கு.

படிம இலக்கண அளவுகளுக்கு நான்கு யவை அளவு குறைந்த அளவுடையதாகப் படிமத்தைச் செதுக்கி அதன் மீது கல்கத்தைப் பூசி. வெள்ளை வைத்து வண்ணம் தீட்டுதல் ஒரு வழக்குமாகும். வைணவப் படிமங்களைப் பெரும்பாலும் இந்த முறையில் செய்வது மரபு.

# 22

# அறுவகை மானங்கள்



சுவரிலே ஓவியங்களை வரைந்திட இரண்டே அளவுகள் (சதுரமானம்) போதுமானவை. ஒன்று நீளம்; மற்றொன்று அகலமாகும். கோட்டுச் சித்திரமானால் கோடுகளைக் கொண்டே உறுப்புகளின் உயர்வு தாழ்வுகளை-மேடு பள்ளங்களைக் காட்டிட இயலும். வண்ண ஓவியமாயின் இவ்வுயர்வு தாழ்வுகளை நிற வேறுபாடுகளினாலே காட்டிட முடியும். ஆனால் முழுமையான உடல் உறுப்புகளைக் கொண்ட—கனப் பொருளான—படிமத்தை நீள, அகல அளவுகளை மட்டும் கொண்டு இயற்றிட இயலாது. நீள, அகல அளவுகளோடு, கன அளவும் இன்றியமையாததாகும். இதைக் *கனமானம்* என்பர்.

அத்துடன், படிமத்தைச் சிறப்பாக அமைத்திட மேலும் மூன்று அளவுகள் தேவைப்படுகின்றன. உறுப்புகளின் சுற்றளவு. ஓர் உறுப்பிற்கும் மற்றோர் உறுப்பிற்கும் உள்ள இடைவெளி அளவு. குறிப்பிட்ட எல்லையில் இருந்து படிமத்தின் முன்னுறுப்புகளும், பின்னுறுப்புகளும் அடங்கியிருக்கும் அடக்க அளவு ஆகிய இம் மூன்றும் படிமக் கலைஞர்களுக்கு பயனளிக்கும் அளவுகளாகும்.

மேற்குறிப்பிட்ட, ஆறு வகை மானங்களும் ஒரு படிமத்தை அழகுற இயற்றுவதற்குத் தேவையான அளவுகளாதலால் அவற்றைத் தொகுத்து *அறுவகை மானங்கள்* என்றும் *ஷண்மானங்கள்* என்றும் சொல்வது கலைஞர் வழக்கு. கலைச் சொற்களாக அவை பின்வருமாறு வழங்கி வருகின்றன.

நீளத்தை *மானம்* என்றும், அகலத்தை *பிரமாணம்* என்றும், உயரத்தை *உன்மானம்* என்றும், சுற்றளவைப் *பரிமாணம்* என்றும், இடை அளவை *உப மானம்* என்றும், அடக்க அளவை *லம்ப மானம்* என்றும் கூறவேண்டும்.

படிமத்தின் முன்புறத்தில் ஒரு தூக்கு நூலைத் தொங்கவிட்டு அந்த நூலிலிருந்து படிமத்தின் தலை, நெற்றி, மூக்கு மோவாய், கழுத்து, மார்பு, நாபி, தொடை, ஆகிய உறுப்புகள் அந்நூலுக்குச் செங்குத்தாக எவ்வெவ்வளவு அடக்கம் கொண்டு இருக்கின்றன என்பதை அறிய உதவும் இவ் அளவை *லம்ப மானம்* என்றும், *அடக்க மானம்* என்றும், *தாழ்த்து மானம்* என்றும், *மட்டத் தானம்* என்றும் நான்கு விதமாகச் சொல்வது நடைமுறை வழக்கு.

இந்த அறுவகை மானங்களைக் கொண்டுச் சம நிலையில் நேரே நிமிர்ந்து நிற்கும் படிமத்தை இயற்றுதல் கூடும். ஆனால் நின்ற கோலத்தில் ஒரு காலை ஊன்றி, மற்றொரு காலை சிறிது வளைத்து முன்னோக்கி நிறுத்தி, உடலையும், தலையையும் வணக்கி நிற்கும் படிமங்களை இயற்றிட இவ்வறுவகை மானங்களோடு மேலும் ஓர் அளவு தேவையாகிறது. இது *பங்க மானம்* (வளைவு அளவு) என்று சொல்லப்படும்.

பங்கத்தோடு (அதாவது வளைவுகளுடன்) அமைத்திட வேண்டிய படிமத்தின் முன்புறத்தில் அதன் மையத்தில் தூக்கு நூலைத் தொங்கவிட்டு, அந் நூலிலிருந்து தலை, மூக்கு, மோவாய், மார்பு, நாபி, குய்யம், தொடைகள், கால்கள் ஆகிய உறுப்புக்கள் எந்தெந்தப் பக்கங்களில், வளைத்து அந் நூலிலிருந்து எவ்வளவுக்கு எவ்வளவு ஒதுக்கம் கொண்டு இருத்தல் வேண்டுமென்பதை விரிவாக அளவோடு உணர்த்துவது பங்க மானம் ஆகும்.

மேற்சொன்ன மைய நூல் மிக முக்கியமானதொரு நூல் ஆகும். ஒரு படிமம் பங்கத்தோடு இயற்றப்பட்டாலும், பல்வேறு நாட்டியக் கோலங்களில் அமைக்கப்பட்டாலும், அவை சமநிலையில் அமைந்திட இந்நூல் அடிப்படை நூலாக—படிமத்தை சமநிலைப்படுத்தும் நூலாக-செயல்படுவதினால் இதனைப் *பெரு நூலென்றும், பிரம்ம சூத்திரமென்றும்* சொல்வது கலை வழக்காகும். இதனை மேலும் சிறப்பித்து *உயிர் நூல்* என்றும் சிற்பிகள் கூறுவர்.

படிமம் ஒன்று எவ்வளவு பங்கத்திலிருந்தாலும் இந்நூல் அதனைச் சம நிலைப்படுத்தி உயிர் பெறச் செய்வதைப்போல, பல உருவங்கள் நிறைந்த ஒரு காட்சியையும், இந்நூல் சமநிலைப்படுத்தும். இந்நூல் காட்சியின் நடுவே செல்லும். இந்நூலுக்கு இருபுறங்களிலும் உள்ள வடிவங்களை இந்நூலை மையமாகக் கொண்டு, சமநிலையில் வெவ்வேறு இடங்களில் பொருத்தி, அமைத்துக் காட்சியைச் சமநிலைப்படுத்துதல் வேண்டும்.

மேலும் பங்கத்தோடு கூடிய படிமத்தை இயற்றுதற்கு அங்கங்களின் அடக்கமானங்களும் விசேடமாக உள. அவற்றையும் அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

## மான சூத்திரங்கள்

ஒரு படிமத்தை அந்தந்த அளவுகட்கு உட்படுத்தி அழகுற அமைப்பதற்கென பல அளவு நூல்கள் கையாளப்படுகின்றன. அவை படிமத்திற்கு முன்னும், பின்னும், பக்கங்களிலும், குறிப்பிட்ட எல்லைகளிலும், தொங்கவிடப்படும் தூக்கு நூல்களாகும். நாட்டிய பாவனையில் படிமத்தின் உடலைச் செம்மையாக அமைத்திட அளவு நூல்களாக உதவுகின்றமையால் அவை *மான சூத்திரங்கள்* எனப்படும். அவை தொங்கு நூல்கள்—பிரலம்ப சூத்திரங்கள்—என்றும் சொல்லப்படும். இங்ஙனமே ஒவ்வொரு உறுப்பின் எல்லையில் சமாந்திரமாக—உயரத்திற்குக் குறுக்காக-பல சூத்திரங்கள் கொள்ளப்படும். அவை *மட்ட சூத்திரங்கள்* என்றும், *மட்ட நூல்கள்* என்றும் சொல்லப்படும்.

தொங்கு நூல்கள் பலவகைப்படும். சமபாத ஸ்தானக நிலையில் நிற்கும் படிமம் ஒன்றின் முன் புறத்தில் தலை, நெற்றி, மூக்கு, கழுத்து, மார்பு, நாபி, குய்யம், கால்கள் இவற்றின் மையத்தில் தொங்கும் நூலுக்கு *மைய நூலென்றும், மத்திய சூத்திரமென்றும், பூர்வ சூத்திரமென்றும், புற நூலென்றும்* பெயர். இங்ஙனமே படிமத்தின் பின் புறத்தில், தலை, பிடரி, முதுகு, முதுகந் தண்டு, இருக்கை, தொடைகள், குதிகால்கள் ஆகியவற்றின் நடுவே தொங்கும் நூலுக்கு *புறமைய நூல்* என்றும், *பிருஷ்டமத்திய சூத்திரம்* என்றும் *அபர சூத்திரம்* என்றும் பெயர்.




தொங்கு நூல்கள்

1. பூர்வ சூத்திரம் 2. முக பாஹிய சூத்திரம் 3. சஷசூத்திரம் 4. பாகு சூத்திரம்

உடலின் பக்கங்களில், காது, கழுத்து, கை, முழங்கால், பரடு இவற்றின் நடுவாக, கணுக்கால் வரை தொங்கும் நூலுக்கு பக்க நூலென்றும் *பார்சுவ சூத்திரம்* என்றும் பெயர். மேலும் படிமத்தின் உச்சந்தலையைத் தொட்டுத் தொங்கும் நூல் ஒன்றுண்டு. இதற்கு *காய மைய நூலென்றும், காயமத்திய சூத்திரம்* என்றும் பெயர்.

மேற்சொன்ன மைய நூல்களிரண்டு, பக்க நூல் களிரண்டு, காயமைய நூலொன்று-இவ் வைந்தும் *பஞ்ச சூத்திரங்கள்* எனப்படும். இவற்றைப் பிரம்ம சூத்திரங்கள் என்றும் சொல்வதுண்டு. இவ்வைந்து நூல்களும் உடலின் நடுவே செல்வதைக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்.

பூர்வ சூத்திரம், காய மைய சூத்திரம், அபர சூத்திரம் ஆகிய மூன்றும் ஒரே வரிசையிலும், பார்சுவ சூத்திரங்களும் காய மைய சூத்திரமும் ஒரே வரிசையிலும் அமையும். இவ்வைந்து நூல்களும் படிமத்தைச் சமநிலையில் நேரியதாக அமைத்திட உதவுகின்றன.

இவ்வைந்து நூல்களை விடுத்து மேலும் நான்கு நூல்கள் செயல்படுகின்றன. கக்கத்தின் நடுவே இரண்டு நூல்களும் முகத்தை ஒட்டியவாறு இரண்டு நூல்களும் தொங்கும்.

முன்னையதைக்கக்க நூலென்றும், பின்னையதை *முக நூலென்றும்* கொள்ளுதல் வேண்டும். அவை முறையே *கக்ஷ சூத்திரம்* என்றும் *முகபரியந்த சூத்திரம்* என்றும் சொல்லப்படும். இந்நான்கும், முன்னைய ஐந்தோடு சேர்ந்து *நவ சூத்திரங்கள்* என்று பெயர் பெறும். இவ்வொன்பது சூத்திரங்களும் நின்ற கோலப் படிமத்தையும், அமர்ந்த கோலப் படிமத்தையும், சமநிலைப் படுத்தி நேரியதாக அமைத்திட உதவும்.

முகத்தை ஒட்டியவாறு செல்லும் நூல் முலைக் காம்பின் நடுவிலும், தொடை, பாதம் இவற்றின் நடுவிலும் செல்லும்.

மேற்கண்ட ஒன்பது நூல்களை விடுத்து, இரண்டு நூல்கள் தோள் புறவாயினைத் தொட்டுத் தொங்கும். சமபாத ஸ்தானக நிலையில் அல்லது சுகாசன நிலையில் இயற்றப்படும் படிமங்களுக்கு இவை ஏற்றவையாகும். இவ் விரண்டும் சேர்ந்து மொத்தத்தில் பதினொரு தூக்கு நூல்கள் படிமத்தை இயற்றுதலுக்கு இன்றியமையாதன ஆகின்றன. இவை *ஏகாதச சூத்திரங்கள்* என்றும் *ருத்ர சூத்திரங்கள்* என்றும் சொல்லப்படும்.

மேலே விளக்கிய, பதினொரு நூல்களில் தனிச் சிறப்பு வாய்ந்ததும், மிகவும் பயன் உள்ளதுமான நூல் *பூர்வ சூத்திரமாகும்.* இந் நூல் படிமத்தின், நாசி, நாபி, இவற்றைத் தொட்டுத் தொங்கி, கால் பெருவிரலின் அடியை வந்தடையும். இந்த லம்ப சூத்திரத்திலிருந்து படிமத்தின் ஒவ்வொரு அங்கத்தின் அடக்கத்தை அளவிட்டுச் செய்தல் எளிதாகின்றது.

## சமபாத ஸ்தானகப் படிமத்திற்கும் சுகாஸனப் படிமத்திற்கும் பூர்வ, அபர சூத்திரங்களிலிருந்து அடக்கமானங்கள்

**சமபாத ஸ்தானகப் படிமம்**

| பூர்வ சூத்திரத்திலிருந்து உறுப்புகளின் அடக்கம் | | அபர சூத்திரத்திலிருந்து உறுப்புகளின் அடக்கம். | |
|---|---|---|---|
| (பூர்வ சூத்திரமானது, படிமத்தின் நாசி, நாபியைத் தொட்டுத் தொங்கும்) | | (அபர சூத்திரமானது, நடு முதுகைத் தொட்டுத் தொங்கும்) | |
| மகுடத்தில் சிகாமணியின் அடக்கம் | 12'-0" | தலையின் அடக்கம் | 3'-6" |
| மகுட அடியின் அடக்கம் | 6'-0" | கழுத்துப் பின்பக்க அடக்கம் | 5'-4" |
| நெற்றி மையத்தின் அடக்கம் | 2'-0" | பிடரியின் அடக்கம் | 1'-7" |
| மூக்கு நுனியின் அடக்கம் | 0'-0" | முதுகுத் திமிலின் அடக்கம் | 2'-0" |
| மோவாயின் அடக்கம் | 2'-1" | நடுமுதுகின் அடக்கம் | 0'-0" |
| அடிக் கழுத்தின் அடக்கம் | 6'-0" | கீழ்முதுகின் அடக்கம் | 8'-0" |
| மார்பின் அடக்கம்[1] | 2'-0 | முதுகந்தண்டின் (குழியில்) அடக்கம் | 7'-6" |
| நாபி மட்டத்தில் வயிற்றின் அடக்கம் | 0'-0" | நடுஉடலின் பின்பகுதி அடக்கம் | 8'-4" |
| நாபி அடக்கம்[2] | 1'-0" | நாபி மட்டத்தில் முதுகின் அடக்கம் | 2'-4" |
| குய்ய மூலத்தின் அடக்கம்[3] | 3'-0" | குய்ய மட்டத்தின் அடக்கம்[5] | 2'-0" |
| தொடையின் அடக்கம்[4] | 2'-0" | நடுத்தொடையின் அடக்கம்[6] | 3'-2" |
| முழங்காலின் அடக்கம் | 6'-0" | முழங்கால் மட்டத்தில் முழங்காலின் அடக்கம் | 4'-6" |
| முன்காலின் அடக்கம் | 8'-0" | முன்காலின் நடுவில் அடக்கம் | 3'-2" |
| நளகையின் அடக்கம் | 8'-4" | நளகை பின்புறத்தின் அடக்கம் | 4'-6" |
| பெருவிரல் நுனியின் அடக்கம் | 2'-4" | | |
| குதிகாலின் அடக்கம் | 14'-4" | குதிகாலின் அடக்கம் | 3'-4" |




தொங்கு நூல்கள்
(பக்கப் பார்வை)

உடலின் நடுவே செல்லும் காய மைய நூலில் இருந்து உறுப்புகளின் களத்திகள் பின்வருமாறு:

| | |
|---|---|
| [7]பூர்வ சூத்திரத்திலிருந்து காயமைய சூத்திரத்தின் அடக்கம்/நீக்கம்/ஒதுக்கம் | 9'-4'' |
| காய மைய நூலிலிருந்து தலையின் பின்பகுதியின் களத்தி | 4'-4'' |
| கழுத்தின் (திமில்) களத்தி | 5'-4'' |
| மார்பு மட்டத்தில் புறமுதுகின் களத்தி | 6'-4'' |
| நடு உடல் மட்டத்தில் புறமுதுகின் களத்தி | 4'-4'' |
| நாபி மட்டத்தில் முதுகின் களத்தி | 5'-4'' |
| கடி மட்டத்தில் புறத்தியின் களத்தி | 6'-4'' |
| குண்டிக்காயின் களத்தி | 8'-4'' |
| நடுத்தொடையின் களத்தி | 4'-0'' |
| முழந்தாளின் களத்தி | 4'-4'' |
| முன்கால் மையத்தின் களத்தி | 3'-0'' |
| பரடு மையத்தில் களத்தி | 2'-0'' |

பார்சுவ சூத்திரமாகிய பக்க நூலைக் கொண்டு, பக்கவாட்டில் கைகளில் முன்பின் அளவுகளையும் அறிய முடியும். அவை பின்வருமாறு:

பக்க நூலானது காதின் உட்புறம், தோளின் மையம், கழுத்தின் மையம், கணுக்காலின் மையம் வழியே தொங்கும். பக்க நூல்கள் இரண்டும், காய மைய நூலும் ஒரே வரிசையில் அமைவன ஆகும்.

சமபாத ஸ்தானகப் படிமத்தின் லம்ப மானங்களை இதுவரை கண்டோம். இவ் அடக்க அளவுகள் படிமத்தின் முன்னும் பின்னும் தேவைப்படுபவை. இவற்றை மனதில் நன்கு நிறுத்தி சிற்பிகள் படிமங்களைச் சமைத்தல் வேண்டும்.

(கக்ஷ சூத்திரம் இடுப்பின் இருப் பக்கங்களிலும் கணுக்கால் மொழியின் நடுவிலும் செல்லும்.)

| | |
|---|---|
| பார்சுவ சூத்திரத்திலிருந்து தனது புஜத்தின் புறவாய்க் களத்தி | 4'-0'' |
| மேற்கரத்தின் புறவாய்க் களத்தி | 8'-0'' |
| தனது கைக்கும், மேற்கைக்கும் இடைவெளி | 2'-0'' |
| பூர்வ சூத்திரத்திலிருந்து தலை உச்சியின் அடக்கம் களத்தி | 12'-0'' |

அமர்ந்த கோலப்படிமத்தின் சூத்திர அமைப்புகளும் அடக்கமானங்களும் பின் வருமாறு:

**சுகாசனப் படிமம்**

உடலை நேராக நிமிர்த்தி, ஒரு பாற் கோடாமல் பீடத்தின் மேல் அமர்ந்திருக்கும்; இடது காலை மடக்கி பீடத்தின் மீது படுக்கையாகக் கிடத்தி வலது காலைத் தொங்கவிட்டு ராஜஸ பாவத்தோடு விளங்கும்.

இவ் வமர்ந்த கோலப் படிமத்திற்கு ஒன்பது சூத்திரங்கள் உபயோகமாகின்றன. இவற்றில் மைய நூலானது, தலை, மையம், மூக்கு மையம், நாபி மையம், குய்ய மையம், மடக்கிய காலின் பரடு மையம் வழியாகத் தொங்கும். மற்ற

சூத்திரங்கள் சமபாத ஸ்தானக வடிவத்திற்குச் சொல்லியவாறே அவ்வவற்றுக் குரிய இடங்களில் தொங்கும்.

மைய நூலிலிருந்து அங்கங்களின் அடக்கம் பின்வருமாறு:

| | |
|---|---|
| மைய நூலிலிருந்து முழங்கால் மூட்டு ஒதுக்கம் | 30`-0`` |
| நளகையின் ஒதுக்கம் | 12`-0`` |
| இடது கைத் தலத்தின் ஒதுக்கம் | 15`-0`` |
| தலையின் உச்சி ஒதுக்கம் | 14`-0`` |

மைய நூலிலிருந்து நெற்றிப்பட்டம் வரை அடக்கம் 6,7,8 விரல் இருக்கலாம்.

## சூத்திரப் பலகை

வழிபடு படிமங்களின் உடல் அமைதிகளை ஒரு குறிப்பிட்டக் கோலத்தில் நிர்ணயம் செய்வதற்குப் பல தொங்கு நூல்களை உபயோகிக்க வேண்டியுள்ளது. இத்தகைய நூல்கள் பதினென்று என்று முன்னர் கண்டோம். இவற்றைக் குறிப்பிட்ட அளவுகளில் தொங்க விடுவதற்கு உபயோகிக்கும் கருவிக்கு *சூத்திரப் பலகை* என்று பெயர். இதனைப் *பிரலம்பப் பலகை* என்றும் கூறுவதுண்டு.

சூத்திரப்பலகை என்பது, சமசதுரமான இரண்டு பலகைகளைக் கொண்டது. அவை மேலும் கீழுமாகச் சமதளத்தில் அமைந்து, அவற்றின் இடையே கால்களையும் பெற்று விளங்கும்.

கால்களின் தலைப்பகுதியில் பொருத்தப்பெற்ற சமதளப் பலகை *சூத்திரப் பலகை* என்றும், கால்களின் அடிப்பகுதியில் பொருத்தப் பெற்ற பலகை *ஆசனப் பலகை* என்றும் சொல்லப்படும். இவ்விரு பலகைகளையும் சமமட்டத்தில் பொருத்திட உதவும் கால்கள் ஒன்று (அல்லது) இரண்டு (அல்லது) மூன்று (அல்லது) நான்கு கொண்டதாக இருக்கலாம். கீழ்ப் பல்கையின் மேல் மட்டத்திலிருந்து மேற்பலகையின் அடி மட்டம் வரை கொள்ளும் கால் உயரம் படிம உயரத்திற்கு சமமாதல், ஒன்றேகால் பங்காதல், ஒன்றறைப் பங்காதல் இருத்தல் வேண்டும். அல்லது தேவைக்கேற்றவாறு உயரத்தை மாற்றியும் அமைத்துக் கொள்ளலாம். மேற் பலகையான சூத்திரப் பலகையின் அகலம் படிம உயரத்திற்குச் சமமாதல், முக்காலாதல், அரையாதல் என்று மூன்று விதமாகக் கொண்டு சம சதுரமாக அமைத்திட வேண்டும். மேற்பலகை எவ்வளவு சதுரமுடையதோ அவ் அளவினதாக்வே ஆசனப் பலகையும் அமைதல் வேண்டும். சூத்திரப் பலகையின் கனத்தைப் படிமத்தின் தேகாங்குலத்தினாலும், ஆசனப் பலகையின் கனத்தை மானாங்குலத்தினாலும் கொள்ள வேண்டும். சூத்திரப் பலகையின் கனம் தேகாங் குலத்தினால் 4,3,2 அங்குலமாக இருக்கலாம். ஆசனப் பலகையின் கனம் மானாங் குலத்தினால் 4,3,2 அங்குலமாக இருக்கலாம்.

சூத்திரப் பலகையின் மேல் மட்டத்தில் இரண்டு மையக் கோடுகளை ஒன்றுக்கொன்று செங்குத்தாக வரைந்து இரண்டு கோடுகளும் சந்திக்கும் இடத்தில் ஒரு துளையும் அக்கோடுகளில் அளவிட்டுக் குறியிட்ட நான்கு இடங்களில் ஒவ்வொரு துளையும் இருக்க வேண்டும். இவ் வைந்து துளைகளின் வழியாக ஐந்து நூல்களைச் செருகி ஆசனப் பலகை வரைத் தொங்கச் செய்தல் வேண்டும். நூல்களை நேராகத் தொங்கச் செய்ய நூலின் தொங்கு முனையில் கல்லால் அல்லது உலோகத்தால் செய்யப்பட்ட துளையுடன் கூடிய தூக்குக்குண்டுகளைக் கட்டுதல் வேண்டும். சூத்திரப் பலகைக்கு வெளியே நீண்டிருக்கும், மற்றொரு நுனியை முடிச்சுப்போட்டுத் துளை வழியே நூல் கழன்று விழுந்து விடாமல் அமைத்தல் வேண்டும். இங்ஙனம் முதலில் அமைத்த நூல்கள், முதல் தொகுப்பாகிய பஞ்ச சூத்திரங்களாகும்.

படிமத்திற் குரிய தாள வகையில் கூறப்பெற்ற அளவுகளிலிருந்து முக அகலம், கக்க அகலம், தோள் புறவாய்க்குப் புறவாய்க் கொண்ட அகலம் இவற்றை, காய மையத் துளையிலிருந்து சமமாகக் குறியிட்டு, அதிலிருந்து தக்க இடத்தில் துளையிட்டு மேலும் நான்கு நூல்களைத் தொங்கவிட வேண்டும். இங்ஙனம் ஒன்பது நூல்களைத் தொடங்கவிட்ட பின் படிமத்தை இக் கூண்டுக்குள் நகர்த்தி அமைத்து படிம உடல் அமைதிகளையும், உறுப்புகளின் அடக்கங்களையும் கவனித்து ஒழுங்குபடுத்த வேண்டும்.

இத்தகையச் சோதனையானது மெழுகினால் செய்த படிமத்தை ஒழுங்குபட அமைத்திடப் பேருதவியாக இருக்கும். பெரிய படிமங்களுக்கு இஃது இன்றியமையா முறையாகும்.

மெழுகினால் படிமங்களைச் செய்யும் பொழுது ஒவ்வொரு உறுப்பையும் அளவுடன் தனித் தனியாகச் செய்து பிறகு அவற்றை ஒட்டிச் சேர்மானம் செய்வதால் இச் சூத்திரப் பலகை மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

### கற் படிமத்தின் சூத்திர விளக்கம்

கல்லிலே வழிபடு படிமங்களைச் செய்யுங்கால் இச் சூத்திரப் பலகை நடைமுறையில் பயன்படுவதில்லை. இதற்கு மாற்றாக இத்தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட வேறொரு முறை நடைமுறையில் உள்ளது. இம் முறை கற்படிமத்திற்கு மட்டுமேயன்றி, மரப்படிமத்திற்கும் ஏற்புடைத்ததாகும்.

கற்படிமத்தை நிற்க வைத்துச் செய்வது மரபு அல்ல. தரையில் படுக்கையாக-மல்லார்ந்த நிலையில் தரையில் கிடத்தி-மட்டமாக வைத்தே செதுக்கப்படும். ஆதலால் தொங்கு நூல்கள் இதற்குப் பொருந்தாது. மட்ட நூல்களாகவே கொள்ளுதல் வேண்டும்.

கற்ப்டிமத்திற்குத் தேவையான அளவுள்ள கல்லில் படிமத்தின் பாதத்திற்குக் கீழே அதனை ஒட்டியவாறு பீடமும் சேர்த்தே அமைக்கப்படும். இது கூருள்ள-கூர்வாங்கிய-பீடமாகவோ, அல்லது பீட இலக்கணம் முற்றிலும் கொண்ட முழுப்பீடமாகவோ இருக்கும். எங்ஙனமாயினும் படிமத்தின் அடியில் பீடப் பகுதி எப்பொழுதும் இருப்பதால், இதனுடைய நெற்றிப் பக்கம், இதற்கு அணித்தாயுள்ள பக்கங்கள் ஆகிய மூன்று பக்கங்களையும் 'ப' வடிவில் கோடி மட்டத்திற்கு ஒப்பச் செதுக்கி மட்டப்படுத்திக் கொள்ள வேண்டும். இப் பீடம் சூத்திரப் பலகையாகவும், ஆசனப் பலகையாகவும் வேலை செய்கிறது. படிம அகலம் இதன் அகலமாகும் இங்ஙனம் அமைந்த பீடம் அல்லது பீடப் பலகையின் மீது பாதங்கள் அமையும். இப் பீடத்தின் மையமே, படிமத்தின் மைய சூத்திரம் விழும் தானமாகும்.

இதிலிருந்து படிமத்தின் மைய சூத்திரத்தை ஒட்டிப் பிடித்துப் படிமத்தின் தலை மையத்தை நிர்ணயம் செய்து அவ் விடத்தில் மட்டப் படுத்திக் கொள்ள வேண்டும். காவி நூலால் கல்லின் மேல் மட்டத்தில் இம் மைய நூலை அடித்தல் வேண்டும்.

படிமத்தின் தாள் முதல் தலைமுடி வரை கொண்ட படிம உயரத்திற்குச் சமமான அளவில் மூங்கிற் குச்சியொன்றைச் செதுக்கி நேரியதாக்கி அதன் மீது முகம், கழுத்து, மார்பு, நாபி, குய்யம், தொடை, முழங்கால், முன்கால், பாதம் ஆகிய உறுப்புகளின் உயர அளவுகளை (உயர கணக்கு அளவுகள்) குறியிட்டுக் கொள்ள வேண்டும். இவ் அளவு கோலைப் பீடமேல் மட்டத்தில் ஒட்டி உயர அளவுகளைக் கல்லின் மேல் மட்டத்தில் ஏற்கெனவே அடித்த மைய சூத்திரத்தின் மேலிருந்து கீழாகக் குறியிட்டுக் கொள்ள வேண்டும். மேலும் முக அகலம், தோள் அகலம், கக்க அகலம், கரோணி அகலம், இடுப்பு அகலம், தொடை, கால் அகலங்கள் ஆகிய அளவுகளைப் படிம அளவை இலக்கணத்திற் கூறியவாறு கொண்டு அவற்றை மைய சூத்திரத்திலிருந்து இரு பக்கங்களிலும் குறியிட்டு, படிம வடிவத்தை வரைந்து கொள்ள வேண்டும். பீடத்தின் நெற்றியில் முக அகலம், கக்க அகலம், தோள் அகலம் ஆகியவற்றைக் குறியிட்டுக் கொள்ளலும் வேண்டும். இதுவரை பூர்வ சூத்திரம் 1. முக பாஹுய சூத்திரம் 2, கக்ஷ சூத்திரம் 2, பாகு சூத்திரம் 2 ஆக ஏழு சூத்திரங்கள் செயல் பட்டிருப்பதைக் காணலாம். அபர சூத்திரம் 1, பக்க சூத்திரங்கள் 2 ஆகிய மூன்று சூத்திரங்களையும் பீடத்தில் குறியிட்டுக் கொள்ளுதல் வேண்டும். படிமத்தின் தலைப்பகுதியில் காய மைய நூலின் தானத்தையும் குறித்துக் கொண்டால் பதினொரு சூத்திரங்களும் செயல்படுவதாகின்றது.

மேற்குறிப்பிட்ட ஏழு சூத்திரங்களைக் கொண்டும், மட்ட சூத்திரங்களைக் கொண்டும் கல்லின் மேற்பகுதியில் படிம ஓவியம் வரையப் பட்டிருப்பதால் உறுப்புகளின் இடங்கள் தெளிவாகிவிடும். இதனைக் கருத்திற்கொண்டு, மேலும் படிமத்தின் நெற்றி, மார்பு, தோள், வயிறு, குய்யம், தொடை, கால் ஆகிய உறுப்புக்களின் மட்டங்கள் எங்கெங்கு எவ்வளவெவ்வளவு தாழ்ந்து அல்லது அடங்கி இருத்தல் வேண்டும் என்பதை அறிந்து, அளவிட்டுச் செதுக்குதல் வேண்டும். இதற்கு உதவுவதே பீட மையத்தில் கொள்ளும் லம்ப சூத்திரம் ஆகும்.

லம்ப சூத்திரமானது, சமபாத ஸ்தானக நிலையில் நிற்கும் படிமம் ஒன்றின் மூக்கு நுனியைத் தொட்டு, கால் பெருவிரலின் மூலத்தையும் தொட்டுத் தொங்கும் இடையே இந்நூல் நாபியை உராய்ந்து செல்லும். எனவே சுருக்கமாக, லம்ப சூத்திரம் நாசி நாபியை தொட்டு தொங்கும் நூலெனப்படும். வேறு விதமாகக் கூறின், ஸ்தானகப் படிமத்தில் நாசியும், நாபியும் சமமட்டத்தில் இருக்கும் என்றாகிறதல்லவா?

படிமத்திற்குரிய கல்லின் தலைப்பகுதியில் கீழ்ப்பீடத்திற்கு சமமட்டமாக்கப்பட்ட இடத்தில் மைய சூத்திரத்தில் மூக்கு நுனிக்குரிய புள்ளியை அளவிட்டுக் குறித்து, அப்புள்ளியில் ஒரு தானத்தையும், கால் பெருவிரலின் மூலத்தில் ஒரு தானத்தையும் ஊன்றி அதன் மீது நூலை ஒட்டிப் பிடித்தால் படுக்கையாகக் கிடக்கும் படிமத்திற்குத் தேவையான லம்ப சூத்திரம் கிடைத்து விடுகிறது. அந்நூலிலிருந்து நெற்றி மட்டம்,

மோவாய் மட்டம், கழுத்து மட்டம், தொடை மட்டம், முழங்கால் மட்டம், பரடு மட்டம் ஆகிய மட்டங்களை அளந்து படிமத்தின் நின்ற கோலப் பாங்கினை நிர்ணயம் செய்து கொள்ள முடியும். இம் முறையைக் கையாள்வதற்கு முன்பு நிதானமாக மட்டங்களைத் தோண்டிக் கொண்டு, சரியான மட்டங்களை முடிவாகக் காண இம் முறையை உபயோகித்தல் வேண்டும்.

1. 0'-4" காஸ்யபம்; 1'-0" சகளாதிகாரம்
2. 1'-4" காஸ்யபம்; 1'-0" சகளாதிகாரம்
3. 2'-0" சகளாதிகாரம்
4. 5'-0" சகளாதிகாரம்
5. 2'-4" காஸ்யபம்
6. 3'-7" காஸ்யபம்
7. 11'-0" சகளாதிகாரம்

# 23

# தாளமானம்



படிம அமைப்பு இலக்கணத்தில் தாளமானம் என்ற ஓர் அளவு முறை சிறப்பானதொரு இடத்தை பெறுகிறது. தெய்வப் படிமங்களில் உறுப்புகளின் மனங்கவர் தோற்றத்திற்கும், காவிய நயங்களையும் சிறந்த தத்துவக் கருத்துக்களையும், படிமத்தில் பிரதிபலிக்கச் செய்வதற்கும், தெய்விகம் ஒளிரச் செய்வதற்கும் இத்தாளமானம் இன்றியமையாததாக விளங்குகிறது.

சிற்பக் காட்சிகளைக் சித்தரிப்பதற்கும், காட்சிகளில் இடம்பெறும் பாத்திரங்களின் பல் வேறுபட்ட நிலைகளை-ஏற்றத் தாழ்வுகளை-பண்புகளை-சுட்டிக் காட்டுவதற்கும் தக்க சாதனமாக இது பயன்பட்டு வருகிறது. இவ் அளவு முறை கடவுட் படிமங்களுக்கே பெரிதும் பயன்படுவதாக இருப்பினும், கலைப் படிமங்களையும், உயர்தனி மாந்தர்தம் வாழ்க்கை வரலாறுகளையும் காவியமாகக் கல்லிலேயும், பிறபொருள்களிலேயும் வடிக்க நல்லதொரு துணையாகவும் விளங்குகிறது.

படிமங்களுடைய பல்வேறு உறுப்புகளின் நீள அகலங்களை ஒன்றுக்கொன்று ஒப்பு நோக்கி, தொடர்பு படுத்தி-இலக்கணம் கண்டு, அப்படிமங்களை அழகுறச் சமைக்க, படிமத்தின் முக நீளத்தையே மூல அலகாகச் சிற்பக் கலைஞர்கள் கொண்டுள்ளார்கள். முக அளவினால் பிற உறுப்புகளை அளவிட்டுக்கூறும் இம்முறை படிம இலக்கணத்தில் சிறந்ததோர் அடிப்படையாகும்.

உடல் உறுப்புகளில் தலை முக்கியமான உறுப்பாகும். இதில் நெற்றி முதல் மோவாய் வரை உள்ள அளவு-நீள-அளவு-முகம் என்று சொல்லப்படும். இவ் அளவு' கைச்சாண்



முக அளவு



கைச்சாண் அளவு

நீட்டலளவிற்கு ஈடென ஒரு சிலர் கருதுகிறார்கள். கைத்தலத்தை விரித்து, பெருவிரல் முதல் நடுவிரல் வரை உள்ள நீள அளவே கைச்சாண் என்று சொல்லப்படும்.

கைத்தலத்தின் அடியிலிருந்து நடுவிரல் நுனி வரை உள்ள தலமும் விரலும் சேர்ந்த நீளம் கைத்தல நீளமாகும். இந்தக் கைத்தல அளவும், முக அளவும் ஒன்றுக்கொன்று சமமெனவும் சிற்பிகள் கொண்டார்கள். எனவே முக நீளத்தை மூல அலகாகக் கொள்வதற்கு மாற்றாக கைத்தலத்தின் நீளத்தையே மூல அலகாகக் கொண்டனர் சிற்பிகள். கைத்தலத்தை அடியாகக் கொண்ட அளவு இஃது ஆனதால் இவ்வளவு தாளம் என்று சொல்லப்படுகிறது.



கைத்தலமும் முக அளவும்

இசைக்கலையில் ஒரு பாடலைத் 'தாளம்' எங்ஙனம் கட்டுப்படுத்தி ஒழுங்கு படுத்துகிறதோ, அங்ஙனமே சிற்பக்கலையில் தாளமானது உருவத்திற்குக் கட்டுக் கோப்பான உடலைத் தந்து செழுமையூட்டுகிறது.

முக அளவை மூல அலகாகக் கொண்டு உடல், கால், கை, தோள், தொடை முதலிய பெரிய உறுப்புகளின் அளவுகளையும், சிரசு, கழுத்து, முழங்கால், பாதம் ஆகிய சிறு உறுப்புகளின் அளவுகளையும் சிற்பக் கலைஞர் கீழ்க்கண்டவாறு, அளவு கொண்டு, முறைப்படுத்தி, படிம அளவை இலக்கணம் வகுத்துள்ளார்கள்.

**உயர அளவுகள்**

| | | |
|---|---|---|
| தலை நெற்றி முடியிலிருந்து உச்சந்தலை வரை உள்ள உயரம் (அல்லது) கனம் | - | 1/4 முகம் |
| முகம் | - | 1 முகம் |
| கழுத்து | - | 1/4 முகம் |
| மார்பு | - | 1 முகம் |
| கொப்பூழ் (நாபி) | - | 1 முகம் |
| [2]அரை (குய்யம்) | - | 1 முகம் |
| தொடை | - | 2 முகம் |
| முழங்கால் மூட்டு | - | 1/4 முகம் |
| [3]கால் (கெண்டைக்கால்) | - | 2 முகம் |
| தாள் (பாதம்) | - | 1/4 முகம் |
| படிமத்தின் மொத்த நீளம் (அல்லது) உயரம் | - | 9 முகம் |

எனவே தாள் முதல் தலைவரை கொண்ட உயரத்தை ஒன்பது முக உயரமென்று சிற்பிகள் கூறுவர். இது மிகப்பழமையான வழக்கு.

இவை நவதாளப் படிமத்தின் உயர விகித அளவுகள். இதில் முகத்தின் உயரம் 12 விரல் என்பதை நோக்குக. இம்முக நீளத்திற்குச் சமமாக அடிக்கழுத்து முதல் மார்பு எல்லைவரை ஒரு முகமும், அதிலிருந்து நாபி வரை ஒரு முகமும், மேலும் அதிலிருந்து தொடைகள் கூடுமிடும் அல்லது அடிவயிற்றின் எல்லைவரை ஒரு முகமும் என்பதையும் நோக்குக. முக அளவினால் தொடையும், முன்காலும் இரு மடங்கின பாதம், முழங்கால், கழுத்து கபாலம் ஆகிய ஒவ்வொன்றும் கால் முகம் அளவு என்பதையும் அறிக. இது முகமானம் ஆகும்.

இங்ஙனம் சிற்பப் படிமம் ஒன்றின் விகிதாச்சார உயர/நீள அளவை முக அளவால் சிற்பிகள் நடைமுறையில் கொண்டுள்ளதைச் சிற்ப இலக்கண நூல்கள், தாளம் என்ற கலைச் சொல்லைப் புகுத்தி தாள அளவினால் மாற்றிக் கூறுவதைக் கீழே காண்க.

| | | |
|---|---|---|
| தலை | - | 1/4 தாளம் |
| முகம் | - | 1 தாளம் |
| கழுத்து | - | 1/4 தாளம் |
| மார்பு | - | 1 தாளம் |
| கொப்பூழ் | - | 1 தாளம் |
| அரை (குய்யம்) | - | 1 தாளம் |
| தொடை | - | 2 தாளம் |
| முழங்கால் மூட்டு | - | 1/4 தாளம் |
| கால் | - | 2 தாளம் |
| தாள் | - | 1/4 தாளம் |
| படிமத்தின் மொத்த நீளம் (அல்லது) உயரம் | - | 9 தாளம் |

(நவதாளம்) இது தாளமானம் என்று சொல்லப்படும்.

மேற்குறிப்பிட்ட தாள அளவுகள் மூலம் பொதுப்படையாகப் பெரிய உறுப்புகளின் அளவுகளை மட்டும் உணர்த்த முடியுமே ஒழிய

அவ் அங்கங்களில் உள்ளிட்ட கண், காது, மூக்கு, வாய், விரல் போன்ற சிறு உறுப்புகளை இப்பெரிய அளவால் கூறுவதும், கொள்வதும் நடைமுறைக்கு ஒத்து வருவதில்லை. ஆதலால் தாள அளவு மேலும் பல உட் பிரிவுகளைக் கொண்டதாக ஆக்கப்பட்டுள்ளது.

ஒரு தாள நீளத்தைப் பன்னிரண்டு சம கூறுகளாகப் பிரித்து ஒவ்வொன்றையும் ஒரு விரல் என்றும், மேலும் இங்ஙனம் பெற்ற ஒரு விரல் நீளத்தை எட்டுப் பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகமும் ஒரு *யவை* என்றும் கொள்ளப்படும். எனவே தாளம்12 விரல், விரல் 8 யவை. இங்ஙனம் தாளத்தை விரலாகவும், விரலை யவையாகவும் நுணுக்கமாகப் பகுத்துள்ளமையால் கண், காது, மூக்கு, நகம் போன்ற சிறு உறுப்புகளையும் நுட்பமாகக் கூறவும் அளவிடவும் முடிகிறது.

'விரல்' என்ற சொல்லுக்கு ஈடாக வேறு சொற்களை நூலோர் கையாள்வர். எடுத்துக் காட்டாக, விரலை *அங்குலம்* என்றும் அதனையே *அம்சம்* (கூறு) என்றும் கூறுவர். எனவே ஒரு தாளத்திற்குப் பன்னிரண்டு விரல் என்பதை பன்னிரண்டு அங்குலம் என்றும் அம்சம் அல்லது, கூறு என்றும் சொல்லலாம். நவதாளப் படிமத்தின் உயரத்தை ஒன்பது தாள உயரம் என்று சொல்வதற்கு மாறாக (12 x 9) = 108 அம்ச உயரம் கொண்டது என்றோ, 108 கூறு உயரம் கொண்டது என்றோ கூறலாம்; எல்லாம் ஓர் அளவினையே குறிக்கும்.

படிமங்களின் உடலை அளவிட்டுச் சொல்வதற்கும் செய்வதற்கும் நவதாள அளவு முறை ஒன்று மட்டுமே உண்டு என்பது இல்லை; பல வகையான தாளமானங்களின் இஃதும் ஒன்று. இனத்தால்-பருவத்தால்-குண பேதத்தால்-கருத்தால்-படிமங்கள் பலவகையின. அவ்வற்றுக்கு ஏற்றவாறு பல்வேறு தாளமானங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஆண் படிமங்கள், பெண் படிமங்கள், குழந்தைப் படிமங்கள், வாமனப் படிமங்கள், குள்ளப் படிமங்கள் என பலவகைத் தோற்றங்களும், மெய்ஞ்ஞான தத்துவக் கருத்துகளைச் சித்திரிக்கும் கற்பனைப் படிமங்களும் உள. கடவுளின் வடிவங்களைப் *படிமம்* என்றும், அடியவர் உருவங்களைத் *திருமேனி* என்றும் பண்டைச் சிற்பிகள் கூறுவர்.

நவ தாளமானத்தை நடுவாகக் கொண்டு அதற்குப் பெரிதான பத்துத் தாளமும், நவ தாளத்துக்குச் சிறிதான எட்டுத் தாளமும், மிக முக்கியமான மூன்று தாள வகைகளாகும். மேலும் ஏழு தாளம், ஆறு தாளம், ஐந்து தாளம், நான்கு தாளம் ஆகிய நான்கு வகைகளும் உள. அதுமட்டுமின்றி ஒரு தாளம், இரண்டு தாளம், மூன்று தாளம் என்று மேலும் மூன்று வகையும் உண்டு. மொத்தத்தில் தாள வகை பத்து.

5ஏழு தாள உயரம் கொண்ட படிமத்தை வாமனம் என்றும், எட்டுத்தாள உயரம் கொண்ட படிமத்தை *மானுடம்* என்றும், ஒன்பது தாள உயரம் கொண்ட படிமத்தைத் *தெய்விகம்* என்றும் நூல்கள் சறப்பித்துக் கூறும், குழந்தை உருவங்கள் ஐந்து தாள அளவினதாகும்; குமரப் பருவத்தை உணர்த்தும் படிமங்கள் ஆறு தாள அளவினதாகும். இவை தாள வகையினைச் சார்ந்த பொது இலக்கணம் ஆகும். இப் பாகுபாடு வழிபடு படிம வகையினையே சேரும்.

வயதையே அடிப்படையாகக் கொண்டு சிற்ப வடிவங்களை இயற்றுவதற்குரிய பாகுபாடுகளை வேறிடத்திற் காணலாம்.

நவ தாளத்துக்கு மேம்பட்ட பத்துத் தாள அளவினை தத்துவ அடிப்படையில் எழுந்த மேலான தெய்விக வடிவங்களையும், மேலும் தெய்வத்தை நிகர்த்த சமயப் பெருந்தலைவர் தம் வடிவங்களையும் இயற்றத் தகுந்ததென நூல்கள் பொது விதியாக வகுத்துள்ளன.

தாள வகைக்கு வித்தான நவதாள அளவுகளை இலக்கண நூல் மரபுப்படி இனிக் காண்போம்.

[6]நவதாளம் (12 x 9) = 108 விரல்

**உயரக்கண்க்கு**

| | விரல்-யவை |
|---|---|
| தலை உச்சி முதல் முடி இறுதி வரை (உஷ்ணீசம் முதல் கேசாந்தம் வரை) | 3'-0" |
| முகம் | 12'-0" |
| கழுத்து | 3'-0" |
| மார்பு | 12'-0" |
| கொப்பூழ் | 12'-0" |
| குய்யம் | 12'-0" |
| தொடை | 24'-0" |
| முழங்கால் | 3'-0" |
| கெண்டைக்கால் | 24'-0" |
| தாள் | 3'-0" |
| | *108'-0"* |



நவதாள உயர அளவுகள்

குறி நீளம் 4'-0"

விரை அகலம் 2'-0"

விரைப்பை தொங்கு உயரம் 4'-0"

### கைகளின் நீள அளவு

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 24'-0" |
| முழங்கை | 2'-0" |
| முன்கை நீளம் | 18'-0" |
| கைத்தலம் | 12'-0" |
| மொத்த நீளம் | *56'-0"* |

### அகல அளவுகள்

| | |
|---|---|
| முகத்தின் அகலம் | 10'-0" |
| கழுத்தின் அகலம் | 8'-0" |
| தோளின் அகலம் | 36'-0" |
| மார்பின் அகலம் | 20'-0" |
| சரோணி (நாபி மட்டம்) | 16'-0" |
| இடுப்பு அகலம் | 18'-0" |
| அடித்தொடை அகலம் | 12'-0" |
| நடுத்தொடை அகலம் | 9'-0" |
| கீழ்த்தொடை அகலம் | 8'-0" |
| முழங்கால் அகலம் | 7'-0" |
| முன்காற் பகுதி அகலம் | 6'-0" |
| முன்கால் நடு அகலம் | 7'-0" |
| பரடு அகலம் | 4'-0" |
| பாத முன் அகலம் | 6'-0" |
| பாத நடு அகலம் | 5'-0" |
| பாதத்தின் நீளம் | 16'-0" |

## உறுப்புகளின் கலைத் தோற்றம்

சிற்பக்கலைத் துறையில் இயற்றப்படும் படிமங்கள் மனித உடல் அமைப்பைச் சார்ந்திருப்பினும் மனித உடலின் நேர்பிரதியாக-படியாக-எப்பொழுதும் வடிக்கப்படுவதில்லை. மாறாக, மனித வடிவத்தின் ஒவ்வொரு உறுப்புகளும் எந்தெந்த இயற்கை வடிவங்களை நினைவுபடுத்துகின்றனவோ அப் பொருள்களின் சாயலாக அவ்வுறுப்புகளைச் சுவைபட வடித்தலே நமது சிற்பக்கலை இயல்பாகும்.

உவமைப் பொருட்களின் பொதுத் தோற்றத்தை. வடிக்காத ஓவியம் போல் உணர்ந்து அதனை உருவத்தில் அமைத்துக் காட்டுவது சிற்பியின் கைத்திறமையைப் பொறுத்தது ஆகும். உவமைப் பொருளை பாவனையாகத்தான் கொள்ள வேண்டும். அதன் எல்லாக் கூறுகளும் உவமேயப் பொருளில் அமைய வேண்டுமென்பதில்லை.

எனவே, உறுப்புகளின் சாயல்களையும் அதனைப் பெற்றிடக் கைக்கொண்ட அளவுகளையும் இனிக் காண்போம்.

### முகம்

முக உயரத்தை மூன்று பாகம் செய்து முடி முதல் (கேசாந்தம்) கண் மட்டம் வரை 4'-0" அதிலிருந்து மூக்கின் புடைப்பு வரை 4'-0" மேலும் அதிலிருந்து மோவாய் வரை 4'-0".

முகம் ஒரு தாள நீளமும் அதே அளவு அகலமும் பொதுவாக இருத்தல் வேண்டும். ஆனால் முகம் 'வ' வடிவம், 'மாங்காய் வடிவம்' 'கோழி முட்டை வடிவம்'. 'எள்ளின் வடிவம்' எனப் பல வடிவங்களில் அமைக்கப்படும்.



'வ' வடிவ முகம்



மாங்காய் வடிவ முகம்



முட்டை வடிவ முகம்



எள் வடிவ முகம் மலரும் விழியும்

முகத்தின் அகல அளவானது முகத்தின் உயர அளவிலிருந்து ஒன்றரை விரல் குறையின் அம்முகம் 'வ' வடிவத்தைப் பெறும்: இரண்டு விரல் குறையின் 'மாங்காய்' வடிவத்தினை ஒக்கும்: இரண்டரை விரல் குறையின் 'முட்டை வடிவத்தினைப் பெறும்: மூன்று விரல் குறையின் "எள்ளின் வடிவத்தை" ஒக்கும். எள்ளின் வடிவமே பெண் முகங்களுக்கு பொருத்தமுடையது என நூல்கள் செப்புகின்றன. முட்டை வடிவமும் பொருந்தும்: மற்றவை ஆண் வடிவங்களுக்கேயாகும். கபாலத்தைக் குடை போன்று அமைத்தல் மரபு.

| | |
|---|---|
| நெற்றியின் அகலம் | 8'-0" |
| உயரம் | 4'-0" |

அரைச் சந்திரன் தோற்றமுடையதாய் நெற்றியை அமைத்தல் வேண்டும். கேசாந்தம் இரண்டாம் பிறைச் சந்திரனை ஒத்திருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| மூக்கின் நீளம் | 4'-0" |
| மூக்கின் அகலம் | 2'-0" |
| மூக்கின் மூலம் | 1'-0" |
| மூக்கின் களத்தி8 | 2'-0" |

மூக்கின் நுனி எள்ளுப்பூவை ஒத்திருத்தல் வேண்டும். மூக்கின் பக்கப் புடைப்புகள் (மூக்குப்புடை) சுழித்து அவரை விதையின் சாயலை ஒத்ததாகவும் இருத்தல் வேண்டும்.

## புருவம்

| | |
|---|---|
| புருவத்தின் நீளம் | 4'-0" |
| புருவத்தின் அகலம் | 0'-1" |
| புருவத்தின் இடைவெளி | 1'-0" |

வெறுப்பு, சலிப்பு, கோபம், வியப்பு ஆகிய பாவங்களை உணர்த்தும் போது புருவத்தின் நடுவிடம் வளைந்து காணப்படும். உற்று நோக்குதல், அருவருப்பு ஆகிய பாவங்களை உணர்த்தும் நேரத்தில் புருவத்தின் அடிப்பகுதி வளைவு பெறும். சாந்த பாவனையில் புருவம் 'நாணேற்றிய வில் போல' அமையும்.

## கண்கள்

| | |
|---|---|
| கண்ணின் நீளம் | 2'-0" |
| கண்ணின் அகலம் | 1'-0" |



கயலும் விழியும்





கயலும் விழியும்

கண்ணின் நீளத்தில் மூன்றில் ஒரு பங்கு கருவிழி மண்டலம்.

கருவிழியில் மூன்றில் ஒரு பங்கு கண் ஒளி மண்டலம்.

கண்கள் கயல்வடிவாகவும், தாமரை இதழ் வடிவாகவும், அல்லி மலர், குவளை மலர் போன்றும் பொதுவாக அமைதல் வேண்டும். கடைக்கண் செவ்வரி படர்ந்தும், விழி மண்டலம் கருத்தும், எஞ்சிய இடம் வெண்மையாகவும் அமைதல் வேண்டும்.

காது

| | |
|---|---|
| காதின் நீளம் | 4'-0" |
| அகலம் | 1'-0" |

வாய்

| | |
|---|---|
| மேல் உதட்டின் நீளம் | 2'-0" |
| அகலம் | 0'-4" |
| இருபக்கக் கடைவாய் நீளம் | 1'-0" |

உதடுகள் கோவைப் பழத்தைப் போல சிவந்திருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| கழுத்தின் அகலம் | 8'-0" |

கழுத்து, சங்கு போன்று திரண்டும், இரு ரேகைகளை உடையதாகவும் அமைதல் வேண்டும்.

தோளும் உடலும்

| | |
|---|---|
| தோளின் அகலம் | 36'-0" |
| கக்க அகலம் | 20'-0" |
| புஜ அகலம் | 8'-0" |

இது கழுத்தின் அகலத்திற்குச் சமமாகும். திரண்டு சதைப் பற்றோடு அமைதல் வேண்டும்.

புஜமானது அடியில் பருத்து நடுவே ஆறு விரல் அகலமும் மணிக்கட்டில் மூன்று விரல் அகலமும் அடிபருத்து முறையே கரைந்து நுனி சிறுத்திருத்தல் வேண்டும். இது யானைத் துதிக் கையின் தோற்றத்தை நினைவூட்டும். பெண்களுடைய புஜம் மூங்கில் எனத் தோன்றும்.



மூங்கில் அனைய கை

மார்பும், வயிறும்

| | |
|---|---|
| வயிறு அகலம் | 14'-0" |
| முலைக்கண்களின் இடைவெளி | 12'-0" |
| நாபியின் அகலம் | 1'-0" |

முலைக்கண்கள், நாபி ஆகியவை அமையப் பெற்ற ஆண் உடலின் புறத்தோற்றம் காளையின் முகத் தோற்றத்தை ஒத்ததாக அமையும். பெண் உருவமாயின் வஜ்ஜிரத்தின் தோற்றமும், உடுக்கையின் தோற்றமும் அமையப் பெறுதல் வேண்டும்.



காளை முகத்தனைய ஆண் உடல்

**கைத்தலமும் விரல்களும்**

| | |
|---|---|
| கைத்தலத்தின் நீளம் | 12'-0'' |
| அங்கை நீளம் | 6'-0'' |
| நடுவிரல் நீளம் | 6'-0'' |
| அங்கை அகலம் | 6'-0'' |

சுட்டுவிரலின் நீளம் நடுவிரலின் நீளத்தில் பத்தில் ஒன்பது பங்கும்' அணிவிரல், சுட்டு விரல் நீளத்திற்குச் சமமாகவும் அமைதல் வேண்டும். அணி விரலின் நீளத்தில் பத்தில் ஒன்பது பங்கு சிறுவிரலும் பெருவிரலும் நீண்டிருக்கும்.

| | |
|---|---|
| பெருவிரல் அகலம் | 1'-4'' |

மற்ற விரல்கள் இவ்வளவில் மூன்றில் இரண்டு பங்கு அகலமுடையவை. ஒவ்வொரு விரலின்



வச்சிர இடை

மேற்கணுவின் பாதியிலிருந்து நகங்களை அமைத்தல் வேண்டும். அவை சந்திர வாட்டமுடையதாய் அமைதல் வேண்டும்.



துடியிடை

| | |
|---|---|
| பெருவிரல் | 3'-0'' |
| அடுத்த விரல் | 3'-0'' |

மற்றவை ஒன்றுக்கொன்று சிறுத்திருத்தல் வேண்டும்.

பாதத்தில் முதுகுப்பகுதி (புறங்கால்) ஆமையின் முதுகை ஒத்திருத்தல் வேண்டும். காற் பெருவிரல்கள் மாவடுவின் வடிவை ஒக்கும். பிற விரல்கள் அட்டையின் உடல் போல திரண்டு இருத்தல் வேண்டும். பாதங்களை சமதளத்தில் படிந்திருக்குமாறு செய்தல் வேண்டும். நகங்கள் கிளிஞ்சலின் சாயலாகும்.

சுற்றளவு

தலை, கழுத்து, புஜம், கை, தொடை, கால் ஆகிய உறுப்புகளின் சுற்றளவு தத்தம் அகலத்தைப் போல் மும்மடங்கிருத்தல் வேண்டும். விரல்களும் அங்ஙனமே.

கக்க மட்டத்தில் உடலின் சுற்று ஐந்து தாளம் இரண்டு விரல் ஆகும். உடல் சுற்று 46`-2`` நாபி மட்டத்தில் சுற்றளவு 42`-0``; இடைச்சுற்று 34`-0``.

மேற்கண்ட அளவுகள் பெரும்பாலும் ஆண் வடிவத்திற்கே பொருத்தமுடையனவாகும். இவ் அளவுகளை பெண் வடிவத்திற்கும் ஒரு சில மாற்றங்களோடு உபயோகிக்கலாம். பெண்களுக்கு முகமானது ஒடுங்கி முட்டையைப் போன்றோ, எள்ளைப் போன்றோ அமைய வேண்டுமென்பதை முன்பே கண்டோம். மேலும் புஜ அகலம் ஆண்களுக்குப் போலல்லாமல் பெண்களுக்குச் சரிந்தும், சற்று ஒடுங்கியும் இருத்தல் இயல்பு. எனவே,

| | | |
|---|---|---|
| தோள் அகலம் | - | 30`-0`` |
| கக்க அகலம் | - | 18`-0`` |
| கொங்கை அகலம் | - | 8-4`` |
| கொங்கை இடைவெளி | - | 1-0`` |
| நடுவயிறு (இடை) அகலம் | - | 10-0`` |
| இடுப்பு அகலம் | - | 22-0`` |

மற்ற அளவுகளை வடிவத்திற்குப் பொருந்துமாறு அமைத்துக் கொள்ள வேண்டும். கைகள் பனங்கிழங்கைப் போன்றும், தொடையும் காலும் யானைத் துதிக்கையைப் போன்றும், வயிறு ஆலிலை போல் புடைப்பின்றி மிதமாகவும் அமைதல் வேண்டும். கொங்கைகள் பந்துபோல் வட்டமாகவும், கோலத்திற்கும் வயதிற்கும் ஏற்ற பருமனும் எடுப்பும் கொண்டதாகவும் அமைதல் வேண்டும்.

நாபி வலம் சுழித்ததாகவும், அதன் சுற்றுமேடு மலர்ந்த தாமரையை ஒத்ததாகவும் அமைதல் வேண்டும்.

இவ் இலக்கணக் குறிப்புகளும், விளக்கங்களும் நவதாள அளவில் இயற்றப்படும் ஆண், பெண் வடிவங்களுக்கு பொதுப்படையான அளவுகளேயாகும். மிகவும் சிறப்பான, விரிவான, மிக நுட்பமான அளவுகளை அடுத்து வரும் தாள இலக்கணங்களில் காணலாம்.

படிமத்தின் ஒவ்வொரு உறுப்பும் கலை உள்ளத்தின் பிரதிபலிப்பாகவும், தோற்றமாகவும் இருப்பினும் அஃது ஆத்மாவிலிருந்து-ஆத்ம ரசனையிலிருந்து-வெளிப்படுவதால், படிமத்தைக் காணும் ஆத்மாவையும் பற்றிக் கொள்கிறது. இத்தன்மை படிமங்களுக்கு இருப்பதால் வழிபடு வடிவங்களாக அவை மதிக்கப்படுகின்றன.



பனங்கிழங்கை யொத்த கை

எனவே, படிமங்களை அளவிற் குறைந்தனவாகவோ மிகுந்தனவாகவோ, வடிவில் நலிந்தனவாகவோ அமைத்தல் கூடாது என்று விதிப்பது மட்டுமல்லாமல் இலக்கணத்தை உணர்ந்து செய்வதால் நன்மைகள் விளையும் என்றும், இலக்கணத்திற்குப் புறம்பாக இயற்றப்படும் படிமங்களால் தீமைகள் விளையும் என்றும் நூல்கள் பேசுகின்றன. ஒரு சிலவற்றை இங்கே காண்போம்.

குடைபோன்று அமையப் பெற்ற தலையினை உடைய படிமம் தானியப் பெருக்கத்தையும், செல்வப் பெருக்கத்தையும் நல்கும். அழகான புருவத்தையும், நெற்றியையும் உடைய படிமம்

நிலையான செல்வத்தைக் கொடுக்கும். பொதுவில் நன்கு உருப்பெற்ற படிமம் குடிமக்கட்கு நற்சுகத்தை அளிக்கும் சங்கு போன்ற கழுத்தையுடைய படிமம் எப்போதும் காரிய வெற்றியைத்தரும். சிங்கம் போன்ற உடலினைப் பெற்றிட்ட படிமம் பலப் பெருக்கத்தையும் செழிப்பினையும் வழங்கும். யானைத் துதிக்கை போன்று அமைந்துள்ள புயங்களையுடைய படிமம் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்ற வல்லதாம். அழகிய வயிற்றையுடைய படிமம் பயிர் வளத்தையும் நீடித்த செழிப்பையும் உண்டாக்கும். வாழைத்தண்டு போன்ற தொடைகளையுடைய படிமம் மேழிச் செல்வத்தை மிகுவிக்கும். நல்ல கணுக் காலையுடைய படிமம் கிராமங்களைச் செழிக்கச் செய்யும். அழகிய கால்களையுடைய படிமம், நல்லொழுக்கம், நற்கல்வி முதலியவற்றை நல்கும்.

படிமத்திற்குக் கூறிய நீள, அகல அளவுகள் குறைபடின் நாட்டில் பஞ்சமும், பிளவுகளும் ஏற்படும். தேகமில்லாத படிமமாயின் கூனல் முதுகுடையவனாகவும், மூக்கில்லா படிமமாயின் நோய் வாய்ப்பட்டவனாகவும் வழிபடுவோன் ஆவான்.

வழிபடு படிமம் இடக்கண் பார்வையுடன் இருப்பின் கால் நடைகள் அழிந்துபடும். மேல் நோக்கிய பார்வையுடன் இருப்பின் செல்வம் நசிக்கும். சிறுத்த, வட்டமாக, சுருங்கிய, குறைந்த, கீழ்நோக்கிய பார்வையினையுடைய படிமங்களை நீக்கிடல் வேண்டும். தாழ்ந்த வயிற்றையுடைய படிமம் பயிர்களை நசிக்கச் செய்யும். படிமம் குறைபாடுடைய தொடையுடன் இருப்பின் பெண்களுக்கு கர்ப்பச் சிதைவை ஏற்படுத்தும். முக்கு, கண், விரல் இந்நான்கும் நீண்டு இருப்பதும், தலை, காது, மூக்கு சிறுத்து இருப்பதும், மூட்டு, நகம் வயிறு பெருத்திருப்பதும், கைகள், பாதங்கள் வளைந்திருப்பதும், கழுத்து, வாய், தோள் குறைந்திருப்பதும் மாபெரும் குற்றங்களாகும்.

இங்ஙனம் குணக்கேடுகளை நீக்கி சிறந்த எழிலார்ந்த படிமங்களைச் சிற்பிகள் இயற்றுதல் வேண்டும். அவற்றையே மக்கள் வணங்குதலும் வேண்டும்.

### தாள வகைகள்

ஒரு தாளம் பன்னிரண்டு அம்சமென்றும் எனவே நவதாளம் 108 அம்சங்களைக் கொண்டதென்றும் இவ்வளவினைக் கொண்டு ஒரு படிமத்தின் பல்வேறு உறுப்புகளை அளவிட்டுச் செய்வதென்றும் முன்னர் கண்டோம். இவ் அளவினை நடு அளவாகக் கொண்டது மத்திம நவதாளமென்று கூறப்படுகிறது. இந்த 108 அம்சத்தோடு நான்கு அம்சம் சேர்த்து வந்த 112 அம்ச நவதாள அளவை உத்தம நவதாளம் என்றும், நான்கு அம்சங்கள் குறைத்துக் கொண்டு பெற்ற 104 அம்ச நவதாள அளவினை அதம நவதாளம் என்றும் கொள்ள வேண்டும் என்று நூல்கள் கூறும். இங்ஙனம் நடு (அல்லது) இடை அளவோடு சேர்க்கப்படும் நான்கு அம்சத்தை பிராணாம்சம் என்று நூல்கள் கூறும்.

தாளவகை ஒன்று முதல் பத்துவரை பத்துவிதமாக உள்ளன. அவை முறையே ஏகதாளம், துவிதாளம், திரிதாளம், சதுஷ்தாளம், பஞ்சதாளம், ஷட்தாளம், சப்ததாளம், அஷ்டதாளம், நவதாளம், தசதாளம் என்று சொல்லப்படுமல்லவா?

தாளம் பன்னிரண்டு விரல்களைக் கொண்டது என்ற கணக்கின்படி

| | | |
|---|---|---|
| தசதாளம் | - | 10 x 12 = 120 விரல் |
| நவதாளம் | - | 9 x 12 = 108 விரல் |
| அஷ்டதாளம் | - | 8 x 12 = 96 விரல் |
| சப்ததாளம் | - | 7 x 12 = 84 விரல் |
| ஷட்தாளம் | - | 6 x 12 = 72 விரல் |
| பஞ்சதாளம் | - | 5 x 12 = 60 விரல் |
| சதுஷ்தாளம் | - | 4 x 12 = 48 விரல் |

முன்பு நவதாளத்திற்குக் கூறியபடி ஒவ்வொரு தாளத்திற்கும் உரிய அம்சத்தோடு நான்கு சேர்த்து அதனை உத்தம அளவென்றும், நான்கு குறைத்து அதனை அதம அளவென்றும், உள்ள அளவை மத்திம அளவென்றும் கொள்ள வேண்டும். இங்ஙனம் ஒவ்வொரு தாளத்திற்கும் மும்மூன்று பெரிய, சிறிய, நடு அளவுகள் கிடைக்கின்றன. உதாரணமாக, தசதாளத்தின் 120 அம்சத்தோடு நான்கு கூடிய 124 அம்சங் கொண்ட தசதாளத்தை உத்தம தசதாளமென்றும், நான்கு அம்சம் குறைவுபட்டு 116 அம்சம் கொண்ட தசதாளத்தை அதம தசதாளமென்றும், 120 அம்சம் கொண்ட தசதாளத்தை மத்திம தசதாளமென்றும் சொல்லுதல் வேண்டும். மேலும், அங்ஙனமே 60 அம்சம் கொண்ட பஞ்சதாளத்தை மத்திம பஞ்சதாளமென்றும், அத்துடன் நான்கு அதிகரித்து 64 அம்ச கொண்ட பஞ்சதாளத்தை உத்தம பஞ்சதாளமென்றும், நான்கு அம்சம் குறைத்து 56 அம்சம் கொண்ட பஞ்சதாளத்தை அதம பஞ்சதாளமென்றும் கொள்ளுதல் வேண்டும்.

பிரம்மா, விஷ்ணு, மகேசுவரன் ஆகிய மேலான தெய்வங்களின் படிமங்களை உத்தம தசாதாள அளவினால் இயற்றுதல் வேண்டும்.

எனவும் அவர்தம் சக்திகளை-தேவிகளை-மத்திம தசதாள அளவினால் செய்தல் வேண்டும் எனவும் சாத்திரங்கள் பகிர்கின்றன. இங்ஙனம் ஒவ்வொரு தாளமும் வெவ்வேறு நிலைகளிலுள்ள தத்துவப் படிமங்களை இயற்றுவதில் செயல்படுகின்றன.

1. அன்றாட உலகியல் வழக்கில் இவ் அளவு `கைச்சாண்` என்று சொல்லப்படுகிறது. இது குறித்தே மனித உடலின் நீளம் `எண் சாண்` என்று வழங்கி வருகிறது. இது தோராயமான அளவேயாகும். உடல் உறுப்புகளுக்குக் கொண்ட விகிதாச்சார அளவில் குறிப்பிடும் கைத்தல நீளமும், முக நீளமும், சமமெனக் கொள்ளப் பட்டிருக்கிறது.

2. அரை: (குய்யம்) தொடைகள் சந்திக்கும் இடம், உடல் நீளத்தில் இது அரைப் பங்காகும் (41/2 தாளம்). இது குய்யம் என்றும் குஹ்யம் என்றும் சொல்லப்படும்.

3. கால்: உடல் நீளத்தில் கால் பங்காக இருப்பதினாலேயே இவ்வுறுப்பு `கால்' என்று கூறப்படுகிறது (21/4 தாளம்).

4. யவை என்பது ஒருவகைத் தானியம். வாற்கோதுமை என்றும், பார்லி அரிசி என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். ஆனால் இது தமிழகத்து நெல்லின் நீள அளவுக்குச் சமம். எனவே `யவை' என்பதை `நெல்' என்று தமிழகச் சிற்ப நூல்கள் கூறும்.

5. சுக்ர நீதி.

6. மானசாரம், சாரஸ்வதீயம், சில்பரத்தினம்.

7. இப்பொழுதிருக்கும் தமிழ் `வ' காரம் கி.பி. ஐந்தாவது நூற்றாண்டில் கீழ்க்கண்ட வடிவத்திலிருந்தது என்பதைக் கல்வெட்டுகளில் காணலாம். சிற்ப நூல்கள் மிகத் தொன்மையானதால் இவ்வுவமையும் இவ் விளக்கமும் இங்குப் பொருந்தும்.



8. களத்தி = புடைப்பு, பிதுக்கம், எடுப்பு.

# 24

# தாள வகைகள்



## 1. தச தாளப் படிமங்கள்

| உத்தம தச தாளம் | மத்திம தச தாளம் | அதம தச தாளம் |
|---|---|---|
| பிரம்மன், விஷ்ணு, மகேசுவரன், அர்த்தநாரீச்வரர் தத்தாத்திரேயர், புத்தன், அருகன் (ஆர்ஹதர்) வாசுதேவன், அடியார் படிமங்கள் (சாயுஜ்யம்) | உமை, லஷ்மி, சரஸ்வதி, துர்க்கை, பூதேவி, மூதேவி, சப்தமாதர் அடியார் படிமங்கள் (சாரூப்யம்) இராமன் | இந்திரன், அக்னி, வருணன், அசுவினிதேவர், ஸ்கந்தன், வீரபத்திரன், க்ஷேத்திர பாலகர், ஈசானன், சாஸ்தா, சூரியன், சந்திரன், யமன், வாயு, சண்டிகேசுவரர், துவாதச ஆதித்தியர், ஏகாதச ருத்திரர், மகரிஷிகள், பிருகு, மார்க்கண்டேயர், ஆர்யன், லக்ஷ்மணன், அடியார் படிமங்கள் (சாமீப்யம்) |

## 2. நவதாளப் படிமங்கள்

| உத்தம நவதாளம் | மத்திம நவதாளம் | அதம நவதாளம் |
|---|---|---|
| தேவர்களும் அவர்தம் தேவியர்களும், அஷ்ட மூர்த்திகள், அஷ்ட வசுக்கள், லோகபாலர்கள், நிருதி, மகாமோடி, குபேரன், மன்மதன், நாகேந்திரன், கருடன், அடியார் படிமங்கள் (சாலோக்யம்) வசிஷ்டன், விசுவாமித்திரன், பார்கவன், குரு, சுக்கிரன், சனி, ராகு, செவ்வாய். | அஸ்திர மூர்த்திகள் யக்ஷர்கள், அப்ஸரசுகள், மருத்கணங்கள், வித்யாதரகணங்கள். | அசுரர்கள், சித்தர்கள், கந்தருவர்கள், பித்ருக்கள். |


240-1—28a

**3. அஷ்ட தாளப் படிமங்கள்**

மனிதப் படிமங்கள், காஸ்யபர், பிருகு, ஆழ்வார்கள்.

**4. சப்த தாளப் படிமங்கள்**

மனித வடிவங்கள், ரிஷிகள்.

மத்திம சப்ததாளம் அகஸ்தியர், அனுமான்

**5. ஷட் தாளப் படிமங்கள்**

குள்ளர்கள்

**6. பஞ்ச தாளப் படிமங்கள்**

| உத்தம பஞ்சதாளம் | மத்திம பஞ்சதாளம் | அதம பஞ்சதாளம் |
|---|---|---|
| விநாயகர்<br>பாலஸ்கந்தர்<br>வாமனமூர்த்தி | பூதங்கள் | பாலகிருஷ்ணன் |

**7. சதுஸ் தாளப் படிமங்கள்**

பாலர், வானரங்கள்

**8. திரி தாளப் படிமங்கள்**

கின்னரர், கிம்புருடர்

**9. துவி தாளப் படிமங்கள்**

மச்சாவதார மூர்த்தம்

**10. ஏக தாளப் படிமங்கள்**

ஆமை, முட்டை
கூர்மாவதாரம், கபந்தங்கள்
(தலையில்லா முண்டங்கள்)

இதை விடுத்து ஒரு சில நூல்கள் நவார்த்த தாளம் என்ற ஒரு வகையினை தாள இலக்கணத்தில் சேர்த்துள்ளன. சீதை, சத்யபாமா, ருக்மினி ஆகியோரின் படிமங்களை இத்தாள மானத்தில் இயற்றுதல் வேண்டுமென்பது அவற்றினுடைய கொள்கையாகும். இத்தாள மானத்தில் இடம்பெறும் அம்சங்கள் $12 \times 9\frac{1}{2} = 114$ ஆகும். இவ் அளவு நவ தாளத்திற்கும் அதம தச தாளத்திற்கும் இடையில் அமைகிறது.

## உத்தம தசதாளம் (பொதுமானம்)

தனிப்பெருந் தெய்வங்களான பிரமன், விஷ்ணு, மகேசுவரன் ஆகியோரது படிமங்களையும் பெரும் சமயங்களைப் படைத்தளித்த தலைவர்களான புத்தன், அருகன் (ஆர்ஹதர்) ஆகியோரது படிமங்களையும், சாயுஜ்ய நிலை அடைந்த (இறைவனோடு இரண்டறக் கலந்த) அடியவர்களின் படிமங்களையும், உத்தம தசதாள அளவில் இயற்றுதல் வேண்டும். உரிய படிம இலக்கணங்களும் அளவுகளும் இங்கு தரப்படுகின்றன.

## சகளத் திருமேனியின் பொது இலக்கணம்

படிமங்கள் தெய்வக்களையோடு விளங்க நான்கு சிறந்த அம்சங்களைச் சிற்பிகள் கருத்திற் கொண்டு கடவுட் படிமங்களை இயற்றுதல் வேண்டும். அவை முறையே: உடல், முகம், கண், மூக்கு ஆகிய நான்கினைப் பற்றியதாகும்.

**1. உடல்**

அவயவங்கள் உருண்டு திரண்டு, நீண்டும், அகன்றும், முழுமையான வளர்ச்சியுடையதாயும், சதைப்பற்றுடையதாயும் அமைதல் வேண்டும்.

**2. முகம்**

சிருங்கார ரசமும், சாந்த பாவமும், அழகும், முழுமையும் கொண்டு மலர்ச்சியுடையதாய் முகம் விளங்க வேண்டும்.

**3. கண்**

அகன்று, நீண்டு, மலர் போன்று, கண்கள் அமைதல் வேண்டும்.

**4. மூக்கு**

நேரியதாயும் (நேர்த்தியாயும்) எடுப்பாகவும் மூக்கு அமைதல் வேண்டும்.

இந் நான்கு கூறுகளும் ஒரு படிமத்தில் செம்மையாக அமையின் அது வியத்தகு அழகுப் படிமமாக விளங்கும்.

தலையையும், உடலையும் நேராக நிமிர்த்தி கைகளைக் கீழ்நோக்கித் தொங்கவிட்டு, உடலோடு இயல்பாக ஒட்டியமைத்து, பாதங்களை சமதளத்தில் சமமாகப் படிய ஊன்றி, ஒருபாற் கோடா நிலையில் நிற்கும் படிமம் ஒன்றைக் கருத்திற் கொண்டு ஒவ்வொரு உறுப்பின் உயர அளவுகளையும், கன அளவுகளையும் சுற்றளவுகளையும் சிற்பக் கலை நூல் புலப்படுத்தும். இவ் வழியே படிம அளவுகள் இங்குக் கூறப்படுகின்றன.

படிமம் ஒன்றின் உயர விகித அளவுகள் உயரக் கணக்கு என்று சொல்லப்படும்.

படிமத்திற்குக் கைக்கொள்ளப்பட்ட உயரத்தை 124 சம கூறுகளாகப் பிரித்துக் கிடைத்த ஒவ்வொரு கூறினையும் ஒரு தேகாங்குலம் என்று கொள்ள வேண்டுமல்லவா? இஃது ஒரு சார்பு அளவை. ஒரு தேகாங்குலத்தை எட்டு சம கூறுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவையும் ஒரு யவை என்று கொள்ள வேண்டும். இவ் அளவுகள் விகித அளவுகள் ஆனாலும். தேகாங்குலத்தைப் பொதுவாக விரல் என்றும். அதில் எட்டில் ஒன்றாகிய சிறு அளவை யவை என்றும் சொல்வது மரபாயிற்று.

ஒரு குறிப்பிட்ட அளவை 124 கூறுகளாகப் பிரிப்பதனால் ஏற்படும் அளவை விகிதாச்சார அளவு என்று குறிப்பிட்டோம். எனவே. இஃது ஒரு நிலையான அளவு அல்ல என்பது புலப்படும். படிமங்களின் உயரங்கள் வேறுபடும் போது விரல் அளவும். யவை அளவும் மாறுபடும்: இல்லையா?

## உயரக் கணக்கு

| உறுப்புகள் | விரல்-யவை | |
|---|---|---|
| தலை (முடியுடன்) | | |
| முடி முதல் கண்மட்டம் வரை | 4'-3'' | |
| கண் மட்டமிருந்து மூக்குப்புடை வரை | 4'-3'' | முகம் 13'-1'' |
| மூக்குப்புடையிலிருந்து மோவாய் வரை | 4'-3'' | |
| மோவாயிலிருந்து கழுத்து மட்டம் வரை | 4'-3'' | |
| அடிக் கழுத்திலிருந்து மார்பு வரை | 13'-3'' | |
| மார்பிலிருந்து நாபி வரை | 13'-3'' | |
| நாபியிலிருந்து குய்யம் வரை | 13'-3'' | |
| அரையிலிருந்து தொடை நீளம் | 27'-0'' | |
| முழங்கால் முட்டி | 4'-0'' | |
| கெண்டைக்கால் நீளம் | 27'-0'' | |
| பாதம் (தாள்) | 4'-0'' | |
| | *124'-0''* | |

இனி அளவைக் குறிக்கும் இலக்கங்கள் மீது விரல் அளவைக் குறிக்க (') கோடிட்டும் யவை அளவை குறிக்க ('') கோடிட்டும் காட்டப்படும். படங்களில் அங்ஙனம் அளவுகள் கோடிட்டுக் காட்டப்பட வில்லையாயினும் அவ் விடங்களில் விரல்-யவை என்றே கொள்க.




உத்தம தச தாள உயர அளவு

## நுட்ப அளவுகள்

### தலையும் கழுத்தும்

உச்சந்தலையிலிருந்து மோவாய் வரை கொண்ட நீளம் (அல்லது) உயரமே தலையின் அளவாகும்.

| | |
|---|---|
| இதனளவு | 17'-4" |
| இதில் கபாலம் | 4'-3" |
| முகம் | 13'-1" |

கபாலம் என்ற உறுப்பு கேசாந்தமிருந்து உச்சந்தலை வரை குடையெனப் புடைத்திருக்கும் பகுதியாகும். இதில் தலை ஓடும், முடியும் அடங்கும்.

| | |
|---|---|
| முடியுடைத் தலை உயரமாகிய | 4'-3" ல் |
| உச்சந்தலை | 1'-3" |
| முடி இறுதி வரை | 3'-0" |

முடியின் எல்லையிலிருந்து மோவாய் வரை உள்ள தலையின் முன்பகுதி, முகம் எனப்படும். இதில் கண், மூக்கு, வாய் ஆகிய உறுப்புகள் அடங்கும்.

| | |
|---|---|
| முக உயரமாகிய | 13'-1" ல் |
| முடி எல்லையிலிருந்து கண் மட்டம் வரை | 4'-3" |
| கண்மட்டமிருந்து மூக்குப்புடை வரை | 4'-3" |
| மூக்குப்புடையிலிருந்து மோவாய் வரை | 4'-3" |

### தலையின் அகல அளவும், சுற்றளவும்

| | |
|---|---|
| தலை உச்சியின் அகலம் | 4'-0" |
| நெற்றியின் அகலம் | 9'-0" |



நுட்ப அளவுகள்

| | |
|---|---|
| முக அகலம்[1] | 12`-4" |
| காது பொருந்துமிடத்தில் முக அகலம்[2] | 13'-0" |
| காதுக்கு மேலிடத்தில் தலையின் சுற்றளவு[3] | 38'-0" |
| முகத்தின் முன்பக்கச் சுற்றளவு[4] | 22`-0" |
| பின்பக்கச் சுற்றளவு | 12'-0" |
| காதுகள் பொருந்துமிடத்தில் காதுகள் அமையும் இடம் 2-0,2-0 | 4'-0" |
| தலை உச்சியிலிருந்து முன்பக்கம் முடி எல்லை வரை நீளம்[5] | 9'-0" |
| பின்பக்க முடி இறுதி எல்லை நீளம் | 10'-0" |
| ஒவ்வொரு பக்கத்திலும் முடி எல்லை | 9'-0" |
| காதுகள் அமைந்துள்ள இடமிருந்து பின்பக்கச் சுற்றளவு[6] | 13'-0" |

## கழுத்து

| | |
|---|---|
| முன்புறத்தில் அடிக்கழுத்து அகலம்[7] | 10'-0" |
| மேற்கழுத்து அகலம்[8] | 9'-0" |
| பின்புறத்தில் அடிக்கழுத்து அகலம் | 10'-0" |
| நடுக்கழுத்து அகலம் | 8'-4" |
| மேற்கழுத்து அகலம் | 8'-0" |

## புருவங்கள்

முகத்திற்குப் பொலிவூட்டும் சிறு உறுப்புகளில் புருவங்கள், கண்கள், மூக்கு, உதடுகள் ஆகியவை முக்கியமானவை. ஒவ்வொன்றும் நுட்பமான அளவும் அமைப்பும் கொண்டவை. இயற்கை மானுட வடிவங்களில் இவ்வுறுப்புகளின் அழகிய தோற்றங்கள் கலைஞன் உள்ளத்தைக் கவர்ந்து நிற்பன. உள்ளத்தில் உணர்வுமயமாக நின்று இன்பமூட்டும் அவற்றை அவற்றின் இயக்கங்களை, பிற இயற்கை வடிவங்களில் கண்டு அச்சாயல்களையே—உவமைகளையே-படிமங்களில் ஏற்றிக் காவியப் படிமங்களாக அழகுற அமைக்கின்றான். இது நமது சிற்பக்கலையின் தனிச் சிறப்பு ஆகும். கண், மூக்கு, உதடு, புருவம் ஆகிய உறுப்புகள் முட்டை போன்று திரண்டு விளங்கும் முகத்தில் ஏறியமைவதால் அம் முகம் தனி அழகும் பொலிவும் பெறுகிறது. கேசாந்தத்திற்கும் கண் நூலுக்கும் இடையே நடுவிடத்தில் புருவரேகை அமையும். புருவ மட்டமும் காதின் மேல் மட்டமும் சமமட்டமாகும்.

| | |
|---|---|
| முடியின் எல்லையிலிருந்து புருவம் அமையும் தூரம் | 2'-1½" |
| புருவங்களின் மொத்த நீளம் | 9'-0" |
| புருவங்களின் இடைவெளி[9] | 0'-2" |
| வளைவோடு புருவ நீளம் | 5'-0" |
| புருவ ரேகையின் அகலம்[10] | 0'-4" |
| புருவம் தனது கோடியில் பெறும் கனம் | 0'-1½" |

புருவம் மூலத்தில் கனத்து, முறையே கரைவாக மெலிந்து பிறைச் சந்திரனை ஒத்திருத்தல் வேண்டும். ஒவ்வொரு புருவமும் மனங்கவர் தோற்றத்துடன் சிறிது வளைந்து வில்லைப் போன்று அமைதலும் வேண்டும். புருவ ரேகை நடுவே கனத்து இருபக்கங்களிலும் முறையே மெலிந்து பிறைச்சந்திரனை ஒத்திருத்தலும் ஒருவகை அமைப்பாகும்.

## கண்கள்

கண்களைக் கயல்விழி என்றும், மலர்விழி என்றும், வேல்விழி என்றும் மருட்சியுடைத்தாயின் மான்விழி என்றும் கவிஞர் வருணிப்பர். கவிஞர் கண்ட காட்சிகளைக் கலைஞனும் கண்டு அவ்வண்ணமே விழிகளை அமைக்கின்றான். கண்கள் கயல் (மீன்) போலும், வேல் போலும்,



அளவும்—அழகும்

அரைச் சந்திரன் போலும் அமைத்தல் வேண்டுமென்பது சிற்ப இலக்கணம். அதனை அப்படி அமைக்க அதிநுட்பமான அளவுகளும் கூறப்படுகின்றன.

| | |
|---|---|
| கண் நீளம் | 2`-2`` |
| கண் அகலம் | 0`-6`` |
| கருவிழியின் அகலம் | 0`-6`` |

இரு பக்கங்களில் உள்ள வெள்ளைப் பகுதியில் தனித்தனியே 0`-6`` வீதம் 1`-4``

| | |
|---|---|
| கடைக் கண்ணின் சிவப்பு மண்டலம்[11] | 0`-1½`` |
| கடைக்கண் அல்லி, தாமரை இதழ்களுக்கொப்ப அமைதல் வேண்டும்[12] | |
| வட்டமான கருவிழியின் விட்டம் | 0`-6`` |
| கண் பார்வை அகலம் | 0`-1`` |
| கண்மணி | 0`-1/8`` |
| கண்ணுக்கும் புருவத்துக்கும் இடைத்தூரம் விழித்திருக்கும் போது | 1`-6`` |
| மேல் இமை அகலம்[13] | 0`-2`` |
| கீழ் இமை அகலம்[14] | 0`-1½`` |
| இமை நீளம் | 2`-2`` |
| இமையில் மொத்த ரோமங்கள் மூடியிருக்கும்போது[15] | 90`-0`` |
| மேல் இமை அகலம்[16] | 1`-4`` |
| கீழ் இமை அகலம் | 0`-4`` |
| இரு கண்களின் இடைவெளி[17] | 2`-2`` |

கண் நூல் மட்டம், கீழ் இமைக் கோட்டில் அமைதல் வேண்டும் என்றும், கண்கள் மூடி இருக்கும்போது இரண்டு இமைகளும் கூடும் இடமே கண் மட்டம் ஆகும் என்றும், இரு கருத்துகள் உள. முன்னையது பின்னையதைக் காட்டிலும் பொருத்தமுடையதாக அனுபவத்தில் தெரிகிறது. (கலைப் படிமங்களில் பாவனைகளுக்கேற்றவாறு கண்களை வெவ்வேறு நிலைகளில் அமைக்கலாம்). கடவுட் படிமங்களின் கண் அமைதியானது அழகிய முறையில் அதி நுட்பமாக அமைக்கப் பெற வேண்டியதொன்றாகும். ஏனெனில், பார்வையானது பலனைத் தருவதாகும்.

வழிபடு கடவுட் படிமங்களின் பார்வை சம பார்வையாகவே இருத்தல் வேண்டும். மேல் நோக்கியதாகவோ, கீழ் நோக்கியதாகவோ, பக்கப் பார்வையுடையதாகவோ அமைத்தல் கூடாது.

கீழ்ப்பார்வையுடைய படிமம் செய்விப்போனுக்குக் கேட்டை உண்டுபண்ணும். மேல் பார்வையுடைது விபத்தைத் தரும். பக்கப் பார்வையுடையது கிராம மக்களுக்கு பலவித கஷ்டங்களை விளைவிக்கும். எனவே வழிபடு படிமங்களின் பார்வை நேரியதாகவும் சமமாகவும் அமைதல் வேண்டும்.

## மூக்கு

முகத்திற்கு எடுப்பான தோற்றத்தைத் தருவது மூக்கு ஆகும். அது பூப்போன்று மென்மையாக இருத்தல் வேண்டுமென நூல்கள் கூறும். மூக்கின் அமைப்பு எள்ளுப்பூவினை ஒத்திருக்க வேண்டும். இது பக்கத்தோற்றத்தில் காணப்படும் அமைப்பாகும். மூக்கின் புடைப்பான பகுதிகள் அவரை விதைகளை ஒத்திருத்தல் வேண்டும். இது சுழிப்புடன் இருப்பின் மூக்கு மனோகரமாகத் தோன்றும். ஆண் வடிவங்களுக்கு உறுதியான மூக்கும், பெண் வடிவங்களுக்கு மென்மையான மூக்கும் பொருத்தமுடையதாகும்.

| | |
|---|---|
| மூக்கு நீளம் | 4`-4`` |
| மூக்குப்புடை அகலம் | 2`-2`` |
| நடுமூக்கின் அகலம் | 1`-1`` |
| அடிமூக்கின் அகலம் | 0`-4½`` |
| மூக்குப்புடைப்பின் அகலம் (உயரமும் 0`-5``) | 0`-5`` |
| மூக்குத் துவாரம் | 0`-7½`` |
| மூக்கின் எடுப்பு | 1`-0`` |
| கோஜியிலிருந்து மூக்கின் களத்தி | 2`-0`` |
| மூக்குப்புடைக்கனம் | 0`-1`` |

(மூக்குத் துவாரங்களைப் பிரிக்கும் சுவர் புஷ்கரம் எனப்படும்).

| | |
|---|---|
| கோஜி நீளம்[12] | 0`-4½`` |
| இதன் அகலம் | 0`-2½`` |
| பதிவு | 0`-1`` |
| நுனி மூக்கு அகலம் | 0`-6`` |
| நுனிமூக்குத் தொங்கல் | 0`-1½`` |

## வாய்–மோவாய்

மேலுதடு விளிம்புடனும் மூன்று வளைவுகளுடனும் அமைதல் வேண்டும். கீழுதடு அரை மதி வடிவில் இருத்தல் வேண்டும். உதடுகள் கோவைப்பழம் போன்று சிவப்பாக அமைதல் வேண்டும்.

உதட்டிற்குக் கீழுள்ள மோவாய் நீண்ட வட்ட வடிவமாகவும் அந் நீளத்தில் பாதி அகலமுடையதாகவும் இருத்தல் வேண்டும். பற்களின் நுனி பூ மொட்டுப் போன்று இருத்தல் வேண்டும்.

## நுட்ப அளவுகள்

வாய் நீளம்[19] 4`-2"

மேலுதட்டின் நீளம் வாய் நீளத்திற்குச் சமம்.

மேலுதட்டின் நடுவிட அகலம்[20] 0`-3½"

இது கடைவாய் வரை கரைந்து செல்லும்.

மேலுதட்டின் விளிம்பின் கனம் 0`-1"

இவ் விளிம்பு மூன்று வளைவுகளுடன் இருக்கும்.

கீழுதட்டின் நீளம்[21] 2`-2"

அகலம் 1`-1"

உதட்டின் சிவந்த பகுதி அகலம்" 0`-5"

நீளம் 0`-10"

கீழுதட்டின் விளிம்பின் கனம்[23] 0`-1½"

மோவாயிலிருந்து உதட்டின் பிதுக்கம் அல்லது களத்தி 0`-6½"

## மோவாய்

கீழுதட்டிலிருந்து மோவாய் வரை தூரம்[24] 2`-4"

கீழுதட்டிலிருந்து மோவாயின் தாழ்த்தி 0`-8½"

மோவாயின் அகலம்[25] 02-4"

மோராயிலிருந்து காது பொருந்தியமைந்த தூரம்[26] 12-0"

மோவாயின் புற எல்லையிலிருந்து கண்டத்தின் அடக்கம் 2-6"

சிபுகத்தின் குழிவிலிருந்து மோவாய் களத்தி[17] 0-3"

## பற்களும், நாக்கும்[26]

பற்கள் 32. மேல் வரிசையில் 16ம். கீழ் வரிசையில் 16ம் அடங்கும். ஒவ்வொரு வரிசையிலும் முன்னம் பற்கள் 2. இதற்கு அடுத்து பக்கத்திற்கு இரண்டாகப் பற்கள் (4). மேலும் கடவாய்ப் பற்கள் அவ்வைந்து (10). எனவே வரிசைக்கு மொத்தம் பதினாறு பற்கள் ஆகின்றன. மேல் வரிசைப் பற்களின் முன் பற்கள் இரண்டும் அதை அடுத்த இரண்டிரண்டு (கடிக்கும்) பற்கள் 3"x3" அளவும் கடிக்கும் பற்களின் முனை மொட்டுப்போல் அமைய வேண்டும். நீளம் 4 யவை. கடைவாய்ப் பற்கள் ஒவ்வொன்றும் ½ யவை குறைந்த அளவு உயரம் கொள்ளும். அகலமும் அவ்வளவே.

கீழ் வரிசையில் முன் பற்கள் 3½"x3½" அளவாகும். கிழிக்கும் பற்கள் 4½ யவை நீளமாகும். கடைவாய்ப் பற்கள் ஒவ்வொன்றும் 3 யவை களத்தியும் அவ்வளவு அகலும் கொண்டிருக்கும்.

பற்களை உறுதியாகப் பிணைக்கும் ஈறுகளும் 32. பற்களின் அளவுகளுக்கேற்றவாறு அவற்றை அமைத்தல் வேண்டும்.

நாக்கின் நீளம் 6`-0"

அகலம் 3`-0"

அடி நாக்கின் அகலம் 5`-0"

உண்ணாக்கின் நீளம் 1`-0"

கண்டத்வாரம் அகலம் 2`-0"

உட்கொள்ளும் உணவைச் சுவைப்பதற்கும் விழுங்குவதற்கும் உதவி செய்யும்.

நாக்கின் அகலம்[29] 5`-0"

இது உட்பகுதியில் சுருங்கி இருக்கும்.

## காது

காதின் தோற்றம் சங்கை ஒத்ததாகும். காதின் தொங்கல் கத்தரிக்கொப்பாகும். காதில் குவிந்த பகுதி, விரை (மொச்சை) நீங்கிய தோலுறை போலாம்.

## நுட்ப அளவுகள்

கண்ணிலிருந்து காது சேருமிடம் தூரம் 7`-0"

காதின் மொத்த நீளம்[20] 4`-0"

காதின் அகலம் 2`-2"

கண்ணூலுக்கு மேல் காதின்[21] தூக்கம் 2`-0"

செவித்துளையிலிருந்து காதின் இறக்கம் 2`-0"

காதின் மேல் பிடிப்பிலிருந்து தூக்கம் 1`-0"

செவித்துளையிலிருந்து காதின் கீழ்ப்பகுதியின் நீளம் 2`-1"

தலையுடன் காது பற்றியிருக்கும் பகுதியின் நீளம்[22] 2`-1"

காதுத்தண்டின் நீளம்[23] 4`-4"

காதுத்தண்டின் கனம்[24] 0`-3"

கண்மட்ட நூலுக்குக் கீழே காதின் துளை அகலம் 0`-4"

துளையின் தாழ்த்தி 0`-4"

காதின் சுழிப்பு (கர்ணாவர்த்தி) இதன் தடிப்பு 0`-1½"

காதின் மடிந்த பாகத்தின் அகலம் 0`-4"

காது சேர்ந்திருக்குமிடமிருந்து காதின் பின்புறம் கனம் அல்லது தூரம் 1`-4"

பின்புற அகலம் 1`-4"

கர்ண நாளத்தின் இடைவெளி[25] 0`-6"

| | |
|---|---|
| அகலம்[26] | 1'-0" |
| நாளத்துடன் காது நீளம்[27] | 8'-4" |
| கர்ண பீலி நீளம்[28] | 1'-0" |
| கர்ண பீலி கனம்[29] | 0'-4" |
| கர்ண பாலி கணம்[29] | 1'-1½" |
| களத்தி | 0'-4" |

## கழுத்து

உடலையும் தலையையும் இணைக்கும் உறுப்பு கழுத்து எனப்படும். உடம்புடன் பொருந்தும் பகுதி அடிக்கழுத்து என்றும், தலையுடன் சேரும் பகுதி மேற்கழுத்து என்றும் சொல்லப்படும். கழுத்தின் தோற்றம் சங்கை ஒத்ததாக இருத்தல் மரபு. இரண்டு ரேகைகளையும் அதில் காட்டிடல் வேண்டும். கழுத்தில் மூன்று மடிப்புகள் அமையும்.

(சங்கின் மூன்று வரிகளை இவை நினைப்பூட்டும். இவை அதிட்ட ரேகைகளாம்).

### நுட்ப அளவுகள்

| | |
|---|---|
| அடிக்கழுத்து முன்புற அகலம்[40] | 10'-0" |
| மேற்கழுத்து அகலம்[41] | 9'-0" |
| கழுத்தின் பின்புறம் கிருகாடிகை என்னுமிடத்தில் கழுத்து அகலம் | 8'-0" |
| இதற்குச் சிறிது கீழே அதன் அகலம் | 8'-4" |
| கழுத்தின் பின்பக்கத்தை முடி எல்லையின் ஒழுங்கில் காதின் பின்புறத்திற்கும் கிருநாடிகைக்கும் உள்ள இடைத்தூரம் | 1'-4" |
| முடி எல்லையிலிருந்து அடிக்கழுத்தின் உயரம் | 4'-3" |
| பிடரி அகலம் | 10'-0" |
| கழுத்து மட்டத்திலிருந்து தோளும் கழுத்தும் சேருமிடத்தில் உயரம் | 4'-0" |
| காது சேருமிடமிருந்து தோள் மட்டம் வரை[42] | 6'-0" |
| காதுக்குக் கீழ் கழுத்தின் உயர்ந்த பாகமாகிய திமில் உயரம் | 4'-0" |

## உடல்

மார்பிலிருந்து குய்ய பீடம் வரையில் உள்ள பெரிய அங்கம் உடல் எனக் கொள்ளப்படுகிறது.

இதில் மார்பிலிருந்து இடுப்பின் மேல் பகுதி வரையுள்ள உடலின் புறத்தோற்றம் பசு முகத்தை ஒத்திருத்தல் வேண்டும். மார்பு விரிந்து நாபி அருகில் குறுகியமைவதால் இத்தோற்றம் உண்டாகிறது. இதுவே அழகிய உடல் அமைப்பென்பது கலைவல்லார் கருத்து. நாபி வலம் சுழித்திருக்க வேண்டும்.

ஆண்குறி நீலோத்பல மொட்டுக் கொப்பான தோற்றமுடையதாகும்.

| | |
|---|---|
| அடிக்கழுத்து மட்டத்தில் தோள் அகலம், புறவாய்க்குப் புறவாய்[48] | 40'-4" |
| பாகு மூலம்[44] | 9'-0" |
| கக்கத்திலிருந்து கக்கம் வரை உடல் அகலம்[45] | 22'-0" |
| மார்பக (ஸ்தன) மத்தியக் கோட்டின் மார்பு அகலம்[46] | 20'-4" |
| மார்பு (அல்லது) இருதய மட்டத்தில் அகலம்[47] | 18'-4" |
| நடுஉடல் அகலம்[48] | 16'-0" |
| ஸ்ரோணி (விலா) அகலம்[49] | 18'-4" |
| நாபி அகலமும் ஆழமும்[50] | 1'-0" |
| இடுப்பு அகலம்[51] | 20'-0" |
| முலைக்கண்களின் இடைவெளி | 13'-4" |
| கழுத்து அடிமட்ட நூலிலிருந்து முலைக்கண் தூரம் | 9'-1" |
| கழுத்து அடிமட்ட நூலிலிருந்து கக்கம் வரை | 9'-0" |
| கக்கத்தில் கக்கத் தாழ்த்தி | 1'-4" |
| மார்பின் தாழ்த்தி | 0'-2" |
| ஸ்தன பீடப் புடைப்பு | 2'-0" |
| ஸ்தன மண்டலம் | 2'-1" |
| முலைக்கண் அகலம் | 0'-2" |
| களத்தி | 0'-1" |
| நாபியிலிருந்து விலா (ஸ்ரோணி) உயரம் | 5'-1" |
| இடுப்பு அல்லது கடிப்பிரதேசம் உயரம் | 3'-4" |
| மேட்ர பீடம் உயரம் (அல்லது) நீளம் (குறி அமையும் பீடம்) | 5'-2" |
| மேட்ர பீட அகலம் | 2'-1" |
| ஆண்குறி நீளம்[52] | 5'-2" |
| விரையின் தொங்கு நீளம்[53] | 4'-2" |
| விரையின் அகலம்(விருஷணம்)[54] | 2'-0" |



உத்தம தச தாள அகல அளவு

## கைகளும் விரல்களும்

உத்தம தசதாள அளவில், படிம உயரத்தில் பாதி அளவுக்கு மேல் ஒன்றரை விரலளவு கை நீளம் ஆகும். புஜ மூலம் திரண்டு, மணிகட்டு வரை கரைவாக அமைய வேண்டும். ஆண் படிமங்களுக்கு புஜத்தின் திரட்சி வலிமையை உணர்த்துவதுடன் மார்புக்கு அழகும் ஊட்டும். உடல் வலிமையை மட்டுமின்றி உள்ளத்தின் வலிமையையும் திண்டோள் உணர்த்தும்.

| | |
|---|---|
| அடிக்கழுத்து மட்ட நூலிலிருந்து கை நடுவிரல் நுனிவரை கரத்தின் மொத்த நீளம் | 63`-4'' |
| கழுத்து நூலிலிருந்து மேற்கை நீளம் | 27`-0'' |
| முழங்கை கனம் (உயரம்) | 2`-0'' |
| முன்கை நீளம் (கைத்தலம் நீக்கி) | 21`-0'' |
| மணிக்கட்டிலிருந்து நடுவிரல் நுனி வரை கைத்தல நீளம் | 13`-4'' |
| பாகுமூலம் கனம் (அல்லது) அகலம் | 9`-0'' |
| கைநடுவே அகலம்[55] | 8`-2'' |
| முழங்கை அகலம்[56] | 7`-0'' |
| முன்கை அகலம்[57] | 5`-4'' |
| மணிக்கட்டு அகலம்[58] | 3`-4'' |
| கைத்தல நீளம் | 7`-0'' |
| அகங்கை மேற்பகுதி அகலம் | 5`-4'' |
| மேற்பகுயின் கனம், விரல் கனத்துக்குச் சமம்[59] | |
| நடுப்பகுதி அகலம்[60] | 6`-4'' |
| கனம்[61] | 2`-4'' |
| கீழ்ப்பகுதி அகலம்[62] | 7`-0'' |
| கனம் | 3`-0'' |
| கட்டைவிரல் அடியிலிருந்து சுட்டு விரல் அடி வரை தூரம்[63] | 3`-0'' |
| கட்டைவிரல் அடியிலிருந்து மணிக் கட்டுவரை தூரம் | 4`-0'' |

## கைவிரல் அளவுகள்

| | |
|---|---|
| நடுவிரல் நீளம் | 6`-4'' |
| அகலம் | 1`-1'' |
| மோதிரவிரல் நீளம் | 5`-2'' |
| அகலம் | 1`-0'' |
| சுட்டுவிரல் நீளம்[65] | 5`-2'' |
| அகலம் | 1`-0'' |
| சுண்டுவிரல் நீளம் | 4`-2'' |
| அகலம் | 0`-6'' |
| கட்டை விரல் நீளம் | 4`-2'' |
| அகலம் | 1`-2'' |

கைவிரல் அகலத்தை 3 பாகம் செய்து 2 பாகம் நக அகலம், அகலத்தைவிட கால்பாகம் கூடிய அளவு, நக நீளம்[66].

நக அகலத்தால் இரு மடங்கு விரலின் மேல் கணுவின் நீளம் ஆகும்.

| | |
|---|---|
| அடிக்கணு நீளம்: கட்டை விரல் | 2`-1" |
| சுட்டு விரல் | 2`-0" |
| நடு விரல்[67] | 2`-6" |
| மோதிர விரல் | 2`-0" |
| சுண்டு விரல் | 1`-4" |

விரல் நீளத்திலிருந்து மேற்கணு, அடிக்கணு போக எஞ்சிய நீளம் இடைக்கணு நீள அளவாகும். கட்டை விரலுக்கு மட்டும் இரண்டே கணுக்கள்.

விரல் மூளைத்திருக்குமிடமிருந்து 2`-0" தூரம் கைத்தலம் சதைப்பற்றோடு கூடியதாகவும், மணிக்கட்டை ஒட்டிய இடமும், 2`-0" தூரம் சதைப்பற்றோடு இருத்தல் வேண்டும். கட்டை விரலின் அடிப்பகுதியானது கைத்தலத்தில் கிளியின் உடல் போன்று திரட்சியுடையதாய் இருத்தல் வேண்டும். கைத்தலம் (உள்ளங்கை) சிறிது பதிவுடனிருத்தல் வேண்டும். அவ்விடத்தில் சங்கு, சக்கரம், சூலம் ஆகிய மெல்லிய ரேகைகளைப் பதிக்க வேண்டும்.

## தொடையும், காலும்

தொடையும், காலும் நன்கு திரண்டு முழு வளர்ச்சியைக் காட்டுவதாக இயற்றுதல் வேண்டும். விரல்களும் அங்ஙனமே. ஆமை ஓடு போல பாதத்தின் மேல் தோற்றம் அமைக்கப்பட வேண்டும். முன்கால் கொண்டைமீனின் சாயலைப் பெற வேண்டும்.

| | |
|---|---|
| தொடை நீளம் | 27`-0" |
| தொடை அகலம்[68] | 13`-4" |
| நடுத்தொடை அகலம் | 12`-0" |
| முழங்கால் மூட்டின் அகலம்[69] | 8`-0" |
| முழங்கால் உயரம் | 4`-0" |
| பின்பக்க முழங்கால் மூட்டு உயரம் | 2`-0" |
| முழங்கால் நடு அகலம்[70] | 6`-4" |
| பின் அகலம் | 4`-0" |
| கெண்டைக்கால் நீளம் | 27`-0" |
| கெண்டைக்கால் அகலம்[71] | 9`-0" |
| பரடு அகலம்[72] | 4`-4" |
| கணுக்காலின் கணுக்களில் | |
| புறவாய்க்கு புறவாய் அகலம்[73] | 5`-1" |
| பாத நீளம் | 17`-0" |
| பாத அகலம்[74] | 6`-0" |
| குதிகால் உயரம் | 4`-4" |
| பெருவிரல் நீளம்[75] | 4`-2" |
| அகலம் | 2`-1" |



தொடை, கால் அகல அளவுகள்

| | |
|---|---|
| 2வது விரல் நீளம்[76] | 4`-3" |
| அகலம் | 1`-1" |
| 3வது விரல் நீளம்[77] | 3`-6" |
| அகலம் | 0`-7½" |
| 4வது விரல் நீளம்[78] | 3`-1" |
| அகலம் | 0`-7" |
| 5வது விரல் நீளம்[79] | 2`-4" |
| அகலம் | 0`-6" |

தத்தம் விரல்களின் அகலத்தில் பாதி நக அகலம். நக அகலத்தில் ¼ கூறு குறைந்த அளவு நக நீளம்; இவை வட்ட வடிவமாக இருத்தல் வேண்டும்.

கட்டை விரலின் நுனிப்பகுதி நகத்துக்கு முன்னே 4 யவை தெரிய வேண்டும்.

இங்ஙனமே சதைப்பற்று நகத்தின் இருபக்கங்களிலும் ஆகும். [80]நகத்தின் கனமானது விரல் கனத்தில் நான்கில் ஒன்றாகும். மிகுதியுள்ள நான்கில் 3 பாகம் விரல் கனமாகும். மற்ற அமைப்புகளையும் அளவுகளையும் பொருத்தமாகவும் பொருத்தமான அளவுகளிலும் சிற்பிகள் செய்து கொள்ள வேண்டும்.

## படிமத்தின் பின்புறத் தோற்றம்

படிமங்களின் முன் அழகுக்கு ஈடாக பின் அழகும் அமைதல் வேண்டும். பின் பக்க அமைப்பு ஆணுக்கும், பெண்ணுக்கும் வெவ்வேறானது.

| | |
|---|---|
| பின் கழுத்து அகலம் | 8`-0" |
| நடுக்கழுத்து அகலம் | 8`-4" |
| தோள் சேருமிடத்தில் கழுத்து அகலம் | 10`-0" |
| பின் பக்கம் கேசாந்தத்திற்குக் கீழ் கழுத்து உயரம் | 4`-3" |
| தோளோடு கழுத்து சேருமிடத்தில் கழுத்து மட்ட நூலுக்கு மேல் உயரம் | 4`-0" |
| காதிலிருந்து தோள்வரை தூரம் | 6`-0" |
| தோள் கனம் | 7`-0" |
| காதுக்குக் கீழ் கழுத்தின் திமில் | 4`-0" |
| திமில் முதல் இடுப்பு வரை முதுகெலும்பு நீளம் | 27`-0" |
| பின்புற புஜ அகலம் | 6`-6" |
| தோள்ப்பட்டை ஸ்தன சூத்திரத்தில் அமைகிறது. அதன் நீளம் | 12`-0" |
| கழுத்துத் திமிலுக்குக் கீழே தோள்ப் பட்டை வரை தூரம் | 10`-0" |



உத்தம தச தாள சந்திரசேகரப் படிமம்



உத்தம தச தாளப் பிரம்மன் படிமம்



உத்தம தச தாள விஷ்ணுப் படிமம்

| | |
|---|---|
| இவ்விடத்திற்குக் கீழ் முதுகு அகலம் | 30`-0'' |
| முதுகின் நடுவே முதுகுப் பதிவு | 2`-0'' |
| முதுகுத் தண்டிலிருந்து இருமருங்குள்ள சதைப்பற்றான [81]முதுகுப் பட்டை அகலம் | 7`-0'' |
| முதுகுப் பட்டையின் கீழே இடுப்பு சேருமிடம் வரை தூரம் | 7`-0'' |






உமையொரு பாகன்

| | |
|---|---|
| இவ்விடத்தில் உடல் கனம் | 16`-0'' |
| இதற்குக் கீழ் உடல் கனம் | 17`-0'' |
| இடுப்பிலிருந்து குண்டிக்காய் சேருமிடம் வரை உயரம் | 13`-4'' |
| பின்பக்க இடுப்பு அகலம் | 19`-4'' |
| குண்டிக்காய் அகலம் | 9`-4'' |
| குண்டிக்காய் களத்தி | 4`-4'' |
| குய்யமட்டத்திற்குக் கீழ் குண்டிக்காய் தொங்கல் | 4`-4'' |
| நாபி மட்டத்திற்கு கீழ், உடலின் பின்புற அகலம்[82] | 20`-4'' |
| இடுப்பின் சந்தியில் அகலம் | 18`-0'' |
| குண்டிக்காய் இடைவெளி[83] | 0`-4'' |

மேற்கண்ட அளவுகளை உபயோகித்து வரைந்த பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் படிமங்களையும் நோக்குக.

## உத்தம தச தாளம் – விஷ்ணுப் படிமம்

உத்தம தசதாளமானத்தில், நுட்ப அளவுகள் சைவச் சார்பு நூல்களிலும் வைணவச் சார்பு நூல்களிலும் காணப்படுகின்றன. நுட்ப அளவுகள் பெரும்பாலும் ஒத்திருப்பினும், சில இடங்களில் வேறுபட்டுள்ளன. உடல் அமைப்பில் கொண்டுள்ள கருத்துச் சிறப்பே இதற்குக் காரணம். எனவே உத்தம தசதாளத்தில் இயற்றப்பட வேண்டிய வைணவப் படிமங்களுக்கு வைணவ நூல் வழியே நுட்ப அளவுகளைப் பின்பற்றிச் செய்வதே முறையாகும். [84]கீழ்க்காணும் அளவுகள் வைணவச் சார்புடையவை.

### உயரக் கணக்கு

| | | |
|---|---|---|
| கபாலம் (முடியுடன்) தலை 1`-3''; முடி 3`-0'' | 4`-3'' | |
| முடி முதல் கண் மட்டம் வரை | 4`-3'' | |
| கண் மட்டத்திலிருந்து மூக்குப்புடம் வரை | 4`-3'' | 13`-1'' |
| மூக்குப்புடமிருந்து மோவாய் வரை | 4`-3'' | |
| மோவாயிலிருந்து அடிக்கழுத்து வரை தாடை 0`-4'' கழுத்து 3`-7'' | 4`-3'' | |
| அடிக்கழுத்திலிருந்து மார்பு வரை | 13`-3'' | |
| மார்பிலிருந்து நாபி வரை | 13`-3'' | |




உத்தம தச தாள விஷ்ணுப் படிமம்
(வைணவ ஆகமப் படி)

| | |
|---|---|
| நாபியிலிருந்து குய்யம் வரை | 13` 3" |
| குய்யத்திலிருந்து தொடை நீளம்[85] | 26`-5" |
| முழங்கால் முட்டி[86] | 4`-3" |
| கெண்டைக்கால் நீளம்[87] | 26`-5" |
| பாத (தாள்) உயரம்[88] | 4`-3" |

## தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| முக அகலம்[89] | 14`-0" |
| தலை உயரம் (13`-3"+4`-3") | 17`-6" |
| கழுத்து உயரம் | 4`-3" |
| தலை உச்சியிலிருந்து முன் பக்க முடி வரை | 9`-0" |
| தலை உச்சியிலிருந்து (வலம், இடம் இரு பக்கங்களின்) முடி வரை | 9`-0" |
| முக அகலம் | 14`-0" |
| தலை உச்சியிலிருந்து பின் பக்க முடி வரை | 12`-0" |
| தலையின் சுற்றளவு | 42`-0" |
| முன் பக்கச் சுற்றளவு | 26`-0" |
| காது பொருந்துமிடத்திலிருந்து பின் பக்கச் சுற்றளவு | 13`-0" |
| முடியிலிருந்து புருவம் வரை | 2`-1½" |
| புருவத்திலிருந்து கண்ணூல் வரை | 2`-1½" |
| புருவ நீளம் | 5`-0" |
| புருவ இடைவெளி | 1`-0" |
| புருவ வளைவு | 1`-0" |
| புருவ அகலம் | 0`-1½" |
| நெற்றிப் பள்ளம் | 0`-2" |
| நெற்றி மேல்பாக அகலம் | 8`-4" |

(நெற்றி அகலத்தை விட்டமாகக் கொண்டு வட்டம் வரைந்த பின் இவ் வட்டத்திற்கு வெளியில் உள்ள நெற்றிப் பிரதேசம் 'தாரவர்த்தம்' எனப்படும்).

| | |
|---|---|
| வட்டத்தின் விட்டம் | 2`-0" |
| தாரவர்த்தம் | 2`-2" |
| மேற்கழுத்து அகலம் | 8`-4" |
| அடிக்கழுத்து அகலம் | 9`-4" |

## கண்

| | |
|---|---|
| புருவத்துக்குக் கீழ் கண் அமையும் தூரம் | 2'-0" |
| கண் அகலம் | 0'-3½" |
| கண் நீளம் | 0'-6" |
| கருவிழி நீளமும் அகலமும் | 1'-4" |
| மேல் இமை அகலம் | 0'-4" |
| ஒவ்வொரு இமையிலும் 90 ரோமங்கள் | |
| கீழ் இமை அகலம்[90] | 0'-4½" |
| கண் விழித்திருக்கும் போது மேல் இமை | 0'-2" |
| கீழ் இமை | 0'-5½" |
| வெண் விழி | 0'-1" |
| கணிகை | 0'-1½" |
| கடைக்கண் | 0'-1" |
| ஒளிமண்டலம் | 0'-⅛" |
| கருவிழி மண்டலம் | 0'-2" |

## காது

காதின் நீளம் 4'-0". கண் நூலுக்கு மேல் 2'-0"ம். அதற்குக் கீழே 2'-0"ம் ஆகும். காதின் அகலம் 2'-0"

| | |
|---|---|
| செவித் துளைக்கு மேல் தடித்து வளைந்த பாகம் (கர்ணாவர்த்தி) | 0'-1½" |
| செவித் துளைக்கு அருகில் தொன்னை போன்ற பள்ளப் பகுதியான செவி மடல் (பிஞ்சுஷி) நீளம் | 2'-0" |
| அகலம் | 0'-6" |
| காதின் விளிம்பு (கர்ணபாலி) | 0'-4" |
| செவித் துளைக்கு மேல் இரு கர்ண மூலங்களுக்கு இடையேயுள்ள பாகம் | |
| நீளம் | 0'-8" |
| அகலம் | 0'-4" |
| செவிமடலைவிட கர்ண சூலிகை அதிக அகலம் | 0'-4½" |
| கர்ண சூலிகையிலிருந்து கர்ணாவர்த்தி உயரம் அதிகம் | 0'-1½" |
| செவி மடல் கர்ணாவர்த்தியை விட தாழ்ந்தது | 0'-4" |
| பிப்பிலி அகலம் | 1'-0" |

இது அவரை விதை போன்றது.

| | |
|---|---|
| கர்ண சூத்திரத்துக்குக் கீழ் செவித்துளை நீண்டிருப்பது | 0'-6" |
| அகலம் | 0'-4" |
| செவிமடலுக்குக் கீழ் கர்ண நாள மூலப்பகுதி | 0'-4" |
| கர்ண நாளம் 5-0; 6-0 அணிகளுடன் இருக்கும்போது | |

## மூக்கும் வாயும்

| | |
|---|---|
| மூக்கின் அகலம்[91] | 2'-0" |
| அடிமூக்கு அகலம்[92] | 1'-1" |
| நடுமூக்கு அகலம்[93] | 0'-4½" |
| மூக்குக் களத்தி[94] | 2'-0" |
| மூக்குத் தண்டு உயரம் | 1'-0" |
| புடைகள் நீங்கிய மூக்கின் அகலம் | 0'-5" |
| மூக்கு நுனிக்கும் உதட்டிற்கும் உள்ள தூரம் | 0'-2½" |
| புடை அகலம் | 1'-0" |
| மேல் உதட்டின் நீளம்[95] | 4'-4" |
| கீழ் உதட்டின் அகலம் | 0'-7" |
| கீழ் உதட்டின் நீளம் | 2'-0" |
| வாயின் நீளம் | 4'-4" |
| பற்கள் | 32 |
| நாக்கு நீளம் | 6'-0" |
| நாக்கு அகலம் | 3'-0" |

## கைகளும் விரல்களும்

| | |
|---|---|
| அடிக் கழுத்து மட்டத்திலிருந்து மேற்கை நீளம் | 27'-0" |
| முழங்கை | 2'-0" |
| முன்கை | 21'-0" |
| கைத்தலம் | 7'-0" |
| நடு விரல் நீளம் | 6'-4" |
| சுட்டு விரல் நீளம் | 5'-1" |
| மோதிர விரல் நீளம் | 5'-2" |
| கட்டை விரல் நீளம் | 4'-2" |
| சுண்டு விரல் நீளம் | 4'-3" |

## விரல்களின் அடி அகலம்

| | |
|---|---|
| கட்டை விரல் | 1'-3" |
| சுட்டு விரல் | 1'-0" |
| நடு விரல் | 1'-1" |
| அணி விரல் | 1'-1" |
| சுண்டு விரல் | 1'-0" |
| மேற்கை அகலம்[96] | 10'-0" |

| | |
|---|---|
| நடுக்கை அகலம்[97] | 9`-0" |
| முழங்கை அகலம்[98] | 7`-4" |
| முன்கை அகலம்[99] | 7`-0" |
| மணிக்கட்டு[100] | 4`-0" |

(விரல்களின்) அதனதன் அகலத்தில் ½ யவை குறைத்தது நுணி அகலமாகும்.

## நக அகலம்

| | |
|---|---|
| கட்டை விரல் | 0`-7" |
| சுட்டு விரல் | 0`-4" |
| நடு விரல் | 0`-5" |
| அணி விரல் | 0`-4" |
| சுண்டு விரல் | 0`-3" |

இவற்றின் நீளம் அவ்வவற்றிற்கு ½ யவை அதிகமாகும்.

பெருவிரல் 2 கணுக்களையும், மற்ற விரல்கள் 3 கணுக்களையும் உடையன.

## விரல்களின் கணுக்கள்

| | அடிக்கணு | மேற்கணு | நடுக்கணு |
|---|---|---|---|
| கட்டை விரல் | 1`-4" | 2`-4" | - |
| சுட்டுவிரல் | 1`6" | 1`4" | 1`5" |
| நடுவிரல் | 2`-2" | 1`-7" | 1`9" |
| அணிவிரல் | 1`-6½" | 1`-4" | 1`-5½" |
| சுண்டு விரல் | 1`-4" | 1`-2` | 1`-3" |

கைத்தல மேற்பகுதியின் கனத்தை, விரல் கனத்துக்கு ஏற்றவாறு அமைத்துக் கொள்ள வேண்டும்.

பெருவிரல் அடிப்பகுதி கனம்[101] 2`-6"

கைத்தலத்தின் கனம்[102] 2`-0" முதல் 2`-4" வரை

கைத்தலத்தில் ஆயுள் ரேகை
வித்யா ரேகை
பிரும்ம ரேகை

ஆகிய மூன்று ரேகைகளைப் பதித்தல் வேண்டும்.

நடுவிரல் அடியிலிருந்து 1`-6" தூரத்தில் ஆயுள் ரேகை செல்ல வேண்டும்.

இதிலிருந்து 0`-6" தூரத்தில் வித்யா ரேகை செல்லும். கைத்தல அடியிலிருந்து பிரும்ம ரேகை செல்ல வேண்டும். வலது கைத்தலத்தில் சக்கரத்தையும், இடது கைத்தலத்தில் சங்கையும் கீறுதல் வேண்டும்.

## உடல், கால்கள்

| | |
|---|---|
| இருபுயங்களுக்கு[103] இடையே புறவாய்க்குப் புறவாய் அகலம் | 44`-0" |
| கக்க அகலம்[104] | 24`-0" |
| முலைக்கண் இடைத்தூரம் | 14`90" |
| இருதய அகலம்[105] | 20`-4" |
| நடு உடல் அகலம் | 16`-0" |
| ஸ்ரோணி அகலம் | 18`-0" |
| இடுப்பு அகலம் | 20`-0" |
| தொடை அகலம்[106] | 13`-3" |
| நடுத்தொடை[107] | 11`-0" |
| முழங்கால் அகலம் | 9`-4" |
| முன்கால் மூல அகலம் | 8`-0" |
| நடுக்கால் அகலம் | 7`-0" |
| கணுக்கால் அகலம் | 4`-4" |
| கணுக்கால் மொழி | 5`-0" |
| பாத நீளம் | 17`-0" |
| முன்பாத அகலம் | 5`-4" |
| குதிக்கால் கனம் | 4`-4" |
| குதிகால் அகலம் | 3`-4" |
| கக்கத்திலிருந்து மார்பு வரை தூரம் | 8`-0" |
| மார்புக்குழி தாழ்த்தி | 0`-3" |
| ஸ்தன பீட உயரம்[108] | 1`-4" |
| ஸ்தன பீட அகலம் | 1`-0" |
| ஸ்தன பீட வட்டம்[109] | 2`-0" |
| ஸ்தன உயரம் | 0`-1" |
| தொண்டைக்குழி தாழ்த்தி | 0`-2" |
| ஜத்ரு ரேகை | 0`-2" |

நாபி வலம் சுழித்திருக்க வேண்டும்.

| | |
|---|---|
| ஆழம் | 0`-6" |
| அகலம்[110] | 0`-1" |
| அடித்தொடை அகலம் | 13`-4" |
| முழங்கால் முட்டி அகலம் | 4`-2" |
| முழங்கால் முட்டி கனம் | 2`-4" |
| பக்கங்கள் | 4`-0" |
| நடுப்பக்கம் அகலம் | 4`-0" |
| குதிகால் அகலம் | 2`-0" |
| கணுக்கால் மூட்டு | 1`-6" |

| | |
|---|---|
| உயரம் | 1'-2" |
| அகலம் | 2'-2" |
| குதிகால் உயரம் | 4'-0" |
| பாத கனம் | 2'-0" |

இது கட்டைவிரல் அடியின் கனத்தை நிகர்த்தது. மற்றவை விரல் கனத்துக்குச் சமமாக இருக்க வேண்டும்.

| | |
|---|---|
| பெருவிரல் நக நீளம் | 1'-0" |
| பெருவிரல் நக அகலம் | 0'-6" |

பாத தலத்தில் சங்கு, சக்கரம், திரிசூலம், தாமரை ஆகிய ரேகைகளைக் கீறுக.

## பாத விரல்கள்

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| கட்டைவிரல் | 4'-0" | 1'-4" |
| இரண்டாவது விரல்[111] | 4'-1" | 1'-1" |
| நடுவிரல்[112] | 4'-0" | 1'-1½" |
| நான்காம் விரல்[113] | 3'-4" | 1'-0" |
| சிறு விரல்[114] | 3'-0" | 0'-7" |

## உடலின் பின்பக்க அளவுகள்

| | |
|---|---|
| அடிக்கழுத்து அகலம் | 10'-0" |
| மேற்கழுத்து அகலம் | 8'-6" |
| காது கூடுமிடத்திற்கும் தோள் கூடுமிடத்திற்கும் இடைவெளி | 7'-0" |
| கழுத்து மட்டத்திலிருந்த தோளின் உயர்த்தி | 4'-0" |
| தோள் மூட்டு அகலம் | 9'-0" |
| தோள் மூலம் | 6'-2" |
| முழங்கை | 6'-2" |
| தோள்ப் பட்டை நீளம் | 5'-0" |
| தோள்ப் பட்டை உயரம் | 3'-0" |
| கழுத்தும் முதுகும் சந்திக்குமிடம் | 4'-0" |
| கழுத்துக்குக் கீழ் கக்க அகலம் | 16'-0" |
| முதுகுத் தண்டு | 28'-0" |
| பள்ளம் | 2'-0" |
| கக்க மட்டத்தில் புய அகலம் | 9'-4" |
| முதுகுப் பட்டை (அம்ச பீடம்) ஸ்தன சூத்திரத்துக்குச் சமம் | |
| தோளுக்கு கீழ் அம்ச பீடம் அகலம் | 5'-4" |
| முதுகுத் தண்டின் பக்கச் சரிவு (கடி சந்தி வரை) | 7'-0" |
| இடுப்பு சேருமிடம்-முள் இருக்குமிடம் | 13'-4" |
| குண்டிக்காயின் களத்தி | 4'-4" |
| குண்டிக்காயின் விட்டம்[115] | 9'-0" |

## உத்தம தசதாளம்—கந்தப்படிமம்

தாள வகைகளைப் பற்றி நூல்கள் இலக்கணம் வகுக்கும் போது முருகனுடைய படிமத்தை அதம தசதாள அளவில் இயற்றுதல் வேண்டும் என்று விதிக்கின்றன. ஒரு சிவாலயத்திலாதல், வேறு ஒரு பெரிய ஆலயத்திலாதல் கந்தப் படிமம் இடம் பெறுமானால் கந்தன் பரிவார தேவனாகக் கொள்ளப் படுகிறான் என்று பொருள்படும். அந் நிலையில் அதம தசதாள மானம் அப்படிமத்துக்கு ஏற்ற அளவாகும். முருகனுக்கே தனித்த ஆலயம் கட்டி, அதில் முருகனுக்கு தலைமையிடம் அளித்து, பரிவார தேவதைகளால் சூழப்பட்டவனாக, முழுமுதற் பொருளாக, ஏற்றம் பெற்று விளங்கினால், முருகன் மூலவர் அல்லது சுதந்திர மூர்த்தி எனப்படுவார். அவர் தம் படிமத்தை பிரம்மா, விஷ்ணு, மகேசுவரர்களுக்கு உரித்தான உத்தம தசதாள மானத்திலேயே இயற்ற வேண்டும் என கௌமார சமயத்தைச் சார்ந்த குமார தந்திரம் என்ற ஆகம நூல் வலியுறுத்துகிறது. எனவே சுதந்திரக் கந்தப் படிமத்தை உத்தம தசதாள அளவில் இயற்றுதல் வேண்டும்.

ஒரு மூர்த்தியின் படிமத்தை விதிகளுக்கு இணங்க ஒரு குறிப்பிட்ட தாள அளவில் இயற்றும்பொழுது அதற்குக் குறைந்ததும் அடுத்ததுமான தாளமானத்தில் அம் மூர்த்தியின் சக்திப் படிமங்களை இயற்ற வேண்டுமென்ற மரபுக்கேற்றவாறு மத்திம தசதாளமானத்தில் சுதந்திராலயக் கந்தனின் தேவியர்களது படிமங்கள் இயற்றப்பட வேண்டும்.

கந்தன் பரிவார மூர்த்தியாக ஓராலயத்தில் இடம் வகிக்கையில் அதம தசதாள அளவில் அப்படிமத்தை இயற்ற வேண்டுமாதலால் அத் தாளத்திற்கு அடுத்துத் தாழ்ந்த தாளமாகிய உத்தம நவ தாள அளவில் தேவியர் படிமங்கள் அமைதல் வேண்டும்.

சுதந்திர ஆலயக் கந்தப் படிமத்தைக் கடு சர்க்கரை, மண் ஆகிய பொருள்களால் அசலப் படிமமாகவும், உலோகம், இரத்தினம் ஆகிய பொருள்களால் சலப்படிமமாகவும், மரம், கல் ஆகிய பொருள்களால் சலாசலப் படிமமாகவும் இயற்றுதல் வேண்டும்.

திருவுண்ணாழிக் (கர்ப்பக்கிருஹ) கால்புறவாய் அகலத்தை ஒன்பது கூறுகள் செய்து பதினோறு கூறு முதல் பத்தொன்பது கூறுவரை ஒன்பது விதமாகக் கந்தப் படிமத்திற்கு உயரம் நிர்ணயிக்கலாம் அல்லது கர்ப்பக்கிருஹக் கால் புறவாய் அகலத்தை இருபது கூறுகளாகப் பிரித்து அவற்றில் 10,11,12 ஆகிய கூறுகளில் ஏதேனும் ஒன்றினைப் படிமத்தின் உயர அளவாகக் கொள்ளலாம். அல்லது அதே அகலத்தை எட்டுக் கூறுகளாக்கி, 4,5,6 கூறுகளில் ஏதாவது ஒன்றினை உயர அளவாக ஏற்கலாம்.

கந்தப்படிமத்தின் உயரத்தை முழ அளவினாலும் நிர்ணயிக்கலாம். ஒரு முழம் தொடங்கி ஆறு, ஆறு விரலாக ஏற்றி ஒன்பது முழம் வரை 33 வகையான உயரங்களில் ஏதேனும் ஒன்றைப் படிம உயரமாகக் கொள்ளலாம்.

கந்தப்படிமம் மூலப்படிமமாக வருங்கால் ஒரு முழ உயரத்திற்குக் குறைந்ததாகச் செய்தல் கூடாது.[116]

கந்தப்படிமத்திற்குரிய உற்சவ மூர்த்தி, மூல மூர்த்தியின் உயரத்திற்கு சமமாதல், பாதியாதல், கால் பங்காதல் இருத்தல் வேண்டும்: இங்ஙனம், மூன்று வகையாகக் கொள்ளலாம். அன்றியும் மூல மூர்த்தியின் 4/5, 5/7, 2/3 ஆகிய பிற மூன்று அளவிலும் செய்யலாம்.

ஏழ விரல் முதல் இரண்டிரண்டு விரலேற்றி முப்பத்து ஐந்து விரல் அளவு வரை பதினைந்து விதமாக உற்சவப் படிமங்களின் உயர அளவுகளைக் கொள்ளலாம்.

இங்ஙனம் மூல மூர்த்திக்கும், உற்சவ மூர்த்திக்கும் கைக் கொள்ளப்பட்ட ஒவ்வொரு உயர அளவையும், ஆயாதிக் கணிதம் கொண்டு சோதித்துப் பொருத்தமான அளவினைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும்.

மூலப் படிமத்தின் உயரத்தைவிட, உற்சவ மூர்த்திகளான செப்புப் படிமங்களின் உயரம் மிகுதல் கூடாதென்பது பொதுவான நடைமுறை வழக்கும், நூல் வழக்கும் ஆகும்.[117]

### உயர கணக்கு

| | | |
|---|---|---|
| தலை | | 1`-3" |
| முடி வரை | | 3`-0" |
| கண் மட்டம் வரை | 4`-3" | |
| மூக்குப்புடை வரை | 4'-3" | 13`-1" |
| மோவாய் வரை | 4`-3" | |
| தாடை | | 1`-4" |

உத்தம தசதாள கந்தப் படிமம்
(உயர அகல அளவுகள்)

| | |
|---|---|
| கழுத்துமட்டம் வரை | 2`-7" |
| மார்பு வரை | 13`-3" |
| கொப்பூழ் வரை | 13`-0" |
| குய்யம் வரை | 13`-0" |
| தொடை நீளம் | 27`-0" |
| முழங்கால் | 4`-0" |
| முன்கால் | 27`-0" |
| பாதம் | 4`-0" |
| மொத்தம் | *124'-0"* |

## தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| முக அகலம் | 12`-4" |
| உச்சந்தலையிலிருந்து கேசாந்தம் வரை சுற்றளவு | 9`-0" |
| உச்சந்தலையிலிருந்து பின்பக்கம் கேசாந்தம் வரை சுற்றளவு | 13`-4" |
| இரு காதுகளுக்கிடையே முகத்தின் முன்பக்கச் சுற்றளவு | 21`-0" |
| அவ்விடத்தில் காதுகளுக்குப் பின்புறச் சுற்றளவு | 13`-0" |
| காதுகளுக்குப் பின்புறத்தில் தலையின் அகலம் | 12`-0" |
| கேசாந்தமிருந்து பின்பக்கத்தில் கழுத்தின் உயரம் | 4`-0" |
| கழுத்தின் அடியிலிருந்து பிடரி வரை தூரம் | 4`-0" |
| பிடரியிலிருந்து இடுப்பின் சந்தி வரை நீளம் | 27`-0" |
| கடி சந்தியிலிருந்து குண்டிக்காய் வரை | 13`-4" |
| அடிக்கழுத்து அகலம் | 9`-6" |
| கழுத்து மட்டமிருந்து தாடை வரை உயரம் | 2`-2" |
| தாடை முதல் மோவாய் வரை உயரம் | 1`-0" |

கழுத்து இரண்டு ரேகைகளைக் கொண்டதாக அமைதல் வேண்டும்.

| | |
|---|---|
| கழுத்து மட்டமிருந்து தோளும், தோளின் சரிவும் முறையே: | 4`-0" |
| | 2`-0" |
| | 1`-0" |
| | 0`-4" |

அளவில் கழுத்திலிருந்து கரைந்து தோளோடு கூட வேண்டும்.

## கண்

| | |
|---|---|
| கண் நீளம் | 2`-2" |
| கண் அகலம் | 0`-6" |

கண் நீளத்தில் மூன்றில் ஒரு பங்கு கரு விழியின் வட்டமாகும்.

கருவிழியின் நடுவே ஒரு யவையின் 1/8 பங்கினதாகக் கண்மணி இருத்தல் வேண்டும். கண்ணின் கோடி சிவந்ததாகவும், தாமரை இதழின் நுனியையொத்ததாகவும் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| மற்றொரு கோடியாகிய கணிகை | 0`-1" |
| கீழ் இமை அகலம் | 0'-2½" |

கண் இமையில் 90 ரோமங்கள் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| கேசாந்தமிருந்து புருவத்தின் இருப்பிடம் | 2`-2" |
| புருவ ரேகையிலிருந்து கண் மட்டம் | 2`-2" |
| புருவ ரேகையின் அகலம் | 0`-1" |

நாணேற்றிய வில்லைப்போன்று மூலத்தில் பெருத்து வரவரச் சிறுத்து புருவரேகை அமைய வேண்டும்.

## மூக்கு

| | |
|---|---|
| மூக்கின் அடியகலம் | 0`-4" |
| மூக்கின் நுனி அகலம | 2`-0" |
| மூக்குப்புடை அகலம் | 0`-4" |
| புடை உயரம் | 0`-5" |
| மூக்குத்துளை ஒவ்வொன்றும் | 0`-3" |
| சுவரின் கனம் | 0`-1½" |
| கோஜியிலிருந்து மூக்கின் உயரம் | 2`-3" |
| கோஜியின் நீளம் | 0`-4" |
| மூக்குப் புடையிலிருந்து உதடு வரை | 2`-2" |

## வாய்

| | |
|---|---|
| வாயின் நீளம் | 4`-3" |
| கீழ் உதட்டின் அகலம் | 1`-1" |

| | |
|---|---|
| கீழ் உதட்டின் நீளம் | 2`-0" |
| கீழ் வரிசைப்பற்கள் | 16`-0" |
| மேல் வரிசைப்பற்கள் | 16`-0" |
| மேல் வரிசைப்பற்கள் ஒவ்வொன்றின் நீளம் | 0`-2" |
| அகலம் | 0`-3" |
| கீழ் வரிசைப் பற்களின் நீளம் | 0`-1½" |
| கீழ் விரசைப் பற்களின் அகலம் | 0`-2" |
| நாக்கின் நீளம் | 6`-0" |
| நாக்கின் அகலம் | 3`-0" |

காது

| | |
|---|---|
| காதின் நீளம் | 8`-0" |
| காதின் அகலம் | 2`-0" |

புருவ மேல் மட்டத்திற்குச் சமமாகக் காதின் மேல் மட்டம் அமைதல் வேண்டும். காதுத் தண்டு கத்திரிக்கோலின் கைப்பிடியைப் போல் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| காது மடலின் நீளம் | 4`-0" |
| காதுப்பட்டிகையின் அகலம் | 0`-2" |
| காதுக் கிண்ணத்தின் கனம் | 0`-2" |
| காதுத்தண்டின் கனம் | 0`-3" |
| காதுத்தண்டின் இடைவெளி | 0`-4" |
| பிப்பலி | 0`-4" |

கர்ண சூளிகை லரக வடிவில் இருத்தல் வேண்டும். இது சங்கு போல அமையும்.

| | |
|---|---|
| கடைக்கண்ணிலிருந்து காது மூலம் வரை | 7`-0" |

உடலும், காலும்

| | |
|---|---|
| இரு புயங்களுக்கிடையே புறவாய்க்குப் புறவாய் அகலம் | 40`-4" |
| கக்க அகலம் | 24`-0" |
| மார்பு அகலம் | 21`-0" |
| நடுஉடல் அகலம் | 16`-0" |
| கொப்பூழ் அகலம் | 0`-6" |
| சுரோணி அகலம் | 18`-0" |
| இடுப்பு அகலம் | 22`-0" |

உடல் கோமுக வடிவினதாக இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| நாபி மட்டத்தில் உடலின் சுற்றளவு | 43`-0" |
| சோரோணி மட்டத்தில் உடலின் சுற்றளவு | 50`-0" |
| குய்ய அகலம் | 5`-2" |
| விரைப்பை அகலம் | 4`-0" |
| விரை ஒவ்வொன்றின் அகலம் | 2`-0" |

குறி. மூலத்தில் பருத்து நுனி வரை கரைந்தும் நீலமலரின் மொட்டுப்போன்றும் அமைந்திட வேண்டும்.

தொடை

| | |
|---|---|
| அடித்தொடை அகலம் | 13`-4" |
| நடுத்தொடை அகலம் | 12`-4" |
| கீழ்த்தொடை அகலம் | 9`-0" |
| முழங்கால் அகலம் | 8`-0" |
| முன்கால் அகலம் | 7`-7" |
| முன்கால் நடு அகலம் | 7`-0" |
| கணுக்கால் அகலம் | 5`-0" |
| தொடையின் பின்பக்க நீளம் | 22`-4" |
| முழங்கால் பின்பக்க நீளம் | 4`-0" |
| முன்கால் பின்பக்க நீளம் | 27`-0" |
| பாதத்தின் பின்பக்க உயரம் | 4`-0" |

பாதம்

| | |
|---|---|
| பாத நீளம் | 17`-0" |
| பாத முன் அகலம் | 6`-0" |
| பாத நடு அகலம் | 5`-4" |
| காலிலிருந்து பாதக் களத்தி | 9`-0" |
| பாத உயரம் | 4`-0" |

பாத விரல்கள்

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| கட்டைவிரல் | 4`-0" | 1`-2" |
| இரண்டாம் விரல் | 4`-4" | 1`-0" |
| நடுவிரல் | 3`-0" | 0`-4½" |
| நான்காம் விரல் | 2`-3" | 1`-0" |
| சிறுவிரல் | 2`-3" | 0`-7" |

பாத நகங்கள் அகலத்துக்குச் சம நீளமுடையவை.

நின்ற கோலத்தில் உள்ள முருகன் படிமத்தை இயற்ற மேலும் ஒரு சில நுட்ப அளவுகள்:

| | |
|---|---|
| தொடைகளுக்கிடையே-இடைவெளி | 1`-0" |
| முழங்கால்களுக்கிடையே-இடைவெளி | 2`-0" |
| கணுக்கால்களுக்கிடையே-இடைவெளி | 4`-0" |
| பெருவிரல்களுக்கிடையே-இடைவெளி | 12`-0" |
| முழங்கையிலிருந்து சுரோணி உயரம் | 2`-4" |
| உடல் பக்க நூலிலிருந்து தோள் உயரம் | 7`-0" |
| மணிக்கட்டிலிருந்து தோள் உயரம் | 12`-0" |
| ஸ்தன மத்தியிலிருந்து அபயகரம் முன்னோக்கி இருக்கும் விலக்கம் | 12`-0" |

வரதக் கை நாபி மட்டத்திலிருந்து குய்யம் வரை தொங்க வேண்டும். கேசாந்தமிருந்து மகுடத்தின் சிகாமணி வரை கொள்ளும் உயரம் முக அளவால் 1½ அல்லது 2 பங்காக இருத்தல் வேண்டும். கரங்களில் பிடிக்கும் ஆயுதங்களும் ஒரு முக அளவிருத்தல் வேண்டும்.

### கைகள்

| | |
|---|---|
| தோள் மட்டமிருந்து மேற்கை நீளம் வரை | 27`-0" |
| முழங்கை நீளம் | 2`-0" |
| முன்கை நீளம் | 21`-0" |
| கைத்தலமும் விரலும் சேர்ந்து | 13`-4" |
| கைத்தலம் மட்டும் நீலம் | 7`-0" |
| நடுவிரல் நீளம் | 6`-4" |
| கைத்தல அகலம் | 6`-4" |
| கைத்தல அடிப்பகுதியின கனம் | 2`-4" |
| கைத்தல மேற்பகுதியின் கனம் | 1`-6" |

### விரல்கள்

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 4`-2" | 1`-2" |
| சுட்டுவிரல் | 5`-2" | 0`-8" |
| நடுவிரல் | 6`-4" | 0`-9" |
| அணி விரல் | 5`-2" | 0`-8" |
| சிறுவிரல் | 4`-1" | 0`-6" |

விரல் அகலத்தில் 7/8 பங்கு விரலின் நுனி அகலமாகும்.

விரல் அகலத்தில் 2/3 பங்கு விரலின் நக அகலமாகும்.

பெருவிரலுக்கு இரண்டு கணுக்களும், மற்றைய விரல்களும் மூன்று கணுக்களும் உண்டு.

## உத்தம தசதாளம்—பௌத்த சமணப் படிமங்கள்

### பௌத்தப் படிமங்கள்

கௌதம புத்தரின் திரு உருவத்தை உத்தம தசதாளத்தில் இயற்றுதல் வேண்டும்.

### புத்தர் படிமம்

புத்தருடைய திருவுருவம் பரந்த முகமும், நீண்ட கண்களும், எடுப்பான மூக்கும், தொங்கிய காதுகளும், முறுவலித்த இதழும், கொண்டிருத்தல் வேண்டும். கைகள் பருத்தும், நீண்டுமிருத்தலும் வேண்டும். மார்பகத்தை அழகுமிக்கதாய் அமைத்தல் வேண்டும். உடல் உறுப்புகள் அனைத்தும் உருண்டு திரண்டு சதைப் பற்றோடு கூடியதாயும், வயிறு துலக்கமாக விளங்குவதாயும், இருத்தல் வேண்டும். மேனி வெண்ணிறமாகவும் புருவங்களுக்கிடையில் ஊர்ணா எனப்படும் பொட்டுப் போன்ற புடைப்பினையும் கொண்டிருத்தல் வேண்டும்.

மேலும், இரண்டு கைகள், இரண்டு கண்கள், சுருண்ட கேசமும், குமிழிகள் போன்று சுருண்டு அடர்ந்த கொண்டையும், இடுப்பில் மஞ்சள் பட்டாடையும், இடது தோளிலிருந்து வலது இடுப்பு வரை சென்று முதுகைச் சுற்றி, மீண்டும் இடது தோளில் கிடத்திய மேலாடையும், மேலாடையின் தலைப்பைக் கொய்து சிறிது முன்புறம் தொங்கியதாகவும் கொண்டு இப்படிமத்தை இயற்றுதல் வேண்டும்.

### புத்தரின் முப்பெரும் படிம அமைதிகள்

புத்தர் படிமத்தை நின்ற கோலத்திலாதல், அமர்ந்த கோலத்திலாதல், கிடந்த கோலத்திலாதல் இயற்றுதல் மரபு. பின்னணியில் போதி (அரச) மரம் அல்லது கற்பகத்தருவை அமைத்தல் வேண்டும். சிம்மாசனத்தில் அமர்ந்திருக்குமாறும் இயற்றலாம். மேலும், புத்தர் படிமங்கள் அமர்ந்த கோலத்தில் மூன்று விதமான கை முத்திரைகளைக் கொண்டு விளங்கும். அவை முறையே (புத்த நெறியை விளக்கும்) தர்ம சக்கர முத்திரையும், தியான முத்திரையும், பூஸ்பரிச முத்திரையும் ஆகும்.

அமர்ந்த கோலத்தில் மூன்று விதப்படிமங்கள் மிக முக்கியமானவை. பத்மாசனத்தில் கோலித்து, மார்பிலே தர்ம சக்ர பிரவர்த்தன முத்திரையைப் பிடித்து, கண்களைத் தியான நிலையில் சிறிது மூடி பத்ம பீடத்தில் அமர்ந்த நிலையில் இருப்பது முதலாவது படிமம் ஆகும். புத்தர் ஞானம் பெற்றபின் முதலில் தனது கொள்கை விளக்கத்தைச் செய்த நிலை இதாகும்.



அமர்ந்த கோலப் புத்தர் படிமம்

பத்ம பீடத்தில் அமர்ந்து பத்மாசனத்தில் ஆழ்ந்து, இரண்டு கைகளையும் மடியில் ஒன்றன் மீது மற்றொன்றை வைத்து தியான நிலையில் உள்ள படிமம் இரண்டாவதாகும். பின்னணியில் ஞான ஒளியைக் காட்ட, சுடரோடு கூடிய பிரபா மண்டலமும் அதன் மீது குடையும் அமைந்திருக்கும்.



தியானக் கோல புத்தர் படிமம்

இதற்குப் பின்னணியில் கற்பகத் தருவை அமைத்தல் வேண்டும். இரு மருங்கிலும் சாமரம் வீசுவோர் நின்றிருக்கவும் வேண்டும்.

பத்மபீடத்தில், பத்மாசனக் கோலத்தில் இடது கையை மடியில் வானோக்கியவாறு வைத்துத் தியான நிலையை உணர்த்தி, வலது கையை வலது கால் மீது நீட்டி வைத்து, தளிர் போல் கைத்தலத்தைத் தொங்கவிட்டு பூமியைத் தொடுவது போல் அமைத்த முத்திரை காட்டி இடது கரத்தில் கொய்த ஆடையைப் பிடித்து வரத முத்திரையையும் சேர்த்துக் காட்டி அமைத்தல் வேண்டும். முகத்தில் மலர்ச்சியும், கருணையும், ததும்ப இக்கோலத்தை இயற்றிடல் வேண்டும். புத்தர் படிமத்தில் இஃதும் ஒரு முக்கிய கோலமாகும்.



நிலத்தைத் தொட்டமர்ந்த கோலம்

பூஸ்பரிச முத்திரையோடு வீற்றிருக்கும் நிலை புத்தரின் மூன்றாவது திருக்கோலமாம்.

நின்ற கோலத்தில் காற்பரடு வரை தொங்கிய ஆடையுடுத்தி வலது கரத்தில் அபய

கிடந்த கோலமானது புத்தரின் மகாபரி நிர்வாணக் கோலத்தைக் காட்டும்.



நின்ற கோலப் புத்தர்

### பௌத்தப்படிமங்கள்

பௌத்தர்கள் ஆதி அந்தமில்லா ஐம்பெரும் பூதங்களால் இவ்வுலகம் ஆக்கப்பட்டிருக்கிறது என்ற கொள்கையுடையவர்கள். அவை முறையே ரூபம், வேதனம், சம்ஞை, சம்ஸ்காரம், விஞ்ஞானம் என்று சொல்லப்படும்.

இந்துமதக் கொள்கையில் எங்ஙனம் குணம், குறி, காலம், கடந்த ஒன்று *பிரம்மம்* என்று கொள்ளப்படுகிறதோ அங்ஙனமே பௌத்தமதக் கொள்கையில் *சூன்யம்* என்பதையே இறுதி நிலையாகக் கொண்டனர். அதாவது காண்பான், காணப்படு பொருள் ஆகிய இரண்டுமற்ற நனவு நிலைக்கே உருவ விளக்கம் கூறி ஆதி புத்தர் என்ற வடிவத்தைத் தோற்றுவித்தனர் பௌத்தர்கள். இவருக்கு *வஜ்ரதரர்* என்ற மற்றொரு பெயருமுண்டு. இவர் எப்பொழுதும் தியான நிலையிலேயே மூழ்கியிருப்பார். இவரை சுயம்பு மூர்த்தி என்றும் கொண்டனர்.

இவ்வடிவம் பத்ம பீடத்தில், பத்மாசனக் கோலத்தில் அமர்ந்து, இரு கைகளையும், மார்பையொட்டி ஸ்வஸ்திகமாகக் குறுக்கே வைத்து வலது இடது கரங்களில் முறையே வஜ்ரம், மணி ஆகிய இவ்விரண்டு சின்னங்களையும் பிடித்து, அணிகள் சூட்டப்பட்டதாயும் தியானத்தில் ஆழ்ந்ததாயும் அமைக்கப்படும். இஃதே *ஆதிபுத்தரின்* திருக்கோலமாகும்.

இந்த ஆதிபுத்தரிலிருந்து ஐந்து தியானி புத்தர்கள் தோன்றினர். வைரோசனன், அமிதாபன், அமோகசித்தி, அக்ஷோப்யன், ரத்ன சம்பவன் என்பன அவர்தம் பெயர்கள். மேற்குறிப்பிட்ட ஐம்பெரும் பூதங்களே இவ்வுருங்களால் விளக்கப்படுகின்றன. இவ்வைந்து புத்தர்களும் தியானத்திலேயே ஆழ்ந்திருப்பதால் தியானிபுத்தர்கள் எனப்பட்டனர். இவர்கள் ஒவ்வொருவரிடமிருந்து *போதி சத்துவர்* என்போர் தம்தம் சக்திகளுடன் தோன்றினர். இவர்களே உலக சிருஷ்டியினைக் கவனிப்பவர்கள். இவர்களை தியானி போதி சத்வர்கள் என்றும் அழைப்பதுண்டு.

இவ்வைந்தையும் ஒரே வடிவத்தில் வைத்துக் காட்டி அப்படிமத்தை *வஜ்ரசத்வர்* என்பர் பௌத்தர்.

தியானி புத்தர் வடிவம், அமர்ந்த நிலையில், பத்மாசனக் கோலத்தில் இரண்டு கைத்தலங்களையும் மேல் நோக்கியவாறு வைத்து தியான பாவனையில் இருக்கும். மூக்கின் நுனியைப் பார்த்தவண்ணம் கண்கள் அரையளவு மூடியும் இருக்கும். கழுத்திலிருந்து கணுக்கால் வரை பரவிய ஆடையுடுத்தியும் இருத்தல் வழக்கு. வலது மார்பை ஆடையால் மூடுதல் கூடாது.

ஐந்து தியானி புத்தர் படிமங்களும் ஒரே வடிவமைதி கொண்டமையால் அவர்களைக் கண்டறிதற்கு அவரவர்க்குரிய அடையாளங்களைப் பொறித்தல் வேண்டும். எனவே, அமிதாபனுக்குத் தாமரையும், அக்ஷோப்யனுக்கு வஜ்ரமும், ரத்ன சம்பவனுக்கு ரத்னமும், அமோக சித்திக்கு இரட்டை வஜ்ரமும், வைரோசனனுக்கு சக்கரமும் அடையாளங்களாம்.

அவரவர் சக்திகளுக்கும் அதே சின்னங்களை உபயோகித்தல் வேண்டும்.

## போதிசத்துவர்கள்

போதி என்பது ஞானம். சத்வம் என்பது சாரம் ஆகும். எனவே போதிசத்துவர்கள் என்போர் சத்தான ஞானத்தை உடையவர் ஆவர். போதிசத்துவர்கள் தியானி புத்தர்களிடமிருந்து தோன்றியவர்கள். சமந்தபத்ரர், வஜ்ரபாணி, ரத்னபாணி. பத்மபாணி, விஸ்வபாணி ஆகிய போதிசத்துவர்கள் முறையே வைரோசனர். அக்ஷாப்யர் ரத்ன சம்பவர், அமிதாபர், அமோகசித்தி ஆகியோரிடமிருந்து தோன்றியவர்கள். பத்ம பாணியே அவலோகி தேஸ்வரர் என அழைக்கப்படுகிறார். மற்றொரு முக்கிய போதிசத்துவர் மஞ்சுஸ்ரீ எனப்படுவார். இவ்விருவர்களின் வடிவங்கள் மிகச் சிறப்பு வாய்ந்தவை.

போதிசத்துவர்களின் பிரதிகளாக மானுஷ புத்தர்கள் தோன்றுகின்றனர் என்பது பௌத்தர்கள் கொள்கை. அத்தகைய மானுஷ புத்தர்கள் ஐவர் ஆவர். அவர் புத்தருக்குரிய முப்பத்திரண்டு அங்க இலக்கணங்களைக் கொண்டு விளங்குவர் என்பர் பௌத்தர். இதில் உஷ்ணீசம், புருவங்களுக்கு இடையே தோன்றிய ஊர்னா என்ற புடைப்பு (அல்லது வெள்ளை உரோமம்) தொங்கு காதுகள் முக்கிய அம்சங்களாம். மானுஷ புத்தர்களில் மிக முக்கியமானவரே கௌதம புத்தராவர். இவர் நான்காவது மானுஷ புத்தர் ஆவார். இனித் தோன்றக்கூடியவர் ஐந்தாவது மானுஷ புத்தர். இவர் மைத்ரேயன் எனப்படுவார்.

## சமணப் படிமங்கள்

சமண மதத்தை வளர்த்த பெரியார்கள் தீர்த்தங்கரர் எனப்படுவர். இவர்கள் இருபத்து நான்கு பேர்களாவர். இவ் வரிசையில் கடைசி தீர்த்தங்கரரே மகாவீரர் ஆவர். இம் மதத்தை ரிஷப தேவர் அல்லது ஆதிநாதர் என்ற முதலாவது தீர்த்தங்கரர் தோற்றுவித்தார்.

ஜினதேவனின் படிமத்தை இரண்டு கைகளையும், இரண்டு கண்களையும், தொங்கிய காதுகளையும், வழுக்கைத் தலையினையும், உடையதாய் நின்ற கோலத்திலோ அல்லது அமர்ந்த கோலத்திலோ அமைத்தல் வேண்டும். நின்ற நிலையில் பாதங்கள் சமமாகவும், கைகள் உடலைத் தொடாமல் நேராகத் தொங்கியும் இருத்தல் வேண்டும்.

அமர்ந்த கோலப் படிமமானால், அதனைப் பத்மாசனக் கோலத்தில் அமர்த்தி நேராக நிமிர்ந்து பரம்பொருளைத் தியானிக்கின்ற யோக நிலையைக் காட்டுவதாக அமைத்தல் வேண்டும். இரு கைகள் குய்யத்திற்கருகில் வைக்கப்பட்டு கைத்தளங்கள் ஒன்றன்மீதொன்று வானோக்கி அமையுமாறு செய்தல் வேண்டும்.



ஜின தேவன் படிமம்

படிமம் நின்ற நிலையில் இருப்பினும், உட்காந்த நிலையில் இருப்பினும் சிம்மாசனத்தின் மீதே அமைத்தல் வேண்டும். தலைக்குமேல் பின் அணியில் மகர தோரணத்தைச் செய்து கற்பகத் தருவையும், ஐராவதம் என்ற யானைகளையும் அமைத்தல் வேண்டும். ஒருபுறத்தில் நாரதர் முதலிய மகரிஷிகளையும், மனைவிகளுடன் கரங் குவித்து வணங்குகின்ற தேவர்களையும் மற்றொரு புறத்தில் யக்ஷர்களையும் வித்யாதரர் களையும், அரசர்களுடைய சக்கரங்களையும், அமைத்திட வேண்டும். நாகராசன், திக்பாலகர்கள் ஆகியோரை சாமரம் வீசுகின்றவர்களாய்க்

கற்பித்தல் வேண்டும். மேலும் இருபக்கங்களிலும் அரக்கர்களின் தலைவனையும், யக்ஷர்களின் தலைவனாகிய குபேரனையும் அமைத்தல் வேண்டும்.

சமணப் படிமங்களில் ஆடைகளையோ, அணிகளையோ அமைத்தல் ஆகா. மார்பின் நடுவில் பொன்னிறமான ஸ்ரீவத்ஸம் என்ற முக்கோண அமைப்புடைய மருவைப் பொறித்தல் வேண்டும். இத்தகைய ஜினதேவனின் படிமத்தை உத்தம தசதாளத்தில் இயற்றுதல் வேண்டும்.

ஆதிநாதர் தொடங்கி மகாவீரர் வரையிலும் உள்ள இருபத்தினான்கு தீர்த்தங்கரர்களை உத்தம தசதாளத்தில் ஒரே வடிவாகச் செய்தல் வேண்டும். அவர்களுக்கு அமைக்கப்படும் பீடத்தில் அவரவர்க்குரிய சின்னத்தைக் காட்டுதல் வேண்டும். படிமங்கள் அனைத்தும் ஒன்று போல் மற்றொன்று அமைவதால் குறிப்பிட்ட அடையாளத்தை வைத்தே அவரது பெயரை அறிதல் வழக்கு. எல்லோருக்கும் ஸ்ரீவத்ஸ மருவும், தலைக்கு மேல் முக்குடைகளும் இருத்தல் வேண்டும்.

இருபத்தினான்கு தீர்த்தங்கரர்களில் முதல்வரான ஆதிநாதருக்குரிய சின்னம் காளையும், தர்ம சக்கரமும் ஆகும். மேலும் ஆதிநாதருக்கு யானையும், சம்பவநாதருக்குக் குதிரையும், அபிநந்தநாதருக்குக் குரங்கும், சுமதிநாதருக்குச் சக்கரவாகமும், பத்மப்பிரபருக்குச் செந்தாமரையும், சுபாஸ் நாதருக்கு ஸ்வஸ்திகமும், சந்திரப் பிரபாவுக்கு பிறைமதியும், புஷ்பநாதருக்கு மகரமும், சீதளநாதருக்குக் கற்பகத்தருவும், ரேயம்சுநாதருக்கு மானும், வசுபூஜ்யருக்கு எருமையும், விமலநாகருக்குப் பன்றியும், அனந்தநாதருக்குக் கரடியும், தர்மநாதருக்கு வஜ்ராயுதமும், சாந்திநாதருக்கு முதலையும், குந்துநாதருக்கு ஆடும், அரநாதருக்கு மீனும், மல்லிநாதருக்கு நீர்க்குடமும், முனீசுவர நாதருக்கு ஆமையும், நமிநாதருக்கு நீலோத் பலமும், நேமிநாதருக்குச் சங்கும், பார்ஸ்வ் நாதருக்குப் பாம்பும், மகாவீரருக்குச் சிம்மமும் சின்னங்களாம்.

மேற்கண்ட இருபத்தினான்கு தீர்த்தங்கரரை விடுத்து, கோமதீஸ்வரர் என்ற சமணப் பெரியாரின் படிமமானது மிகவும் போற்றப்படும் ஒன்றாகும். இவர் முதலாவது தீர்த்தங்கரரான ரிஷப தேவரின் இளைய மகன், இளவரசனான இவர் சமணத்துறவு மேற்கொண்டவர். கர்நாடகத்தில் சிராவணப் பெல்கோலா என்னுமிடத்தில் இவரது பேருருவம் உளது. ஆடை இன்றிக் காயோத்சர்கமென்ற நின்ற கோலத்தில் இவரது படிமம் அமைதல் வேண்டும். தலையில் சுருண்ட கேசத்தை அமைக்கலாம். உலக நினைவை அறவே ஒழித்த நிலையினைக் காட்ட அவரது உடலைக் கொடிகள் சுற்றிச் செல்வதாகக் காட்டுதல் வேண்டும்.

1. 12'-0" சாரஸ்வதீயம்;
   12'-4" காஸ்யபம்
   காதுகளுக்கு மேல் தலை அகலம் 11'-7"
2. 13'-4" சகளாதிகாரம்;
   13'-0" காஸ்யபம் சில்பரத்னம்
3. 36-சில்பரத்னம், சாரஸ்வதீயம்
4. சிரோமத்யச் சுற்று 21'-4" சாரஸ்வதீயம்
5. 12'-4" சாரஸ்வதீயம்
6. காரணாகமம், 12'-0" சாரஸ்வதீயம்
7. 9'-4" சாரஸ்வதீயம், காஸ்யபம்
8. 8'-4" சாரஸ்வதீயம், 9'-4" சில்பரத்னம்
9. 4½ யவை-காஸ்யபம், சில்ப ரத்னம்
10. 0'-2" சில்ப ரத்னம்
11. ½ யவை-காஸ்யபம், சில்பரத்னம்
12. ஆத்ரேய திலகம்
13. 1½" சில்பரத்னம்
14. 1½" சில்பரத்னம்
15. அஜிதாகமம்.90
16. காஸ்யபம்: கண் மூடியிருப்பின்
    மேல் இமை அகலம் 1'-5"
    கீழ் இமை அகலம் 1'-5"
    பிராம்மீயம்: திறந்திருப்பின் மேல் இமை அகலம் 0'-4"
    கீழ் இமை 0'-2½"
17. 2'-0" அஜிதம், புருவ நீளம் 6"-காரணாகமம்
18. கோஜி என்பது மேலுதட்டின் நடுவில் மூக்குச் சுவரின் கீழ் உள்ள குழிந்த பகுதி
19. 4'-0" மானசாரம், அஜிதம்
20. 0'-6" மானசாரம்
21. 3'-0" மானசாரம்
22. பாலிகை
23. சாரஸ்வதீயம் 0'-1½"
24. உதட்டின் கீழ், மோவாய்ப் பள்ளம் 0'-8½"
25. 3'-4" மானசாரம்
26. 10'-0" மானசாரம்
27. சாரஸ்வதீயம்
28. சாரஸ்வதீயம்
29. காரணாகமம்
30. 4'-4" சில்பரத்தினம்
31. 2'-2" சில்பரத்தினம்
32. 2'-2" சில்பரத்னம்
33. 4'-0" காரணாகமம், 4'-4" சில்பரத்னம்
34. 0'-4" சில்பரத்னம்
35. சில்பரத்னம்
36. சில்பரத்னம்
37. சில்பரத்னம்
38. சாரஸ்வதீயம்
39. சில்பரத்னம்

40. 12'-0" சகளாதிகாரம், 9'-4" சாரஸ்வதீயம்

41. 9'-4" சில்பரத்னம், 8'-4" சாரஸ்வதீயம்

42. 6'-4" சில்பரத்னம்

43. 43'-0" சாரஸ்வதீயம்

44. 9'-4" சில்பரத்னம்; பூர்வகாரணம்

45. 22'-4" சில்பரத்னம்; 24'-0" பூர்வகாரணம்

46. 21'-4" சில்பரத்னம்; 24'-4" சாரஸ்வதீயம்

47. 19'-0" சில்பரத்னம்; சாரஸ்வதீயம்

48. 16'-4" சில்பரத்னம்

49. 19'-0" சில்பரத்னம்
18'-0" சில்பரத்னம்
17'-4" பூர்வகாரணம்

50. அகலம் 0'-6"
ஆழம் 0'-2'; பூர்வகாரணம்

51. 20'-4" சில்பரத்னம்
மேல் 20'-0"; கீழ் 22'-0" காரணம்

52. சில்பரத்னம் 5'-4" சாரஸ்வதீயம்;

53. 4'-4" சில்பரத்னம், சாரஸ்வதீயம்;
4'-0" பூர்வகாரணம்

54. பூர்வகாரணம்; 3'-0" சாரஸ்வதீயம்

55. 8'-3" சில்பரத்னம்,

56. 7'-2" சில்பரத்னம்,

57. 5'-6" சில்பரத்னம்,

58. 3'-6" சில்பரத்னம்,

59. 1'-0" சில்பரத்னம்,

60. ரேகைகளை பொறிக்க வேண்டும். சில்பரத்னம்,

61. 1'-4" சில்பரத்னம்

62. 6'-4" சில்பரத்னம்

63. சகளாதிதகாரத்தில் இவை இல்லை. அகல அளவுகள் சில்பரத்னப்படியே

64. 4'-4" சில்பரத்னம்

65. விரல் அடி அகலத்தில் 16ல் 15 நுனி அகலம். அதில் 6ல் 5 நக அகலம், நக அகலத்தால் 1¼ மடங்கு நக நீளம் (சில்பரத்னம்)

66. 2'-2" சில்பரத்னம், காஸ்யபம்

67. 3'-4" சில்பரத்னம்

68. 13'-6" சில்பரத்னம்

69. 8'-6" சில்பரத்னம்; 9'-2" சாரஸ்வதீயம்

70. 7'-2" சில்பரத்னம்

71. 5'-2" சில்பரத்னம்
6'-6" சகளாதிகாரம்
7'-0" சாரஸ்வதீயம்

72. 4'-6" சில்பரத்னம்

73. 5'-3" சில்பரத்னம்; 5'-0" சாரஸ்வதீயம்

74. 6'-2" சில்பரத்னம்
7'-0" முன்பாதம் சில்பரத்னம்
7'-4" சாரஸ்வதீயம்

75. சாரஸ்வதீயம்
கட்டை விரல் நீளம் 4'-0" அகலம் 2'-0"

76. 2வது விரல் நீளம் 4'-2" அகலம் 0'-9"

77. 3வது விரல் நீளம் 3'-4" அகலம் 0'-8½"

78. 4வது விரல் நீளம் 3'-0" அகலம் 0'-8"

79. 5வது விரல் நீளம் 2'-4" அகலம் 0'-7"

80. சில்பரத்னம்

81. 9'-6" சில்பரத்னம்

82. சில்பரத்னம் 20'-4"

83. சில்பரத்னம் 0'-4"

84. விமானார்சனக் கல்பம் என்ற மரீசி சம்ஹிதை பிராம்மீயம்

85. சைவப் படிமங்களில் இருந்து மாறுதல் 27'-0" சகளாதிகாரம்

86. 4'-3" சகளாதிகாரம்

87. 27'-0" சகளாதிகாரம் 26'-5" ஆக இருத்தல் வேண்டும். சாரஸ வதீயம் 26'-5" ஆகும்.

88. 4'-0" சகளாதிகாரம்

ஒப்பு நோக்குதல்

இந்த உயரக்கணக்கில் தொடை நீளமும், முட்டி நீளமும் வேறு பட்டுள்ளன. முட்டிகள் கனமாக உள்ளன. கால் சிறிது குட்டையும் கூட. குய்யத்திற்கு மேல் அளவில் வேறுபாடு இல்லை.

89. சைவப் படிம முக அகலம் 13'-0" (அல்லது 13'-4" இங்கு கண்ட 14'-0" மிகப்பெரிய விசாலமான முகத்தைத் தோற்றுவிக்கும்.)

90. பிராம்மீயம்

91. 2'-2" பிராம்மீயம்

92. பிராம்மீயம்

93. பிராம்மீயம்

94. பிராம்மீயம்

95. 4'-11/2" பிராம்மீயம்

96. 9'-4" பிராம்மீயம்

97. 8'-1" பிராம்மீயம்

98. 7'-0" பிராம்மீயம்

99. 5'-0" பிராம்மீயம்

100. 3'-4" பிராம்மீயம்

101. 3'-0" பிராம்மீயம்

102. 2'-11/2" பிராம்மீயம்

103. 43'-4" பிராம்மீயம்

104. 22'-6" பிராம்மீயம்

105. 18'-4" பிராம்மீயம்

106. 13'-4" பிராம்மீயம்

107. 12'-0" பிராம்மீயம்

108. பிராம்மீயம்

109. 3'-0" பிராம்மீயம்

110. பிராம்மீயம்

111. 4'-2" பிராம்மீயம்

112. 3'-4" பிராம்மீயம்

113. 3'-0" பிராம்மீயம்

114. 2'-0" பிராம்மீயம்

115. 9'-4" பிராம்மீயம்

116. குமாரதந்த்ரம்

117. குமாரதந்த்ரம்.

# 25

# மத்திம தசதாளம்



## மத்திம தசதாளம்–பெண்மானம்

உத்தம தசதாளமானம் ஆண் படிமங்களுக்கே உரித்தாக்கப்பட்டிருக்கிறது. ஆனால் மத்திம தச தாள மானத்தில் ஆண் படிமங்களையும், பெண் படிமங்களையும் இயற்ற வேண்டியிருப்பதால் ஆண்மானம் என்றும், பெண்மானம் என்றும் இருவகை அளவுகள் உள. உடலமைப்பில் ஆண்களும், பெண்களும் வேறுபட்டிருப்பதால் மானங்கள் தனித்தனியே கொடுக்கப் பட்டிருக்கின்றன.

பொதுவாக மத்திம தசதாளம் சக்தி வடிவங்களான பெண் படிமங்களுக்கே உரித்தாக்கப் பட்டிருக்கிறது. பிரம்மா, விஷ்ணு, மகேசுவரன் ஆகிய தெய்வங்களின் சக்திகளை இத்தாளத்தில் இயற்ற வேண்டும். ஆனால் விஷ்ணுவின் அவதார மூர்த்தங்களான இராமன் போன்ற மூர்த்திகளையும் மத்திம தசதாளமானத்தில் இயற்ற வேண்டுமென்று வைணவ நூல்கள் கூறும்.

மேலும் ஓர் ஆண் படிமத்தை ஒரு குறிப்பிட்ட தாளத்தில் இயற்றினால் அப்படிமத்தோடு தொடர்புடைய பெண் படிமத்தை அதற்கு அடுத்துக் கீழுள்ள தாளமானத்தில் இயற்ற வேண்டுமென்ற ஒரு பொது விதியும் உண்டு. இதனாலும் ஒரே தாளத்தில் ஆண்படிமங்களும், பெண் படிமங்களும் ஏற்படக்கூடுமல்லவா?

## உடலுறுப்புகளின் சாயல்கள்

சொல்லால் ஓவியம் தீட்டும் கவிஞனும், கல்லிலே கவிதை வடிக்கும் சிற்பியும் ஒரே இலக்கண இலக்கிய மரபைச் சேர்ந்த இரட்டையர்கள். இருவரும் இயற்றுவது கவிதையே.

இருவரும் கண்டதைக் கண்டபடி-இயற்கையில் உள்ளபடி-சொல்வதும், செய்வதும் இல்லை. தாங்கள் கண்ட காட்சியினை, அதனால் அகத்தில் எழுந்த ரசத்தை அனுபவித்து அந்த அனுபவத்தின் வெளிப்பாடாக-உள்ளுணர்வின் வடிவமாக-புறத்தே சொல்வழி ஒருவரும், கல்வழி மற்றொருவரும் கவிதையைப் படைத்து விடுகின்றனர். நமது நாட்டு நுண்கலைகள் அனைத்தும் காவிய மரபின. கவிதையும், இசையும் செவிவழி நுகரப்படுவன- ஓவியமும், சிற்பமும், நாட்டியமும் கண்வழி பருகப்படுவன.

அறம், பொருள், இன்பம், வீடு, அடைதல் நூற்பயன் மட்டுமல்ல; எல்லாக் கலைகளின் பயனும் அவையே. வீடுபேறு பெறுதலையே இலட்சியமாகக் கொண்டு நம் கலைகள் யாவும் விளங்குகின்றன.

கவிஞனது உள்ளமும், சிற்பியினுடைய உள்ளமும் ஒரே தன்மையின. சிந்தனை ஓட்டமும், செயல் திறனும் ஒன்றே. ஓர் உதாரணத்தின் மூலம் இதனை விளக்குவோம்.

தலையை ஒழுங்காக வாரி அழகு சாதனங்களால் ஒப்பனைச் செய்துகொண்டு பொலிவுடன் மிளிரும் பெண் ஒருத்தியின் முக வசீகரத்தைவிட, தலையில் கேசங்கள் சுருண்டும், கலைந்தும் அமைந்த முகவிலாசம் கலைஞனின் உள்ளத்தில் கவிதை ஊற்றைத் தோற்றுவிக்கிறது. ஒளி மிகுந்த முகமண்டலத்தையும், சுருண்ட கேசங்களையும் பார்க்கின்ற கவிஞன் உவமை அணிகளால் தனது உணர்வை அழுகு பட சித்தரித்து விடுகிறான். முகத்தை மலராகவும், சுருண்ட கேசங்களை வண்டுகளாகவும் அவனது அகக்கண்கள் கண்டு ரசிக்கின்றன. கவிதை பிறந்து விடுகின்றது. சொல்லே கலையின்பத்தைத் தோற்றுவித்து விடுகிறது.

இதே உணர்வைத்தான் சிற்பக் கலைஞனும் அடைகிறான். ஆனால் ஒரு படி மேலே சென்று. அவ்வுணர்வுமயமான வடிவத்தை கட்புலனாகும் படி கல்லிலே காட்டிவிடுகிறான். மலர்ச்சியான முகத்தைச் செதுக்கி, நெற்றி விளிம்பில் கேசங்களைச் சுருட்டியமைத்து, காவிய இன்பத்தை அளித்து விடுகிறான். இதில் இயற்கையான முகமும் உண்டு; சுருண்ட கேசங்களும் உண்டு. வடித்தெடுத்தப் படிமத்தில் முகம் மலராகவும். சுருள்கள் வண்டுகளாகவும் தோன்றுமாறு செய்துவிடுகிறான். இவ்வுணர்வு சாஸ்வதமானது; என்றென்றும் மாறாத புதுமையோடு விளங்குவது. நீங்காத இன்பத்தைத் தருவது. எனவே கலை நூலாசிரியர்கள், இக் காட்சிகளை முறைப்படுத்தி இலக்கணமாக வழங்கி உள்ளார்கள். அளவு முறையும் இதற்குத் துணைபுரிகின்றது. நூலில் அளவும், அணிகளும் விரல் கணக்கிலேயே சொல்லப்படும்.

இத்தகைய கலையின்பத்தைத் தோற்றுவிக்கும் பணியில் உவமை அணிகள் பெரும் துணையாகும். உவமை ஒருபுடை ஆதலால் அப்படியே கொள்ளாமல், அதன் தன்மையினை, அவ்வுவமை தோற்றுவிக்கும் எண்ணப்பாட்டை சிற்பிகள் சாயல் என்று கூறுவர். இத்தகைய சாயல்களின்-உணர்வுகளின்-திரட்சியே நம் நாட்டுச் சிற்பச் செல்வங்கள். செவி வழிச் சென்று சிந்தையைக் கவரும் இசையே கட் புலனாகும்படி கல்லாய் உறைந்து கருத்தை ஈர்த்து நிற்கும் சிற்பமாகச் செழித்துள்ளது.

இனி உறுப்புகளையும் அவற்றின் சாயல்களையும் காண்போம்.

| உறுப்புகள் | சாயல்கள் |
|---|---|
| சுருண்ட தலை முடி | வண்டுக் கூட்டம், கூந்தற் பனை |
| தலைப்பின்னல் | கரும்பாம்பு-வண்டுகளின் வரிசை |
| நெற்றி | பிறை-அட்டமிப்பிறை |
| புருவம் | வில் |
| கண்கள் | குவளை மலர், தாமரை, அம்பு, வேல், கெண்டை மீன் |
| மூக்கு | எள்ளுப்பூ |
| மூக்குப்புடை | பாகல் விதை |
| முகம் | முழுமதி, மலர்ந்த தாமரை. முட்டை வடிவம், எள்ளின் வடிவம், மாங்காய் வடிவம் |
| காது | சங்கு, கத்தரி, விதை நீங்கிய (மொச்சை) தோலுறை |
| உதடு | கோவைப்பழம் (நிறம்) |
| பல் | முத்து, முல்லையரும்பு |
| முகவாய் | முத்துச் சிப்பி |
| கழுத்து | வலம்புரிச் சங்கு, கமுகு |
| தோள் | மூங்கில், கரும்பு |
| முன் கை | மகர வீணை-மூங்கில் |
| மேற்கையும் முன்கையும் சேர்ந்தால் | பனங்கிழங்கு-பசுவின் வால், பனை |
| கை விரல் | களிற்று மீன், காந்தள் மலர் |
| நகம் | கிளி மூக்கு, பிறைமதி |
| ஸ்தனம் | பூச்செண்டு, நீர்க்குமிழி, குறும்பை சொற்கேட்டான் காய், தாமரை மொக்கு, இளநீர், யானை மத்தகம், செப்பு |
| உடல் | சிங்க முகம் |
| முலைக்கண் | நவமணி |
| வயிறு | ஆலிலை |
| நாபி | நீர்ச்சுழி |

| உறுப்புகள் | சாயல்கள் |
|---|---|
| வயிற்றின் மடிப்பு | அலை |
| இடுப்பு | துடி, வச்சிரப் படை |
| நிதம்பம் (அல்குல்) | அரசிலை, பாம்பின் படம் |
| ஜகனம் (புட்டம், குண்டி) | மணல்மேடு |
| தொடை | வாழைத்தண்டு, யானைத் துதிக்கை |
| முழங்கால் | நண்டு |
| கணைக்கால் | விரால் மீன், அம்பாரத்தூணி |
| பாதம் | ஆமை |
| கால்விரல் | அட்டை |
| நடை | அன்னம் |
| முழுத்தோற்றம் | மயில் |

| | | |
|---|---|---|
| உயரக் கணக்கு[1] | | |
| தலை உச்சி முதல் முடி எல்லை வரை[2] | | 4'-0" |
| முடியிலிருந்து கண்மட்டம் வரை[3] | 4'-6" | |
| கண்மட்டத்திலிருந்து மூக்குப்புடை வரை[4] | 4'-4" | 13'-0" |
| மூக்குப்புடையிலிருந்து மோவாய் வரை[5] | 3'-6" | |
| மோவாய் முதல் அடிக்கழுத்து வரை[6] | | 4'-0" |
| அடிக்கழுத்து மட்டத்திலிருந்து மார்பு வரை | | 13'-0" |
| மார்பு முதல் கொப்பூழ் வரை | | 13'-0" |
| கொப்பூழிலிருந்து யோனி (அரை) வரை | | 13'-0" |
| தொடை நீளம் | | 26'-0" |
| முழங்கால் மூட்டு | | 4'-0" |
| முழங்கால் நீளம் | | 26'-0" |
| தாள் உயரம் | | 4'-0" |
| | | 120'-0" |

## தலையும் கழுத்தும்

### முகம்

| | |
|---|---|
| முகத்தின் உயரம்[7] | 13'-0" |
| அகலம்[8] | 11'-0" |

முகம் கோழி முட்டையின் சாயலையும் திரட்சியையும் ஒத்ததாய் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| ஒரு காதிலிருந்து மற்ற காது வரை முகத்தின் முன்பக்கச் சுற்றளவு[9] | 20'-0" |
| தலை உச்சியிலிருந்து முன்பக்கக் கேசாந்தம் நீளம்[10] | 7'-0" |
| தலை உச்சியிலிருந்து பின்பக்கக் கேசாந்தம் நீளம்[11] | 9'-0" |
| தலை உச்சியிலிருந்து பக்கக் கேசாந்தம் நீளம்[11] | 9'-0" |
| காதின் பின்பக்கத்தில் பிடரி அகலம்[11] | 11'-4" |
| கேசாந்தம் முதல் புருவ நடுவிடம் வரை தூரம் (அல்லது) உயரம்[12] | 2'-4" |
| புருவத்திலிருந்து கண் நூல் வரை | 2'-2" |
| கண் மட்டமிருந்து மூக்குப்புடை வரை | 4'-4" |
| மூக்குப்புடையிலிருந்து வாய் வரை | 1'-5½" |
| வாயிலிருந்து மோவாய் வரை | 4'-7" |
| மூக்கின் அடியிலிருந்து கோஜியின் நீளம் | 0'-4½" |
| மோவாய் | 2'-2½" |
| மோவாய் வட்டம் | 3'-0" |
| கழுத்திலிருந்து மோவாய் களத்தி | 3'-4" |
| புருவ நீளம்[13] | 5'-0" |
| புருவ அகலம்[14] | 0'-1" |
| இரு புருவங்களுக்குமுள்ள இடைவெளி[15] | 1'-0" |

**கண்**

| | |
|---|---|
| கண் அகலம்[16] | 1'-0" |
| கண் நீளம்[17] | 3'-0" |
| இரு கண்களுக்கும் இடைவெளி[18] | 2'-2" |

கண் நீளத்தில் மூன்றில் ஒரு பங்கு கருவிழியின் அகலமாகும்[16]

| | |
|---|---|
| கீழ் இமை அகலம்[19] | 0'-2" |
| மேல் இமை அகலம்[19] | 0'-1½" |
| கன்னிகை நீளம்[20] | 0'-1" |
| அகலம் | 0'-1" |

**மூக்கு**

| | |
|---|---|
| மூக்கு நீளம் | 4'-4" |
| மூக்கு அகலம்[16] | 2'-0" |
| நடு மூக்கு அகலம்[16] | 1'-0" |
| நுனி மூக்கு அகலம்[16] | 0'-4" |

**காது**

| | |
|---|---|
| காது நீளம்[21] | 4'-2" |
| அகலம் | 2'-0" |
| தொங்கு காது நீளம்[22] | 5'-0" |
| காதிலிருந்து தாடை தூரம் | 3'-0" |

**வாய்**

| | |
|---|---|
| வாய் நீளம்[10] | 4'-0" |


மத்திம தசதாளப் பெண்மானம்


முக–நுட்பஅளவுகள்

| | |
|---|---|
| மேல் உதடு அகலம்[16] | 0'-6" |
| கீழ் உதடு அகலம்[16] | 0'-5" |
| கீழ் உதடு நீளம்[16] | 2'-0" |
| மோவாய் மூட்டு (சிபுகம்)[19] | 1-4" |
| மோவாய் பள்ளம் தாழ்மானம்[19] | 0'-1" |
| மோவாயிலிருந்து உதட்டின் களத்தி[19] | 0'-6" |
| மோவாய் வட்டம் | 3'-0" |

## கழுத்து

| | |
|---|---|
| கழுத்தின் அகலம்[23] | 7'-0" |

## உடலும்–கால்களும்

| | |
|---|---|
| தோள் புறவாய்க்குப் புறவாய் அகலம்[24] | 31'-0" |
| கக்க அகலம்[25] | 17'-0" |
| மார்பகலம்[26] | 15'-0" |
| கொங்கை அகலம்[27] | 9'-0" |
| கொங்கை இடைவெளி[28] | 1'-0" |
| கொங்கை களத்தி | 4'-4" |
| முலை வட்ட அகலம்[29] | 2'-0" |
| முலைக்கண் அகலம்[30] | 0'-4" |
| முலைக்கண் களத்தி | 0'-2" |
| அடிக் கழுத்து மட்டத்திலிருந்து கொங்கை நடுவிடம்[31] | 12'-0" |
| முலைக்கண்களின் இடைவெளி[32] | 12'-0" |
| கொங்கை அடிவாரத்தில் உடல் அகலம்[33] | 13'-0" |
| இடை (நடு உடல்) அகலம் | 11'-0" |
| நாபி மட்டத்தில் உடல் அகலம்[34] | 13'-0" |
| கொப்பூழ் அகலம் | 0'-6" |
| கொப்பூழ்ப் பள்ளம்[35] | 0-2" |
| நாபிக்குக் கீழ் அகலம்[36] | 15'-0" |
| சுரோணி அகலம் | 20'-0" |
| சுரோணித்தடம் நாபிக்குக்கீழ் பக்கத்தில்[37] | 7'-0" |
| இடுப்பு அகலம்[38] | 24'-0" |
| யோனிப்பீட அகலம்[39] | 7'-0" |
| யோனி நீளம் | 4'-0" |
| யோனிப் புடைப்பு[40] | 4'-0" |
| தொடை அகலம்[41] | 12'-0" |
| தொடை மேற்பகுதி அகலம் | 13'-0" |
| தொடை கீழ்ப்பகுதி அகலம்[42] | 9'-0" |
| முழங்கால் மூட்டு அகலம்[43] | 7-0" |
| முழங்கால் அகலம்[44] | 6'-0" |




உடற் பகுதி நுட்ப அளவு

| | |
|---|---|
| முழங்கால் நடு அகலம்[45] | 5'-0" |
| பாத நீளம் | 16'-0" |
| முன்பாத அகலம் | 6'-0" |
| நடுப்பாத அகலம் | 5'-0" |
| குதிகால் அகலம் | 4'-0" |
| உயரம் | 4'-0" |
| கணுக்கால் மொழிக்கு மொழி அகலம்[46] | 5'-0" |
| பரடு அகலம் | 4'-0" |
| முன்பாத கனம்[47] | 2'-0" |
| நடுப்பாத கனம்[47] | 2'4" |
| கட்டை விரல் நீளம் | 4'-0" |
| நுனி அகலம் | 2'-0" |
| 2ஆம் விரல் | 4'-0 |
| நுனி அகலம் | 1'-0" |
| நடு விரல் | 3'-4" |
| நுனி அகலம் | 0'-7½" |
| 4ஆம் விரல் | 3'-0" |
| நுனி அகலம் | 0'-7" |
| சிறு விரல் | 2'-4" |
| நுனி அகலம் | 0'-6" |

ஒவ்வொரு விரலும் தன் நுனி அகலத்தில் பாதி அளவு நக அகலமாகக் கொள்ளும்.

| | |
|---|---|
| தொடையிலிருந்து குண்டிக்காய் களத்தி[47] | 3'-0" |
| உடலின் பின்புறத்தில் கக்க அகலம்[47] | 19'-0" |
| பிடரி முதல் கடி சந்தி வரை நீளம்[47] | 26'-0" |

கைகள்

| | |
|---|---|
| மேற்கை நீளம்[48] | 26'-0" |
| முழங்கை மூட்டு | 2'-0" |
| முன்கை நீளம்[49] | 18'-0" |
| உள்ளங்கை நீளம் | 7'-0" |
| மேற்கையின் அடி அகலம்[50] | 7'-0" |
| நடுக்கை அகலம்[51] | 6'-0" |
| முழங்கை மூட்டு அகலம்[52] | 5'-0" |
| முழங்கை நடு அகலம்[53] | 4'-4" |
| கீழ்ப்பகுதி அகலம்[54] | 4'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-0" |
| கட்டை விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 1'-1" |
| சுட்டு விரல் நீளம் | 5'-0" |



தொடை–கால்–நுட்ப அளவுகள்

| | |
|---|---|
| அகலம் | 0'-7" |
| நடுவிரல் நீளம் | 6'-0'' |
| அகலம் | 1'-0" |
| அணிவிரல் நீளம் | 5'-0'' |
| அகலம் | 0'-7" |
| சிறுவிரல் நீளம் | 4'-0'' |

| | |
|---|---|
| அகலம் | 0'-6" |

கைத்தலத்தில் 3 ரேகைகளை வரைதல் வேண்டும்.

| | |
|---|---|
| கைத்தல அடிப்பகுதியின் கனம் | 2'-0'' |
| மேற்பகுதியின் கனம் | 1'-6" |





கௌரிப் படிமம்





துர்க்கைப் படிமம்

## மத்திம தசதாளம்—ஆண்மானம்[55]

உத்தம தசதாள மானத்தினால் பிரம்மா, விஷ்ணு, மகேசுவரன் ஆகிய மும்மூர்த்திகளின் படிமங்களை இயற்ற வேண்டும் என்ற விதியை முன்பு பார்த்தோம். இம் மூர்த்திகளை, தனித்த-சுதந்திர மூர்த்தங்களாக ஸ்தாபிக்குங்கால் இவ் விதி முற்றிலும் பொருந்தும். ஆனால் இம் மூர்த்தங்களில் ஒன்று பிரதான மூர்த்தமாகக் கொள்ளப்பட்டு மற்றவை பரிவார நிலையை அடையுமானால், அத்தகைய துணை மூர்த்தங்களை மத்திம தசதாளத்தில் இயற்றியமைத்தல் வேண்டும். உதாரணமாக ஒரு சிவாலயத்தில் நிறுவப்படும் விஷ்ணுப்படிமம் பரிவார நிலையில் மத்திம தசதாளத்திலேயே இயற்றப்பட வேண்டும். இவ் விதியானது நிலை வேறுபாட்டால் எழுந்ததேயன்றி உயர்வு தாழ்வு பற்றி அல்ல என்பதை ஈண்டு நன்கு உணருதல் வேண்டும். எனவே, மத்திம தசதாள வகையில் ஆண்மானம் இடம்பெறுவதாயிற்று.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை முதல் முடி வரை | 4'-2" |
| முகம் | 13'-0" |
| தாடை | 0'-4" |
| கழுத்து | 3'-6" |
| மார்பு | 12'-6" |
| நாபி | 12'-6" |
| குய்யம் | 13'-0" |
| தொடை | 25'-6" |
| முழங்கால் | 4'-2" |
| முன்கால் | 25'-6" |
| பாதம் | 4'-2" |
| மொத்தம் | 120'-0" |

### தலையும்—கழுத்தும்

| | | |
|---|---|---|
| நெற்றி அகலம் | 8'-0" | 8'-1" |
| காதுகளோடு கூடிய முக அகலம் | | 13'-4" |
| தாடை | | 0'-4" |
| கழுத்தின் உயரம் | | 3'-6" |
| முகத்தின் அகலம் | | 11'-4" |
| காது பொருந்துமிடத்தில் முக அகலம் | | 9'-0" |

### கண்

| | |
|---|---|
| கண் நீளம் | 2'-2" |
| கருவிழியின் அகலம் | 0-5½" |
| வெண் விழி அகலம் | 1'-4½" |
| ஜோதிர் மண்டலம் | 0'-1" |
| கண்மணி | 0'-1/8" |
| கடைக்கண் நீளம் | 2'-0" |
| கடைக்கண் அகலம் | 0'-½" |
| மேல் இமை அகலம் | 0'-2" |
| கீழ் இமை அகலம் | 0'-½" |

கீழ் இமைக்கு ஒரு யவை தூரத்தில், கண் மட்ட நூல் அமைய வேண்டும்.

### புருவம்

| | |
|---|---|
| கண் மட்ட நூலிலிருந்து புருவ இருப்பிடத்தின் தூரம் | 2'-0" |
| புருவ நீளம் | 5'-0" |
| புருவ நடு அகலம் | 0'-1½" |
| புருவ வளைவு | 1'-0" |

புருவம் வில்லைப் போல் வளைத்து, அடர்த்தியர்ன உரோமங்களை உடையதாயிருத்தல் வேண்டும்.

### காது

காதில் மேல் மட்டமும், புருவ வளைவின் மேல் மட்டமும், சம மட்டமாகும்.

| | |
|---|---|
| காது அகலம் | 2'-2" |
| காதின் நீளம் | 4'-2" |
| காதின் தொங்கல் | 4'-0" |
| தொங்குக் காதுத் தண்டின் அகலம் | 2'-0" |
| தண்டுகளுக்கிடையே-வெளி | 1'-0" |
| காதின் செவிள் தொடங்கி கடைக்கண் வரை தூரம் | 7'-0" |

### வாய்

| | |
|---|---|
| கோஜியின் நீளம் | 0'-4" |
| கோஜியின் அகலம் | 0'-2" |
| மேலுதட்டின் அகலம் | 0'-4" |
| மேலுதட்டின் விளிம்பு | 0'-1" |
| மேலுதட்டின் நீளம் | 4'-1" |
| கீழுதட்டின் நீளம் | 2'-2" |

| | |
|---|---|
| கீழுதட்டின் அகலம் | 1'-1" |
| கீழுதட்டின் விளிம்பு | 0'-1" |

கீழுதட்டின் அகலத்தில் ஆறு யவை நீக்கி உட்புற உதடு சிவந்து இருக்க வேண்டும்.

| | |
|---|---|
| முகவாய் நீளம் | 2'-2" |
| தாடை | 1'-2" |
| காதிலிருந்து தாடை வரை உயரம் | 2'-2" |

**கைகள்**

| | |
|---|---|
| கழுத்தின் அடிமட்டத்திலிருந்து மேற்கை நீளம் | 26'-0" |
| முழங்கை மூட்டு | 2'-0" |
| முன்கை | 20'-0" |
| விரல் சேர்ந்த கைத்தல நீளம் | 13'-0" |
| மேற்கை அடி அகலம் | 9'-0" |
| மேற்கை நடு அகலம் | 8'-0" |
| முழங்கை மூட்டின் அகலம் | 7'-0" |
| முன் கை அகலம் | 5'-6" |
| மணிக்கட்டின் அகலம் | 3'-4" |
| கைத்தல நீளம் | 7'-0" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |
| சுட்டுவிரல் நீளம் | 5'-2" |
| அணிவிரல் நீளம் | 5'-2" |
| கட்டைவிரல் நீளம் | 4'-1" |
| சுண்டு விரல் நீளம் | 4'-1" |
| கைத்தல அகலம் | 6'-4" |
| கைத்தலக் கனம் | 2'-4" |

| | | நக அகலம் |
|---|---|---|
| கட்டைவிரல் அகலம் | 1'-2" | 1'-0" |
| சுட்டுவிரல் அகலம் | 1'-0" | 0'-5" |
| நடு விரல் அகலம் | 1'-1" | 0'-5½" |
| அணி விரல் அகலம் | 1'-0" | 0'-5" |
| சுண்டு விரல் அகலம் | 0'-6" | 0'-3½" |

நகத்தின் நீளம் அகலத்தை விட ஒவ்வொன்றும் இரண்டு யவை அதிகம்.

**உடலும்–கால்களும்**

| | |
|---|---|
| தோளின் அகலம் (புறவாய்க்குப் புறவாய்) | 39'-0" |
| மார்பின் அகலம் | 21'-0" |
| நடு உடல் அகலம் | 15'-0" |
| கொப்பூழ் மட்டத்தில் சுரோணி அகலம் | 14'-0" |
| இடுப்பின் அகலம் | 18'-0" |
| பெருந் தொடையின் அகலம் | 13'-0" |
| சிறு தொடையின் அகலம் | 10'-4" |
| முன்கால் நடு அகலம் | 7'-0" |
| பரடு அகலம் | 4'-0" |
| கணுக்கால் அகலம் | 5'-0" |
| குதிகால் அகலம் | 4'-2" |
| குதிகால் உயரம் | 4'-3" |
| பாத நீளம் | 17'-0" |
| பாத நடு அகலம் | 5'-2" |
| முன்பாத அகலம் | 6'-4" |
| ஆண்குறியின் நீளம் | 5'-1" |
| அகலம் | 2'-4" |
| விரைப்பை அகலம் | 4'-0" |
| நீளம் | 4'-0" |

**கால் விரல்கள்**

| | |
|---|---|
| கட்டை விரல் நீளம் | 4'-2" |
| அகலம் | 2'-0" |
| நக அகலம் | 1'-0" |
| இரண்டாவது விரல் நீளம் | 4'-3" |
| அகலம் | 1'-1" |
| நக அகலம் | 0'-5" |
| நடு விரல் நீளம் | 3'-4" |
| அகலம் | 1'-½" |
| நக அகலம் | 0'-4" |
| மூன்றாவது விரல் நீளம் | 3'-0" |
| அகலம் | 1'-0" |
| நக அகலம் | 0'-3½" |
| சுண்டு விரல் நீளம் | 2'-4" |
| அகலம் | 0'-7" |
| நக அகலம் | 0'-3" |

நகங்களின் நீளம் அதனதன் அகலத்தில் 7/8 பங்காகும்.

## மத்திம தசதாளப் பெண்மானம் (வைணவம்)[56]

உத்தம தசதாள அளவினதாய் திருமால் படிமத்தை இயற்றுதல் வேண்டும் என்பது தாளமான விதி. எனவே விஷ்ணுவின் சக்திகளான ஸ்ரீ தேவி, பூ தேவி ஆகியோர் படிமங்களை அதற்கு அடுத்த மத்திம தசதாள மானத்தில் இயற்ற வேண்டும்.

விஷ்ணு மூர்த்தம் யோகம், போகம், வீரம், ஆபிசாரிகம் என்று நான்கு பேதங்களைக் கொண்டது. ஒவ்வொரு பேதத்திலும் நின்ற,

அமர்ந்த, சயனித்த கோலங்கள் உண்டு. எனவே, மொத்தத்தில விஷ்ணு மூர்த்தம் பன்னிரு மூர்த்தங்களாக இயற்றப்படும் அந்தந்த மூர்த்தங்களோடு தொடர்பு கொண்ட தேவி, பூ தேவி, ஆகியோரின் படிமங்களும் மத்திம தசதாளத்திலேயே இயற்றப்பெற வேண்டும்.

(சைவ நூல்களிலும் தேவி, பூ தேவி ஆகியோர்களும் இம்மான விதியே கூறப்படுகிறது).

அவதார மூர்த்தங்களோடு தொடர்பு கொண்ட வைணவ சக்திப் படிமங்களுக்கு அவ்வவற்றிற்கு வகுக்கப்பட்ட தாளமானத்திலேயே செய்தல் வேண்டும் என்பதை இங்கு மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும்.

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை உச்சி முதல் முடி எல்லை வரை | 4'-0" |
| கண் மட்டம் | 4'-6" |
| மூக்குப்புடை மட்டம்57 | 4'-0" |
| முகவாய் மட்டம் | 3'-6" |
| தாடைத் தொங்கல் | 0'-4" |
| கழுத்து மட்டம் | 4'-0" |
| மார்பு மட்டம் | 13'-0" |
| நாபி மட்டம் | 13'-0" |
| யோனி மட்டம் | 13'-0" |
| தொடை நீளம் | 26'-0" |
| முழங்கால் | 4'-0" |
| முன்கால் | 26'-0" |
| பாதம் | 4'-0" |

தலையும் கழுத்தும்

முகம்

| | |
|---|---|
| முக அகலம்58 | 12'-0" |
| கேசாந்தமிருந்து புருவம் | 2'-4" |
| புருவத்திருந்து கண் மட்டம் | 2'-2" |
| மூக்கு நீளம் | 4'-0" |
| மூக்குபுடமிருந்து வாய்வரை | 1'-1" |
| மேலுதடு | 0'-4" |
| மோவாய் | 1'-1" |
| கழுத்து அகலம் | 7'-0" |

**உடலும் காலும்**

| | |
|---|---|
| கக்க அகலம்[59] | 18'-0" |
| கொங்கைகளுக்கு கீழ் அகலம் | 13'-0" |
| கொங்கை அகலம் | 9'-0" |
| முலைக்கண் வட்டம் | 3'-0" |
| கொங்கை உயரம் | 4'-4" |
| முலைக்காம்பு | 0-4" |
| உயரம் | 0'-2" |
| நடுஉடல் | 11'-0" |
| சுரோணி[60] | 20'-0" |
| இடுப்பு அகலம் | 24'-0" |
| யோனி பீட அகலம் | 7'-0" |
| யோனி பீட நீளம் | 4'-0" |
| நாபி அகலம் | 0'-6" |
| நாபிக்குக் கீழ் அடிவயிறு | 7'-0" |
| தொடை அகலம் | 12'-0" |
| முழங்கால் | 7'-0" |
| முன்கால் நடு அகலம் | 6'-0" |
| கணுக்கால் | 4'-0" |
| பரடு | 5'-0" |
| குதிகால் அகலம் | 4'-0" |
| பாத நீளம் | 16'-0" |
| முன்பாத அகலம் | 6'-0" |
| நடுப்பாத அகலம் | 5'-0" |

கால்விரல்கள்

| | |
|---|---|
| கட்டை விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 2'-0" |
| இரண்டாவது விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 1'-0" |
| நடுவிரல் நீளம் | 3'-4" |
| அகலம் | 0'-7½" |
| நான்காவது விரல் நீளம் | 3'-0" |
| அகலம் | 0'-7" |
| சுண்டு விரல் நீளம் | 2'-4" |
| அகலம் | 0'-6" |

கை

| | |
|---|---|
| கழுத்து மட்டத்திலிருந்து மேற்கை நீளம் | 26'-0" |
| முழங்கை | 2'-0" |
| முன்கை | 18'-0" |
| கைத்தலமும் விரலும் | 13'-0" |
| மேற்கை அகலம் | 7'-0" |
| முழங்கை | 6'-0" |
| முன்கை | 5'-0" |
| முன்கை நடு அகலம் | 4'-0" |
| மணிக்கட்டு | 3'-0" |
| கைத்தல அகலம் | 6'-0" |

**கைவிரல்கள்**

| | |
|---|---|
| கட்டை விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 0'-9" |
| சுட்டு விரல் நீளம் | 5'-0" |
| அகலம் | 0'-7" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |
| அகலம் | 1'-0" |
| அணிவிரல் நீளம் | 5'-0" |
| அகலம் | 0'-7" |
| சுண்டு விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 0'-4" |

விரல் அகலத்தை மூன்று பாகம் செய்து இரண்டு பாகம் அந்தந்த விரல் நுனி அகலம் ஆகும்.

பிராம்மீயம் என்ற சிற்ப நூலில் விளக்கியுள்ள மத்திம தசதாளப் பெண் மானமும் சிற்பிகள் கடைபிடிக்கத் தக்க வகையில் அமைந்துள்ளதால் அஃதும் வழங்கப்படுகிறது.

**உயரக் கணக்கு**

| | |
|---|---|
| தலை உச்சியிலிருந்து முடி இறுதி வரை | 4'-0" |
| முடி முதல் கண் மட்டம் வரை | 4'-6" |
| கண் மட்டத்திலிருந்து மூக்குப்புடம் வரை | 4'-4" |
| மூக்குப்புடத்திலிருந்து மோவாய் வரை | 3'-6" |
| கழுத்து உயரம் | 4'-0" |
| மார்பு வரை | 13'-0" |
| கொப்பூழ் வரை | 13'-0" |
| யோனி வரை | 13'-0" |
| தொடை நீளம் | 26'-0" |
| முழங்கால் முட்டி | 4'-0" |
| கெண்டைக்கால் | 26'-0" |
| பாதம் | 4'-0" |

**தலையும் கழுத்தும்**

| | |
|---|---|
| முகத்தின் அகலம் | 11'-0" |

முகத்தின் வடிவம் கோழி முட்டையினை ஒத்திருக்கும்.

| | |
|---|---|
| முடி இறுதியிலிருந்து புருவம் வரை | 2'-4" |
| புருவத்திலிருந்து கண் மட்டம் வரை | 2'-2" |
| மூக்குபுடமிருந்து வாய் வரை | 1'-1" |
| கோஜியின் நீளம் | 0'-4½" |
| கீழ் உதட்டின் அகலம் | 1'-1" |

மீதி அளவு மோவாய் அளவாம்

| | |
|---|---|
| கழுத்திலிருந்து மோவாய் வரை உயரம் | 3'-4" |

**உடலும் கால்களும்**

| | |
|---|---|
| கக்க அகலம் | 17'-0" |
| ஸ்தன அகலம் | 9'-0" |
| முலைக்கண்ணின் அகலம் | 3'-0 |
| ஸ்தனத்தின் களத்தி | 4'-4" |
| முலைக்காம்பின் அகலம் | 0'-4" |
| உயரம் | 0'-2" |
| ஸ்தனத்துக்குக் கீழ் உடல் அகலம் | 13'-0" |
| சுரோணி அகலம் | 20'-0" |
| நாபிக்குக் கீழ் சுரோணி நேத்திரத்தின் தூரம் (அடிவயிற்றின் நடுவிடம்) | 7'-0" |
| நாபி அகலம் | 0'-6" |
| நடுவயிற்றின் அகலம் | 11'-0" |
| இடுப்பின் அகலம் | 24'-0" |
| யோனி பீடத்தின் அகலம் | 7'-0" |
| நீளம் | 4'-0" |

இஃது அரசிலையின் புற வடிவையொக்கும். அகண்டும், சதைப் பற்றோடும், குழிந்தும் இஃது அமையும்.

| | |
|---|---|
| அடித்தொடை அகலம் | 12'-0" |

யானையின் துதிக்கையைப் போன்று அடித் தொடை முதல் நளகை வரை உருண்டு திரண்டிருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| முழங்கால் அகலம் | 7'-0" |
| கெண்டைக்காலின் அகலம் | 6'-0" |
| நளகையின் அகலம் | 4'-0" |
| கணுக்கால் அகலம் | 5'-0" |
| குதிகால் அகலம் | 4'-0" |
| முன்பாத அகலம் | 6'-0" |
| நடுப்பாத அகலம் | 5'-0" |
| பாத நீளம் | 16'-0" |
| பெருவிரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 2'-0" |
| இரண்டாவது விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 0'-8" |
| நடுவிரல் நீளம் | 3'-4" |
| அகலம் | 0'-7½" |
| நான்காவது விரல் நீளம் | 3'-0" |
| அகலம் | 0'-7" |

| | | | |
|---|---|---|---|
| சிறு விரல் நீளம் | | | 2'-4" |
| அகலம் | | | 0'-6" |

நகத்தின் அகலம்-½ விரல் அகலம்.

**கைகள்**

| | | | |
|---|---|---|---|
| மேற்கை நீளம் | | | 26'-0" |
| முழங்கை நீளம் | | | 2'-0" |
| முன்கை நீளம் | | | 18'-0" |
| கைத்தலத்தின் நீளம் | 7'-0" | | |
| நடுவிரல் நீளம் | 6'-0" | | 13'-0" |
| கைத்தலம் அகலம் | | | 6'-0" |
| மணிக்கட்டு அகலம் | | | 3'-0" |
| முன்கையின் நடுவிடத்தின் அகலம் | | | 4'-0" |
| முழங்கை அகலம் | | | 5'-0" |
| மேற்கை நடு அகலம் | | | 6'-0" |
| மேற்கை மூலம் | | | 7'-0" |

**விரல்கள்**

| | |
|---|---|
| பெருவிரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 1'-1" |
| சுட்டு விரல் நீளம் | 5'-0" |
| அகலம் | 0'-7" |
| நடு விரல் நீளம் | 6'-0" |
| அகலம் | 1'-0" |
| அணிவிரல் நீளம் | 5'-0" |
| அகலம் | 0'-7" |
| சுண்டு விரல் நீளம் | 4'-0" |
| அகலம் | 0'-6" |

ஒவ்வொரு விரலின் அகலத்தில் 2/3 பங்குடன் 1 யவை சேர்த்துக் கிடைக்கும் அளவை நக நீளமாகக் கொள்க.

## மத்திம தசதாளம்
## இராமன்—சீதை—அனுமன் படிமங்கள்

வைணவ சமயத்தின் இருபெரும் பிரிவினரகளாலும் ஒரு முகமாக ஏத்திப்போற்றி வழிபடப் பெறும் புனிதப் படிமங்களில் இராமனின் படிமம் சிறப்புமிக்கது. இராமாவதாரம், விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் சிறந்த சம்பூர்ணாவதாரமாகும். உத்தம புருஷனுக்கும், லக்ஷிய நாயகனுக்கும் எடுத்துக் காட்டாக விளங்குவது இவ் அவதாரம். அறம், அன்பு, கருணை, சீலம், வீரம், அழகு ஆகியவற்றின் மொத்த உருவம் இப்படிமம்.

சீதை, லஷ்மணன், அனுமன் உடனிருக்க; இராமனை நடுவில் அமைத்து வழிபடுதல் மரபாகும். இத்தகைய இராமனின் படிமம் இரண்டு கைகளையுடையதாகவோ, நான்கு கைகளையுடைய தாகவோ இயற்றப்படும். நின்ற கோலத்திலாதல், அமர்ந்த கோலத்திலாதல், சயனக் கோலத்திலாதல் இப்படிமத்தை இயற்றலாம். நின்ற கோலத்தில் அமைப்பின் ஆபங்கம், சமபங்கம், ஆதி பங்கம் ஆகிய மூன்று அமைதிகளில் ஏதேனும் ஒரு நிலையில் இராமன் படிமத்தை இயற்றிடல் வேண்டும்.

இராமனின் அங்க அமைதிகளை வர்ணிக்கும் நூல்கள், இப்படிமத்தின்பால் தனி ஈடுபாடு காட்டி 33 இலக்கணங்களை வகுத்தளிக்கின்றன.

இராமனின் திருவுருவத்தில்

நீண்டவை ஐந்து
குறுகியவை நான்கு
நுண்ணியவை ஐந்து
எடுப்பானவை ஆறு
சிவந்தவை ஏழு
ஆழ்ந்தவை மூன்று
பரந்தவை மூன்று

என்று ஆக 33 இடங்களை சிறப்பித்துக் காட்டுகின்றன.

நீண்டவை ஐந்து: கண்கள், மோவாய், மூக்கு, மார்பகம், கைகள்.

குறுகியவை நான்கு: கழுத்து, குண்டிக்காய், முழங்கால் மூட்டு, குறி.

நுண்ணியவை ஐந்து: விரல் கணு, கேசம், பல், நகம், தோல்.

புடைத்தவை ஆறு: கக்கம், வயிறு, நிமிர்ந்த மார்பு, மூக்கு, தோள், நெற்றி.

சிவந்தவை ஏழு: கடைக்கண்கள், உதடுகள், நாக்கு, கன்னம், கைத்தலம், நகம், உள்ளங்கால்.

ஆழ்ந்தவை மூன்று: குரல், குணம், நாபி
பரந்தவை மூன்று: மார்பு, தலை, நெற்றி.

மேலும் கருநீல வண்ண மேனியனாய், மலர்ந்த முகத்தினனாய், வலது காலை ஊன்றி, இடது காலைச் சிறிது மடக்கி, வைசாக ஸ்தானக நிலையில் இப்படிமம் இருத்தல் வேண்டும். கோதண்டம் என்ற வில்லை ஊன்றி, அதனை நெற்றி மட்டத்தில் இடது கையால் பிடித்து, தொங்கிய வலக்கரத்தால் அம்பினை அரைஞாண் மட்டத்தில் ஏந்திய அமைதியில் இப்படிமத்தை இயற்றுதல் வேண்டும்.

தலையில் கீரீடமும், வலது மார்பில் ஸ்ரீ வத்சமும், காதுகளில் மகர குண்டலங்களும், கழுத்தில் ஆரங்களும் விளங்க நல்ல பிற அணிகளையும் உடலில் பூட்டுதல் வேண்டும்.

இராமனின் வலது பக்கத்தில் சீதையின் படிமத்தை அமைத்தல் மரபு. இராமனின் தோளுயுரப் படிமமாக இஃது இருத்தல் வேண்டும். இப்படிமம் இடது கையில் தாமரையினை ஏந்தி, வலது கையை எழிற்கையாகத் தொங்கவிட்டு அர்த்த வைசாக ஸ்தானக நிலையில் இருத்தல் வேண்டும்.

தலையில் கரண்ட மகுடம் அல்லது தமிழம் என்ற கொண்டையினை அமைத்தல் வேண்டும்.

இராமனின் இடது பக்கத்தில் இராமனின் வாய்மட்ட உயர அளவில், தொங்கிய வலது கையில் அம்பையும், நெற்றிமட்டம் உயர்த்திய இடது கையில் வில்லையும் பிடித்து சமபங்க நிலையில் இலக்குமணப் படிமத்தினை இயற்றிடல் வேண்டும். ஆடை அணிகளை இராமனைப் போலவே செய்தல் வேண்டும்.

இராமனின் இடது பக்கத்தில் இலக்குமணனுக்கு முன் புறத்தில் கூப்பியக் கரத்தனாகப் பணிந்து நிற்கும் நிலையில் அனுமனை அமைத்தல் வேண்டும்; அல்லது உடலை முன்னோக்கி வணங்கி, வலது கையால் வாயைப் பொத்தி, இடது கையால் கீழாடையை அணைத்து, ஆணையை ஏற்க அமைந்த கோலத்தில் இயற்றிடல் வேண்டும். ஆஞ்சநேயரின் படிமம் இராமனின் மார்பளவு உயரம் இருத்தல் வேண்டும்.

இராமனை நான்கு கரத்தினனாக இயற்றுங்கால் மேற்கரங்களில், சங்கு, சக்கரம் தாங்கியவனாய் முகத்தை வலது பக்கம் சாய்த்து, நடுவுடலை இடது பக்கத்தில் வளைத்து, இடுப்பை வலது பக்கம் சாய்ந்து நின்ற கோலத்தில் இயற்றிடல் வேண்டும்.

இராமனோடு மேலும் பரதன், சத்ருக்னன், சுக்ரீவன், வீபிஷணன், அங்கதன் ஆகியவர்களையும் சேர்த்துக் காட்சியினை அமைக்கும் ஒரு மரபு உண்டு. அங்ஙனமாயின் படிமங்களின் பின்புறத்தில் சுவரின் மேல், இவர்களைப் புடை ஓவியமாக (அர்த்த சித்தரமாக) தீட்டுதல் வேண்டும். சுவரில் வலது பக்கத்தில் பரதன், சுக்ரீவன், விபீஷணன் ஆகியோரையும், இடது பக்கத்தில் சத்ருக்னன், அங்கதன், அனுமன் ஆகியோரையும், ஓவியமாகத் தீட்டி முன் புறத்தில், நடுவில், இராமனையும், வலது பக்கத்தில் சீதையையும், இடது பக்கத்தில் இலக்குமணனையும் படிமமாக அமைத்தல் வேண்டும். இராமனது புருவ மட்ட உயரம் பரதனும், கழுத்தின் நடுமட்ட உயரத்தில் சத்ருக்னனையும் அமைத்தல் வேண்டும். இவ்விருவர்கள், வில், அம்பு பிடித்துத் தலையில் கேச பந்தத்தை உடையவர்களாய் அமைவார்கள். இராமனைத் தவிர மற்றவர்களின் மார்பில் ஸ்ரீ வத்ஸம் என்ற மருவை அமைத்தல் கூடாது.

இராமனை அமர்ந்த கோலத்தில், பத்ராசனத்தில் (பீடத்தில்) வில், அம்பு, இன்றி, தனது இரண்டு கைகளில் அபயம், வரதம் ஆகிய முத்திரைகளைப் பிடித்தவனாய் அமைத்தல் வேண்டும். வலப்புறத்தில் சுகாசனத்தில் ஜானகியையும், இடது பக்கத்தில் நின்ற நிலையில் கைகூப்பி, வணங்குபவனாய் இலக்குமணனையும் அமைத்தல் வேண்டும்.

இராமனைக் கிடந்த கோலத்தில் இயற்றுங்கால் இராமனின் கீரீடத்திற்கருகே சுகாசனக் கோலத்தில் ஜானகியை அமர்த்திடல் வேண்டும். இலக்குமணன் போன்றவர்களை சுவரில் முழு ஓவியமாகவோ, புடை ஓவியமாகவோ அமைத்தல் வேண்டும். அம்பையும், வில்லையும் பிடித்து நின்ற கோலத்தில் தனித்த மூர்த்தியாய் இராமனை (ஏகபேரமாய்) திருவுண்ணாழியில், பிரம்ம பதத்தில் நிறுவலாம். அன்றியும் வலக்கரத்தில் அபயமும், இடக்கரத்தில் வரதமும் கொண்டு நின்ற கோலத்திலும் தனித்த மூர்த்தியாய் அமைக்கலாம். அல்லது வலக்கரத்தில் அபயம் பிடித்து இடக்கரத்தை தொடையில் பொருத்தி நின்ற கோலத்தில் தனித்த மூர்த்தியாயும் நிறுவிடலாம்.

### மேனியழகும்—ஆடை நிறமும்

*இராமன்*-கரு நீலமேனி; பொன் அல்லது மஞ்சள் நிற ஆடை.

*சீதை*-பொன் நிறம், வெண்ணிற ஆடை

*இலக்குமணன்*-பொன் நிறம், கருநீல ஆடை

*பரதன்*-கரு நீல வண்ணம்; செந்நிற ஆடை

*சத்ருக்னன்*-பொன் மேனி, செந்நிற ஆடை

எல்லோருக்கும் தூக்கி முடித்த கூந்தல், முடியாகத் திகழ வேண்டும்.

*அனுமன்*-அஞ்சன மை போன்ற மேனி, வெண்ணிற ஆடை.

## உயரக் கணக்கு

| | | |
|---|---|---|
| உஷ்ணீசம் | 1'-2" | |
| கேசாந்தம் | 3'-0'' | 4'-2" |
| கண் மட்டம் | 4'-2'' | |
| மூக்குப்புடை மட்டம் | 4'-2" | |
| மோவாய் மட்டம் | 4'-2'' | 12'-6" |
| தாடை | 0'-4'' | |
| கழுத்து | 3'-6" | 4'-2'' |
| மார்பு மட்டம் | | 12'-6" |
| நாபி மட்டம் | | 13'-0'' |
| குய்ய மட்டம் | | 13'-0" |
| தொடை நீளம் | | 25'-6' |
| முழங்கால் மட்டம் | | 4'-2'' |
| முன்கால் மட்டம் | | 25'-6" |
| பாதம் | | 4'-2'' |
| | | *120'-0"* |

## தலையும்–கழுத்தும்

| | |
|---|---|
| நெற்றி அகலம் | 8'-4'' |
| தாராவர்த்தம் | 4'-0" |
| தாராவர்த்த எல்லையிலிருந்து புருவத்தின் நடு | 2'-2'' |
| முக அகலம் | 11'-5" |
| அடிக்கழுத்து அகலம | 9'-0'' |
| தலை உச்சியிலிருந்து பின்பக்கக் கேசாந்தம் வரை | 13'-0" |
| பின்பக்கக் கேசாந்தமிருந்து கழுத்து உயரம் | 4'-0'' |
| அதிலிருந்து முதுகெலும்பு சந்திக்குமிடமாகிய திமில் | 4'-0" |

## காது

புருவ ரேகையும் காதின் மேல் மட்டமும் சம மட்டமாகும்.

| | |
|---|---|
| கண்ணூலுக்கு மேலே காதின் உயரம் | 2'-2'' |
| கண்ணூலுக்குக் கீழே காதின் நீளம் | 2'-2" |
| காதின் தொங்கல் | 4'-0'' |
| தொங்கு காதின் தண்டின் கனம் | 0'-4" |
| தொங்கு காதின் துளை | 1'-0'' |
| காதின் அகலம் | 2'-0" |

## கண்

| | |
|---|---|
| கண்ணின் நீளம் | 2'-0'' |
| கண்ணின் அகலம் | 1'-0" |
| கருவிழி அகலம் | 0'-5½'' |




இராமன் படிம அளவுகள்

| | |
|---|---|
| ஒளி மண்டலம் | 0'-1" |
| கண்ணின் மணி | 0'-1/8" |
| கண்ணிகை நீளம் | 0'-1" |
| அகலம் | 0'-1" |
| கடைக்கண் நீளம் | 0'-1" |
| கீழ் இமை நீளம் | 0'-½" |
| மேல் இமை அகலம் | 0'-2" |
| புருவ அகலம் | 0'-1" |

கண் இமையில் 80 உரோமங்கள் இருத்தல் வேண்டும். கண்களில் வெள்ளை, கருப்பு, சிவப்பு ஆகிய மூன்று வண்ணங்கள் இடம் பெறும்.

| | |
|---|---|
| கடைக்கண்ணிலிருந்து காது வரை | 7'-0" |
| இரு கண்களுக்கும் இடைவெளி | 2'-0" |

### மூக்கு

| | |
|---|---|
| மேல் மூக்கின் அகலம் | 4'-0" |
| நடு அகலம் | 1'-0" |
| நுனி அகலம் | 2'-2" |
| கோஜியின் நீளம் | 0'-4" |
| கோஜியின் அகலம் | 0'-2" |
| மூக்கின் நடுச்சுவர் உயரம் | 0'-1" |
| மூக்குத் துளை | 0'-4" |
| மூக்குப்புடை கனம் | 0'-1" |

### வாய்

| | |
|---|---|
| மேலுதட்டின் நீளம் | 4'-1" |
| அகலம் | 0'-4" |
| விளிம்பு | 0'-1" |
| கீழுதட்டின் நீளம் | 2'-2" |
| அகலம் | 1'-1" |
| விளிம்பு | 0'-1½" |
| விளிம்பு நீக்கி உதட்டின் சிவந்த பாகம் | 0'-6" |
| மோவாய் நீளம் | 2'-1" |
| மோவாயிலிருந்து தாடை அடக்கம் | 1'-2" |

### கைகள்

| | |
|---|---|
| அடிக்கழுத்து மட்டத்திலிருந்து மேற்கை நீளம் | 26'-0" |
| முழங்கை | 2'-0" |
| முன்கை | 20'-0" |
| கைத்தலம் | 7'-0" |
| நடுவிரல் | 6'-0" |

### கைவிரல்கள்

| | நீளம் | அகலம் | நகஅகலம் |
|---|---|---|---|
| பெருவிரல் | 4'-2" | 1'-4" | 1'-0" |
| சுட்டுவிரல் | 5'-2' | 0'-8" | 0'-5" |
| நடுவிரல் | 6'-0" | 0'-9" | 0'-5½" |
| அணி விரல் | 5'-2" | 0'-8" | 0'-5" |
| சிறுவிரல் | 4'-2" | 0'-6" | 0'-3½" |

நக அகலத்தை விட நக நீளம் இரண்டு யவை கூடுதலாகும்.

| | |
|---|---|
| மேற்கை அகலம் | 8'-0" |
| முழங்கை அகலம் | 7'-0" |
| முன்கை அகலம் | 5'-4" |
| மணிக்கட்டு அகலம் | 3'-4" |
| கைத்தல அகலம் | 6'-4" |
| கைத்தல கனம் | 2'-4" |

### உடலும்–கால்களும்

| | |
|---|---|
| தோள் அகலம் புறவாய்க்குப் புறவாய் | 39'-0" |
| மார்பு அகலம் | 21'-0" |
| தோள் மட்டத்திலிருந்து கக்கம் | 9'-0" |
| தோள் மூட்டு | 2'-0" |
| கழுத்து மட்டத்திலிருந்து மார்பு மட்டம் வரை | 13'-0" |
| இரு முலைக்கண்களின் இடைவெளி | 13'-0" |
| உடல் அகலம் | 15'-4" |
| சுரோணி | 17'-4" |
| இடுப்பு | 19'-4" |
| ஆண்குறி நீளம் | 5'-0" |
| அகலம் | 2'-0" |
| விரைப்பை நீளம் | 4'-0' |
| அகலம் | 4'-0" |
| தொடை அகலம் | 11'-4" |
| முன்கால் அகலம் | 7'-0" |
| கணுக்கால் அகலம் | 4'-2" |
| கணுக்கால் பரடு | 5'-0" |
| குதிகால் அகலம்/உயரம் | 4'-0" |
| முன்பாத அகலம் | 6'-4" |
| நடுப்பாத அகலம் | 5'-2" |

### கால் விரல்கள்

| | |
|---|---|
| பெருவிரல் நீளம் | 4'-2" |
| அகலம் | 2'-0" |
| நக அகலம் | 0'-8" |

| | |
|---|---|
| இரண்டாவது விரல் நீளம் | 4'-3" |
| அகலம் | 1'-1" |
| நக அகலம் | 0'-5" |
| நடு விரல் நீளம் | 3'-4" |
| அகலம் | 1'-½" |
| நக அகலம் | 0'-4" |
| நான்காவது விரல் நீளம் | 2'-4" |
| அகலம் | 1'-0" |
| நக அகலம் | 0'-3½" |
| சிறுவிரல் நீளம் | 2'-4" |
| அகலம் | 0'-7" |
| நக அகலம் | 0'-3" |

நக அகலத்தில் பாதி நக நீளம் ஆகும்.

### சீதையும் அனுமனும்

இராமன் படிம உயர அளவை வகுத்துக் கொண்டபின் இலக்குமணன், சீதை ஆகியோர் படிம உயரங்களை நிர்ணயம் செய்தல் வேண்டும். இலக்குமணப் படிமத்தின் கால் முதல் தலை உச்சி வரை உள்ள உயரமானது, இராமனின் தாள் முதல் வாய்மட்டம் வரை இருக்கும் உயரத்திற்கேற்ப அமையும்.

இராமனுடைய தோள் உயரத்திற்குச் சீதையின் படிம உயரத்தை அமைக்க வேண்டும். இலக்குமணப் படிமத்தை 116 விரல் அளவு கொண்ட அதம தசதாள அளவிலும், சீதைப் படிமத்தை 114 விரல் அளவு கொண்ட ஒன்பதரைத் தாள அளவிலும், இயற்றுதல் வேண்டும். சீதையைத் தேவலோக மாதரின் கோலத்தில் அர்த்த வைசாக ஸ்தானக நிலையில் இயற்றுதல் வேண்டும். இலக்குமணனை இளவரசனின் தோற்றத்தில் சமபங்க நிலையில் இயற்றுதல் வேண்டும்.

பரதன், சத்ருக்னன் ஆகியோர் படிமம் முறையே இராமனுடைய மூக்குப்புடை மட்டத்திலும், மோவாய் மட்டத்திலும் இருத்தல் வேண்டும். இவர்தம் படிமங்களை உத்தம நவதாளத்தில் இயற்றுதல் வேண்டும். இராமனின் மார்பு மட்டத்திற்குச் சமமாக அனுமனைச் செய்தல் வேண்டும்.

### சீதை உயரக் கணக்கு (ஒன்பதரைத் தாளம்)

| | | |
|---|---|---|
| தலை | | 1'-0" |
| முடி | | 3'-0" |
| கண்மட்டம் | 4'-4" | |
| மூக்குமட்டம் | 4'-2" | 12'-2" |
| மோவாய் | 3'-4" | |
| கழுத்து | | 4'-0" |
| கழுத்து மட்டத்திலிருந்து யோனி மட்டம் வரை (3X12-2) | | 36'-6" |
| தொடை நீளம் | | 24'-4" |
| முழங்கால் | | 4'-0" |
| முன்கால் | | 24'-4" |
| பாதம் | | 4'-0" |
| மொத்தம் | | *114'-0"* |
| முக அகலம் | | 10'-4" |
| கழுத்து அகலம் | | 6'-4" |
| கழுத்து மட்டத்திலிருந்து முலைக்காம்பு வரை உயரம் | | 8'-0" |
| முலைக்காம்புகளின் இடைவெளி | | 12'-0" |
| தோள் அகலம் (புறவாய்க்குப் புறவாய்) | | 29'-0" |
| மார்பு அகலம் | | 16'-0" |
| நடுஉடல் அகலம் | | 10'-0" |
| சுரோணி அகலம் | | 20'-0" |
| இடுப்பின் அகலம் | | 24'-0" |
| தொடை அகலம் | | 12'-0" |
| முழங்கால் அகலம் | | 7'-0" |
| முன்காலின் அகலம் | | 6'-0' |
| மேற்கையின் அடி அகலம் | | 6'-4" |
| முழங்கை அகலம் | | 5'-0" |
| முன்கை அகலம் | | 4'-0" |
| மணிக்கட்டின் அகலம் | | 3'-0" |

### அனுமன்

இராமனோடு உடனாய அனுமனின் படிமத்தை 84 விரல் அளவு கொண்ட மத்திம சப்ததாள மானத்தில் இயற்றிடல் வேண்டும்.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை உச்சியிலிருந்து முடி வரை | 2'-0" |
| முடியிலிருந்து புருவம் வரை | 2'-0" |
| புருவத்திலிருந்து கண் மட்டம் வரை | 2'-0" |
| கண்மட்டத்திலிருந்து மூக்கு மட்டம் வரை | 3'-0" |
| வாய் | 3'-0" |
| வாயிலிருந்து உதடு வரை | 1'-0" |
| கழுத்து | 3'-0" |
| மார்பு மட்டம் | 10'-0" |
| நாபி | 10'-0" |
| குய்யம் | 10'-0" |
| தொடை நீளம் | 17'-0" |

| | |
|---|---|
| முழங்கால் | 2'-0'' |
| முன்கால் | 17'-0'' |
| பாதம் | 2'-0'' |
| மொத்தம் | *84'-0''* |
| பாத நீளம் | 10'-0'' |
| கைத்தல நீளம் | 10'-0" |
| முன்கை நீளம் | 16'-0' |
| மேற்கை நீளம் | 20'-0' |
| வாலின் நீளம் புய மொத்த நீளத்திற்கு ஒப்பாகும். | 46'-0'' |

மார்பு, தோள், இடுப்பு ஆகிய உறுப்புகளின் அகல அளவுகளை மனித வடிவங்களுக்கு வகுத்த அளவிலிருந்து ஒவ்வொரு விரல் குறையக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனமே வயிறு, சுரோணி, பாதம் ஆகிய உறுப்புகளின் அகல அளவுகளை ஒரு விரல் வீதம் குறையக் கொள்ளுதல் வேண்டும்.

கைத்தலத்தில் 4 யவை அளவும், விரல் அகலத்தில் 2 யவை அளவும் குறையக் கொள்ளுதல் வேண்டும். இவ் வளவிற்குமேல் உரோமங்களைக் காட்டுதல் வேண்டும். மற்ற அளவுகளையும், அமைப்புகளையும் பொருத்தமாக அமைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

---

1. இது சகளாதிகாரத்தைச் சேர்ந்தது. இதற்கு ஒப்ப காஸ்யபம், சாரஸ்வதீயம், பிராம்மீயம், சில்ப ரத்னம் பூர்வ காரணாகமம் இக் கணக்கைப் பின்பற்றுகின்றன.
2. 1'-0" உஷ்ணீசம், 3'-0'' கேசாந்தம்; சில்பரத்னம்
3. 5'-0" மானசாரம்
4. 4'-0'' மரீசி; மானசாரம்
5. 3'-4" மானசாரம்
6. தாடை அளவு இதில் கூறப்படவில்லை. ஆனால் இதன் அளவு 0'-4'' மானசாரம்
7. சாரஸ்வதீயம்
8. காதினிடத்தே முக அகலம் 12'-0" மானசாரம் காதுக்குக் கீழே அகலமே 11'-0" மானசாரம்
9. பூர்வகாரணாகமம்
10. பூர்வகாரணாகமம்
11. பூர்வகாரணாகமம்
12. 2'-0" பூர்வகாரணாகமம்
13. 9'-0" மானசாரம்
14. பூர்வகாரணாகமம்; 2'-0" மானசாரம்
15. மானசாரம்
16. மானசாரம்
17. மானசாரம்
18. பூர்வகாரணாகமம்
19. பூர்வகாரணாகமம்
20. அடி மூக்கின் அருகில் உள்ள கண்ணின் கோடி
21. 4'-0'' மானசாரம்
22. 4'-0" மானசாரம்
23. அடி,நடு, நுனிக் கழுத்து எல்லாம் சம அகலம், 7'-0'' மானசாரம்; அடி 8'-1"; நுனி 7'-1'' பூர்வகாரணாகமம்
24. 32'-0" பூர்வகாரணாகமம்
25. 15'-0'' மானசாரம்
26. 9'-4" மானசாரம்; பூர்வகாரணாகமம்
27. சில்பரத்னம்
28. 3'-0'' சில்பரத்னம்
29. சில்பரத்னம்
30. 0'-3" சில்பரத்னம்
31. பூர்வகாரணாகமம்
32. பூர்வகாரணாகமம்
33. 14'-0'' சில்பரத்னம், பூர்வகாரணகமம்
34. மானசாரம்
35. பூர்வகாரணாகமம்
36. மானசாரம்
37. சாரஸ்வதீயம்
38. 26'-2" பூர்வகாரணாகமம்
39. 4'-0" மானசாரம்
    மேல் அகலம் 5'-0" }
    கீழ் அகலம் 2'-0'' } பூர்வகாரணாகமம்
40. மானசாரம்
41. மேற்பகுதி 13'-0" }
    நடுப்பகுதி 12'-0'' } மானசாரம்
42. மானசாரம்
43. 8'-0" பூர்வகாரணாகமம்
44. 7'-4" மானசாரம்
45. மானசாரம்
46. 4'-4" மானசாரம்
47. பூர்வகாரணாகமம்
48. ஐந்திர மதம்
49. 20'-0'' பூர்வகாரணாகமம்
50. 9'-0" மானசாரம்; 7'-0'' பூர்வகாரணாகமம்
51. 6'-4" மானசாரம்; 7'-0'' பூர்வகாரணாகமம்
52. 5'-4" மானசாரம்; 5'-2'' பூர்வகாரணாகமம்
53. மானசாரம்
54. பூர்வகாரணாகமம்
55. சகளாதிகாரம்
56. மரீசி
57. 4'-4" பிராம்மீயம்
58. 11'-0'' பிராம்மீயம்
59. 17'-0" பிராம்மீயம்
60. பிராம்மீயம்

# 26

# அதம தசதாளம்



## அதம தசதாளம்–ஆண்மானம்

அதம தசதாள மானத்தில் இந்திரன், அக்னி, வருணன், அசுவினி தேவர், ஸ்கந்தன், வீரபத்திரன், க்ஷேத்ரபாலகன், ஈசானன், சாஸ்தா, சூரியன், சந்திரன், யமன், வாயு, சண்டிகேச்வரன், துவாதச ஆதித்தியர், ஏகாதச ருத்திரர், மகரிஷிகள், பிருகு, மார்க் கண்டேயன், லக்ஷ்மணன், அடியார் (சாமீப்யம்) ஆகியோர் படிமங்களை இயற்றுதல் வேண்டும்.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலையின் உச்சி முதல் முடி இறுதி வரை[1] | 4'-0" |
| கண்மட்டம் வரை[2] | 4'-4" |
| மூக்குப்புடை மட்டம் வரை[3] | 4'-0" |
| மோவாய் வரை[4] | 3'-4" |
| தாடைத் தொங்கல் | 0'-4" |
| கழுத்து[5] | 4'-0" |
| மார்பு மட்டம் | 12'-4" |
| கொப்பூழ் மட்டம் | 12'-4" |
| அரை மட்டம் | 12'-4" |
| தொடை | 25'-0" |
| முழங்கால் | 4'-0" |
| முன்கால் | 25'-0" |
| தாள் | 4'-0" |
| | *116'-0"* |

### தலையும்–கழுத்தும்

| | |
|---|---|
| முக அகலம்[6] | 11'-4" |
| கழுத்து | 8'-4" |
| காது நீளம் | 4'-0" |
| காதுத் தொங்கல் | 4'-0" |
| மேலுதட்டின் உயரம் | 0'-3½" |
| மேலுதட்டின் நீளம் (நேர் தோற்றம்) | 3'-0" |
| மேலுதட்டின் நீளம் (மொத்தம்) | 4'-0" |
| கீழுதட்டின் அகலம்[7] | 1'-0" |
| கீழுதட்டின் நீளம்[8] | 2'-0" |
| உதட்டின் தாழ்த்தி[9] | 0'-1" |
| மோவாய் உயரம்[10] | 2'-0" |
| மோவாய் அகலம்[11] | 2'-0" |
| மோவாய் தாழ்த்தி[12] | 0'-1½" |
| இரு கண்களுக்கு இடைவெளி[13] | 2'-1" |
| கண் நீளம்[14] | 2'-1" |
| கருவிழி வட்டம்[15] | 0'-6" |
| ஒளிவட்டம்[16] | 0'-1" |
| கண்மணி[17] | 0'-1/8" |
| மேலிமை அகலம்[18] | 0'-1½" |
| கீழிமை[19] | 0'-½" |
| மூக்கு நீளம் | 4'-0" |
| மூக்கு இடைச்சுவர் | 0'-1" |
| புடை அகலம் | 2'-2" |
| மூக்கு நுனி அகலம் | 1'-0" |
| உச்சந்தலையிலிருந்து பின்பக்க முடிவரை | 12'-4" |




அதம தசதாள ஆண் படிம அளவு

| | |
|---|---|
| முன்பக்க கேசம் | 8'-0'' |
| பின்பக்க கேசம் | 5'-0" |
| புருவ நீளம் | 5'-0'' |
| புருவ இடைவெளி | 1'-0" |
| புருவ நடு அகலம் | 0'-3'' |
| காது அகலம் | 2'-0" |
| காதிலிருந்து முன்பக்க முகச் சுற்றளவு | 32'-0'' |
| காதிலிருந்து பின்பக்க முகச் சுற்றளவு | 12'-0" |
| காதிலிருந்து மேலுதடு நீளம் | 4'-0'' |

உடலும்–கால்களும்

| | |
|---|---|
| தோள் அகலம் புறவாய்க்குப் புறவாய் | 37'-4" |
| அடிக்கழுத்து மட்டத்திலிருந்து கக்கம் வரை | 8'-0'' |
| கக்க அகலம் (மார்பு அகலம்)[20] | 20'-4" |
| மார்பு அகலம் | 18'-0'' |
| நடுஉடல் | 17'-0" |
| உடல் அகலம்[21] | 15'-4'' |
| சுரோணி (இடை)[22] | 18'-4" |
| இடுப்பு அகலம்[23] | 19'-0'' |
| தொடை அகலம் | 12'-4" |
| நடுத்தொடை அகலம்[24] | 11'-0'' |
| முழங்கால் அகலம்[25] | 8'-4" |
| முன்கால் நடு அகலம் | 7'-4'' |
| முன்கால் கீழ்ப்பகுதி அகலம் | 6'-0" |
| கணுக்கால் | 4'-0'' |
| பரடு | 5'-0" |
| பரத அகலம் | 6'-0'' |

கால் விரல்கள்

| | |
|---|---|
| கட்டை விரல் | 4'-0" |
| 2 ஆம் விரல் | 4'-0'' |
| நடுவிரல் | 3'-4" |
| 4 ஆம் விரல் | 3'-0'' |
| சிறுவிரல் | 2'-4" |

கைகள்

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 25'-0'' |
| முழங்கை | 2'-0" |
| முன்கை[26] | 19'-0'' |
| மேற்கை அடி அகலம்[27] | 8'-4" |
| மேற்கை நடு அகலம் | 6'-4'' |
| முன்கை அகலம்[28] | 5'-4" |


240-1—34

| | |
|---|---|
| மணிக்கட்டு அகலம்[29] | 4'-0'' |
| கைத்தலம் அகலம் | 6'-0'' |
| கைத்தலம் நீளம் | 7'-0'' |
| விரைப்பை உயரம் | 4'-0'' |
| விரைப்பை அகலம் | 4'-0'' |
| குறி நீளம் | 5'-0'' |
| பெருவிரல் நீளம்[30] | 3'-0'' |
| சுட்டுவிரல் | 5'-0'' |
| நடுவிரல் | 5'-4'' |
| அணிவிரல் | 5'-0'' |
| சுண்டுவிரல் | 3'-0'' |

மற்ற அளவுகளை மத்திம தசதாளத்தில் காண்க. அவற்றைப் பொருத்தமாகக் கொள்க.

## அதம தசதாளம்–பெண்மானம்

மத்திம தசதாளத்தில் ஆண் படிமங்களை இயற்றினால் அதற்கு அடுத்த தாளமாகிய அதம தசதாள மானத்தில் அப்படிமங்களின் சக்திப்படிமங்களை இயற்ற வேண்டும் என்ற பொது விதியுள்ளதால் அதற்குரியது `இப்பெண்மானம். மேலும் காவிய நாயகிகளை இத்தாள மானத்தாலும் இயற்றலாம்.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை உச்சி முதல் முடி இறுதி வரை | 4'-0'' |
| முடி முதல் கண்மட்டம் வரை | 4'-2'' |
| கண்மட்டமிருந்து மூக்குப்புடை வரை[31] | 4'-2'' |
| மூக்குப்புடையிலிருந்து மோவாய் வரை[32] | 4'-2'' |
| கழுத்து உயரம்[33] | 3'-6'' |
| கழுத்து மட்டமிருந்து மார்பு வரை | 12'-4'' |
| மார்பு மட்டமிருந்து நாபி வரை | 12'-4'' |
| நாபி மட்டமிருந்து யோனி வரை | 12'-4'' |
| தொடை நீளம் | 25'-0'' |
| முழங்கால் மூட்டு | 4'-0'' |
| கெண்டைக்கால் | 25'-0'' |
| தாள் | 4'-0'' |
| | *116'-0''* |




அதம தசதாள பெண் படிம அளவு

### தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| முக அகலம்[34] | 11'-0" |
| கழுத்தின் அகலம்[35] | 7'-0" |
| புருவ இடைவெளி | 1'-0" |
| புருவ நீளம் | 5'-0" |
| புருவ கனம் | 0'-1" |
| முடி எல்லையிலிருந்து புருவம்[36] | 2'-1" |
| கண் நீளம் | 2'-1" |
| கருவிழி நீளம் | 0'-6" |
| கருவிழி அகலம் | 0'-6" |
| கண்மணி | 0'1/8" |
| கண் மேல் இமை | 0'-1½" |
| கண் கீழ் இமை | 0'-1" |
| மூக்குப்புடை அகலம் | 2'-2" |
| மூக்குக் களத்தி | 2'-0" |
| வாயின் நீளம் | 3'-0" |

மேலுதடு மூன்று வளைவுகளுடன் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| வாயின் அகலம் | 1'-0" |
| (இதில்) கோஜி நீளம் | 0'-4" |
| மேலுதடின் மீதி அகலம் | 0'-4" |
| கீழுதடின் அகலம் | 1'-0" |
| கீழுதடின் நீளம் | 2'-0" |

கீழுதடின் அகலத்தில் ஒரு யவை கனம் அதன் விளிம்பாகும். கீழுதடின் எஞ்சிய பாகம் சிவந்திருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| மோவாய் வட்டம் | 3'-0" |
| மோவாய் பள்ளம் | 1'-4" |
| காதின் நீளம் | 4'-0" |
| காதுத் தொங்கல் | 2'-2" |
| காது அகலம் | 2'-0" |

### உடலும் கால்களும்

| | |
|---|---|
| கக்க அகலம் | 17'-0" |
| மேற்கை அடி அகலம் | 7'-0" |
| கொங்கை அகலம் | 9'-0" |
| கொங்கைக் களத்தி | 4'-4" |
| முலைக்கண் வட்டம் | 2'-0" |
| முலைக்கண் அகலம் | 0'-4" |
| முலைக்கண் பிதுக்கம் | 0'-2" |
| கொங்கைகளுக்குக் கீழ் உடல் அகலம் | 13'-4" |
| நடு உடல் அகலம் | 11'-0" |
| நாபிமட்டத்தில் சுரோணி | 20'-0" |
| இடுப்பு அகலம் | 24'-0" |
| அடித்தொடை அகலம் | 12'-0" |
| முழங்கால் அகலம் | 7'-0" |
| முன்கால் அகலம் | 6'-4" |
| முன்கால் நடு அகலம் | 6'-0" |
| கணுக்கால் (நளகை) | 4'-0" |
| குதிகால் உயரம் | 5'-0" |
| குதிகால் அகலம் | 4'-1" |
| பாத நீளம் | 16'-0" |
| முன்பாத அகலம் | 6'-0" |
| நடுப்பாத அகலம் | 5'-0" |

### கால் விரல்கள்

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| கட்டை விரல் | 4'-0" | 2'-0" |
| இரண்டாவது விரல் | 4'-0" | 1'-0" |
| நடு விரல் | 3'-4" | 0'-7½" |
| மோதிர விரல் | 3'-0" | 0'-7" |
| நான்காவது விரல் | 2'-4" | 0'-6" |

விரல் அகலத்தில் பாதி நக அகலம்.

நக நீளம் அகலத்தைவிட 4-ல் 1 பங்கு கூடியிருத்தல் வேண்டும்.

### கைகள்

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 25'-0" |
| மேற்கை அகலம் | 7'-0" |
| மேற்கை நடு அகலம் | 6'-0" |
| முழங்கை மூட்டு | 2'-0" |
| முழங்கை அகலம் | 5'-0" |
| முன்கை நீளம் | 19'-0" |
| முன்கை அகலம் | 4'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-0" |
| கைத்தல நீளம் | 6'-4" |
| கைத்தல அகலம் | 6'-0" |
| கைத்தல கனம் | 2'-0" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |


240-1—34a

**கைவிரல்கள்**

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 4'-0'' | 0'-6" |
| சுட்டுவிரல் | 5'-0'' | 0'-7" |
| நடுவிரல் | 6'-0'' | 0'-9" |
| அணிவிரல் | 5'-0'' | 0'-8" |
| சுண்டு விரல் | 4'-0'' | 0'-7" |

நக அகலம் விரல் அகலத்தில் 2/3 பாகமாகும். நக நீளம். நக அகலத்தைவிட 1 யவை அதிகமிருத்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| மார்பு அகலம் | 18'-0" | காஸ்யபம் |
| நடு உடல் | 17'-0'' | " |
| சுரோணி | 18'-0'' | " |
| ஸ்தன இடை | 12'-4'' | " |

1. மானசாரம்
2. 4'-2'' சாரஸ்வதீயம்
3. 4'-1" ''
4. 4'-1" ''
5. 3'-4" ''
6. 12'-4" ''

7 விருந்து 19 வரை காசியபம்

20. 20'-0" சாரஸ்வதீயம்

22'-0'' காஸ்யபம்; சில்பரத்னம்

21. 14'-0" சாரஸ்வதீயம்
22. 16'-0'' சாரஸ்வதீயம்

18'-0'' காஸ்யபம்

23. 18'-4" சாரஸ்வதீயம்

18'-6'' காஸ்யபம்

18'-0" சில்பரத்னம்

24. சாரஸ்வதீயம்
25. 8'-0'' சாரஸ்வதீயம்
26. 16'-4'' சாரஸ்வதீயம்
27. 7'-4" சாரஸ்வதீயம்
28. 5'-0'' சாரஸ்வதீயம்
29. 3'-4" சாரஸ்வதீயம்
30. 5'-6'' சாரஸ்வதீயம்
31. 4'-1" சாரஸ்வதீயம்
32. 4'-1'' சாரஸ்வதீயம்
33. 4'-0" சாரஸ்வதீயம்
34. 11'-4'' சாரஸ்வதீயம்
35. 8'-0" சாரஸ்வதீயம்
36. சாரஸ்வதீயம்

# 27

# நவார்த்த தாளம்



### ஒன்பதரைத் தாளம்[1]–ஆண் மானம்

வைணவ ஆகமக் கொள்கைப்படி நிருதி, அஷ்டவசுக்கள், யக்ஷர்கள், கருடன், நவக்கிரஹங்களில் புதன், குரு, சந்திரன், சூரியன், சுக்ரன், கேது ஆகிய கிரஹங்கள்–இவற்றின் படிமங்கள் நவார்த்த தாளமாகிய ஒன்பதரைத் தாளத்தில் இயற்றப்பட வேண்டும். இத்தாள மானத்தின் மொத்த அம்சங்கள் 114 ஆகும்.

### உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 4'-0'' |
| முகம் | 12'-2" |
| கழுத்து | 4'-0'' |
| மார்பு | 12'-2" |
| நாபி | 12'-2'' |
| குய்யம் | 12'-2" |
| தொடை | 24'-4'' |
| முழங்கால் | 4'-0" |
| முன்கால் | 24'-4'' |
| பாதம் | 4'-0" |
| மொத்தம் | *114'-0''* |

### தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| காது பொருந்துமிடத்தில் முக அகலம் | 12'-0'' |
| முகத்தின் அகலம் | 10'-2'' |
| கழுத்தின் அகலம் | 8'-2" |
| முடி இறுதியிலிருந்து கண் மட்டம் வரை நீளம் | 4'-1'' |
| கண் மட்டத்திலிருந்து மூக்குப்புடை வரை நீளம் | 4'-1" |
| மூக்குப்புடையிலிருந்து மோவாய் வரை நீளம் | 4'-0'' |

### கைகள்

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 21'-4" |
| மேற்கை அடி அகலம் | 8'-0'' |
| முழங்கை | 2'-0" |
| முழங்கை அகலம் | 6'-0'' |
| முன்கை | 18'-4" |
| மணிக்கட்டின் அகலம்[2] | 3'-4'' |
| கைத்தல நீளம் | 6'-0" |
| நடுவிரல் நீளம் | 6'-0'' |

### உடலும் கால்களும்

| | |
|---|---|
| தோள் அகலம் புறவாய்க்குப் புறவாய் | 36'-0" |
| மார்பு அகலம்[3] | 18'-0'' |
| உடல் அகலம் | 14'-0" |
| சுரோணி அகலம் | 16'-0'' |
| இடுப்பு அகலம் | 18'-0" |
| அடித்தொடை அகலம் | 12'-0'' |
| நடுத்தொடை அகலம் | 9'-0" |
| முழங்கால் அகலம்[4] | 7'-0'' |
| முன்கால் அகலம் | 6'-0" |
| கணுக்கால் அகலம் | 4'-0'' |

பிற அகல அளவுகளை நவதாளத்தில் சொன்னவாறு கொண்டு, பொருத்தமாகப் படிமத்தை இயற்ற வேண்டும். அங்ஙனமே தேவையான பிற அளவுகளையும் கொள்க.




நாவார்த்த தாள உயர அளவு

ஆண் படிமங்களுக்கு வகுத்தளித்தது போல பெண் படிமங்களுக்குரிய நவார்த்த தாள அளவுபற்றியும் பண்டைச்சிற்ப நூல்கள்[5] பேசும், சீதை, ருக்மணி, சத்யபாமா முதலியோர் படிமங்களுக்கும், அரசிகளுக்கும் இத்தாள வகை மிகவும் பொருந்தும்.

## நவார்த்த தாளம் பெண்மானம்

உயரக்கணக்கு

| | | |
|---|---|---|
| தலை | | 1'-0" |
| முடி | | 3'-0" |
| கண் மட்டம் | 4'-4" | |
| மூக்கு மட்டம் | 4'-2" | 12'-2" |
| மோவாய் மட்டம் | 3'-4" | |
| கழுத்து | | 4'-0" |
| மார்பு மட்டம் | | 12'-2" |
| நாபி மட்டம் | | 12'-2" |
| குய்ய மட்டம் | | 12'-2" |
| தொடை நீளம் | | 24'-4" |
| முழங்கால் மட்டம் | | 4'-0" |
| முன்கால் மட்டம் | | 24'-4" |
| பாதம் | | 4'-0" |
| | மொத்தம் | *114'-0"* |
| முக அகலம் | | 10'-4" |
| கழுத்து அகலம் | | 6'-4" |
| கழுத்து மட்டத்திலிருந்து முலைக் காம்பு வரை உயரம் | | 8'-0" |
| முலைக்காம்புகளின் இடைவெளி | | 12'-0" |
| தோள் அகலம் (புறவாய்க்குப் புறவாய்) | | 29'-0" |
| மார்பு அகலம். | | 16'-0" |
| நடுஉடல் அகலம் | | 10'-0" |
| சுரோணி அகலம் | | 20'-0" |
| இடுப்பின் அகலம் | | 24'-0" |
| தொடை அகலம் | | 12'-0" |
| முழங்கால் அகலம் | | 7'-0" |
| முன்காலின் அகலம் | | 6'-0" |
| மேற்கையின் அடி அகலம் | | 6'-4" |
| முழங்கை அகலம் | | 5'-0" |
| முன்கை அகலம் | | 4'-0" |
| மணிக்கட்டின் அகலம் | | 3'-0" |

பிற அளவுகளை நவதாள அளவிலிருந்து எடுத்து, பொருந்தச் செய்க.

1. பிராம்மீயம்
2. 3'-0" சாரஸ்வதீயம்
3. 20'-0" சாரஸ்வதீயம்
4. 8'-0" சாரஸ்வதீயம்
5. மரீசிசம்ஹிதை. சாரஸ்வதீயம்

# 28

# உத்தம நவதாளம்



## ஆண்/பெண்–பொதுமானம்

தாள வகைகளுக்கெல்லாம் மூலமாக அமைவது நவதாளமாகும். ஏனைய மற்ற தாள வகைகளெல்லாம் இதன் கிளைகளே, நவதாள உயர அகலக் கணக்குகளை–விகிதாசார அளவுகளை– உற்று நோக்கின் அவற்றின் செம்மை புலப்படும். கையாளுவதற்கும் மிக எளிமையானவை. தாள .வகைகட்குட்படாத் வழிபடு படிமங்களையும், பிற கற்பனைச் சிற்ப வடிவங்களையும் இயற்றிட இஃது ஒரு பொது அளவாகவும் வழக்கில் உள்ளது.

நவதாளமானத்தில் பொதுவாக தேவர்கள், அவர்தம் தேவியர்கள், அஷ்ட மூர்த்தங்கள், அஷ்ட வசுக்கள், லோக பாலகர்கள், குரு, சுக்கிரன், சனி, ராகு, செவ்வாய், குபேரன், மன்மதன், கருடன், சாலோக்கிய பதவி பெற்ற அடியவர், விஸ்வாமித்திரன், வசிஷ்டன், பார்கவன் முதலியோர் படிமங்களை இயற்றிடல் வேண்டும்.

இங்குக் கீழே ஆண், பெண் வடிவங்களுக்கான பொது அளவுகளே கொடுக்கப்பட்டிருக்கின்றன என்றாலும் இடையிடையே பெண்களுக்குரிய அளவுகளையும் சுட்டிக் காட்டியிருப்பதைக் காணலாம்.

### உயரக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| உச்சந்தலை | | | 1'-0" |
| முடி இறுதி வரை | | | 3'-0" |
| கண் மட்டம் | 4'-0" | | |
| மூக்குப்புடை மட்டம் | 4'-0" | முகம் | 12'-0" |
| மோவாய் மட்டம் | 4'-0" | | |
| தாடை | | | 0'-4" |
| கழுத்து மட்டம் | | | 3'-4" |
| மார்பு மட்டம் | | | 12'-0" |
| கொப்பூழ் மட்டம் | | | 12'-0" |
| குறி மட்டம் | | | 12'-0" |
| தொடை நீளம் | | | 24'-0" |
| முழங்கால் மூட்டு | | | 4'-0" |
| முன்கால் நீளம் | | | 24'-0" |
| தாள் | | | 4'-0" |
| | | | *112'-0"* |

### தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| முக அகலம் | 10'-0" |
| கழுத்து அகலம் | 8'-0" |
| முடி இறுதி முதல் புருவம் வரை | 2'-0" |
| புருவமிருந்து கண் மட்டம் வரை | 2'-0" |
| மூக்கு நீளம் | 4'-0" |
| மோவாய் வரை | 4'-0" |
| மூக்கின் களத்தி | 1'-4" |
| மூக்குக்குக் கீழே உதடு இருக்குமிடம் | 1'-2" |
| வாயின் அகலம் | 3'-4" |
| உதட்டின் நீளம் | 2'-0" |
| மோவாயிலிருந்து உதட்டின் களத்தி | 0'-6" |

### தலையின் சுற்றளவுகள்

| | |
|---|---|
| காது மட்டத்தில் தலையின் முன்புறச் சுற்றளவு | 18'-0" |
| காது மட்டத்தில் தலையின் பின்புறச் சுற்றளவு | 18'-0" |
| நெற்றியில் முடி இறுதியிலிருந்து பிடரி எல்லை வரை சுற்றளவு | 18'-0" |
| காது மட்டத்தில் தலையின் மொத்தச் சுற்றளவு | 36'-0" |




நாவார்த்த தாள உயர அளவு

புருவம்

| | |
|---|---|
| முடி எல்லையிலிருந்து புருவ நடுவிடத்தின் அடிப்பகுதி வரை | 3'-0'' |
| புருவங்களின் இடையேயுள்ள இடத்திலிருந்து முடி இறுதி எல்லை வரை | 3'-4" |
| புருவ நுனியிலிருந்து கேசாந்தம் வரை தூரம் | 2'-0'' |
| கண் நீளம் | 2'-0" |
| அகலம் | 1'-0'' |
| கருவிழி அகலம் | 0'-5" |
| வெண்விழி | 0'-5'' + 0'-5" |
| கணிகை | 0'-1'' |

கடைக் கண் கூர்மையாக அமைவது நன்றாகும்.

கடைக் கண் சிவந்துமிருக்க வேண்டும்.

கண்களின் வடிவத்தோற்றம் நீலோத்பல மலரைப் போன்றிருத்தல் வேண்டும்.

உடலும் கால்களும்

| | |
|---|---|
| தோள் அகலம் புறவாய்க்குப் புறவாய் | 36'-0" |
| மார்பின் அகலம் | 20'-0'' |
| நடு உடல் அகலம் | 14'-0" |
| சுரோணி அகலம் | 16'-0'' |
| இடுப்பின் அகலம் | 18'-0" |
| குறி நீளம் | 5'-0'' |
| குறி அகலம் | 2'-0" |
| விரைப்பை தொங்கல் | 4'-0'' |
| அடித்தொடை அகலம் | 12'-0" |
| முழங்கால் அகலம் | 8'-0'' |
| முன் கால் அகலம் | 6'-0" |
| கணுக்கால் அகலம் | 4'-0'' |
| பாத நீளம் | 16'-0" |
| முன்பாத அகலம் | 6'-0'' |
| குதிகால் அகலம் | 5'-0" |

பெண்களுக்கு

| | |
|---|---|
| தோளின் அகலம் | 30'-0'' |
| முலைக்காம்பின் அகலம் | 0'-2" |
| கொங்கையின் சுற்றளவு | 25'-4'' |
| கக்க மூலத்திற்கும் முலைக்கண்ணுக்கும் இடைத் தூரம் | 6'-0" |




உத்தம நவதாளப் பெண் படிம உயர அளவு

| | |
|---|---|
| கொங்கைகள் இரண்டிற்கும் இடையிட்ட மார்புக் குழியின் தாழ்த்தி | 1'-0" |
| கொங்கைகளுக்குக் கீழ் உடல் அகலம் | 17'-0" |
| அவ்விடத்தில் சுற்றளவு | 51'-0" |
| நடு வயிறு அகலம் | 10'-0" |
| நடு வயிறு சுற்றளவு | 30'-0" |
| கொப்பூழ் மட்டத்தில் வயிற்றின் அகலம் | 16'-0" |
| இடுப்பின் அகலம் | 22'-0" |

**கால் விரல்கள்**

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| 2 ஆம் விரல் | 4'-0" | 2'-0" |
| சுட்டு விரல் | 4'-1" | 1'-0" |
| நடு விரல் | 3'-5" | 0'-7" |
| 4 ஆம் விரல் | 3'-3" | 0'-6" |
| சிறு விரல் | 3'-1" | 0'-5" |

**கைகள்**

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 24'-0" |
| முழங்கை நீளம் | 2'-0" |
| முன் கை நீளம் | 18'-0" |
| கைத்தல நீளம் | 6'-0" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |
| கைத்தல அகலம் | 5'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-0" |
| முன் கை அகலம் | 5'-0" |
| முழங்கை அகலம் | 6'-0" |
| மேற்கை அகலம் | 8'-0" |

**கைவிரல்கள்**

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 4'-0" | 1'-2" |
| சுட்டுவிரல் | 4'-6" | 0'-7" |
| நடுவிரல் | 6'-0" | 1'-0" |
| அணிவிரல் | 4'-6" | 0'-7" |
| சுண்டு விரல் | 4'-0" | 0'-6" |

கைத்தலத்தில் மூன்று ரேகைகள் இருத்தல் வேண்டும். அவை முறையே ஆயுள் ரேகை, சக்தி ரேகை, ஆண் ரேகை ஆகியவைகளாகும்.

சுண்டு விரல் அடியிலிருந்து ஒரு விரல் தூரத்திலும், மோதிர விரல் அடியிலிருந்து இரண்டு விரல் தூரத்திலும், நடுவிரல் அடியிலிருந்து 1½ விரல் தூரத்திலும் செல்லும் ரேகை ஆயுள் ரேகை எனப்படும். இந்த ரேகை சிறிது வளைந்து சுட்டு விரலுக்கும் நடுவிரலுக்குமிடையே நுழைந்து செல்லும். பெருவிரலின் அடிக்கும்,

சுட்டுவிரலின் அடிக்கும் இடையே மூன்று விரல் தூரத்தில், நடுவே செல்லும் ரேகை சக்தி ரேகை எனப்படும். இது ஆயுள் ரேகைக்குக் கீழ் சுண்டு விரலின் அடிப்புறத்திலிருந்து துவங்கும். இந்த ரேகை சிறுவிரல் அடியிலிருந்து மூன்று விரல் தூரத்திலும், நடுவிரல் அடியிலிருந்து நான்கு விரல் தூரத்திலும் செல்லும்.

கைத்தலத்தின் அடியிலிருந்து நடுவாக வில் போல் வளைந்து சக்தி ரேகையுடன் இணைந்தவாறு செல்லும் ரேகை ஆண் ரேகை எனப்படும்.

## உத்தம நவதாளம்—ஆண்மானம்

### வைணவம்

வைணவப் படிமங்களை சிறப்பாக வர்ணிக்கும் ஆகமத்திலிருந்து உத்தம நவதாள அளவுகளையும், குறிப்புகளையும் ஒப்புநோக்கி, திருத்தங்கள் செய்து, ஒழுங்குபடுத்தி இலக்கணம் வகுக்கப்பட்டிருக்கின்றது. பொதுவாக, அளவுகளில் வேறுபாடுகள் அதிகமில்லாவிடினும், வைணவப் படிம இலக்கணத்தை அறிய விரும்புவோரும், அவ்விலக்கணங்களையே பின்பற்றிச் செய்ய வேண்டுமென்ற நோக்கமுடையோரும் தெளிவும், பயனும் பெறவே அஃது இங்குச் சேர்க்கப்படுகின்றது.

அசுரர், அரக்கர், உரகர், சித்தர், கந்தர்வர், சாரணர் ஆகியோரின் படிமங்களை உத்தம நவதாளத்தில் இயற்றிடல் வேண்டும். சைவ நூல்களில் மேற்கண்ட படிமங்களை வேறொரு தாளத்தில் இயற்றிடுமாறு கூறுவதால், வைணவ ஆகம விதியைப் பின்பற்றி வைணவ சமயப் படிமங்களைச் செய்வதே நன்று.

### உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை உச்சி | 1'-0" |
| முடி இறுதி வரை | 3'-0" |
| கண் மட்டம் | 4'-0" |
| மூக்குப்புடை மட்டம் | 4'-0" |
| மோவாய் இறுதி | 4'-0" |
| தாடை | 0'-4" |
| கழுத்து மட்டம் | 3'-4" |
| மார்பு மட்டம் | 12'-0" |
| நாபி மட்டம் | 12'-0" |
| குய்ய மட்டம் | 12'-0" |
| தொடை நீளம் | 24'-0" |
| முழங்கால் உயரம் | 4'-0" |
| கெண்டைக்கால் | 24'-0" |
| பாதம் | 4'-0" |
| | *112'-0"* |



**தலையும் கழுத்தும்**

| | |
|---|---|
| தலை அகலம் | 10'-0" |
| முடி இறுதி முதல் புருவ மட்டம் வரை[1] | 2'-0" |
| மூக்கு நீளம் | 4'-0" |
| உதடுகள் அகலம் | 1'-0" |
| மோவாய் உயரம் | 0'-6" |
| காது நீளம் | 4'-0" |
| தொங்கு காது நீளம் | 4'-0" |
| மூக்கு அகலம்[2] | 2'-0" |
| மூக்குக்குக் கீழ் வாய் | 1'-0" |
| உதடு நீளம் | 3-'4" |
| உதடு அகலம் | 0'-4" |
| கண் மட்டம் வரை | 2'-0" |
| வாய் அகலம் | 1'-0" |
| மோவாய் அகலம் | 2'-0" |
| கண்கோடியிலிருந்து காது | 5'-0" |
| காது அகலம் | 2'-0" |
| கீழ் உதட்டின் உயரம் | 0'-6" |
| கழுத்து அகலம் | 8'-0" |

**உடலும் கால்களும்**

| | |
|---|---|
| தோள் அகலம் புறவாய்க்குப் புறவாய் | 36'-0" |
| மார்பு அகலம் | 20'-0" |
| வயிறு | 14'-0" |
| சுரோணி அகலம் | 16'-0" |
| இடுப்பு அகலம் | 18'-0" |
| குறி நீளம் | 5'-0" |
| குறி அகலம் | 2'-0" |
| விரைப்பை | 4'-0" |
| அடித்தொடை அகலம் | 12'-0" |
| முழங்கால் அகலம் | 8'-0" |
| முன் கால் அகலம் | 6'-0" |
| பரடு அகலம் | 4'-0" |
| கணுக்கால் (மொழி) | 5'-0" |
| பாத நீளம் | 16'-0" |
| முன்பாத அகலம் | 6'-0" |
| குதிகால் அகலம் | 5'-0" |

**கால் விரல்கள்**

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| கட்டை விரல் | 4'-0" | 2'-0" |
| 2ஆம் விரல் | 4'-1" | 1'-0" |
| நடு விரல் | 3'-4" | 0'-7" |
| 4 ஆம் விரல் | 3'-0" | 0'-6" |
| சிறு விரல் | 2'-4" | 0'-5" |

**கைகள்**

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 24'-0" |
| முழங்கை | 2'-0" |
| முன்கை | 18'-0" |
| கைத்தல நீளம் | 6'-0" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |
| கைத்தல அகலம் | 5'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-0" |
| முன்கை அகலம் | 5'-0" |
| முழங்கை அகலம் | 6'-0" |
| புஜ மூல அகலம் | 8'-0" |

**கைவிரல்கள்**

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 4'-0" | 1'-2" |
| சுட்டுவிரல் | 4'-6" | 0'-7" |
| நடுவிரல் | 6'-0" | 1'-0" |
| அணிவிரல் | 4'-6" | 0'-7" |
| சுண்டு விரல் | 4'-0" | 0'-6" |

**உத்தம நவதாளம்—கருடப் படிமம்[3]**

விஷ்ணுவின் வாகனம் கருடன். உடலும், தலையும், கைகளும் மனித வடிவத்தையொத்து அமையப் பெற்றதாகவும், அத்துடன் கிளிமூக்கும் கருடனின் இறக்கைகளும் சேர்ந்ததாகவும் கருடனின் படிமத்தை இயற்றுதல் வேண்டும்.

கருடனை பக்ஷிராஜன் என்றும், வைனதேயன் என்றும், கருடாழ்வார் என்றும் மக்கள் அழைப்பார்கள். பறவை இனத்தின் தலைவன் என்றும், வினதையின் மகன் என்றும், கருட வடிவில் விளங்கும் ஆழ்வார் என்றும் முறையே பொருளாகும்.

கருடப் படிமத்தை விஷ்ணு கோவிலில், மூலவருக்கு நேர் எதிரே, நின்ற கோலத்திலோ, குந்திய கோலத்திலோ அல்லது கமனாசனம் என்னும் இயங்கும் கோலத்திலோ அஞ்சலி முத்திரையோடு கூடியதாய் அமைத்தல் வேண்டும்.

இத்தகைய கருடனின் படிமத்தை உத்தம நவதாளத்தில் இயற்றுதல் வேண்டும்.

கருடப் படிமத்தின் தாள் முதல் தலை உச்சி வரை உள்ள உயரத்தைப் பல்வேறு முறைகளில் கணக்கிட்டுச் செய்யலாம்.

விஷ்ணுவின் மூலப்படிமம் அல்லது உத்ஸவத் திருமேனி இவ்விரண்டில் ஏதேனுமொன்றின் அளவிலிருந்தோ, அல்லது மானாங்குல அளவைக் கொண்டோ கருடனுக்கு அமைக்கும் பீடத்தின் அளவிலிருந்தோ கருடனின் உயரத்தை நிர்ணயித்துக்கொள்ளலாம். மூலப் படிமத்தோடு தொடர்புடைய—இயைந்த அளவே மிகச் சிறப்பானதாகும்.

(அ) மூல விஷ்ணுப்படிமத்திற்குச் சம உயரமுடயதாகவோ, முக்கால் பங்கினதாகவோ, அரைப்பங்கினதாகவோ கருடனின் படிம உயரம் இருத்தல் வேண்டும்.

(ஆ) விஷ்ணுவின் உற்சவத்திருமேனியின் உயர அளவிலிருந்து கருடனின் உயர அளவைக் கொள்ளுவோமாயின், உற்சவப் படிமத்தின் உயர அளவுக்குச் சமமாகவோ, ஒன்றரைப் பங்காகவோ, இரண்டு பங்காகவோ, மூன்று பங்காகவோ, மூன்றரைப் பங்காகவோ அல்லது நாலு பங்காகவோ கருடனின் உயரம் இருக்கலாம்.

(இ) மூலப்படிமத்தின் தாள வகையினை அறிந்து, அதனுடைய 30 கூறு (விரல்) அளவிலிருந்து தொடங்கி ஒவ்வொரு கூறு கூட்டி 125 கூறு வரை உயர்த்தி, எந்தக் கூறளவு4 நன்மையை நல்கும் ஆயாதி அளவுக்குப் பொருந்துகிறதோ அந்த அளவைப் படிமத்தின் உயரமெனக் கொள்ளுதல் வேண்டும்.

(ஈ) ஒரு மானாங்குல அளவிலிருந்து தொடங்கி இரண்டிரண்டு அங்குலங்களாக ஏற்றி 123 அங்குலம் வரை கிடைக்கும் பல்வேறு அளவுகளில் எந்த அளவு நன்மையான ஆயாதிக்குப் பொருந்துகிறதோ அதனை உயர அளவாக ஏற்கலாம்.

(உ) கருடனுக்கு அமைக்கப்பட்ட திருவுண்ணாழி (அல்லது) மாடம் இவற்றின் உள்ளிடத்தை பல[5] பதங்களாகப் (உதாரணம் 7X7 = 49 பதம்) பிரித்துக் கொண்டு அதில் பைசாசபதத்தில் கருடனை அமைத்தல் வைணவ மரபு. அங்ஙனம் பதங்களாகப் பிரித்துக் கிடைத்த ஒரு பதத்தின் அகல அளவைக் கொண்டு பீட அளவை நிர்ணயம் செய்தல் வேண்டும். பிறகு அப்பீடத்தின் அளவிலிருந்து அதன் மீது குந்தும் அல்லது நிற்கும் கருடனின் உயர அளவை நிர்ணயம் செய்தல் வைணவ மரபின் ஒரு சிறப்பியல்பாகும்.

எனவே, கருடனுக்கு அமைக்கப்படும் பீடத்தின் அகல அளவுக்குச் சம அளவாகவோ அல்லது 1½ பங்கு, 1¾ பங்கு, 2 பங்கு, 2¼ பங்கு. 2¾ பங்கு, 3 பங்கு, 3¼ பங்கு கொண்டதாகவோ கருடப் படிமத்தின் உயரம் இருக்கலாம் அல்லது பீட நீளத்திற்குச் சமமாகவோ ¾ பங்காகவோ அல்லது ½ பங்காகவோ படிம உயரம் இருக்கலாம். இங்ஙனம் கொண்ட உயர அளவிற்கு ஆயாதிப் பொருத்தம் பார்க்க வேண்டியதில்லை.

## கருடப் படிம விளக்கம்

முகம், கழுத்து. உடல், கை, கால் முதலிய அங்கங்கள் அனைத்தும் மனித உறுப்புகளாய் அமைய, வளைந்த கோரப் பற்களும், கிளி மூக்கும், முதுகில் பறவைச் சிறகுகளும் கொண்டமைவதே கருடனின் படிமம் ஆகும். உக்கிரமான நோக்கும் பஞ்சவர்ண மேனியும் எட்டு நாகங்களை அணிகளாகவும் கொண்டு தலையில் கரண்ட மகுடம் தரித்து, கூப்பிய கரத்தனாகக் கருடனை அமைத்தல் வேண்டும்.

### எட்டு நாகங்கள்

| | |
|---|---|
| தலையில் | - சங்கன் |
| இடது காதில் | - மகாபத்மன் |
| வலது காதில் | - பத்மன் |
| கழுத்தில் | - கார்க்கோடகன் |
| மார்பில் (பூணூலாக) | - வாசுகி |
| கையில் (கங்கணமாக) | - அனந்தன் |
| இடுப்பில் (அரைஞாணாக) | - தக்ஷகன் |
| புயங்களில் | - குளிகன் |

### ஐந்து வண்ணங்கள்

| | |
|---|---|
| கீழிருந்து முழங்கால் வரை | - பொன்னிறம் |
| இடுப்புவரை | - பனி நிறம் |
| கழுத்து வரை | - குங்கும நிறம் |
| முடி இறுதி வரை | - வெள்ளை நிறம் |
| மூக்கும் முகமும் | - நீல நிறம் |

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை உச்சி முதல் முடி இறுதி வரை | 4'-0" |
| முகம் | 12'-0" |
| கழுத்து | 4'-0" |
| மார்பு | 12'-0" |
| நாபி மட்டம் வரை | 12'-0" |
| குறி வரை | 12'-0" |
| தொடை நீளம் | 24'-0" |
| முழங்கால் | 4'-0" |

| | |
|---|---|
| கெண்டைக்கால் | 24'-0" |
| பாதம் | 4'-0" |
| | 112'-0" |

| | |
|---|---|
| முக அகலம் | 12'-0" |
| கழுத்து அகலம் | 8'-0" |
| கக்க அகலம் | 20'-0" |
| மார்பு அகலம் | 17'-0" |
| வயிறு அகலம் | 12'-0" |
| அடி வயிறு | 12'-0" |
| இடுப்பு அகலம் | 17'-0" |
| அடித்தொடை அகலம் | 12'-0" |
| முழங்கால் அகலம் | 8'-0" |
| கெண்டைக்கால் அகலம் | 8'-0" |
| கெண்டைக்கால் நடு | 6'-0" |
| பரடு அகலம் | 4'-0" |
| மேற்கை நீளம் | 24'-0" |
| முழங்கை நீளம் | 2'-0" |
| முன்கை நீளம் | 18'-0" |
| பாத நீளம் | 15'-0" |
| பாத அகலம் | 5'-0" |
| கட்டை விரல் நீளம் | 3'-0" |
| சுட்டுவிரல் | 3'-0" |

நடுவிரல், அணி விரல், சிறுவிரல் ஆகிய ஒவ்வொன்றும் அதற்கு முந்திய விரலின் நகமூலத்திற்குச் சம எல்லையில் அமைய வேண்டும்.

## மத்திம நவதாளம்

மத்திம நவதாளமானத்தில், அஸ்திர மூர்த்திகள், யக்ஷர்கள், அப்ஸரசுகள், மருத் கணங்கள், வித்யாதர கணங்கள் ஆகியோரின் படிமங்களைச் செய்தல் வேண்டும்.

உடலமைப்புகளை அதற்குரிய இலக்கணப் படியே செய்தல் வேண்டும்.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| உச்சந்தலை முதல் முடி இறுதி வரை | 3'-0" |
| முகம் | 12'-0" |
| கழுத்து | 3'-0" |
| மார்பு | 12'-0" |
| நாபி | 12'-0" |
| குய்யம் | 12'-0" |
| தொடை | 24'-0" |
| முழங்கால் | 3'-0" |
| முன்கால் | 24'-0" |
| பாதம் | 3'-0" |
| | 108'-0" |



மத்திம நவதாள உயர அளவு

### தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| முக அகலம் | 10'-0" |
| நெற்றி அகலம் | 8'-0" |
| கழுத்து அகலம் | 8'-0" |
| நெற்றியின் உயரம் | 4'-0" |
| மூக்கின் நீளம் | 4'-0" |
| மூக்கின் அகலம் | 2'-0" |
| அடிமூக்கின் அகலம் | 1'-0" |
| மூக்கின் களத்தி | 2'-0" |
| கண் நீளம் | 2'-0" |
| கண் அகலம் | 1'-0" |

கண் நீளத்தில் மூன்றில் ஒரு பாகம் கருவிழி மண்டலம். கருவிழியின் மூன்றிலொரு பாகம் ஒளி மண்டலம்.

| | |
|---|---|
| புருவ நீளம் | 4'-0" |
| புருவ அகலம் | 0'-1" |
| இருபுருவங்களின் இடைவெளி | 1'-0" |
| காதின் நீளம் | 4'-0" |
| காதின் அகலம் | 2'-0" |
| கீழ் உதடு நீளம் | 2'-0" |
| கீழ் உதடு அகலம் | 1'-0" |
| மேல் உதடு நீளம் | 4'-0" |
| மேல் உதடு அகலம் | 0'-4" |
| கோஜியின் உயரம் | 1'-0" |
| காதிலிருந்து மோவாய் வரை தூரம் | 8'-0" |

### உடலும் கால்களும்

| | |
|---|---|
| தோள் அகலம் | 36'-0" |
| கக்க அகலம் | 20'-0" |
| மார்பு அகலம் | 18'-0" |
| முலைக்கண்களின் இடைத் தூரம் | 12'-0" |
| நடு உடல் அகலம் | 14'-0" |
| சுரோணி அகலம் | 16'-0" |
| இடுப்பு அகலம் | 18'-0" |
| குறி நீளம் | 5'-0" |
| விரைப்பை நீளம் | 4'-0" |
| அடித்தொடை அகலம் | 12'-0" |
| நடுத்தொடை அகலம் | 9'-0" |
| கீழ்த்தொடை அகலம் | 7'-4" |
| முழங்கால் அகலம் | 7'-0" |
| முன்கால் மேல்பகுதி | 6'-0" |
| கெண்டைக்கால் அகலம் | 7'-0" |
| நளகை அகலம் | 4'-0" |
| குதிகால் அகலம் | 4'-0" |
| பாத நீளம் | 16'-0" |
| முன்பாத அகலம் | 6'-0" |
| நடுப்பாத அகலம் | 5'-0" |
| முன்பாத உயரம் அல்லது கட்டை விரல் கனம் | 1'-0" |
| சுண்டு விரல் கனம் | 0'-4" |
| பாத விரல்களின் நீளம் | |
| கட்டை விரல் | 3'-0" |
| 2 ஆம் விரல் | 3'-0" |

மற்ற விரல்கள் ஒன்றுக்கொன்று குறைந்திருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 24'-0" |
| முழங்கை நீளம் | 2'-0" |
| முன்கை நீளம் | 18'-0" |
| கைத்தல நீளம் | 6'-0" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |
| மேற்கை அகலம் | 8'-0" |
| முழங்கை அகலம் | 6'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-4" |

### கைவிரல்கள்

| | |
|---|---|
| பெருவிரல் நீளம் | 4'-0" |
| சுட்டுவிரல் நீளம் | 4'-6" |
| நடுவிரல் நீளம் | 6'-0" |
| அணிவிரல் நீளம் | 4'-6" |
| சுண்டுவிரல் நீளம் | 4'-0" |

### அதம நவதாளம்—ஆண்மானம்

சைவச் சார்புடைய சிற்ப நூல்களிலும், ஆகம நூல்களிலும் அதம நவதாளத்தில் அசுரர்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், பித்ருக்கள் ஆகியோரின் படிமங்களை இயற்றுதல் வேண்டுமென்ற விதியொன்று இருப்பதால்

அதமநவதாள அளவுகள் சைவ நூல்களில் கண்டவாறும் திருத்தமுடனும் இங்கு கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைச் சிற்பிகள் பின்பற்றலாம்.

கற்பனைப் படிமங்களுக்கும் இவ்வளவுகள் ஏற்றவையே. ஆண், பெண் ஆகிய இரு பாலோருக்கும் அளவுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

## உயரக் கணக்கு

| | |
|---|---|
| உச்சந்தலை முதல் முடி இறுதி வரை | 3'-0" |
| முகம் | 12'-0" |
| கழுத்து | 4'-0" |
| மார்பு | 11'-0" |
| நாபி | 11'-0" |
| குய்யம் | 11'-0" |
| தொடை | 22'-0" |
| முழங்கால் | 4'-0" |
| முன்கால் | 22'-0" |
| பாதம் | 4'-0" |
| மொத்தம் | *104'-0"* |

| | |
|---|---|
| முக அகலம் | 10'-0" |
| கழுத்து அகலம் | 7'-4" |
| தோள் அகலம் | 34'-0" |
| வயிறு அகலம் | 13'-4" |
| சுரோணி அகலம் | 15'-4" |
| இடுப்பு அகலம் | 17'-4" |
| தொடை அகலம் | 11'-4" |
| முழங்கால் அகலம் | 7'-4" |
| கணுக்கால் அகலம் | 3'-4" |
| மேற்கை நீளம் | 22'-0" |
| முழங்கை நீளம் | 2'-0" |
| முன்கை நீளம் | 16'-4" |
| கைத்தல நீளம் | 11'-0" |
| அடிக்கை அகலம் | 7'-4" |
| முழங்கை அகலம் | 5'-4" |
| மணிக்கட்டு அகலம் | 3'-4" |

தேவையான பிற அளவுகளை மத்திம நவதாள அளவிலிருந்து எடுத்தாளலாம்.




அதம நவதாள உயர அளவு

## பெண் மானம்

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| உச்சந்தலை முதல் முடி இறுதி வரை | 3'-0'' |
| கண் மட்டம் | 4'-0'' |
| மூக்குப்புடை மட்டம் | 4'-0'' |
| மோவாய் மட்டம் | 4'-0'' |
| கழுத்து | 4'-0'' |
| மார்பு | 11'-0'' |
| நாபி | 11'-0'' |
| குய்யம் | 11'-0'' |
| தொடை | 22'-0'' |
| முழங்கால் | 4'-0'' |
| முன்கால் | 22'-0'' |
| பாதம் | 4'-0'' |
| | *104'-0''* |
| முக அகலம் | 10'-0'' |
| தோள் அகலம் | 30'-0'' |
| கொங்கை அகலம் | 8'-0'' |
| இரு கொங்கைகளின் இடைவெளி | 1'-0'' |
| கொங்கைகளின் கீழ் உடல் அகலம் | 14'-0'' |
| நடு வயிறு அகலம் | 10'-0'' |
| சுரோணி அகலம் | 15'-4'' |
| இடுப்பு அகலம் | 20'-0'' |
| நடுத்தொடை அகலம் | 11'-4'' |
| கீழ்த்தொடை அகலம் | 8'-0'' |
| முழங்கால் | 7'-4'' |
| முன்கால் அகலம் | 7'-0'' |
| பரடு அகலம் | 3'-4'' |
| மேற்கை நீளம் | 22'-0'' |
| முழங்கை நீளம் | 2'-0'' |
| முன்கை நீளம் | 16'-4'' |
| அடிக்கை அகலம் | 7'-0'' |

மற்ற அகல அளவுகளுக்கு மத்திம நவ தாளத்தைப் பின்பற்றலாம்.



அதம நவதாளப் பெண் படிம உயர அளவு

1. பிராம்மியம்
2. 2'-4'' பிராம்மியம்
3. பிராம்மியம்
4. ஆயாதி கணிதம்—காண்க.
5. பதவிந்யாசம்—காண்க.

# 29

# அடியவர் படிமங்கள்



மனித சமுதாயத்திற்கு நல்வழி காட்டி அதனை மேம்பாடு அடையச் செய்த பெரியோர்கள் மற்றும் தத்துவ ஞானிகள், துறவிகள், சமயக் குரவர்கள், புலவர்கள், கலைஞர்கள், பேரறிஞர்கள், பேரரசர்கள் முதலியோர் வணக்கத்துக்குரியவர்கள். இத்தகைய பெரியோர்களின் உருவங்கள் நமது சிற்பக்கலை மரபில் தனித்ததொரு முறையிலேயே இயற்றப்படுகின்றன. மனிதர்தம் உயர்வுக்கு உடலன்றி, உள்ளமும் பெரும் காரணமாகையினால், மனித வடிவத்தின் புறத்தோற்றத்தை விடுத்து, குறிப்பிட்ட ஒரு மனிதரின் குண நலன்களையே செய்யப்படும் வடிவத்தில் உணர்த்தியும் விளக்கியும் காட்டுவதே மரபாகும். இன்னும் சிறிது விரிவாகக் கூறினால், குறிப்பிட்ட பெரியாரின் இனம், தொழில், குணநலன்கள், ஆற்றல்கள் அவர்தம் வாழ்க்கை இலட்சியம், சேவை ஆகியவை வடிவத்தின் மூலமாகக் கலைநயத்தோடு சித்திரித்துக் காட்டப்பெறும். இதனையே அக அழகு என்பர் அறிஞர். இன்று நாம் காணும் புத்தர் படிமத்தின் வடிவழகு புத்தரின் இயற்கையான புற அழகு அல்ல. அஃது யாதெனில், புத்தர் தம் அகவழகின் புறத்தோற்றமே, மேலும், மனிதரை மனிதராகவே காட்டுதல் வேண்டுமேயன்றி, கடவுட் படிமங்களில் காணப்படும் கலையுக்திகளை இத்தகைய உருவங்களில் புகுத்துவதில்லை.

இவ் அடிப்படையிற்றான், சைவ, வைணவ, சமயக்குரவர்களின் படிமங்களையும், நாடாளும் வேந்தர்தம் படிமங்களையும், புத்தர், அருகர் போன்ற மதத்தலைவர்களின் படிமங்களையும், அகத்தியன், தொல்காப்பியன் போன்ற நூல் ஆசிரியர் படிமங்களையும், வள்ளுவன் போன்ற ஞானாசிரியர் படிமங்களையும், கம்பன், காளிதாசன் போன்ற கவிரத்னங்களையும், அங்ஙனமே சிறப்புமிக்க ஆண், பெண்பாலோரின் படிமங்களையும் இயற்றிடல் வேண்டும்.

அத்தகைய கருத்தை ஆதாரமாகக் கொண்டே சிவனடியார்கள், திருமாலடியவர்கள் ஆகியோரின் படிமங்களைச் செய்தற்குரிய இலக்கணங்களையும், அளவு முறைகளையும் சிற்ப ஆகம நூல்கள் வகுத்துக் கூறுகின்றன.

## சிவனடியார்கள்

இறைவனின் அடியவர்கள் நான்கு வகையினர். அடியவர்தம் பக்தி நிலைகளை ஆதாரமாகக் கொண்டு இவ்வகைகள் தோன்றியுள்ளன.

பக்தி நிலைகள் நான்கு. அவை முறையே

1. சாலோக்கியம்
2. சாமீப்யம்
3. சாரூப்யம்
4. சாயுஜ்யம் ஆகியவைகளாம்.

பக்தி, ஞானம், வைராக்கியம் (இறை அன்பு, இறை ஞானம், உலகப் பற்றற்ற நிலை) ஆகிய இம்மூன்றும் கொண்ட அடியவர் சாலோக்கிய நிலையினை அடைந்தோராவர். இவர்கள் இறைவனின் உலகத்திலுள்ள அடியார்களுடன் கலந்து, இறைவன் மீது எப்பொழுதும் அன்பு செலுத்தி கொண்டிருக்கும் பேறு பெற்றோர். அவர்கள் அவ்வுலகத்தை அடைந்தவர்களாகக் கருதப்படுவர். எனவே, அந்நிலை *சாலோக்யம்* (இறைவுலகிலேயே இருக்கும் தகுதியுடமை) எனப்படும்.

ஞானமும் வைராக்கியமும் கொண்டோர் *சாமீப்ய* நிலையினர் ஆவர். இறைவனை அணுகியிருத்தல் அல்லது இறைவனின் அண்மையில் இருக்கும் தகுதி படைத்தோர் இவர். இறைவனைப் பற்றிய மேலான ஞானமும், துறவுள்ளமும் கொண்ட அடியவர் சாமீப்ய—இறைவனருகில் இருக்கும் தகுதியுடைமை—பெற்றவர் ஆவர்.

உலகை மறந்து, பரம்பொருளின் சகுண வடிவத்தின் மீது சிந்தனை வைத்து, அவனது அடையாளங்களையும் தரித்திருப்போர் மூன்றாவது அடியவர் ஆவர். இந்நிலையில் இறைவனின் வடிவத்தை ஒத்திருப்பர். இது *சாரூப்யம்* எனப்படும்.

நிர்குண பிரம்மத்தின்பாற்பட்ட சுத்த ஞானத்துடன் விளங்கும் அடியவர் சாயுஜ்ய நிலைக்கு உரியவர் ஆவர். உலகெங்கும் பரவிக்கிடக்கும் இறைவனது படைப்புகளில் அவனையுணர்ந்து அதில் ஈடுபாடு முதிர்ந்து, இறுதியில் அதிலேயே கலந்து விடும் நிலை இந்த நான்காவது *சாயுஜ்ய* நிலையாகும்.

மேற்கண்ட நான்கு நிலைகளைக் கருத்திற் கொண்டு, அடியார்களின் வரலாறு தெரிந்து, அவரவர்களுக்குரிய நிலையினை உணர்ந்து, தொழில் வகைக் கருவிகளையும் அவர்களுக்குச் சின்னமாக அளித்து, அவர்தம் படிமங்களை இயற்றுதல் வேண்டும்.

மேற்கண்ட நான்கு நிலைகளுக்குரியோர்தம் படிமங்களுக்கு ஏற்ற தாளமானங்கள் கீழ்க்கண்டவாறு வகுக்கப் பட்டிருக்கின்றன.

சாலோக்யப் படிமத்தை உத்தம நவதாளத்திலும் சாமீப்யப் படிமத்தை அதம தசதாளத்திலும் சாரூப்யப் படிமத்தை மத்திம தசதாளத்திலும் சாயுஜ்யப் படிமத்தை உத்தம தசதாளத்திலும் இயற்றிடல் வேண்டும்.

## ஆழ்வார்கள்

திருமாலின் அடியவர்கள் பதின்மர், அவர்கள்: பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை ஆழ்வார் எனப்படுவர். ஸ்ரீஆண்டாளையும் ஸ்ரீமதுர கவியாழ்வாரையும் சேர்த்து பன்னிருவர் எனக் கூறுதலுமுண்டு. இவர்கள் திருமாலின் கல்யாண குணங்களிலே ஈடுபட்டு அழுந்தினவர்கள், ஆதலால் ஆழ்வார்கள் எனப் பட்டனர் என்பர் அறிஞர்.

ஆழ்வார்கள் படிமத்தை உத்தம அஷ்ட தாளத்தில் இயற்றிட வேண்டுமென்று விஷ்ணு தத்துவம் என்ற நூல் விதி வகுத்துள்ளது. சிற்பிகள் அவ்விதியைப் பின்பற்றித் திருமாலடியவர் படிமங்களைச் செய்யலாம்.

# 30

# உத்தம அஷ்டதாளம்



மனிதப் படிமங்களை உத்தம அஷ்டதாளத்தில் இயற்றிட வேண்டும்.

காஸ்யபர், பிருகு ஆகிய பெரிய முனிவர்தம் படிமங்களையும், இத்தாளத்தில் இயற்றிட வேண்டும்.

மத்திம நவதாளத்திலும் முனிவர்களை இயற்றலாம். இது சாதாரண முனிவர்களைச் செய்ய உதவும்.

இதில் கூறப்படாத சிறு அளவுகளைச் சிற்பிகள் பொருத்தமாகத் தேர்ந்து கொள்ளலாம்.

**உயரக் கணக்கு**

| | |
|---|---|
| தலை | 2'-4" |
| முகம் | 11'-0" |
| கழுத்து | 3'-4" |
| மார்பு | 11'-0" |
| நாபி | 11'-0" |
| குய்யம் | 11'-0" |
| தொடை | 22'-0" |
| முழங்கால் | 3'-0" |
| முன்கால் | 22'-0" |
| பாதம் | 3'-0" |
| மொத்தம் | *100'-0"* |

**தலையும் கழுத்தும்**

| | |
|---|---|
| கழுத்தின் அகலம் | 7'-0" |
| முக அகலம் | 9'-4" |
| முடி முதல் புருவம் வரை | 2'-0" |
| புருவமிருந்து கண்மட்டம் வரை | 2'-0" |
| மூக்குப்புடை | 3'-3" |
| மோவாய் | 3'-3" |
| கண்நீளம் | 2'-0" |
| காது நீளம் | 4'-0" |
| காது அகலம் | 2'-0" |
| கண்ணிலிருந்து காது வரை தூரம் | 4'-4" |
| காதிலிருந்து மோவாய் வரை | 2'-6" |

**உடலும் கால்களும்**

| | |
|---|---|
| தோள் அகலம் | 33'-0" |
| மார்பு அகலம் | 19'-0" |
| வயிறு அகலம் | 13'-0" |
| சுரோணி அகலம் | 15'-0" |
| இடுப்பு அகலம் | 17'-0" |
| தொடை அகலம் | 11'-0" |
| முழங்கால் அகலம் | 7'-0" |
| முன்கால் அகலம் | 5'-0" |
| கணுக்கால் அகலம் | 3'-5" |
| கணுக்கால் மொழி | 4'-4" |
| பாத அகலம் | 5'-4" |

**கைகள்**

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 22'-0" |
| முழங்கை நீளம் | 2'-0" |
| முன்கை நீளம் | 15'-4" |
| கைத்தல நீளம் | 6'-0" |
| நடுவிரல் நீளம் | 5'-0" |
| மேற்கை அகலம் | 7'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-0" |
| முன்கை அகலம் | 5'-0" |

### கைவிரல்கள்

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 3'-4'' | 1'-1" |
| சுட்டு விரல் | 4'-4'' | 0'-7" |
| நடுவிரல் | 5'-0'' | 0'-8" |
| அணிவிரல் | 4'-4'' | 0'-7" |
| சுண்டுவிரல் | 3'-4'' | 0'-6" |




உத்தம அஷ்டதாள உயர அளவு

## உத்தம அஷ்ட தாளம்
## சிவனடியார்–ஆழ்வார் படிமங்கள்

உத்தம அஷ்டதாளத்தில் மனிதப் படிமங்களை இயற்றல் வேண்டும். ஆழ்வார், சிவனடியார் படிமங்களையும் இத்தாளத்திலேயே இயற்றலாம்.

### உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 2'-4'' |
| முகம் | 11'-0" |
| கழுத்து | '3-4'' |
| மார்பு | 11'-0" |
| நாபி | 11'-0'' |
| குய்யம் | 11'-0" |
| தொடை | 22'-0'' |
| முழங்கால் | 3'-0' |
| கெண்டைக்கால் | 22'-0" |
| பாதம் | 3'-0'' |
| | *100'-0"* |



மனிதப் படிம உயர அளவு

### தலையும் கழுத்தும்

| | |
|---|---|
| முகத்தின் அகலம் | 9'-4'' |
| முடிமுதல் புருவம் வரை | 2'-0" |
| கண்மட்டம் வரை | 2'-0'' |

தலையும் கழுத்தும் —*தொடர்ச்சி.*

| | |
|---|---|
| கண்ணூலிலிருந்து மூக்குப்புடை வரை உயரம் | 3'-4" |
| மோவாய் மட்டம் | 3'-4" |
| தாடைத் தொங்கல் | 0'-3" |
| கழுத்தின் அகலம் | 7'-0" |
| கண் நீளம் | 2'-0" |
| காது நீளம் | 4'-0" |
| காதின் அகலம் | 2'-0" |
| கண் ஓரத்திலிருந்து காது வரை தூரம் | 4'-4" |
| காதிலிருந்து முகவாய் வரை தாடையின் உயரம் | 2'-6" |

உடலும் கால்களும்

| | |
|---|---|
| மார்பு அகலம் | 19'-0" |
| வயிறு அகலம் | 13'-0" |
| சுரோணி அகலம் | 15'-0" |
| இடுப்பு அகலம் | 17'-0" |
| தொடை அகலம் | 11'-0" |
| முழங்கால் அகலம் | 7'-0" |
| முன்கால் அகலம் | 5'-0" |
| கணுக்கால் அகலம் | 3'-5" |
| குதிகால் அகலம் | 4'-4" |
| பாத அகலம் | 5'-4" |
| மேற்கை நீளம் | 22'-0" |
| மேற்கை அகலம் | 7'-0" |
| முழங்கை | 2'-0" |
| முன் கை நீளம் | 17'-0" |
| கைத்தலத்தின் நீளம் | 6'-0" |
| நடுவிரல் நீளம் | 5'-0" |

கை விரல்கள்

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 3'-4" | 1'-1" |
| சுட்டுவிரல் | 4'-4" | 0'-7" |
| நடுவிரல் | 5'-0" | 1'-0" |
| அணிவிரல் | 4'-4" | 0'-7" |
| சுண்டுவிரல் | 3'-4" | 0'-5" |

## மத்திம அஷ்ட தாளம் பெண்மானம்

இஃது உத்தம அஷ்ட தாளத்தில் செய்யப்படும் படிமங்களின் துணைவியர் படிமங்களுக்கேற்ற தாளமானமாகும்.

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 2-0 |
| முகம் | 11'-0" |
| கழுத்து | 3'-4" |
| மார்பு | 10'-4" |
| நாபி | 10'-4" |
| குய்யம் | 10'-4" |
| தொடை | 21'-0" |
| முழங்கால் | 3'-0" |
| முன்கால் | 21'-0" |
| பாதம் | 3'-0" |
| | *96'-0"* |




மத்திம அஷ்டதாளப் பெண்படிம உயர அளவு

| | |
|---|---|
| கழுத்து அகலம் | 7'-0'' |
| மார்பு அகலம் | 15'-0'' |
| கொங்கை அகலம் ஒவ்வொன்றும் | 7'-0'' |
| மார்பின் அடி அகலம் | 11'-0'' |
| நடுஉடலின் அகலம் | 9'-0'' |
| சுரோணி அகலம் | 17'-0'' |
| இடுப்பு அகலம் | 19'-0'' |
| தொடை அகலம் | 10'-4'' |
| முழங்கால் அகலம் | 6'-0'' |
| முன்கால் அகலம் | 5'-0'' |
| கணுக்கால் அகலம் | 3'-0'' |
| பாத அகலம் | 5'-4'' |
| கைத்தலத்தின் நீளம் | 5'-4'' |
| கைத்தலத்தின் அகலம் | 5'-0'' |
| நடுவிரல் நீளம் | 4'-4'' |
| அகலம் | 0'-7'' |

மற்ற அளவுகளைப் பொருத்தமாய்க் கொள்க.

## பொது முனிவர்க்குரிய மத்திம அஷ்டதாளம்

| | |
|---|---|
| தலை | 3'-0'' |
| முகம் | 10'-4'' |
| கழுத்து | 3'-0'' |
| மார்பு | 10'-4'' |
| நாபி | 10'-4'' |
| குய்யம் | 10'-4'' |
| தொடை | 21'-0'' |
| முழங்கால் | 3'-0'' |
| முன்கால் | 21'-0'' |
| பாதம் | 3'-0'' |
| | *96'-0''* |

| | |
|---|---|
| பாத நீளம் | 14'-0'' |
| முக அகலம் | 9'-0'' |
| தோள் அகலம் | 32'-0'' |
| கழுத்தின் அகலம் | 6'-0'' |
| மேற்கை நீளம் | 21'-0'' |
| முழங்கை நீளம் | 1'-4'' |
| முன்கை நீளம் | 15'-4'' |
| கைத்தல நீளம் | 10'-4'' |




மத்திம அஷ்டதாள முனிவர் படிம உயர அளவு

## அதம அஷ்டதாளம்–பெண்மானம்

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 2'-0'' |
| முகம் | 10'-0'' |
| கழுத்து | 3'-4'' |
| உடல் | 30'-4'' |
| தொடை | 20'-0'' |
| முழங்கால் | 3'-0'' |
| முன்கால் | 20'-0'' |
| பாதம் | 3'-0'' |
| | *92'-0''* |

உத்தம அஷ்டதாளம்

| | |
|---|---|
| கழுத்து | 6'-6'' |
| மார்பு | 14'-6" |
| மார்பின் அடி அகலம் | 10'-6'' |
| நடுவுடலின் அகலம் | 8'-6" |
| சுரோணி அகலம் | 16'-6'' |
| இடுப்பு அகலம் | 18'-6" |
| தொடை அகலம் | 10'-2'' |
| முழங்கால் அகலம் | 5'-6" |
| முன் கால் அகலம் | 4'-6'' |
| கணுக்கால் அகலம் | 2'-6" |
| பாத அகலம் | 5'-2'' |
| கைத்தல நீளம் | 5'-4" |
| நடுவிரல் நீளம் | 4'-4'' |

# 31

# உத்தம சப்ததாளம்



மனிதப் படிமங்களை உத்தம சப்த தாளத்தில் இயற்றலாம்.

| | |
|---|---|
| தலை | 0'-4 |
| முடி | 1'-0" |
| கண் | 2'-4 |
| புடை | 3'-4 |
| மோவாய் | 3'-4 |
| கழுத்து | 4'-0" |
| மார்பு | 7'-0" |
| நாபி | 11'-0" |
| குய்யம் | 11'-0" |
| தொடை | 20-0" |
| முழங்கால் | 2'-0" |
| கெண்டைக்கால் | 20'-0" |
| பாதம் | 2'-0" |
| | *88'-0"* |

| | |
|---|---|
| பாத நீளம் | 14'-0" |
| மேற்கை நீளம் | 20'-0" |
| முன்கை நீளம் | 16'-0" |
| கைத்தல நீளம் | 5'-0" |
| கைத்தல அகலம் | 4'-0" |
| நடுவிரல் நீளம் | 5'-0" |

மற்ற அளவுகளை அஷ்ட தாளத்திலிருந்து எடுத்தாள்க.



உத்தம சப்த தாள மனிதப் படிம உயர அளவு

## மத்திம சப்த தாளம்[1]

மத்திம சப்ததாள அளவினால் சப்தரிஷிகளின் படிமங்களை இயற்றுதல் வேண்டும். அம் முனிவர்களின் பெயர்கள் பின்வருமாறு:

1. அகத்தியன்
2. காசியபன்
3. பிருகு
4. வசிஷ்டன்
5. பார்கவன்
6. விசுவாமித்திரன்
7. பரத்துவாஜன் ஆவர்.

அம் முனிவர்களில் அகத்தியரை மட்டும் சப்த தாளத்தில் இயற்றி, காசியபன், பிருகு ஆகிய இருவரை அஷ்டதாளத்திலும், வசிஷ்டன், பார்கவன், விசுவாமித்திரன் ஆகியோரை நவ தாளத்தினாலும் அளவிட்டுச் செய்தல் வேண்டும் என்று மானசாரம் என்ற சிற்ப நூல் கூறுகிறது.

## உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 3'-0'' |
| முகம் | 10'-0'' |
| கழுத்து | 3'-0'' |
| மார்பு | 10'-0'' |
| நாபி | 10'-0'' |
| குய்யம் | 5'-0'' |
| தொடை | 18'-4" |
| முழங்கால் | 3'-0'' |
| முன்கால் | 18'-4" |
| பாதம் | 3'-0'' |
| | *84'-0''* |

| | |
|---|---|
| முக அகலம் | 7'-0'' |
| கழுத்து அகலம் | 5'-0'' |
| கக்க அகலம் | 14'-0'' |
| மார்பு அகலம் | 12'-0'' |
| நடு உடல் அகலம் | 16'-0'' |
| இடுப்பின் அகலம் | 12'-0'' |
| தொடை அகலம் | 8'-0'' |
| முழங்கால் அகலம் | 5'-0'' |
| முன்கால் அகலம் | 4'-0'' |
| கணுக்கால் அகலம் | 3'-0'' |
| பாதம் | 4'-0'' |
| பாத நீளம் | 11'-0'' |
| மேற்கை நீளம் | 20''-0'' |
| முழங்கை நீளம் | 1'-4" |
| முன் கை நீளம் | 16'-0" |
| கைத்தல நீளம் | 8'-0'' |
| மேற்கை அகலம் | 5'-0'' |
| மேற்கை நடு அகலம் | 4'-0'' |
| முன் கை அகலம் | 3'-4" |
| மணிக்கட்டு அகலம் | 2'-0'' |
| கைத்தல அகலம் | 3'-4" |
| கைத்தல நீளம் | 4'-0'' |

முனிவர் எழுவரும் இரண்டு கைகளும், இரண்டு கண்களும் உடையவர்கள். சடை முடியும் தரித்திருப்பர்.

1. மானசாரம்

அகத்தியர் படிமத்தைக் குட்டையாகவும், பெருவயிறுடையதாகவும், காவி ஆடை உடுத்தியதாயும், அமைத்தல் வேண்டும். முனிவர் அனைவருக்கும் வலக்கரத்தில் யோக தண்டமும், இடக்கரத்தில் ஏடும் இருத்தல் வேண்டும்.




மத்திம சப்ததாள உயர அளவு

முனிவர்களின் வலது கரத்தில் யோக தண்டத்திற்கு மாற்றாக அஞ்சலி முத்திரையுடனும் இயற்றலாம். ஒவ்வொருவரும் பூநூல் தரித்து மேலாடையுடுத்தியிருக்க வேண்டும். முனிவர் படிமங்கள் நின்ற நிலையிலாதல், அமர்ந்த நிலையிலாதல் இருக்கலாம்.

# 32

# உத்தம ஷட்தாளம்



குள்ளர்களின் படிமம் சிற்பக்கலையுலகில் சிறப்பிடம் பெற்றுள்ளது. இது கற்பனை வடிவத்தைச் சார்ந்ததே எனினும் வடிவழகு நிரம்பியதொன்றாம். இதற்குரிய உயரக் கணக்குகளும் செம்மையானவை. இதில் கொடுக்கப்படாத அளவுகளைப் பொருத்தமாக சிற்பிகள் அமைத்துக் கொள்ளலாம்.

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 0'-4" |
| முடி | 1'-0" |
| முகம் | 8'-4" |
| கழுத்து | 3'-4" |
| மார்பு | 8'-4" |
| நாபி | 8'-4" |
| குய்யம் | 8'-4" |
| தொடை | 17'-0" |
| முழங்கால் | 1'-4" |
| கெண்டைக்கால் | 17'-0" |
| பாதம் | 1'-4" |
| | *76'-0"* |

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 17'-0" |
| முன்கை நீளம் | 14'-0" |
| கைத்தலத்தின் நீளம் | 5'-0" |
| நடுவிரல் நீளம் | 5'-0" |
| பாத நீளம் | 12'-0" |

மத்திம ஷட்தாளம்

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 1'-0" |
| முகம் | 9'-0" |
| கழுத்து | 3'-0" |
| உடல் | 19'-0" |
| தொடை | 17'-0" |
| முழங்கால் | 3'-0" |
| முன்கால் | 17'-0" |
| பாதம் | 3'-0" |
| | *72'-0"* |



மத்திம ஷட்தாளப் படிமம்




மத்திம ஷட்தாளப் அளவு

அதம ஷட் தாளம்

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 1'-0" |
| முகம் | 9'-0'' |
| கழுத்து | 2'-0" |
| உடல் | 18'-0'' |
| தொடை | 17'-0" |
| முழங்கால் | 2'-0'' |
| முன்கால் | 17'-0" |
| பாதம் | 2'-0'' |
| | *68'-0"* |

மத்திம ஷட்தாளப் படிமத்திற்கும் அதம ஷட் தாளப் படிமத்திற்கும் உயரக் கணக்கு மட்டுமே கொடுக்கப்பட்டிருக்கிறது ஆனால் உறுப்புக்களின் தனித்தனியான நீள அகலங்கள் இங்குக் கூறப்படவில்லை. எனவே, மத்திம, அதம தாளங்களுக்குத் தேவையான அவ்வளவுகளை உத்தம அளவிலிருந்து எடுத்து, படிமத்திற்கேற்றவாறு சிற்பிகள் அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். இதனால் வடிவழகு குறைந்து விடாமலும் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.


240-1—37a

# 33

# உத்தம பஞ்சதாளம்



## விநாயகர் படிமம்

கருத்தழகும், அதற்கேற்ற வடிவழகும் கொண்ட வழிபடு படிமங்களில் பிள்ளையார் படிமம் ஒப்பற்றதாகும். மேலான பிரணவத் தத்துவத்திற்கு உயர்ந்தொரு கலை விளக்கம் இஃதென்றால் மிகையன்று.

ஓம் என்பது ஒலி, இஃது ஒலிகளுக்கெல்லாம் மூலமானது. இதற்குப் பிரணவம் என்பது பெயர். ஓம் என்ற ஒலி வடிவத்திற்கு ஓம் என்பது வரிவடிவம். இவ் வரி வடிவத்தையொத்ததே விநாயகரின் வேழமுகம் ஆகும்.

ஓம் என்ற பிரணவ ஒலியில், அ.உ.ம. ஆகிய மூன்று எழுத்துகள் அடங்கும். இவற்றுக்கு மாத்திரைகள் என்று பெயர். ஓம் என்பதில் மெய் ஒற்றுமிருக்கின்றதல்லவா? இதனை அமாத்திரை என்பர் அறிஞர். இந்நான்கும் சேர்ந்து ஒலிக்கும்போது ஓம் என்ற ஒலி பிறக்கின்றது. ஓம் என்பது பரம்பொருளை—உலகத்தை—வேதசாரத்தைக் குறிக்கும் என்பர் பெரியோர். ஓம் என்பதே பிரம்மம் என்றும், இந்த ஓங்காரத்திலிருந்தே—வித்திலிருந்தே மரம் வெளிப்பட்டது போல—எல்லாம் தோற்றமெடுக்கின்றன என்றும், ஓங்காரத்திலேயே வளர்ந்து பெருகி நின்று யாவும் ஒடுங்குகின்றன என்றும் விளக்குவர் மூதறிஞர்.

மேலும் அகரம் தோற்றத்தையும், உகரம் நிலை பெறுதலையும், மகரம் ஒடுக்கத்தையும் குறிப்பிட்டு அவை முறையே பிரம்மன், விஷ்ணு, ருத்திரண் ஆகிய மும்மூர்த்திகளையும், காற்று, தீ, சூரியன் ஆகிய மூன்று பொருள்களையும், கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலங்களையும் குறிக்கும் என்றும் ஞான நூல்கள் விளக்கும்.

எத்தகைய மெய்ஞானக் கருத்துக்கும் விளக்கமும் வடிவமும் கொடுப்பது சிற்பக் கலையின் அடிப்படை நோக்கமல்லவா?

எனவே, ஓம் என்ற வரி வடிவத்திற்குத் தோற்றத்தால் மிக ஒத்த வடிவம் யானை முகம் என்று கண்ட சிற்பக் கலைஞன் அதனைத் தலையாகக் கற்பித்து வலது தந்தத்தை ஒடித்து, ‘ஓம்’—ன் தொடக்கச் சுழியைக் காட்டி அங்கிருந்து வலம் சுழித்து இடது காது வரை சென்று, வளைந்த—ஒடியாத—இடது தந்தத்தின் வழியாக வக்கரித்து கீழ் நோக்கி இறங்கி, துதிக்கை வழியாக மேலும் சென்று, துதிக்கை நுனியை வலமாகச் சுழித்து, மோதகத்தையும் ஏற்றி வைத்து, மோதகத்தால் ‘ம’ கரத்தையும் உணர்த்தி, ஓங்காரத்தை உருவகப்படுத்தியுள்ளான்; மேலும் அத் தலைக்கேற்ற பருவுடலையும், குறுகிய கைகால்களையும் அத்துடன் இணைத்து சுவை மிகுந்த கலைப்படிமமாக வழங்கியுள்ளான்.



உருவம்—வரிவடிவம்
பிரணவ வடிவம்

(மோதகம்—அகிலம், அவனே அதனைத் தாங்குபவன். உகரத்தில்—தாங்குவதோடு அல்லாமல் காப்பவனும் அவனே.)

வேழமுகம், பருத்த உடல், குட்டையான கை கால்கள், மூன்று கண்கள், நான்கு கைகள், மேற்கைகளில் பாசம், அங்குசம், கீழ்க் கைகளில் தந்தம், வரதம், துதிக்கையில் மோதகம் ஆகியவை விளங்க வலதுகாலைத் தொடையுடன் சேர்த்து மடித்து ஆசனத்தில் ஊன்றி இடது காலை அவ்வாசனத்தில் படுக்கையாகக் கிடத்தி, பத்ம பீடத்தில் அமர்ந்து, தனது தும்பிக்கையினை வலமாகச் சுழித்து ஓங்கார முத்திரையுடன் விளங்கும் மூர்த்தியே வலம்புரி விநாயகர் என்றும் பிரணவ மூர்த்தி என்றும் ஓங்கார மூர்த்தம் என்றும் சொல்லப்படுகிறது. இவ்வடிவம் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் புரியும் முழுமுதற் பொருளின் சிறப்பான குணங்களை—அளப்பரிய ஆற்றல்களை—உணர்த்தும் சகுணப்பிரமத்தின் வடிவமாக மதிக்கப்படுகிறது. முத்தொழிலுக்குரிய சிவனாகவே விநாயகர் பாவிக்கப்படுகிறார். முக்கண்கள் இக் கருத்தை வலியுறுத்தும். மேலும் விநாயகன் பிறைமதியையும், கங்கையையும் தரித்துள்ளமை கருதத்தக்கது.

அதே இலக்கணங்களைக் கொண்டு விளங்குவதும் துதுக்கையினை இடமாக நீட்டி இடது கையில் பிடிக்கப் பெற்றுள்ள மோதகத்தை தொட்டுக் கொண்டு இருக்கும் அமைதியினையுடைய மூர்த்தியை சித்தி விநாயகர் என்று கூறுகிறோம். இவ்வமைதியில் தலையும், தும்பிக்கையும் சேர்ந்து 'உகரத்தின்' தோற்றத்தைப் புலப்படுத்கிறதல்லவா? உகரமானது இறைவனின் காத்தற் தொழிலை உணர்த்தும் என்ற கொள்கையின் அடிப்படையில் இவ் வடிவத்தைக் காக்கும் வடிவமாகக் கொண்டு சுகபோகங்களை விரும்பும் மக்களால் பெரிதும் விரும்பி வழிபடப்படுகிறது.



உகர அமைதி

இக் கோலத்தில் காத்தற் தொழிலை விநாயகர் செய்வதால் விஷ்ணு மூர்த்தியாகவே பாவிக்கப்படுகிறார். எனவே விஷ்ணுவுக்கு உரிய சங்கு சக்கரம் விநாயகனுக்கும் ஆயுதங்களாயின.

ஓம் என்பதை பிரபஞ்ச இயக்கத்தின் தொடக்கக் குறிப்பாகக் கொண்டு—அதாவது பரம் பொருளிலிருந்து முதன் முதலில் வெளிப்பட்டது இவ்வொலி எனக்கொண்டு—பிரணவத்திற்கு அளித்த உருவாகையால் இவ்வடிவத்திற்கு முதல் வழிபாடு கோவில்களில் நிகழ்வதைக் காணலாம். கணபதி, ஞானத்திருவுரு என்று பெரியோர் கூறுவர். அதை நமக்கும் கூட உணர்த்துவது யானை முகமேயாகும்.

### விநாயகர் படிம வர்ணனை

யானை முகமும், மூன்று கண்களும், ஐந்து விரல்களும், பருத்தவுடலும், பிதுங்கிய வயிறும், குட்டைக்கை கால்களும் கொண்டு விளங்குவது விநாயகர் படிமம். மஞ்சள், சிவப்பு, அல்லது வெண்மையான மேனியும் வெண்பட்டாடை அல்லது பச்சை நிற ஆடையும் உடுத்தி, தலையில் ஜடாமகுடம் கிரீட மகுடம் அல்லது கரண்ட மகுடம் அணிந்து, நாகயக்ஞோபவீதம் அல்லது பூணூல் தரித்து, ஹாரம், கேயூரம், கடகம் கடிசூத்திரம், உதரபந்தம், லலாடபட்டம் முதலிய அணிகளைப் பூண்டு விளங்கும். கோலத்திற்கு ஏற்றவாறு பல கரங்கள் கொண்டு பல்வேறு ஆயுதங்களைத் தாங்கியதாகவும் இயற்றப்படும். விநாயகர் படிமத்தை நின்ற கோலத்திலாதல், அமர்ந்த கோலத்திலாதல் ஆடற் கோலத்திலாதல் இயற்றலாம்[1]. நின்ற கோலத்தில் இயற்றும்போது ஆபங்கம் அல்லது சமபங்கத்தில் படிமம் அமைதல் வேண்டும். அமர்ந்த கோலத்தில் உடலும் தலையும் நேரியதாக அமைந்து வலது காலை ஆசனத்தில் தொடையோடு சேர்த்து, மடக்கி ஊன்றி, இடதுகாலைக் கிடத்தியிருத்தல் வேண்டும்.

[2]இல்லங்களில் வைத்து வழிபடுவதற்கும் கோயில்களில் பிரதிஷ்டை செய்வதற்கும் அமர்ந்த கோலப்படிமமே ஏற்றதாகும். உற்சவங்களுக்கும் அமர்ந்த கோலம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பினும் நின்ற கோல மூர்த்தியே விசேடமாகும்.

### உத்தம பஞ்ச தாளம்

விநாயகர் படிமம்–உயரக் கணக்கு[3]

| | |
|---|---|
| மத்தகம் | 2'-0" |
| கண் மட்டம் | 4'-0" |
| மோவாய் | 8'-0" |

| | |
|---|---|
| கழுத்து | 3'-0" |
| மார்பு | 6'-0" |
| நாபி | 16'-0" |
| குய்யம் | 6'-0" |
| தொடை நீளம் | 6'-4" |
| முழங்கால் | 3'-0" |
| கெண்டைக்கால் | 6'-4" |
| பாதம் | 3'-0" |
| | 64'-0" |




உத்தம பஞ்ச தாள ('காஸ்யப' உயரக்கணக்கு)

### தலையும் துதிக்கையும்

| | |
|---|---|
| முகத்தின் நடு அகலம் | 10'-0" |
| துதிக்கையின் அடி அகலம் | 6'-0" |
| துதிக்கையின் நீளம் | 22'-0" |
| துதிக்கையின் நுனி அகலம் | 1'-4" |
| துதிக்கையின் நுனியில் இரண்டு துவாரங்கள் இருக்க வேண்டும் | |
| இடது தந்தத்தின் நீளம் | 4'-0" |

வலது தந்தம் அடியில் ஓடிக்கப்படும்; ஓடிந்த பகுதி சமதளமாகவும் இருத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| தொங்கு உதட்டின் நீளம் | 2'-0" |
| கண்ணின் நீளம் | 0'-6" |
| கண்ணின் அகலம் | 0'-6" |

### கழுத்தும் உடலும்

| | |
|---|---|
| கழுத்தின் அகலம் | 10'-0" |
| காது உயரம் | 10'-0" |
| Ü èô[illegible] | 9'-0" |
| காதின் கனம் | 0'-4" |
| அடிக்காதின் நீளமும் அகலமும் | 2'-0" |
| தோள் அகலம் புறவாய்க்கு புறவாய் | 32'-0" |
| கக்க அகலம் | 19'-0" |
| முலைக் கண்ணின் இடை அகலம் | 10'-0" |
| முலைக்கண் காம்பின் அகலம் | 0'-2" |
| முலைக்கண் அகலம் | 3'-0" |
| மார்பின் அடி அகலம் | 15'-0" |
| நடு வயிற்றின் அகலம் | 22'-0" |
| தொப்பூழ் அகலம் 1'-4"; ஆழம் | 1'-4" |
| குறி நீளம் | 3'-0" |
| குறி அகலம் | 1'-3" |
| விரைப்பையின் நீளம் 3'-0"; அகலம் | 3'-0" |

### தொடையும் காலும்

| | |
|---|---|
| பெருந் தொடையின் அகலம் | 12'-0" |
| முழங்காலின் அகலம் | 9'-0" |
| கெண்டைக்கால் அகலம் | 7'-0" |
| பரடு அகலம் | 4'-0" |
| பாத நீளம் | 7'-0" |
| பாத அகலம் | 6'-4" |
| குதிகால் அகலமும் உயரமும் | 3'-0" |
| கால் பெருவிரல் நீளம் | 2'-0" |
| 2வது விரல் | 1'-7" |
| நடுவிரல் | 1'-6" |
| 4வது விரல் | 1'-5" |
| சிறுவிரல் | 1'-4" |

### கையும் விரலும்

| | |
|---|---|
| மேற்கை நீளம் | 13'-0" |
| மேற்கை அகலம் | 6'-4" |
| முன்கை நீளம் | 9'-0" |
| முன்கை அகலம் | 4'-0" |
| மணிக்கட்டின் அகலம் | 2'-4" |
| கைத்தல நீளம் | 4'-0" |
| அகலம் | 4'-0" |
| நடுவிரல் நீளம் | 3'-0" |

| | நீளம் | அகலம் |
|---|---|---|
| பெருவிரல் | 2'-1" | 1'-4" |
| சுட்டுவிரல் | 2'-5" | 1'-0" |
| நடுவிரல் | 3'-0" | 1'-1" |
| அணிவிரல் | 2'-5" | 1'-0" |
| சுண்டு விரல் | 2'-1" | 0'-7" |

ஒவ்வொரு விரலின் அகலத்தினைப் போன்ற அளவு நீளமும் அதன் அகலமும் கொண்டதாக விரல் நகங்கள் அமைதல் வேண்டும். நகங்கள் நீண்ட வட்ட வடிவமாகவும் இருத்தல் வேண்டும்.

மேற்கண்ட படிம அளவுகள் காசியப நூற் கொள்கை ஆகும். விநாயகப் படிம அளவுகளைப் பற்றி பேசும் நூல்கள் பலஉள. அந்நூல்களில் விநாயகர் உடல் அமைப்பில் வெவ்வேறு மானங்கள், அதனால் சிறிது வேறுபட்ட தோற்றங்கள் கிடைக்கின்றன. அவ் அவளவுகளின் அட்டவனையைக் கீழே காணலாம். ஒவ்வொன்றையும் கையாண்டு அவற்றுக்குரிய படங்களும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன. ஒப்பற்ற கலை நூலாசிரியர்களால் வழங்கப் பெற்ற இலக்கணங்களானதால் சிற்பிகள் அவற்றில் விருப்பமான ஏதாவது ஒன்றை முழுமையாகத் தேர்ந்தெடுத்து படிமத்தை இயற்றலாம்.

### காஸ்யபம்

| | |
|---|---|
| மத்தகம் | 2'-0" |
| கண்மட்டம் | 4'-0" |
| மோவாய் (முகம்) | 8'-0" |
| கழுத்து | 3'-0" |
| மார்பு (மையம்) | 6'-0" |
| நாபி | 16'-0" |
| குறிமட்டம் | 6'-0" |
| தொடை | 6'-4" |
| முழங்கால் | 3'-0" |
| முன்கால் | 6'-4" |
| பாதம் | 3'-0" |
| | 64'-0" |

| சில்பரத்னம் | | | |
|---|---|---|---|
| மத்தகம் | 2'-0" | நாபி | 9'-0" |
| கண்மட்டம் | 4'-0" | குறிமட்டம் | 9'-0" |
| மோவாய் (முகம்) | 8'-0" | தொடை | 6'-4" |
| கழுத்து | 4'-0" | முழங்கால் | 3'-0" |
| மார்பு | 9'-0" | முன்கால் | 6'-4" |
| | | பாதம் | 3'-0" |
| | | | 64'-0" |



'சில்பரத்ன' உயரக்கணக்கு

**சாரஸ்வதீயம்**

| | | | |
|---|---|---|---|
| மத்தகம் | 2'-0" | குறிமட்டம் | 6'-0" |
| முகம் | 12'-0" | தொடை | 6'-0" |
| கழுத்து | 1'-0" | முழங்கால் | 3'-0" |
| மார்பு | 12'-0" | முன்கால் | 6'-0" |
| நாபி | 13'-0" | பாதம் | 3'-0" |
| | | | 64'-0" |




'சாரஸ்வதீய' உயரக்கணக்கு

**விஸ்வகர்மீயம்**

| | | | |
|---|---|---|---|
| மத்தகம் | 3'-0" | குறிமட்டம் | 6'-0" |
| முகம் | 12'-0" | தொடை | 6'-0" |
| கழுத்து | 2'-0" | முழங்கால் | 3'-0" |
| மார்பு | 11'-0" | முன்கால் | 6'-0" |
| நாபி | 12'-0" | பாதம் | 3'-0" |
| | | | 64'-0" |




'விஸ்வகர்மீய' உயரக்கணக்கு

ஐந்திரமதம்

| | | | |
|---|---|---|---|
| மத்தகம் | 2'-0" | நாபி | 15'-0" |
| கண்மட்டம் | 3'-4" | குறிமட்டம் | 6'-0" |
| மோவாய் (முகம்) | 8'-4" | தொடை | 6'-4" |
| கழுத்து | 1'-0" | முழங்கால் | 3'-0" |
| மார்பு | 9'-0" | முன்கால் | 6'-4" |
| | | பாதம் | 3'-0" |
| | | | 64'-0" |




'ஐந்திரமத' உயரக்கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மநுசாரம் | | குறிமட்டம் | 6'-0" |
| மத்தகம் | 2'-0" | தொடை | 6'-4" |
| கண்மட்டம் | 4'-0" | முழங்கால் | 3'-0" |
| மோவாய் (முகம்) | 7'-0" | முன்கால் | 6'-4" |
| கழுத்து | 1'-0" | பாதம் | 3'-0" |
| மார்பு | 9'-0" | | 64'-0" |
| நாபி | 16'-0" | | |

நதமானம்—3,4, 5 விரல்கள், ஆசனமானம் 4'-4" படிம அகல அளவுகளை காஸ்யப சிற்ப நூலிற் கண்டவாறு கொள்க. படத்திலும் காண்க.




'மநுசார' உயரக்கணக்கு

தமிழகச் சிற்பிகள், நடைமுறையில் பெரும்பாலும் விஸ்வகர்மீய வாஸ்து நூலின் ஆசிரியர் வழங்கும் உயரக்கணக்கையே பின்பற்றி வருகிறார்கள். எனவே, அவ்வுயரக் கணக்கை மீண்டும் சிறப்பாகக் கீழே காண்க.

உயரக் கணக்கு

| | |
|---|---|
| மத்தகம் | 3'-0" |
| முகம் | 12'-0" |
| கழுத்து | 2'-0" |
| மார்பு | 11'-0" |
| நாபி | 12'-0" |
| குய்யம் | 6'-0" |
| தொடை | 6'-0" |
| முழங்கால் | 3'-0" |
| முன்கால் | 6'-0" |
| பாதம் | 3'-0" |
| | 64'-0" |

## விநாயகர் படிம சூத்திர விளக்கம் (நின்றகோலப் படிமம்)

இத்தகைய உயர அளவினைக் கொண்ட விநாயகர் படிமத்திற்கு லம்ப மானங்கள் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டிருக்கின்றன. யானை முகமும், வயிறும் சமசூத்திரத்தில் இருத்தல் வேண்டும். முகத்தையும் பெருவயிறையும் தூக்கு நூல் தொட்டுத் தொங்கும். அத்தூக்கு நூலிலிருந்து முடி, மத்தகம், கழுத்து முதலிய உறுப்புகள் எவ்வளவு பின்னோக்கு உள்ளடங்கி இருக்க வேண்டுமென்பதை இதன் மூலம் அறியலாம். விளக்கம் பின்வருமாறு:

| | |
|---|---|
| தொங்கு நூலிலிருந்து முடி அடக்கம் | 21'-0" |
| மத்தகம் முடி அடக்கம் | 9'-0" |
| கழுத்து | 11'-0" |
| மார்பு அடக்கம் | 6'-0" |
| குறி அடக்கம் | 8'-0" |
| தொடை அடக்கம் | 7'-0" |
| முழங்கால் அடக்கம் | 9'-0" |
| முன்கால் அடக்கம் | 10'-0" |
| கணுக்கால் அடக்கம் | 11'-0" |




நின்றகோலப் பக்கத் தோற்றம்

## ஐந்திரமத நூலாசிரியரின் விநாயகர் படிம அளவுகள்

ஐந்திரமத வாஸ்து நூலில் அமர்ந்த கோல விநாயகர் படிமத்திற்குக் கீழ்க்கண்டவாறு லம்பமானங்கள் சொல்லப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| தூக்கு நூலிலிருந்து முடி அடக்கம் | 12'-0' |
| முடி நடு | 6'-0' |
| மத்தகம் | 5'-4' |

| | |
|---|---|
| கேசாந்தம் | 6'-0" |
| உடல் (மார்பு) | 3'-0" |
| அல்லது | 5'-0" |
| வயிறு | 2'-0" |
| நாபி | 3'-4" |
| குய்ய மூலம் | 10'-0" |
| தொடை | 9'-0" |

மேலும், படிமத்தின் மைய நூலிலிருந்து தந்தம் பிடித்த கையின் விலக்கம் 15, 16, 17 விரலாகும். அப்படிமம் நின்ற கோலத்தில் இருப்பின் உறுப்புகளின் அடக்குமானங்கள் பின்வருமாறு:

| | |
|---|---|
| முடி | 16'-0" |
| தலை நடு | 8'-0" |
| மத்தகம் | 5'-4" |
| கேசாந்தம் | 6'-0" |
| கண் மட்டத்திற்கு மேலே | 3'-0" |
| கண்மட்டம் | 2'-0" |
| துதிக்கையின் நடு | 0'-6" |
| வயிறு | 2'-0" |
| நாபி | 4'-0" |
| குய்யம் | 10'-0" |
| பெருந்தொடை | 10'-0" |
| சிறுதொடை | 12'-0" |
| முழங்கால் | 12'-0" |
| முன்கால் | 11'-0" |
| பரடு | 15'-0" |

அமர்ந்த கோலத்தில் உள்ள படிமம் நேரியதாகவும், மைய நூலுக்குச் சமச்சீர் உடையதாகவும் இருத்தல் வேண்டும்.

### பங்க அமைதியில் விநாயகர் படிமம்[5]

நின்ற கோலத்தில் இப் படிமம் வலதுகாலை ஊன்றி இடது காலை சிறிது மடக்கி வைசாக ஸ்தானக அமைதியில் ஆபங்கம் அல்லது சமபங்க நிலையில் இயற்றப்படும். அந் நிலையில் ஆபங்கத்திற்கு நதமானம் 3'-0" எனவும் சமபங்கமானால் நதமானம் 4'-0" எனவும் கொண்டு இந் நிலையில் கால் பெருவிரல் இடைவெளி 7'-0" அல்லது 8'-0" எனக்கொள்ளுதல் வேண்டும். இவ்வளவில் மூன்றில் ஒரு பங்கு குதிகால்களின் இடைவெளி ஆகும்.

உச்சந்தலையின் இடது பக்கம், நெற்றியின் இடது பக்கம், மார்பின் வலது பக்கம், நாபியின் வலது பக்கம், யோனியின் இடது பக்கம், குதிகாலின் மையம், ஆகிய இவ்விடங்களின் வழியே பூர்வ சூத்திரம் (முன்னூல்) பொருந்த வேண்டும். இது ஆபங்க அமைதியாகும்.

தலை உச்சியின் இடப்பக்கம், நெற்றியின் இடப்பக்கம், நாபியின் வலது பக்கத்தில் அரைவிரல் தள்ளியுள்ள இடம், வலது பரடின் பக்கம் ஆகிய இடங்களில் மைய நூல் விழ வேண்டும்.

### லம்ப மானமும் உபமானமும்

மேலும், வயிறு எல்லையினின்று வலது தன் கரத்தின் முழங்கை புறவாய் 6, 6½, 7 விரல் விலகியிருத்தல் வேண்டும். இடது தன்கரத்தின் முன் கை 8, 8½, 9 விரல் விலகியிருத்தல் வேண்டும்.



நின்றகோல விநாயகர்

தந்தம் மார்பு மட்டத்திற்கு சமமாக அமைதல் வேண்டும். இடக்கையானது நாபி வரை களத்தி கொண்டதாக இருக்க வேண்டும். மேற்கைகள் கழுத்து மட்டத்திற்குச் சமமாகவோ 2 அல்லது 3 விரல் தாழ்ந்தோ இருக்கலாம். மேற்கைகள் உள் அல்லது வெளி நோக்கி இருக்கலாம். இடது தன் கையின் மீது துதிக்கையை வைத்தோ அல்லது வயிற்றின் மீது பொருந்தியோ இருக்கலாம்.

## ஆசன இலக்கணம்

விநாயகர் படிமம் ஆசனக் கோலத்தில் இயற்றப்படின் அப்படிமத்தின் இடது காலை படுக்கக் கிடத்தி, வலது காலை மடித்து ஊன்றிடச் செய்தல் வேண்டும். இந்நிலையில் உடல் புறவாயிலிருந்து இடது, வலது முழங்கைகள் 3, 4, 5 அல்லது 6 விரல் அளவு விலக்கமுடையன. இக்கோலத்தில் ஆசன மானம் 3'-0"



அமர்ந்தகோல விநாயகர் படிமம்

## கூத்தாடும் விநாயகர்

விநாயகர் படிமம் நடனக் கோலத்தில் இருப்பின் அது வலது காலை ஊன்றி, இடது காலை தூக்கி நின்றிருத்தல் வேண்டும். நீட்டப்பட்ட வீசியமைந்த-இடது கையானது கண் அல்லது வாய் அல்லது தோள் ஆகிய ஒன்றின் மட்டத்திலிருத்தல் வேண்டும்.



கூத்தாடும் விநாயகர்

வலது தன்கரத்தில் முழங்கையானது மார்பு மட்டத்திற்கு சமமட்டத்திலிருத்தல் வேண்டும். அங்ஙனமே இடது முழங்கை, மார்பு மட்டத்தில் இருந்து 3,3 விரல் விலகியிருத்தல் வேண்டும். தூக்கிய காலின் பெருவிரலானது பீட மட்டத்திலிருந்து 1, 2, அல்லது 3 விரல் தூக்கியிருத்தல் வேண்டும். தூக்கிய காலின் முழங்காலானது கொப்பூழ் மட்டம் அல்லது குறிமட்டம் அல்லது இடுப்பு மட்டம் ஏறி இருக்கலாம்.

## நாட்டியக் கோலத்திற்கு மைய சூத்திர விளக்கம்

தலையின் நடு, மார்பின் வலது பக்கம், நாபியின் வலது பக்கத்தில் 1 அல்லது 2 விரல் விலக்கம், குய்யத்தின் வலது பக்கம், இடது கணுக்கால் கணுவின் மையம் ஆகிய இடங்களில் நாட்டியப் படிமத்தில் மைய நூல் செல்ல வேண்டும்.

விநாயகர் படிமத்தின் பீடமானது படிம உயரத்தில் $^1/_3$, $^1/_4$, $^1/_5$ பங்காகும். உற்சவப் படிமங்களுக்கு பத்ம பீடமே பொருத்தமாகும். பீடத்திற்குக் கொள்ளப்பட்ட உயரத்தில் $^2/_6$, $^2/_7$, அல்லது $^2/_8$, பங்கு பத்மமாகவும் மீதியை உபானமாகவும் கொள்ளுதல் வேண்டும்.

## வைணவப் பிள்ளையார்[6]

விநாயகர் பல்வேறு சமயத்தவர்களாலும் வழிபடப்படுகிறார். ஒவ்வொரு சமயத்தவரும் இன்னல் களையும் மூர்த்தமாகவே இவரைக் கொண்டாடுகிறார்கள். எடுத்துக்காட்டாக வைணவ சமயத்தினர் விநாயகரை மன் நாராயணரின் அம்சம் என்றும், ஸ்ரீமன் நாராயணன் விநாயகரின் அம்சம் என்றும் ஏத்திப் போற்றி வழிபடுகின்றனர். விநாயகர் படிமம் ஒவ்வொரு சமயத்திற்கும் உரிய சின்னங்களைத் தாங்கியதாய் விளங்கும் அல்லது வழக்கம் போல் அதற்கேயுரிய பாசம், அங்குசம், மோதகம் அல்லது பழம் இவற்றைத் தாங்கி இருக்கும் கோலத்திலும் இயற்றப்படும்.

வைணவ சமய நூல்கள் விநாயகரின் படிமத்தை மிகச் சிறப்பாக வருணிக்கின்றன. அத்துடன் அப்படிமத்தை இயற்றுவதற்குரிய அளவுகளையும் வகுத்துள்ளன.

[7] யானை முகம், நான்கு கைகள், மூன்றுகண்கள், தொங்கிய வயிறு, வெண்ணிறமேனி, கரண்ட மகுடம், தொங்கிய பூநூல், இடது தன்கரத்தில் பழம், வலது தன்கரத்தில் தந்தம், வலது மேற்கரத்தில் அங்குசம், இடது மேற்கரத்தில் பாசம்—இந்த இலக்கணம் பொருந்த இப்படிமம் அமைதல் வேண்டும்.

### படிம அளவுகள்

| | |
|---|---|
| முக நீளம் | 16'-0" |
| கழுத்து | 2'-0" |
| குய்யம் | 36'-0" |
| தொடை | 12'-0" |
| முன்கால் | 12'-0" |
| பாதம் | 2'-0" |
| | 80'-0" |
| முக அகலம் | 14'-0" |
| தும்பி நீளம் | 36'-0" |
| நாபி அகலம் | 2'-0" |
| பாத நீளம் | 12'-0" |

சிற்பியானவன், மற்ற அளவுகளைச் சிற்ப இலக்கணத்திற்கு ஏற்பப் பொருத்தமாகக் கொண்டு படிமத்தை இயற்றுதல் வேண்டும். விஸ்வக்சேன சம்ஹிதையில் சிறப்பானதொரு விளக்கமும் வடிவமும் பேசப்படுகிறது. விநாயகர், நாராயணனுடைய அம்சமாக விளங்குபவர் என்றும் வானம்போல் எங்கும் வியாபித்தவர் என்றும், அழிவற்றவர் என்றும் கூறுகிறது. மேலும் யானை முகத்தனாக, வேள்வித் தீயினின்று தோன்றியவனாக, யாகத்தைத் தடுக்கும் தீய. சக்திகளை ஒடுக்குவதற்காக யாகத்தீயினின்று தோன்றியவனாக விளக்கம் கூறி விநாயகனின் பிற இலக்கணங்களையும் கீழ்க்கண்டவாறு அந்நூல் விரித்துக் கூறுகிறது.

வெண்ணிறம், கருநிறம், கருநீலம் அல்லது செந்நிறம் அவரது மேனி. யானை முகமும் நான்கு கரங்களும் முக்கண்களும் கொண்டவர். வாசுகியைப் பூநூலாகத் தரித்து வெண்பட்டு ஆடையை உடுத்தியவர். கைகளில் சங்கு, சக்கரங்களைப் பிடித்தவர். அல்லது பாசம், பரசு ஆகியவற்றையும் பிடித்திருக்கலாம்.

[8]வலது மேற்கரத்தில், சக்கரமும், இடது மேற்கரத்தில் சங்கும், இடது தன் கரத்தில் கதையும், வலது தன்கரத்தில் அபய முத்திரையும் கொண்டு இப்படிமம் அமையும்.

மேலும் மற்றொரு சிறந்த பாவனையையும் அந்நூல் தருகின்றது. வலக்கரங்களில் பரசும், அங்குசமும், இடக்கரங்களில் அட்ச மாலையும், பாசமும் தரித்தவராகவும் இயற்றலாம்.

இவ்விநாயகருக்கு முன்புறத்தில் மூஷிகத்தையோ, கருடனையோ ஸ்தாபிக்கலாம். நாராயணரின் அம்சமாகையால் கருடனை முன்னால் வைக்க விஸ்வக்சேன சம்ஹிதை அனுமதிக்கின்றது.

## உத்தம பஞ்ச தாளம்
## கிருஷ்ணன் படிமம்

**உயரக் கணக்கு**

| | |
|---|---|
| தலை | 0'-4" |
| முடி | 1'-4" |
| கண் மட்டம் | 2'-7" |
| மூக்கு | 2'-7" |
| மோவாய் | 2'-7" |
| கழுத்து | 2'-3" |
| மார்பு | 7'-0" |
| கொப்பூழ் | 7'-0" |
| குய்யம் | 7'-0" |
| தொடை | 13'-0" |
| முழங்கால் | 2'-0" |
| கெண்டைக்கால் | 13'-0" |
| பாதம் | 2'-0" |
| | 64'-0" |
| தோள் அகலம் | 24'-0" |
| கக்க அகலம் | 12'-0" |
| மார்பு அகலம் | 9'-0" |
| வயிறு அகலம் | 10'-0" |
| இடுப்பு அகலம் | 11'-0" |
| குய்யம் | 12'-0" |
| பெருந்தொடை அகலம் | 8'-0" |
| முழங்கால் அகலம் | 5'-0" |
| கெண்டைக்கால் அகலம் | 6'-4" |
| பரடு அகலம் | 3'-4" |
| பாத அகலம் | 4'-0" |
| பாதத்தின் பெருவிரல் நீளம் | 2'-4" |
| அகலம் | 2'-4" |
| அடிக்கை நீளம் | 12'-0" |
| முன் கை நீளம் | 9'-0" |
| கைத்தல நீளம் | 4'-0" |
| நடுவிரல் நீளம் | 3'-0" |
| நெற்றி மட்டத்தில் முக அகலம் | 8'-0" |
| நடுமுக அகலம் | 9'-0" |
| அடிக்கழுத்து அகலம் | 7'-0" |
| அடிக்கை அகலம் | 5'-0" |
| முன் கை அகலம் | 4'-0" |
| மணிக்கட்டு அகலம் | 2'-4" |
| கைத்தல அகலம் | 4'-0" |




உத்தம பஞ்ச தாள உயர அளவு

## உத்தம பஞ்சதாளம் (பொதுமானம்)

இது பாலஸ்கந்தன், வாமன மூர்த்தம், பிற குழந்தைத் திருமேனிகள் ஆகியோரைச் செய்தலுக்கேற்றது. குறுமுனிவர் வடிவத்தைச் சிறிது வேறுபாடுகளுடன் இத்தாளத்தில் இயற்றிடலாம்.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை | 1'-0" |
| கண் மட்டம் | 3'-0" |
| மூக்குப்புடை | 3'-0" |
| மோவாய் | 3'-0" |
| கழுத்து | 3'-0" |
| மார்பு | 8'-0" |
| நாபி | 8'-0" |
| குய்யம் | 7'-0" |
| தொடை | 12'-0" |
| முழங்கால் | 2'-0" |
| முன்கால் | 12'-0" |
| பாதம் | 2'-0" |
| | 64'-0" |
| முக அகலம் | 8'-0" |
| கழுத்து அகலம் | 3'-4" |
| மார்பு அகலம் | 12'-0" |
| நடுவுடல் அகலம் | 10'-0" |
| சுரோணி அகலம் | 13'-0" |
| இடுப்பு அகலம் | 13'-0" |
| தொடை அகலம் | 8'-0" |
| முழங்கால் அகலம் | 4'-0" |
| பரடு அகலம் | 3'-0" |
| பாத அகலம் | 6'-0" |
| பாத நீளம் | 9'-0" |
| மேற்கை நீளம் | 14'-0" |
| மேற்கை அடி அகலம் | 5'-0" |
| முழங்கை அகலம் | 3'-0" |
| முன் கை நீளம் | 10'-0" |
| முன் கை அகலம் | 3'-0" |
| மணிக்கட்டு அகலம் | 2'-0" |
| கைத்தல நீளம் | 4'-0" |
| அகலம் | 4'-0" |
| நடுவிரல் நீளம் | 4'-0" |
| சுட்டு விரல் நீளம் | 3'-4" |
| அணி விரல் நீளம் | 3'-4" |
| பெரு விரல் நீளம் | 3'-0" |
| சிறு விரல் நீளம் | 3'-0" |

## மத்திம பஞ்சதாளம்

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை | 2'-0" |
| முகம் | 9'-0" |
| கழுத்து | 2'-0" |
| மார்பு | 6'-0" |
| கொப்பூழ் | 7'-0" |
| குய்யம் | 6'-0" |
| தொடை | 12'-0" |
| முழங்கால் | 2'-0" |
| முன்கால் | 12'-0" |
| பாதம் | 2'-0" |
| | 60'-0" |

அதம பஞ்சதாளம்




மத்திம பஞ்ச தாள உயர அளவு

உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை | 1'-0" |
| முகம் | 9'-0" |
| கழுத்து | 2'-0" |
| மார்பு | 8'-0" |
| கொப்பூழ் | 7'-0" |
| குய்யம் | 6'-0" |
| தொடை | 10'-0" |
| முழங்கால் | 2'-0" |
| முன்கால் | 9'-0" |
| பாதம் | 2'-0" |
| | 56'-0" |

இதற்குத் தேவையான இதர அளவுகளை உத்தம பஞ்சதாள கணக்கிலிருந்து கைக்கொண்டு பொருத்தமாக உறுப்புகளைச் சிற்பிகள் அமைத்துக் கொள்ள வேண்டும்.

1. காஸ்யபம்
2. சாரஸ்வதீயம்
3. காஸ்யபம்
4. உத்தரகாமிகாகமம்
5. சாரஸ்வதீயம்
6. விஸ்வக்சேன சம்ஹிதை
7. பாத்மசம்ஹிதை, ஹயசீர்ஷ தந்திரம்
8. விஸ்வக்சேன சம்ஹிதை

# 34

# யக்ஷ வித்யாதாரப் படிமங்கள்



யக்ஷர், வித்யாதரர், ராட்சதர், கந்தர்வர், கின்னரர் ஆகியோர் தேவலோகத்தில் வசிப்பவராவர். இவர்கள் தேவைர்களைப் போற்றிப் பெருமைப்படுத்துபவர்கள்.

**1. யக்ஷர்**

தேவர்கள் உடனிருந்து பணி செய்வோர் யக்ஷர்களாவர். ராக்ஷச இனத்தைச் சேர்ந்தவர்கள். இருப்பினும் தேவர்களின் அடையாளங்களைக் கொண்டு விளங்குவர், பாதம்வரை தொங்கும் ஆடையினை உடுத்தியிருப்பவர். நீல மேனியராகவோ, மஞ்சள் மேனியராகவோ இருப்பவர். இவர்களை நின்ற அல்லது அமர்ந்த கோலத்தில் இயற்றலாம். நின்ற கோலத்தில் வலதுகாலை ஊன்றி, இடதுகாலை சிறது மடக்கி நிற்பர். அமர்ந்த நிலையில் இருகரங்களில் சாமரங்களை வைத்து இருப்பர், அல்லது சாமரங்கள் நிலத்தில் ஊன்றப்பட்டு இருத்தல் வேண்டும். இப்படிமத்தை நவதாளத்தில் இயற்ற வேண்டும்.

**2. வித்யாதரர்**

இவர்கள் தேவர்களுக்குக் கட்டியம் கூறும் பாவாணர்கள். தேவர்களைப் பெருமைப்படுத்தும் பணி செய்வோர். இவர்களது மேனி கருஞ்சிவப்பு அல்லது மஞ்சள் நிறம் ஆகும். இவர்களை நின்ற அல்லது அமர்ந்த கோலத்தில் இயற்றலாம். அமர்ந்த கோலத்தில் இவர்கள் மண்டியிட்டு, பாததலங்களை ஒன்றோடொன்று பின்புறத்தில் இணைத்து, முன்புறத்தில் முழங்கால்களை, கலப்பைப் போல் மடக்கியிருப்பர். அந்நிலையில் கைகளிரண்டும் முழங்கால்களின் மேல் ஊன்றப்பட்டு கைத்தலங்கள் ஒருசேர குவிந்திருக்கும். இவர்கள் எல்லா அணிகளையும் பூண்டு, நிருத்தம், வைணவம், வைசாகம் ஆகிய ஏதேனும் ஒரு கோலத்தில் நிற்பர். இப்படிமத்தை நவதாளத்தில் இயற்ற வேண்டும்.

**3. ராட்சதர்**

தேவர்களை அடக்குகின்றவர்கள். தேவர்களின் எதிரிகள். யக்ஷர் இனத்தைச் சேர்ந்தவர்கள். யக்ஷர்களின் படிமத்தைப் போலவே இஃதும் அமையும்

**4. கந்தர்வர்**

இவர்கள் மிகச்சிறந்த தேவலோகப் பாடகர்கள். வீணை மீட்டும் ஆற்றலுடையவர்கள். தங்கள் பாடல்களினால் தேவர்களை பெருமைப் படுத்துவார்கள். கந்தர்வ கானம், கந்தர்வ கீதம் மிகச் சிறப்பு வாய்ந்தவை.

**5. கின்னரர்**

'மனிதரோ' என்பது இப்பெயரின் பொருள். தேவர் இனத்தவர். கருட முகம், மனித உடல், விலங்கின் கால்கள், இரண்டு கைகள், கைகளில் இணைந்த இறக்கைகள், தாமரை மலர் இணைந்த மகுடம், தாமரை மலர் மேனி, கையில் வீணை— இவ்விலக்கணங்களைக் கொண்ட படிமமே கின்னரப் படிமமாகும்.

மேற்குறிப்பிட்ட ஐவகையினருக்கும் கரண்ட மகுடமே உரித்தானதாகும்.

**6. கிம்புருடர்**

மனித உடலும், குதிரை முகமும் கொண்டதாக கிம்புருடர் உருவம் இருக்கும்.

# 35

# உத்தம சதுஸ்தாளம்



### பூதமானம்

பூத வடிவங்கள் சிற்பக்கலை படைத்தளித்த கற்பனை வடிவங்கள். குறுகிய கால்களையுடைய இம் மனித உருவம் உண்மையிலேயே ஓர் அற்புதப் படைப்பேயாகும். சிவனுடைய கணங்களாக இவை சமயத்துறையில் பெரும் பங்கு பெற்றிருப்பினும் இவற்றைச் சிற்பிகள் நகைச்சுவையைத் தோற்றுவிக்கும் வடிவங்களாகவும், சிற்பக்கட்டடங்களை அலங்கரிக்கும் அணிகளாகவும் படைத்துள்ளனர். அதுமட்டுமல்லாமல் இவற்றைக் கூத்தாடும் பாவனைகளிலும் இசை பாடும் பாவாணர் கோலத்திலும் மிகச் சுவையோடு இயற்றியுள்ளனர்.

### உயரக் கணக்கு

| | |
|---|---|
| தலை | 1'-0" |
| முகம் | 12'-0" |
| கழுத்து | 3'-0" |
| மார்பு | 6'-0" |
| நாபி | 5'-0" |
| குய்யம் | 5'-0" |
| சுரோணியின் தொங்கல் | 3'-0" |
| தொடை | 5'-4" |
| முழங்கால் | 3'-0" |
| கெண்டைக்கால் | 5'-4" |
| பாதம் | 3'-0" |
| | 52'-0" |

பூதங்கள் தொங்கிய பெருவயிறு உடையனவாதலால் குய்யம், நாபி, இவற்றினா மட்டங்கள் ஒரே மட்டத்தில் அமையும்.

| | |
|---|---|
| முக அகலம் | 11'-0" |
| கழுத்து | 7'-0" |
| மார்பு | 17'-0" |
| வயிறு | 14'-0" |
| சுரோணி | 16'-0" |
| இடுப்பு | 18'-0" |
| அடித்தொடை | 10'-0" |
| முழங்கால் அகலம் | 7'-0" |
| பரடின் அகலம் | 5'-0" |
| பாத நீளம் | 9'-0" |
| பாத அகலம் | 6'-0" |
| மேற்கை நீளம் | 12'-0" |
| முன்கை நீளம் | 7'-0" |
| முழங்கை அகலம் | 6'-0" |
| மேற்கை அடி அகலம் | 7'-0" |
| மணிக்கட்டு அகலம் | 3'-0" |
| கைத்தல நீளம் | 4'-0" |
| நடுவிரல் நீளம் | 3'-0" |

### திரிதாளம்

கின்னரப் படிமங்களுக்குத் திரிதாளம் உரியது. இவை உச்சந்தலையிலிருந்து குய்யம் வரை மனித உடலமைப்பும், குய்யத்திலிருந்து பாதம் வரை கோழியின் தொடையும், காலும் கொண்டதாய் விளங்கும். கின்னர வடிவத்தின் மேற்கை மூலத்தில் கருடனின் சிறகு அமைந்திருக்கும்.

தலையிலிருந்து குய்யம் வரை மனித உடலாதலினால் உயரக் கணக்கு தலை முதல் குய்யம் வரை மூன்று தாள அளவினதாகக் கொள்ளுதல் வேண்டும். எஞ்சிய கோழிக்கால் பகுதி தனி அளவுடையதாகும்.

உத்தம சதுஸ்தாளம்




உத்தம நான்கு தாளப் படிமம்

உயரக்கணக்கு

| | |
|---|---|
| தலை | 1'-0" |
| முகம் | 11'-0" |
| கழுத்து | 2'-0" |
| மார்பு, நாபி, குய்யம். | 22'-0" |
| மொத்தம் | 36'-0" |

கோழிக் கால் பகுதி

| | |
|---|---|
| தொடை நீளம் | 4'-0" |
| முன்கால் நீளம் | 5'-0" |
| பாத அகலம் | 1'-0" |
| பாத நீளம் | 3'-0" |

துவிதாளம்

இரண்டு தாள அளவை மச்சாவதார மூர்த்தத்தை மீன் வடிவாக இயற்றும்போது கையாள வேண்டும். அவ் அளவுகள் பின்வருமாறு:

| | |
|---|---|
| மூக்கிலிருந்து வால் வரை மொத்த நீளம் | 28'-0" |
| மூக்கு முனையிலிருந்து | |
| கண் வரை நீளம் | 2'-0" |
| கண்ணிலிருந்து காது வரை | 4'-0" |
| [காதின் நீளம் (தனியே)] | 2'-0" |
| காதிலிருந்து வால் ஒட்டியிருக்கும் இடம் வரை நீளம் | 18'-0" |
| வால் நீளம் | 4'-0" |
| மொத்தம் | 28'-0" |
| வாலின் நுனி அகலம் | 6'-0" |
| வாலின் அடி அகலம் | 2'-0" |
| இறக்கைகளின் நீளம் | 2'-0" |
| இறக்கைகளின் அகலம் | 1'-4" |

ஏகதாளம்

ஏகதாளத்தில் ஆமையைச் செய்தல் வழக்கு. அதற்குரிய அளவுகள் பின்வருமாறு:

| | |
|---|---|
| தலை நீளம் | 2'-0" |
| [காது தனியாக நீளம்4'-0"] | |
| மார்பு நீளம் | 2'-0" |
| நாபி நீளம் | 2'-0" |
| நாபியிலிருந்து பின்புற எல்லை வரை | 3'-0" |
| வால் நீளம் | 3'-0" |

ஆமையின் கால்கள் ஒவ்வொன்றும் ஒரு விரல் உயரமாகும். மற்ற அளவுகளையும், அமைப்புகளையும் சிற்பிகள் பொருத்தமாகக் கொள்வார்களாக.

# 36

# கண் திறப்பு



கடவுட் படிமங்கள், கலை அழகுடன் தத்துவக் கருத்துக்களும் செறிந்த உருவங்கள். தத்துவக் கருத்துக்களுக்குச் சிற்ப, ஆகம நூல்கள் படைத்தளித்த கலைத் திருமேனிகள் அவை. எனவே, அவ் வடிவங்கள் வழிபடத்தக்க புனிதமுள்ளவையாகக் கொள்ளப்படுகின்றன.

தத்துவக் கருத்துக்களையும், சிற்பக்கலை இலக்கணங்களையும் கற்றறிந்த சிற்பிகள் தெய்வத்திருவுருவங்களைக் கல்லால், செங்கல்லால், இரத்தினத்தால், சுதையால், உலோகத்தால், மரத்தால் செய்கிறார்கள்; வண்ண ஓவியங்களாகவும் தீட்டித் தருகின்றார்கள். மேற்கண்ட பொருள்களினால் மரபுப்படி சமைக்கப் பெற்ற வடிவங்கள் அனைத்தும் வழிபாட்டுக்குரியன என்றும் ஆகம, சிற்ப நூல்கள் ஒருமுகமாகக் கூறும்.

எனவே, அப்பொருள்களைக் கொண்டு, சிற்ப அளவு முறைகளைச் செயற்படுத்தி, படிம இலக்கணங்கள் துலங்கச் செய்யப்படும் கடவுட் படிமங்களின் உடற் கூறுகளையெல்லாம் செம்மையாக அமைத்து முடித்த பின்னர், இறுதியாக, அப் படிமங்களின் கண்களைத் திறக்கும் நற்பணியைப் புனிதமானதொரு நிகழ்ச்சியாகச் சிற்பிகள் கொள்வது தொன்று தொட்டு வரும் ஒரு நெறியாகும். படிமங்களின் கண் திறப்பை *நயனோன்மீலனம்* என்றும், *நேத்ரோன்மீலனம்* என்றும் *அக்ஷிமோசனம்* என்றும் சிற்ப ஆகம நூல்கள் பேசும். அதற்குரிய முறையினை மிக விரிவாகச் சைவ வைணவ ஆகமங்களும் சிற்ப நூல்களும் விளக்குகின்றன. அவற்றைத் தழுவியே நடைமுறையில் படிமச் சிற்பிகள் கண் திறத்தலைச் செய்தல் வேண்டும்.

## படிமத்தின் நோக்கு

மூடிய கண்களையுடைய படிமங்களை வழிபடுவது வழக்கன்று. கடவுட் படிமங்களின் கண்கள் திறக்கப்படாமல் இருப்பின் அவற்றை வழிபடுவதும் நன்றன்று. கடவுட் படிமத்தின் கண் மலர் மூடியிருக்குமானால் அப்படிமம் உலக அழிவைச் செய்யும் என்றும், திறந்திருக்குமானால், அப்படிமம் உலக வளர்ச்சிக்கு உதவும் என்றும் ஓர் ஆகமம் கூறுகிறது.[1] எனவே கண் திறத்தல் மிக இன்றியமையாத ஒன்றாகும்.

மேலும், படிமங்களின் நோக்கு அல்லது பார்வை ஐந்து வகைப்படும். அவை முறையே மேற்பார்வை (ஊர்த்வ திருஷ்டி), கீழ்ப்பார்வை (அதோ திருஷ்டி), இடது, வலது பக்கப் பார்வைகள் (பார்சுவ திருஷ்டி), நேர்பார்வை (சம திருஷ்டி) ஆகும்.

சம திருஷ்டியே வழிபடு படிமங்கட்கு அமைக்கப்பட வேண்டும். மேலும் அவை சௌம்யமாகவும், நேரியதாகவும், சாத்விகமாகவுமிருத்தல் வேண்டும். சமதிருஷ்டியைக் கொண்ட படிமத்தை வழிபட்டால், வழிபடுவோர் நற்பேறுகள் அனைத்தையும் பெறுவர் என்றும், மற்ற மூன்று வகையான பார்வையுடைய படிமங்களை வழிபடின் அழிவையே செய்யும் என்றும் சிற்பநூல் ஒன்று வலியுறுத்திக் கூறுகிறது.

ஆனால், ஆபங்கம், சமபங்கம், அதிபங்கம், ஆபாசபங்கம் ஆகிய பங்க அமைதிகளில் வழிபடு படிமங்கள் அமையப்பெற்றிருப்பின், பங்கத்திற்கேற்ற பார்வைகொள்ளச் செய்வதும், அத்தகைய படிமங்களை வழிபடுவதும் குற்றமன்று.

### ஒளிமண்டலமும் விழிமண்டலமும்

நடைமுறையில் கடவுட் படிமங்களின் இமைகள் எப்பொழுதும் திறந்திருக்குமாறே செய்யப்படும். ஆனால் விழிமண்டலம், ஒளிமண்டலம் ஆகிய இரண்டும் புலப்படுத்தப்படாதிருக்கும். எனவே, கண் திறத்தல் என்பது ஒளி மண்டலத்தையும், விழி மண்டலத்தையும் விளங்கச் செய்வதே ஆகும். பொன்னாலான உளிகொண்டு, வெள்ளியாலான சுத்தியால் அவ்விரு மண்டலங்களுக்கேற்ற ரேகைகளை விளம்பி, அதன் மேல் இயல்பான ஆயுதங்களைக் கொண்டு மண்டலங்களைப் பதியச் செய்தல் தொழில் வழக்கு. இம்முறையானது கற்படிமங்களுக்கும், செப்புத் திருமேனிகளுக்கும் பொருந்தும். ஆனால் மரப் படிமங்களுக்கும், சுதைப் படிமங்களுக்கும், மண், கடு சர்க்கரை ஆகிய பொருள்களாலான படிமங்களுக்கும், பொன் வண்ணத்தால் தூரிகை கொண்டு அம்மண்டலங்களைத் துலங்கச் செய்து, பிறகு இயல்பான வண்ணங்களால் தூரிகை முதலிய கருவிகளைக் கொண்டு தெளிவுறச் செய்தல் வேண்டும்.

அங்ஙனம் சிற்பிகள் செய்த பின்னர், பூஜகர் மந்திரங்களை ஸ்மரித்துக் கொண்டு மீண்டும் தங்க ஊசியால் அல்லது தர்ப்பையால் அம்மண்டலங்களை விளம்பிக் கண் திறக்கும் பணியை நிறைவு செய்வார்.

### ஆகம வழக்கும் வரிசை முறையும்

மேற்கண்ட நிகழ்ச்சியை மையமாகக் கொண்டு ஒழுகும் முன் பின் செயல் முறைகளை விவரிக்கு முன்பு ஆகம வழக்கைச் சிறிது நோக்குவோம். புதிய படிமங்களுக்குக் கண் திறக்கும் நிகழ்ச்சியில் கீழ்க்கண்ட ஆகம முறை ஒன்றுள்ளது. முதலில் நவரத்தினங்களை பிம்பத்தின் சிரசு, நெற்றி, கழுத்து, மார்பு, நாபி, பாதங்கள், கைகள் ஆகிய ஒன்பது இடங்களில் வைத்து ஸ்தாபகர் பூசை செய்து, பால் நிவேதனம் செய்து, தூப தீப ஆராதனை செய்து அபிஷேகம் செய்வார். இது *அங்கரத்னநியாசம்* என்று சொல்லப்படும். பிறகே சிற்பியினால் கண் திறக்கச் செய்தல் நிகழும். பிறகு பிம்பத்தை ஊர்வலமாக எடுத்துச் சென்று, ஆறு அல்லது குளத்தில் படிமத்தை கழுத்தளவு மூழ்கச் செய்து, அங்கும் ஆராதனைகள் நிகழ்த்துவார் ஸ்தாபகர். இது *ஜலாதிவாசம்* எனப்படும். பிறகு படிமத்தை கோவிலுக்குக் கொணர்ந்து படுக்கை, தலையணை முதலியன வைத்து அதில் சயனித்திருக்கச் செய்தலையும் அவரே செய்வார். இது *சயனாதிவாசம்* எனப்படும். இறுதியாகப் படிமத்திற்குப் பெயர் சூட்டி ஆராதனை செய்து, அப்படிமத்தில் இறைவனைத் தங்கியிருக்குமாறு பிரார்த்தனை செய்வார்.

### நாளும், இடமும்

கண் திறப்பதற்கு நல்ல நாள், நல்ல நேரம் பார்த்துக் கொள்ள வேண்டும். அந்த நாள் இருநேத்திரமுள்ள நாளாக இருத்தலும் வேண்டும்.

சிற்பி, தனது தொழிற் கூடத்திலிருந்து படிமத்தை எடுத்துச் சென்று, அதற்குரிய கர்பக் கிருஹத்தின் முன் புறத்தில் மண்டபம் ஒன்றை நிறுவி அதில் வைத்தல் வேண்டும். அம்மண்டபத்தை மாவிலைத் தோரணங்கள், தென்னங்குருத்துத் தோரணங்கள், பூச்சரத்தொங்கல்கள் முதலியவற்றால் அலங்கரித்தல் வேண்டும்.

### ரத்னநியாசம்

பிறகு அம்மண்டபத் தளத்தின் மீது, அதன் நடுவிடத்தில் ஒரு முழச் சதுரத்திற்கும், ஆறு விரல் களத்திற்கும் தானியத்தைக் கொட்டிப்பரப்பி அதன் மீது பிம்பத்திற்குச் செய்திருக்கும் பீடத்தை வைத்தல் வேண்டும். அப் பீடத்தின மேல் மட்டத்தில் பிம்பத்தின் அடியில் அமைந்துள்ள கூறு பீடம் நுழைந்து பதிவதற்கேற்ற குழி தோண்டப்பட்டிருக்கும். அப்பள்ளத்தில் சதுரவடிவமான ஒன்பது சிறு பதிவுகளைச் செய்தல் வேண்டும். இவை கோஷ்டங்கள் எனப்படும். இக் கோஷ்டங்களில் நவரத்தினங்களைக் கீழ்கண்ட வரிசைக் கிரமப்படி வைத்தல் வேண்டும். அக்கோஷ்டங்களில் இரத்தினங்களை வைக்குமுன், குழிகளைச் சுத்தம் செய்து, அவற்றில் சந்தனம் வைத்து அதன் மீதே ரத்தினங்களைப் பதிய வைத்தல் வேண்டும்.

### நவரத்தினங்கள்

1. முத்து 2. பவளம் 3. மரகதம் 4. மாணிக்கம் 5. வைரம் 6. வைடூரியம் 7. கோமேதகம் 8. புஷ்பராகம் 9. நீலம் ஆகியவைகள் நவரத்தினங்களாம்.

சைவப் படிமங்களுக்கு

| | | |
|---|---|---|
| 5 | 6 | 7 |
| 4 | 1 | 8 |
| 3 | 2 | 9 |

சக்திப்படிமங்களுக்கும், விஷ்ணுப் படிமங்களுக்கும்

| | | |
|---|---|---|
| 5 | 6 | 7 |
| 4 | 1 | 8 |
| 3 | 2 | 9 |

### சைவப்படிமங்கட்கு

1. மாணிக்கம்
2. மரகதம்
3. பவளம்
4. நீலம்
5. புஷ்பராகம்
6. வைரம்
7. கோமேதகம்
8. முத்து
9. வைடூரியம்

இங்ஙனம் கோஷ்டத்தில் வைக்க.

### சக்தி படிமங்கட்கும், விஷ்ணுப்படிமங்கட்கும்

1. புஷ்பராகம்
2. மரகதம்
3. நீலம்
4. பத்மராகம்
5. கோமேதகம்
6. முத்து
7. மாணிக்கம்
8. வைரம்
9. பவளம்

இங்ஙனம் கோஷ்டத்தில் வைக்க.

கிடைக்காத இரத்தினங்களுக்கு மாற்றாக பொன் வெள்ளி அல்லது செப்புத் துண்டுகளை அல்லது காசுகளை வைப்பதும் வழக்கத்திலுள்ளது.

### ரத்ன–தாது–பீஜ நியாசங்கள்

மேலும், அப்பள்ளத்தில், கிழக்குக் கோஷ்டத்திலிருந்து இடமிருந்து வலமாக முறையே ஒன்பது பொருள்களை வைத்தல் வேண்டும். அவை முறையே, தாதுப்பொடி, பாதரஸம், அஞ்சனக்கல், மஞ்சள், தாது, கறுப்புப் பாஷாணம், மனோசிலை, சவ்வீரம், செம்மண், தேன்மெழுகு ஆகும்.

அங்ஙனமே ஒன்பது விதைகளையும் வைக்க வேண்டும். அவை முறையே எள்ளு, நெல், பயறு, புல்லரிசி, கடுகு, கறுப்பு நெல், கொள்ளு, கம்பு ஆகும்.

நவரத்தினங்களை குறிப்பிட்ட தேவதையின் ஹிருதய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு வைத்தல் வேண்டும். சிரோமந்திரத்தினால் தாதுவையும், கவசமந்திரத்தினால் விதைகளையும் வைத்தல் வேண்டும்.

இரத்தினங்களைப் பீடத்திற்குள் வைத்தலை ரத்னநியாசம் அல்லது ஜடிரத்னநியாசம் என்றும், தாதுக்கள் வைத்தலை, தாதுநியாசம் என்றும், விதைகள் வைத்தலை, பீஜநியாசம் என்றும் சொல்ல வேண்டும்.

கண் திறப்பதற்காக மண்டபத்திற்குள் கொணர்ந்து வைத்துள்ள படிமத்தின் பீடத்திற்குள் அத்தனையும் அடங்க வேண்டும். அதன் பின்னரே படிமத்தை அப்பீடத்தின் மீது ஏற்றி அதனுள் செருகி அஷ்டபந்தனத்தால் பீடத்தையும், பிம்பத்தையும் படியப்பார்த்து ஒரு பொருளாக இணைத்தல் வேண்டும். பீடத்தின் மீது படிமம் தக்க நிலையில் உள்ளதா என்பதை தூக்கு நூல் கொண்டு சோதித்த பின்னரே அஷ்டபந்தனம் செய்தல் வேண்டும். உலோகப் படிமமாயின் ஜடிபந்தனம் செய்தல் வேண்டும். (அஷ்டபந்தனம், ஜடிபந்தனம் பற்றிய விரிவான செய்திகளை அடுத்துவரும் பக்கங்களில் காண்க.)

சக்திப்படிமங்களையும் உடனமர்த்த வேண்டுமானால், அவரவர்க்குரிய இடத்தில் முன்போல் ரத்னநியாசம் முதலியவற்றை அப்பொழுதே செய்தல் வேண்டும். பரிவாரப் படிமங்களுக்கும் ரத்னநியாசம் உண்டு.

மேலே விளக்கிய நியாசங்களைக் கண் திறக்க உறுதி செய்த நாளுக்கு ஏழு அல்லது ஐந்து நாட்களுக்கு முன்பே செய்து கொள்ள வேண்டுமென்பது கொள்கை. எனினும் ஆலயப் பிரதிஷ்டைக்கு முதல் நாளே செய்துகொள்வது என்பது வழக்கத்தில் வந்துவிட்டது. நியாசங்கள் அனைத்தையும் ஸ்தபதி, ஸ்தாபகர் (அர்ச்சகர்), கர்த்தா (தலைவன்), ஆகிய மூவரும் சேர்ந்தே செய்தல் முறையாம்.

இங்ஙனம் ஸ்தாபனமாகிய படிமத்தைச் சந்தனம், கோரோசனை முதலிய வாசனைப் பொருள்கள் கலந்த நீரால் திருமுழுக்காட்டி, பட்டாடையுடுத்தி, அலங்காரம் செய்தல் வேண்டும்.

இத்தகைய ரத்னநியாசம் தொடங்கி அஷ்டபந்தனம்/ஜடிபந்தனம் ஈறாக உள்ள செயல்வகைகளை மண்டபத்திற்குள் செய்தல் வேண்டும் என்ற விதி பொதுவாகச் செப்புப் படிமங்களுக்கு அனுபவத்தில் பொருந்துகிறது. எனவே, சிலாமூர்த்திகளை — பெரிய பிம்பங்களை — அடுத்து விளக்கப்படும் முறையிலே செய்திடும் மரபு ஒன்று தோன்றி நிலைத்து விட்டது.

### நடைமுறை வழக்கு

எந்தக் கர்ப்பக்கிருஹத்திற்குள் படிமம் ஸ்தாபனம் செய்யப்பட வேண்டுமோ அதற்குள்ளேயே பீடத்தையும், பிம்பத்தையும் எடுத்துச் சென்று, உரிய பதத்தில் பீடத்தை முதலில் வைத்து, மட்டம் சரி பார்த்து, ரத்ன நியாசம் முதலியவற்றை, முறைப்படி

பீடத்தில் செய்து, பீடம் தளத்தில் நன்றாக அமர்ந்து அடிப்பூச்சிக் காய்ந்தபின் பிம்பத்தை பீடத்தின் மீது நிறுத்தி, தூக்குப் பார்த்து நேர் செய்து, அஷ்டபந்தன மருந்தால் பீடத்தையும் படிமத்தையும் இணைத்தலே நடைமுறையில் உள்ளது.

### பீடம்–பிம்பம்–ஸ்தாபனம்

அத்துடன், கர்ப்பக்கிருஹ வாயிலின் மைய நூலும், ஸ்தாபனம் செய்யப்பட்ட படிமத்தின் மைய நூலும் ஒத்திருத்தல் வேண்டும். அது மட்டுமல்ல அப்படிமம் அமர்ந்துள்ள பதத்தின் மையமும் படிமத்தின் பக்க நூலும் (பார்வசுவசூத்திரம்) ஒத்திருத்தல் வேண்டும். (இதன் விரிவான செய்திகளை அடுத்து வரும் பக்கங்களில் காண்க).

மேலும், படிமம் முன்புறமோ, பக்கவாட்டிலோ சாய்ந்திருத்தலும் கூடாது. படிமத்தைப் பீடத்தில் படியச் செய்தலிலே சிற்பிகள் மிகுந்த அக்கறை கொள்ளுதல் வேண்டும். அதன் பின்னரே அஷ்டபந்தனத்தைச் சார்த்துதல் வேண்டும்.

அங்ஙனம் படிமத்தை அதன் இருக்கையில் அமர்த்தியபின், கண் திறப்பதற்கு நிர்ணயித்த நேரத்தில் ஸ்தபதி கீழ்க்கண்ட பூசையைச் செய்து கண் திறத்தலைத் தொடங்க வேண்டும்.

### கண் திறத்தல்

ஸ்பதியானவன், குளித்துப் புத்தாடை உடுத்தி, நெற்றிக்கு இட்டு, விரல்களிலே மோதிரங்கள் அணிந்து இடது தோளில் மேலாடை தரித்துக் கொண்டு விநாயகர் பூசையினை முதலில் செய்தல் வேண்டும்.

பிறகு பிம்பத்திற்கு அருகில் ஓரிடத்தில் அரிசியினால் பீடம் அமைத்து, அதன் மீது கலச ஸ்தாபனம் செய்து, கலச பூசை செய்து, அக்கலச நீரால் உரிய தேவதையைப் படிமத்தில் ஆவாஹனம் செய்து, தேவதையின் மந்திரத்தைச் செபித்து அப்படிமத்தைப் பூசை செய்தல் வேண்டும். இத்தருணத்தில் மணி மங்கள வாத்யங்கள், மங்களக் கோஷங்கள், முழங்கச் செய்திடல் வேண்டும்.

பிறகு ஸ்தபதி விராட் விஸ்வப் பிரம்மனைச் சிந்தித்து, வணங்கி, அவன் அனுமதி பெற்றுக் கொண்டு, கண் திறக்கப் படிமத்தினருகில் சென்று, பொன்னாலான உளியால் அல்லது ஊசியால் முதலில் வலது கண்ணைத் திறத்தல் வேண்டும். பிறகு இடது கண்ணையும், நெற்றிக்கண்ணையும் திறத்தல் வேண்டும். இறைவனின் வலது கண், சூரியனைக் குறிப்பதால் சூரிய பீஜ மந்திரத்தை மனதில் ஸ்மரித்துக் கொண்டு துலக்கிட வேண்டும். அங்ஙனமே, இடது கண் சந்திரனைக் குறிப்பதால் சந்திர பீஜத்தையும், நெற்றிக் கண் அக்னியைக் குறிப்பதால் அக்னி பீஜத்தையும், ஸ்மரித்துக் கொண்டே செதுக்குதல் அல்லது குறியிடல் வேண்டும்.

இதற்குப் பிறகு கூரிய உளியால் ஒளி மண்டலம், விழி மண்டலம் ஆகிய இரண்டையும் செம்மையாகத் தெளிவுறச் செய்தல் வேண்டும். அது மட்டுமல்ல, காது, வாய், மூக்கு, நாபி, புட்டம், குறி, நகங்கள் ஆகிய ஒன்பது துவாரங்களையும் உளியால் திறந்திட வேண்டும்.

இரண்டு கண்கள் மட்டுமே படிமத்திற்கு இருப்பின் அவ்விரண்டு கண்களையே திறத்தல் வேண்டும். அங்ஙனமே, பல முகங்கள் இருப்பின் ஒவ்வொரு முகத்திலுள்ள கண்களையும் திறந்திடல் வழக்கு என்பதையும் சிற்பிகள் நினைவிற்கொள்க.

படிமத்திற்குக் கண் திறக்கும்போது ஸ்தபதியைத் தவிர வேறு எவரும் படிமத்தைப் பார்த்தல் கூடாது. எனவே படிமத்திற்கு நாற்புறமும் திரையிட்டே இப் பணியைச் செய்திட வேண்டும். தூப தீபம் காட்டி பாலும், பழமும், தேனும் படைக்க வேண்டும். இதுவும் திரைக்குள்ளேயே நிகழும்.

அடுத்து, சிற்பி கீழ்க்கண்டவாறு பிரார்த்தனை செய்தல் வேண்டும்:

"தூயோனே! எஜமானனையும், மக்களையும் காப்பதற்காகவும், துன்பங்களைத் துடைப்பதற்காகவும் இந்தப் படிமத்தில் எழுந்தருளி நிலைத்திருக்க வேண்டுகிறேன்.''

அதைத் தொடர்ந்து வேத விற்பன்னர்கள் அப்படிமம் குறிப்பிடும் தேவதையைப் புகழ்ந்து பாடி கீழ்க்கண்டவாறு வேண்டிக் கொள்ள வேண்டும்:

"ஐயனே! இந்த எஜமானனின் இதயம் தங்கள் பாத மலர்களைப் பற்றி நிற்கிறது. இன்று முதல் இந்தப் படிமத்தில் தங்கி இவரால் செய்யப்படும் பூசையினை ஏற்றுக் கொள்வீராக! அவருக்கு எல்லா நலன்களும் எப்பொழுதும் கிடைக்கச் செய்வீராக.''

அத்தருணத்தில் எஜமானர் "ஏழைப் பங்காளனே! எனது வணக்கங்கள். நான் இன்று முதல் தங்களைப் பூசை செய்ய விழைகிறேன். தங்களை முறைப்படி பூசை செய்ய எவருக்குத்தான் இயலும்? ஆனால் நான் பக்தி ஈடுபாட்டினால் செய்கிறேன். எனவே எனது எளிய பூசையை ஏற்று என்னைக் காத்தருள்வீராக!'' என்று பிரார்த்தித்தல் வேண்டும்.

கடவுட் படிமத்தில் திறந்து விடப்பட்ட கண்கள் முதன் முதலில் எதை, யாரைப் பார்த்திடச் செய்தல் வேண்டும் என்பது நினைப்பதற்கும் காண்பதற்கும் உணர்ச்சி மிகுந்த அடுத்த நிகழ்ச்சியாகும். இந் நிகழ்ச்சிகளைப் பற்றி ஆகம நூல்கள் பலவகையாகக் கூறுகின்றன. எனினும் கீழ்க்கண்ட முறை பெரிதும் வழக்கத்திலிருக்கிறது. ஆகமத்தைத் தழுவியதாகவும் உளது.

திறந்து விடப்பட்ட கண்களையுடைய அப்பிம்பம் முதலில் பசுவின் பின்பாகத்தைப் பார்த்திட «õ ´.Þ¶ *கோ தரிசனம்* என்று சொல்லப்படும். பசுவுடன் கன்றும் இருத்தல் நன்றாகும். பிறகு பசுமையான நெற்கதிர், கன்னிமார்கள், சுமங்கலிகள், நவதானியம், கண்ணாடி, சன்னியாசி, வேதவிற்பன்னர், அடியார்கள், இறுதியாக எஜமானன். இங்ஙனம் ஒவ்வொன்றையும் பார்த்த பின்னர் திரையிட்டும், நீக்கியும் தரிசனங்களைச் செய்து வைத்தல் மரபாகும். இது *தச தரிசனம்* என்று சொல்லப்படும். ஒரு சிலர், முதலில் படிமமானது தன்னைத்தானே பார்த்திட வேண்டும் என்று கருதி கண்ணாடியை முதற் பொருளாகக் காட்டுவது நன்றென்பர்.

இதனைச் சுருக்கமாகச் செய்ய விரும்புவோர் கோ தரிசனம் மட்டும் செய்வித்துப் பிறகு பொது மக்களுக்குத் தரிசனம் தந்தருளச் செய்வர். மற்ற தரிசனங்களைச் செய்து வைக்க இயலாத இத்தகைய தருணத்தில் அந்தந்த தரிசனங்களுக்குரிய மந்திரங்களைச் செபித்து இதனைப் பூர்த்தி செய்வது வழக்கு.

மேற்குறிப்பிட்ட செய்திகள் அனைத்தையும் தெரிந்து கொண்ட இந்த நேரத்தில், நடைமுறையில் இந் நிகழ்ச்சிகள் எவ் வரிசையில் நடைபெறுகின்றன என்பதைத் தெரிந்து கொள்வதும் நலமாகுமெனக் கருதி அவற்றைத் தொகுத்து அடியிற் காட்டப் பெறுகிறது.

1. சிற்பியின் கலைக் கூடத்திலிருந்து புதிய படிமத்தைத் தக்கதோர் ஊர்தியின் மீது ஏற்றி, படிமத்தை அலங்கரித்து, சிற்பியை அதன் அருகில் அமர்த்தி, ஊர்த் திருவீதிகளில் திருவலமாக அழைத்துச் சென்று திருக்கோயிலுக்குள் பிம்பத்தை எடுத்துச் செல்லுதல். இது கிராமப் பிரதஷிணம் என்று சொல்லப்படும்.

2. அங்கு தக்க ஓர் இடத்தில் படிமத்தை வைத்துச் சுற்றிலும் சுவரோ, அல்லது பலகையால் அடைப்போ அமைத்து அதில் புதிய நெல்லைக் கொட்டி அதில் இருக்கை கொள்ளச் செய்தல். இது தான்யாதிவாசம் என்று சொல்லப்படும்.

3. பிம்பப் பிரதிஷ்டைக்கு மூன்று நாட்களுக்கு முன்பு படிமத்தை வெளியிலெடுத்து, சுத்தம் செய்து வைக்க வேண்டும். வேள்விக் கூடத்தில் அல்லது கர்பக்கிருஹ முன்னிலையில் தொட்டி கட்டி அதில் நன்னீர், பன்னீர் நறுமண நீர், நதி நீர், திருக்குள நீர் ஆகியவற்றைக் கொட்டி நிரப்பி, வாசனைப் பொருள்களையும் அத்துடன் சேர்த்து, அதற்குள் அப்படிமத்தைக் கழுத்தளவு ஆழத்தில் மூழ்கியிருக்கத் தக்கவாறு சாய்த்து வைத்துப் பூசைகள் நிகழ்த்துதல் ஜலாதிவாசம் என்று சொல்லப்படும்.

4. நிலத்தில் நெல்லைக் கொட்டிப் பரப்பி, அதன் மீது சமுக்காளம் விரித்து, மேலும் பட்டு மெத்தையும் தலையணையும் வைத்து பிம்பத்தை அதன் மீது சயனித்திருக்கச் செய்தல். இது சயனாதிவாசம் என்று சொல்லப்படும்.

அதன் பிறகே கர்பக்கிருஹத்துக்குள் பீடத்தையும், படிமத்தையும், எடுத்துச் சென்று பீடஸ்தாபனம், ரத்னநியாசம், பிம்பஸ்தாபனம், அஷ்ட பந்தனம், நயனோன்மீலனம் ஆகிய பணிகளை நடத்துவது நடைமுறை வழக்கு ஆகும்.

பரிவாரப் படிமங்களுக்கு இத்தகைய விசேட நிகழ்ச்சிகளை நடைமுறையில் கொள்வதில்லை. ஆனால் ரத்னநியாசம், ஜடிபந்தனம், கண் திறத்தல் ஆகிய மூன்று நிகழ்ச்சிகள் எப்பொழுதும் எல்லாப் படிமங்களுக்கும் உண்டு என்பதை நினைவிற் கொள்ள வேண்டும.

### வைணவ மரபில் கண் திறத்தல்

வைணவ மரபில் படிமங்களின் கண் திறக்கும் முறையில் ஒரு சிறு மாற்றமுள்ளது. அதனையும் சிற்பிகள் தெரிந்து கொள்ளுதல் வேண்டும.

கல், மரம், செம்பு, ஆகிய பொருள்களினால் செய்யப்பட்ட படிமங்களுக்குக் கண் திறப்பதைக் கோவிலில் செய்யாமல், சிற்பியின் தொழிற்கூடத்திலேயே சிற்பியினால் முறைப்படி திறக்கச் செய்து, பிறகு கோவிலுக்கு எடுத்து வந்து பூஜகரும் ஒரு முறை கண் திறப்பார். ஆனால் கர்பக்கிருஹத்திற்குள் கடு சர்க்கரையால் அல்லது சுதையால் செய்யப்படும் படிமங்களுக்கும், சுவரில் தீட்டிய வண்ண ஓவியங்களுக்கும் கண் திறத்தல், கோவிலுக்கு உள்ளேயே நிகழ்த்தப்படும். இங்கும் சிற்பி திறந்தபின் பூஜகரும் ஒரு முறை திறப்பது வழக்கு. சிற்பி செய்வது மந்திரமில்லாச் செயல் முறையென்றும், பூஜகர் செய்வது மந்திரத்தோடு இணைந்த சடங்கு முறையென்றும் கொள்ளுதல் வேண்டும்.

### ஜடிபந்தன வகைகள்

பீடமும், பிம்பமும் சேரும் பொருத்துவாயில் அஷ்டபந்தனத்திற்கு மாற்றாக சுவர்ண பந்தனம், ஏகபந்தனம், பஞ்சபந்தனம் என்று சொல்லப்படும் ஒரு சில சாந்து வகைகளை உபயோகிக்கலாம் என்று ஆகமங்கள் கூறும். அவற்றை முதலில் தெரிந்து கொண்டு இறுதியாக அஷ்டபந்தனம் செய்யும் முறையை விரிவாகக் காண்போம்.

### சுவர்ணபந்தனம்

படிமம், பீடம் ஆகியவற்றின் பொருத்து வாயில் தங்கத்தால் சடைந்து உறுதி செய்வது சுவர்ண பந்தனம் எனப்படும். சுவர்ணத்துக்கு மாறாக வெள்ளி, ஈயம் ஆகிய உலோகங்களையும் உபயோகிக்கலாம்.

தங்கத்தைக் குவையில் வைத்து உருக்கி அத்திரவத்தை பீடம் படிமம் ஆகியவற்றின் இடுக்குகளில் ஊற்றிப் பாயச் செய்து, பொருத்துவாயில்-விரலுக்கு மோதிரம் அணிவித்தாற் போல-வளையமாக அமைத்து, நன்கு கெட்டிப்படுத்துதல் இதற்குரிய முறையாம். இம்முறை உஷ்ண பந்தனம் என்று சொல்லப்படும்.

உலோகத்தை மேற்கண்டவாறு உருக்கி அப்பொருளை மனையில் வைத்து அடித்து மிக மெல்லிய ரேக்குத் தகடுகளாக்கி பீடத்தின் இடைவெளிகளில் திணித்து குந்தன வேலைபோல நன்றாகச் செலுத்திக் கெட்டிபடுத்துவதும் உண்டு. இது சீத பந்தனம் என்று சொல்லப்படும். மற்ற உலோகங்களையும் இங்ஙனமே செய்தல் வேண்டும். சிவலிங்கத்திற்குச் சுவர்ண பந்தனம் மிகச் சிறந்ததாம்.

சிற்பிகளால் செய்தமைக்கப்படும் படிமங்களுக்கு உஷ்ணபந்தனமும் சீத பந்தனமும் பொருந்தும். ஆனால் தானாக வெளிப்பட்ட ஸ்வயம் வியக்த மூர்த்தங்களுககும், மகரிஷிகளால் ஸ்தாபிக்கப்பட்டதும். புராதனமானதுமான பிம்பங்களுக்கு சீதபந்தமே சாலும். உஷ்ண பந்தத்தை அறவே நீக்குதல் வேண்டும். இது நூறு ஆண்டுக்கு உறுதியுடன் இருக்கும். அதன் பின் மீண்டும் இங்ஙனமே செய்திட வேண்டும். வெள்ளி 50 ஆண்டுகளுக்கும், ஈயம் 25 ஆண்டுகளுக்கும் இருக்கும். இவை ஒவ்வொன்றின் ஆயுள் ஆகும்.

### ஏகபந்தனம்

ஒரு பாகம் குந்துருக்கம் (வெள்ளை குங்கிலியம்) அதில் பாதி எண்ணெய் ஆக இவ்விரண்டையும் சேர்த்து அடுப்பில் காய்ச்சி அதனைச் சாந்தாக உபயோகித்தல் ஏகபந்தனம் என்று சொல்லப்படும்.

குந்துருக்கத்துடன் நீர்விட்டுப் பிசைந்து பிறகு எண்ணெய் விட்டுப் பிசைந்து உபயோகித்தலும் ஒரு முறையாகும். பாலாலய பிம்பங்களை ஸ்பாதனம் செய்வதற்கு இஃது உபயோமாகிறது. இதன் ஆயுள் ஒரு வருடம்.

### திரிபந்தனம்

சுக்கான்பொடி, குந்துருக்கம், வெண்ணெய் இம் மூன்றும் சேர்ந்த சாந்து திரிபந்தனமாகும்.

சுக்கான்பொடி 2 பாகமும், குந்துருக்கம் 3 பாகமும், வெண்ணெய் 2 பாகமும் சேர்ந்த கலவையை பாத்திரத்திலிட்டு நெருப்படுப்பில் வைத்துக் காய்ச்சி உபயோகித்தல் ஒரு முறை. வெண்ணெய்க்குப் பதிலாக எண்ணெயை உபயோகிக்கலாம். மேற்கண்ட கலவையை காய்ச்சாமல் தூளாக்கிப் பிசைந்து வெண்ணெய் சேர்த்து இடித்து மெழுகு போல் ஆக்கியும் பந்தனம் செய்யலாம். இப்பந்தனத்தின் ஆயுள் மூன்று ஆண்டுகள்.

சுக்கான் பொடியுடன் இளகிக் கசிந்த நாட்டு வெல்லமும், முதிர்ந்து கனிந்த பேயன் வாழைப்பழமும் சேர்த்துப் பிசைந்து திருபந்தனச் சாந்து தயாரித்தல் பெரிதும் வழக்கத்திலுள்ளது. பீடத்தில் ரத்னநியாசம் செய்தபின், பீடத்தின் பள்ளத்தைச் சுற்றிலும் இச்சாந்தையே பூசி அக்குழியில் படிமத்தின் ஜடியை இறக்கிப் பொருத்துவாயில் அஷ்டபந்தனம் செய்வது வழக்கு. தளத்தில் பீடம் நிலைபெறுவதற்கு இச்சாந்தை உபயோகிப்பது பெரு வழக்காகும்.

### பஞ்சபந்தனம்

சுக்கான்பொடி. கொம்பரக்கு, குந்துருக்கம், கஷாயம், வெண்ணெய் அல்லது எண்ணெய் சேர்ந்த கலைவையே பஞ்சபந்தனம் எனப்படும். இச்சாந்தில் குந்துருக்கம் 2 பாகமும், சுக்கான் பொடி 1 பாகமும், (கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இம்மூன்றாலான) கஷாயம் 1 பாகமும், கொம்பரக்கு முக்கால் பாகமும், வெண்ணெய் அல்லது எண்ணெய் 1 பாகமும் சேரும். இவ்வைந்தையும் சேர்த்துக் காய்ச்சியும். காய்ச்சாமலும் உபயோகிக்கலாம். காய்ச்சாத சாந்தை உரலிலிட்டு வெண்ணெயும் சேர்த்து நன்கு இடித்து மெழுகு போல் ஆனபின் ஜடியில் சாத்த வேண்டும். இதன் ஆயுள் ஆறு ஆண்டுகள்.

## அஷ்ட பந்தனம்

அஷ்டபந்தனம் என்பது எட்டுவிதப் பொருள்கள் சேர்ந்த ஒருவகைச் சாந்து ஆகும். இதனை உரலிலிட்டு உலக்கையால் இடிக்கும் நேரத்தில் இடித்தலால் விளைந்த சூட்டினால் இக்கலவை இளகிவிடும். ஆனால் இது சிறிது நேரத்திற்கெல்லாம் கல்நிகர் கெட்டித் தன்மை பெறும். இஃது உறுதி மிக்கது. படிமங்களை ஜடிபந்தனம் செய்ய பெருமளவு வழக்கில் உள்ளது. இதில் சேரும் எட்டுப் பொருள்களும் அளவுகளும் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| கல்காவிப்பொடி | - | 7½ தோலா |
| சுக்கான் பொடி | - | 25½ தோலா |
| குங்கிலியம் | - | 9 தோலா |
| செம்பஞ்சு | - | 1 தோலா |
| கொம்பரக்கு | - | 3¾ தோலா |
| ஜாதிலிங்கம் | - | 7½ தோலா |
| வெள்ளை மெழுகு | - | 3 ¾ தோலா |
| எருமை வெண்ணெய் | - | 7½ + 7½ |

(180 வது பக்கத்தில் உள்ள அஷ்டபந்தனம் வேறுபட்டதாம்).

## தயாரிக்கும் முறை

சுக்கான் கல்லைக் கொண்டு வந்து அதில் ஒரு கையளவு எடுத்துப் பொடித்து இருப்புச் சட்டியில் இட்டு நெருப்பில் வைத்து வறுக்க வேண்டும். உப்பைப் போல் வெடிக்குமானால் அது வெடிசுக்கான், அஃது ஆகாது. வெடிக்காமல் மணல் போல் கிடக்குமானால் அதுவே பொருத்தமாகும். கொம்பரக்கு என்பது அவலரக்கல்ல, மரப்பட்டையுடன் ஒட்டிக் கொண்டிருக்கும் செம்பஞ்சு என்பது சிவப்புச் சாய மேற்றிய பஞ்சு அல்ல. இளம் காவி நிறத்தில் உள்ளது. "கோக்தி" என்று கூறுவர். பீஹார், ஆந்திரா பகுதியில் மிகுதி. கதர்க் கடைகளில் ஏற்பாடு செய்து பெறலாம். வெள்ளை மெழுகு என்பது தேன் சத்து முற்றிலும் அற்றுவிட்ட தேன் மெழுகுதான், மெழுகுவர்த்திக்குரிய செயற்கை மெழுகல்ல, மற்றவற்றையும் பார்த்துப் போலிப்பண்டமாயில்லாமல் நல்லவையாய் வாங்கி எல்லாவற்றையும் சுத்தம் செய்து தூசு, துப்பட்டை இல்லாமல் வைத்துக் கொள்ள வேண்டும்.

வெண்ணெயில் ஈரம் இல்லாமல் செய்து கொள்ள வேண்டும். வெண்ணெயில் உள்ள நீர்ச்சத்தை அகற்ற ஒரு நல்ல முறையுண்டு. புதுப்பானையை தேவைக்கேற்ற அளவு வாங்கி நன்றாகக் கழுவி வெயிலில் காயவைத்து ஈரம் போனபின் ஒரு இரவு நிழலில் வைத்துவிட்டு மறுநாட் காலை அவற்றின் மீது வெண்ணையை அரை அங்குல கனம் வெளிப்புறம் முழுவதும் அப்பி வெய்யில் படாத நல்ல நிழல் உள்ள அறையில் இரண்டு மூன்று நாள் வைத்திருந்தால் வெண்ணெயில் உள்ள ஈரப்பசை முழுவதையும் புதுமண் பானை உறிஞ்சிவிடும். அதன் பிறகு அந்த வெண்ணையைப் பயன்படுத்தலாம்.

மேலே கொடுத்துள்ள அளவுப்படி ஏழு சரக்கையும் தராசு கொண்டு நிறுத்து 20 கூறு செய்து வைத்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு கூறும் 58 தோலா எடையுள்ளதாக இருக்கும். இவற்றைத் தனித்தனியே 20 மண்சட்டியில் அல்லது பிளாஸ்டிக் டப்பாவில் வைத்துக் கொள்ளலாம்.

இரண்டு மர உரலை இரு புறமும் மூங்கில் கழி பொருத்தி நன்றாக இருக்கிக் கயிற்றால் கட்டி வைத்துக் கொள்ள வேண்டும். உரலுக்கு இருவராக இரு உரலுக்கும் நான்கு பேர் உலக்கை போட வேண்டும். ஒவ்வொரு உரலிலும் ஒவ்வொரு கூறு மருந்துச் சரக்கைக் கொட்டி கொஞ்சம் கொஞ்சமாக வெண்ணெயைச் சேர்த்து நன்றாகக் குழைந்து ஒன்றாகும்படி சுமார் முப்பது நிமிடங்கள் இடிக்க வேண்டும். இப்படி ஒரு நாளைக்கு இருபது உருண்டை இடிக்கலாம். இங்ஙனம் இடித்தவற்றை உருண்டையாக உருட்டி அதன் தலையில் ஒரு புள்ளியிட்டு வைக்க வேண்டும். எவ்வளவு உருண்டை தேவையோ அவ்வளவு உருண்டைகட்கு கூறு செய்து அவ்வளவு உருண்டைகளையும் இடித்துச் சேகரித்து ஒரு அறையில் வரிசையாக அடுக்கி வைத்துக் கொள்ள வேண்டும். முதலிடி முடிந்து பின் மறு இடி துவங்க வேண்டும். ஒவ்வொரு இடி முடிந்து எடுத்து உருட்டிய உருண்டைகட்கும் தலையில் இரண்டு புள்ளியிட்டு வைக்க வேண்டும். இப்படியே எட்டுமுறை ஒவ்வொரு உருண்டையையும் இடிக்க வேண்டும். எட்டாம் முறை இடித்து முடித்த உருண்டை ஒவ்வொன்றும் தலையில் 8 புள்ளி பெற்றிருக்கும்.

இந்த உருண்டைகள் ஆறு மாதம் வரை பதம் கெடாமல் இருக்கும். மூர்த்திகட்கு மருந்து சார்த்தும்பொழுது ஒரு முறை நன்றாக இடித்து கயிறு போல் உருட்டிச் சூடு ஆறுமுன் சார்த்த வேண்டும். மருந்து சார்த்து முன் மருந்து படியும் பீடப்பகுதியிலும். மூர்த்தியின் அடிப்பகுதியிலும் வெண்ணெயை நன்றாகத் தேய்த்துச் சிறிது நேரம் சென்றபின் நல்ல துணியால் துடைத்து வெண்ணெய் மிக்கிருப்பது முழுவதையும் அகற்றிவிட வேண்டும்.

அஷ்டபந்தனம் என்ற சொல் எட்டு வகையான பொருள்களாலான கலவை அல்லது சாந்து என்ற

பொருளிலேயே பெரும்பாலும் வழங்கி வருகிறது. என்றாலும், அஷ்டபந்தனம் என்ற இச்சொல் வேறு ஒரு பொருளில் வழங்கி வருதலையும் சிற்பிகள் அறிந்து கொள்ளுதல் வேண்டும், அஃது யாதெனில், படிமத்தைச் சுற்றி எட்டுத் திசைகளிலும் பந்தனம் செய்வதற்குரிய பொருள் இஃதென்பதாம். எனவேதான் நூலாசிரியர் எட்டுத் திசைகளைக் குறிப்பிட்டுச் சொல்லி அத்திசைகளில் பந்தனம் அமைய வேண்டுமென்று கூறுகின்றனர். அதனை வலியுறுத்தவே கீழ்கண்ட எச்சரிக்கையினைச் செய்கின்றனர். எட்டுத் திசைகளில் ஏதாவது ஒன்றில் இப் பந்தனம் அமையாவிடில் என்ன விளையும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றனர். கிழக்கில் பந்தனம் இல்லையேல் உயிரினங்கள் அழியும்; அக்னியில் இல்லையேல் பஞ்சம் ஏற்படும்; தெற்கில் இல்லையேல் அம்மை பரவும்; நைருதியில் இல்லையேல் பசுக்கள் நலிவுறும்; மேற்கில் இன்றேல் பொதுமக்கள் துன்புறுவர்; வாயுவில் இல்லையேல் நாடும் நாடாள்பவரும்கெடுவர்; வடக்கில் இல்லாவிட்டால் பயிற்பச்சை அருகும்; ஈசானத்தில் இல்லாவிட்டால் வாஸ்து நாசம் ஏற்படும் என்று நூல் கூறுகின்றது. எனவே அஷ்டபந்தனம் என்ற சொல் இரு பொருள்களில் உபயோகிக்கப்படும் சொல் என்பது இதன் மூலம் உறுதியாகிறதல்லவா? எனவே அஷ்டபந்தனத்தை எட்டுத் திசைகளிலும் நன்கு அமைத்து உறுதி பெறச் செய்ய வேண்டும் என்பதைச் சிற்பிகள் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

### கர்ப்பக்கிருஹ பதவிந்யாசம் (சைவ மரபு)

திருக்கோயில் அமையும் இடத்தை *வாஸ்து* என்று நூல்கள் கூறும். இலக்கண விதிகளுக்கு இணங்கக் கொள்ளப்படும் வாஸ்துவானது பீஜாக்ஷரங்கள் பொறிக்கப்பட்ட ஒரு இயந்திரத்துக்கு நிகரானது. அந்த இயந்திரத்தின் பிந்து ஸ்தானமே கர்ப்பக்கிருஹம் அமையும் நடு இடமாகும். எனவே அது மூலஸ்தானம் என்று அழைக்கப்படும். அது மட்டுமல்ல; கர்ப்பக்கிருஹத்தையே இயந்திர ஸ்வரூபமாகக் கொண்டு அதன் பிந்து ஸ்தானத்தில் நாதம்—வடிவமான சிவலிங்கத்தை ஸ்தாபிக்கிறோம். ஒரு சில பிம்பங்களையும் இவ் விடத்தில் வைப்பதுண்டு. மேலும் இவ்விடத்தை விடுத்து, கர்ப்பக்கிருஹத்திற்குள் எவ்வெவ் விடங்களில் எந்தெந்த வழிபடு படிமங்களை ஸ்தாபித்தல் வேண்டுமென்பதைக் கீழ்க்கண்ட முறையால் காண்போம்.

பிம்ப ஸ்தாபனம் செய்யப்படவேண்டிய கர்ப்பக்கிருஹத்தின் உட்பகுதியில் தளம் அமைக்கப்பட்டிருக்குமல்லவா? இதற்குத் தள வரிசை என்று பெயர். இதன் மீது கிழக்கு மேற்குத் திசையைக் காட்டும் மைய ரேகையும், தெற்கு வடக்குத் திசையைக் காட்டும் மைய ரேகையும், காவி தோய்ந்த நூலால் அடித்து கொள்ளப்படும். கிழக்கு-மேற்குத் திசையைக் காட்டும் மைய நூலுக்கு *பிரும்ம சூத்திரம்* என்றும். தெற்கு வடக்கைக் காட்டும் மை. நூலுக்கு *சோமசூத்திரம்* என்றும் பெயர். அவற்றை முறையே கிழமேல் நூலென்றும், தென்வடல் நூலென்றும் சொல்வது தொழில் வழக்கு.

அங்ஙனம் திசைகளை உறுதி செய்து கொண்ட பின்னர் கர்ப்பக் கிருஹத் தளவரிசை மீது, கிழக்கு மேற்கில் 21 நூல்களை சம இடைவெளி கொண்டதாய் அடித்தல் வேண்டும். அங்ஙனமே தெற்கு—வடக்கிலும் 21 நூல்களை அடித்தல் வேண்டும். கடைசி நூல் சுவர் ஒழுங்கிலேயே விழும். இப்பொழுது 400 சதுரங்கள் தோன்றியிருப்பதைக் காணலாம். கர்ப்பக்கிருஹம் சம சதுர வடிவமாயின் கட்டங்களும் சம சதுரமாகவே அமையும். நீண்ட சதுரமாயின் கட்டங்களும் நீண்ட சதுரமாகவே அமையும். அத்தகைய கட்டங்கள் ஒவ்வொன்றிற்கும் பதம் என்று பெயர். அங்ஙனம் கர்ப்பக்கிருஹத்தை பல பதங்களாக வகுத்துக் கொள்ளும் முறை கர்ப்பக் கிருஹ பத விந்யாசம் என்று சொல்லப்படும். (இதன் விரிவைக் கட்டடக் கலை நூலில் காண்க).

இத்தருணத்தில் விளக்கத்திற்காக, கர்ப்பகிருஹம் கிழக்குப் பார்த்த வாயிலை உடையதாகக் கொள்வோம். அந்நோக்குடைய கர்ப்பக் கிருஹத்தில் தளவரிசையானது தென்வடல் மைய நூலால் இரண்டு சம பாகங்களாகப் பிரிக்கப்படும் அல்லவா? இவ்விரண்டு பாகங்களில் வாயிலுக்கு அருகில் உள்ள முற்பாதியை பிம்பஸ்தாபனத்திற்கு எடுத்துக் கொள்வதில்லை. எஞ்சியுள்ள பின்பகுதியையே பிம்பஸ்தாபனத்திற்கு உரியதாகக் கொள்ளப்படுகிறது.

கர்ப்பக்கிருஹ பிரும்ம சூத்திரமும், சோம சூத்திரமும், வெட்டிக் கொள்ளும் இடம் கர்ப்பக் கிருஹத்தின் மையப்புள்ளி அல்லவா? அதுவே *பிரம்மஸ்தானம்* என்று சொல்லப்படும். இம்மையத்திலேயே லிங்கமும், ஆவுடையாரும் சேர்ந்த நிஷ்களத்திருமேனியை ஸ்தாபித்தல் வேண்டும்.

மேலும், பின் சுவரையொட்டியமைந்த பதத்தை முதற்பதம் என்று கொண்டு அதிலிருந்து முன்னோக்கி ஒன்பதாவது பதத்தில் பிரம்மனையும்

எட்டாவது பதத்தில் – விஷ்ணுவையும்

ஏழாவது பதத்தில் – சுப்ரமணியனையும்

ஆறாவது பதத்தில் – சரஸ்வதியையும்

| | | |
|---|---|---|
| ஐந்தாவது பதத்தில்[4] | – | சூரியனையும் |
| நான்காவது பதத்தில் | – | விநாயகனையும் |
| மூன்றாவது பதத்தில் | – | பைரவனையும் |
| இரண்டாவது பதத்தில் | – | தேவியர் படிமங்களை (சாமுண்டி முதலிய தாமஸப் பிம்பங்களையும்) |
| (சுவரையொட்டிய) | – | முதலாவது பதத்தில் கணங்களை (சிறு தேவதைகளையும்) |

ஸ்தாபித்தல் முறையாம்.

### கர்ப்பக்கிருஹ பதவிந்யாசத்தில் பேரங்களின் கமனம்

திருக்கோயில்களை நிர்மாணம் செய்யும் பொழுது திசை பார்த்து, ஈசான்ய விலக்கம் கொண்டு மனையிடமாகிற வாஸ்துவிற்குத் தக்க பார்வையைச் செய்வது போல, கர்ப்பக்கிருஹத்தில் பிம்பங்களை ஸ்தாபனம் செய்யும் பொழுது, அதன் கிழமேல் மைய நூலையும், தென் வடல் மைய நூலையும் கர்ப்பக்கிருஹ தளத்தின் மேல் வரைந்து கொள்கின்றோம். பொதுவாக ஸ்தாபனம் செய்ய வேண்டிய படிமத்தின் பூர்வ சூத்திரமும் திருவாயிலுக்கு நேராக அடித்த மைய நூலும், ஒத்திருத்தல் வேண்டுமென்றும் முன்பு கண்டோம். ஆனால், இவ்வகை ஸ்தாபனத்தில் மேலுமொரு செய்முறை நுட்பம் இருப்பதை சிற்பிகள் தெரிந்து கொள்வது நன்று.

கர்ப்பக்கிருஹ மைய நூலிலிருந்து பிம்பத்தின் மைய நூல் சிறிது வலது பக்கத்தில் இணையாகத் தள்ளியிருக்க வேண்டும். இதனால் பிம்பம் இடம் பெயர்கிறதல்லவா? பிம்பத்தின் இத்தகைய இடப் பெயர்ச்சிக்கு *கமனம்* என்று பெயர். இது எங்ஙனம் கொள்ளப்படுகிறது என்பதை இனி நோக்குவோம்.

கர்ப்பக்கிருஹத் திருவாயிலின் உள் அகலத்தை 63 சம கூறுகள் செய்து, அதில் ஒரு கூறளவை *வலது பக்கத்தில்* கமனமாகக் கொள்ள வேண்டும். இது கிழக்கு அல்லது மேற்குப் பார்த்த படிமத்திற்குரிய விதியாகும். அங்ஙனமே, தெற்கு, வடக்குப் பார்த்த படிமங்களின் மைய நூலை, அதே அளவினதாக இடது பக்கத்தில் கமனம் கொள்ளுதல் வேண்டும்.

சிவலிங்கத்திற்கு கமனம் கொள்வது தமிழக மரபு அன்று. ஆனால் அதற்கு மாறாக, அரையவை அல்லது ஒருயவை அளவு நேர்கிழக்கிலிருந்து வடக்கை நோக்கி விலக்கம் வைத்தல் மரபாகும். இதற்கு *ஈசானிய விலக்கம்* என்றும் *ஈசானியப் பார்வை* என்றும் பெயர். கமனம் கொண்டிடாத பிம்பங்களுக்கும் ஈசானிப் பார்வை ஏற்படுத்துவது தமிழக மரபாகும். தெற்கு அல்லது மேற்குப் பார்த்த பிம்பம் *கன்னிப் பார்வையுடையதாகவும்* இருத்தல் வேண்டும். இந்த அமைதி ஊருக்கும், மக்களுக்கும் செழிப்பையும் செல்வத்தையும் வளர்க்கும் என்பர் பெரியோர்.

கமனம் என்பது இடப் பெயர்ச்சி. விலக்கம் என்பது இடப்பெயர்ச்சியோ இடமாற்றமோ அன்று. அது திசை திருப்பமே ஆகும். இரண்டையும் ஒரே பிம்பத்திற்குச் செய்தல் கூடாது. ஏதாவது ஒன்றையே கொள்ளுதல் வேண்டும்.

### வைணவ மரபு

பதவிந்யாச இலக்கண முறையிலேயே வைணவ மரபிலும் பிம்பஸ்தாபனம் கொள்ளப்படுகிறது. இம்மரபில் ஒரு சில சிறப்பான முறைகள் உள்ளன.

முதலில் கர்ப்பக்கிருஹத்தின் பிரும்ம சூத்திரத்தையும் சோம சூத்திரத்தையும் கர்ப்பக்கிருஹத் தள மட்டத்தின் மேல் காவி நூல் கொண்டு அடித்துக் கொள்ள வேண்டும்.

பிறகு கர்ப்பக்கிருஹ உள் அளவை 49, 64, 81 அல்லது 256 பதங்களாக வகுத்துக் கொள்ள வேண்டும். இவைகளில் எது எங்குப் பொருத்தமோ அங்கு அதனைக் கொள்ளுதல் வேண்டும்.

நாற்பத்தொன்பது பதங்களைக் கொண்ட அமைப்பின் நடுவில் அமையும் ஒரு பதத்தை *பிரம்ம பதம்* என்றும் இப்பதத்தைச் சூழ்ந்த கோடு அல்லது எல்லை பிரும்ம சூத்திரம் என்றும் சொல்லப்படும். பிரம்ம பதத்தைச் சுற்றியுள்ள எட்டுப்பதங்களைத் *தெய்விகபதம்* என்றும் அதன் எல்லைக்கோடு தெய்விக சூத்திரம் என்றும் சொல்லப்படும். அங்ஙனமே தெய்விக பதத்தைச் சூழ்ந்துள்ள பதினாறு பதங்கள் *மானுஷபதம்* என்றும் அவற்றை உள்ளடக்கிய எல்லையை மானுஷ சூத்திரம் என்றும், சுவரையொட்டி அமையும் 24 பதங்கள் *பைசாச பதம்* என்றும் இதன் எல்லைக்கோடு பைசாச சூத்திரம் என்றும் சொல்லப்படும். இச் சூத்திரங்களைத் தடித்த நூலாலும் பிற கோடுகளை மெல்லிய நூலாலும் கர்ப்பக்கிருஹத் தளத்தின் மேல் புலப்படுத்திக்கொள்ளுதல் வேண்டும்.

மேற் குறிப்பிட்ட பதங்கள் பிரம்ம பதத்தைச் சுற்றி சூழ்ந்து அமைவதால் இம்முறையினை *சூழ்ந்த பதம்* என்றே குறிப்பிடுவது தொழில் வழக்கு, பிரம்ம பதமே பிரம்மஸதானம் என்று சொல்லப்படும். கர்ப்பக்கிருஹத்தின் திசை காட்டும் மைய நூல்கள் சந்திக்கும் இடமும் இதுவே.

அறுபத்து நான்கு பதங்களாகக் கர்ப்பக்கிருஹ உள் இடத்தை வகுத்துக் கொண்டால் நடுவில் தோன்றும் நான்கு பதங்கள் பிரம்ம பதமாகும். அதைச் சுற்றி அமையும் பன்னிரண்டு பதங்கள் தெய்விக பதம் ஆகும். தெய்விகத்தைச் சுற்றியுள்ள இருபது பதங்கள் மானுஷ பதம் ஆகும். அதற்கு வெளியே சுற்றி வரும் இருபத்தெட்டுப் பதங்கள் பைசாச பதம் ஆகும். முன் சொன்னவாறே ஒவ்வொரு பதத்தின் எல்லைக்கோடுகளை அந்தந்தப் பதத்தின் சூத்திரமாகக் கொள்ள வேண்டும். எண்பத்தொரு பதங்கள் கொள்ளின் பைசாச பதத்தில் முப்பத்து இரண்டு பதங்களும் மானுஷ பதத்தில் 24 பதங்களும், தெய்விக பதத்தில் பதினாறு பதங்களும், பிரம்ம பதத்தில் ஒன்பது பதங்களும் அமையும்.

இருநூற்று ஐம்பத்தாறு பதங்கள் கொண்டால் பிரம்ம பதினாறு; தெய்விக பதம் எண்பத்து நான்கு; மானுஷ பதம் தொண்ணூற்று ஆறு; பைசாச பதம் அறுபதி; இவ்வாறு கொள்ளுதல் வேண்டும்.

49 பதங்கள் கொண்ட பதத்திற்கு *ஸ்தண்டிலம்* என்றும், 64 பதங்கள் கொண்ட அமைப்பிற்கு *மண்டூகம்* என்றும், 81 பதங்கள் கொண்ட அமைப்பிற்கு *பரமசாயிகம்* என்றும், 256 பதங்கள் கொண்ட அமைப்பிற்கு *திரியுதம்* என்றும் பெயர்.

இனி ஒவ்வொரு பதமுறையில் எங்ஙனம் பிம்பங்களை ஸ்தாபனம் செய்தல் வேண்டும் என்பதை நோக்குவோம்.

49 பதங்கள் கொண்ட ஸ்தண்டில பத அமைப்பில் பிரம்மப் பதத்தில் மரத்தால் செய்த நாற்காலியை வைத்தல் வேண்டும். இதன் மீது செப்புத் திருமேனிகளை வைத்து ஆராதிப்பர். இப் பீடத்திற்கு *பிரம்ம பீடம்* என்றும், *பூஜா பீடம்* என்றும், *அர்ச்சனா* பீடம் என்றும் பல பெயர்கள் உண்டு. வாயிலுக்கு நடுவே செல்லும் பிரம்ம சூத்திரம் என்ற மைய நூலில் சோமசூத்திரத்திற்கு அடுத்து வரும் தெய்விக பதத்தில் விஷ்ணுவின் பீடத்தை வைத்தல் வேண்டும். அப் பீடத்திற்கு நீளமும் அகலமும் ஒரு பதம் ஆகும். பீடத்தின் உயரம் அரைப்பத அளவும் அதற்குக் கீழே உள்ள உப பீடத்தின் உயரம் கால்பத அளவும் இருத்தல் வேண்டும். மூல பிம்பத்தின் வலது பக்கத்தில் ஸ்ரீதேவியும், இடது பக்கத்தில் பூ தேவியும் வைக்கப்பட வேண்டும். இச் சக்திகளுடையப் பீடங்கள் முக்கால் பத அளவு சதுரமும் அதில் பாதி உயரமும் இருத்தல் வேண்டும்.

மூல பிம்பம் *ஏகவீர பேரமானால்* அல்லது *துருவார்ச்சையானால்* அதனைப் *பிரம்மபதத்தில்* ஸ்தாபித்தல் வேண்டும். பிரம்ம ஸ்தானத்தில் வழிபடப்படும் மூர்த்தம் சாந்தியை நல்கும். தெய்விகப் பதத்தில் வளத்தையும், மானுஷ பதத்தில் ஜெயத்தையும், பைசாச பதத்தில் சம்ஹாரத்தையும் செய்ய வல்லதாம். இவ்விதி நின்ற கோலப் படிமங்களுக்கு உரியது என்பதைச் சிற்பிகள் நினைவிற் கொள்ளுதல் வேண்டும்.

அமர்ந்த கோலப் படிமங்களுக்குக் கொள்ளும் பீடம் தெய்விக பதத்தில் கால் பகுதியும், மானுஷ பதம் முழுமையும், பைசாச பதத்தில் பாதியும் ஆக ஒன்றே முக்கால் பதம் பரவி அமையும். இப் பீடத்தின் அகலமும் ஒன்றே முக்கால் பதமே. நீளமோ இரண்டரைப் பதமாகும். தேவிகளின் பீடங்களை இரு பக்கங்களிலும் கொள்ள வேண்டும். இங்ஙனம் அமர்ந்த கோலப் படிமங்களை ஸ்தாபித்தல் வேண்டும்.

சயனக் கோலப் படிமங்களை ஸ்தாபிப்பதிலும் அவற்றின் அளவுகொள் முறையிலும் மிக அழகிய விதி ஒன்று உளது. அதனை இனிக் காண்போம்.

சயனப் படிமத்திற்குத் தெய்விக மானுஷ பதங்களின் நீளமே சயனப் படிம நீளம் ஆகும். அப்படிமத்தின் அகலமும் அவ்விரண்டு பதங்களின் அகலமேயாகும். பைசாச பதத்தின் முன் பாதியில் தேவிகளை அமர்த்துதல் வேண்டும். சயனப் படிமத்தின் பூர்வ சூத்திரம் மானுஷ பதத்தின் முன் பாதியிலேயே அடங்கி விட வேண்டும். கீழ் மேல் மைய நூல் ஆகிய பிரம்ம சூத்திரத்திற்கு வலது பக்கத்தில் ஒரு விரல் தள்ளி, சயன படிமத்தின் நாபி இருக்குமாறு சயனக் கோலத்தை அமைத்துக் கொள்ள வேண்டும். சுதையில் செய்தாலும் கல்லால் செய்தாலும் இவ்விதியைப் பின் பற்றியே செய்தல் வேண்டும்.

அறுபத்து நான்கு பதங்கள் கொண்ட அமைப்பில் பிரம்ம பதத்தில் அரச்சனா பீடத்தை அமைத்தல் வேண்டும். தெய்விக பதத்தில் ஸ்தானக மூர்த்தத்தை ஸ்தாபித்தல் வேண்டும்.

இருநூற்று ஐம்பத்து ஆறு பதங்கள் கொண்ட அமைப்பில் பிரம்ம பதத்தில் கௌதுக பேரத்தை வைத்தல் வேண்டும். அது அமரும் பிரம்ம பீடத்தின் அகலமும் மூன்று பத அளவு இருத்தல் வேண்டும். அதன் நீளம் நான்கு பதமாம். இப் பீடம் நீண்ட சதுரமாகவோ, நீண்ட வட்டமாகவோ இருக்கலாம். இத்தகைய பத அமைப்பில் நின்ற, அமர்ந்த, கிடந்த கோலத்திருமேனிகளை ஸ்தாபனம் செய்வதில்

ஒரு சில நுணுக்கங்கள் உள்ளன. அவற்றையும் சிற்பிகள் தெரிந்து கொண்டு செய்தல் வேண்டுமென்று கருதி அவற்றை இங்கு விவரிக்கின்றோம்.

ஸ்தானக படிமத்தின் அகலமும் நீளமும் மூன்று பதம் இருத்தல் வேண்டும். கர்ப்பக் கிருஹ வாயில் உள் அகலத்தின் 6-ல் 1 பங்கு பீடத்தின் உயரமாகும். தேவி பீட அகலம் 2 பதம், அதன் உயரம் விஷ்ணுவின் பீடத்திற்கு ¾ பங்காகும். பிரம்ம சூத்திரத்திற்கு வலத்திலும் இடத்திலும் விஷ்ணுவின் பாதங்கள் அமைய வேண்டும். வாசல் அகலத்தை 126 கூறுகள் செய்து நடுவே 1 கூறளவை வலது பக்கத்தில் விட்டு படிமத்தை இடது பக்கமாக நகர்த்தி அதனை மையமாகக் கொண்டு அமைத்தல் வேண்டும். விஷ்ணுவைச் சேர்ந்த இதரப் படிமங்கள் இந்தப் பொதுமையத்திற்கு இடதுப் பக்கத்திலேயே இருத்தல் வேண்டும். இது ஸ்தானக பிம்பத்தைப் பற்றிய விதியாகும்.

அமர்ந்த கோலப் படிமத்திற்கு விதி பின்வருமாறு:

பிரம்ம ஸ்தானத்திற்கு அடுத்திருக்கும் தெய்விக பதத்தில் முதல் இரண்டு பத அகலம் அப்படிமத்தின் பீட அகலமாகக் கொள்ள வேண்டும். அல்லது அதற்கடுத்த மானுஷ பதத்தில் 2 பதமும் தெய்விக பதத்தில் 1 பதமும் சேர்ந்த மொத்த அகலம் பீடத்தின் அகலமாக இருத்தல் வேண்டும். அதற்குப் பின்னுள்ள பைசாச பதம் வெற்றிடமாகவே இருத்தல் வேண்டும். பீடத்தின் நீளம் 6 பத அளவாகும்.

கிடந்த கோலப் படிமத்தின் நீளம் 12 பத அளவாகும். அதன் அகலம் 4 பதம் ஆகும். படுக்கையின் நீளம் 13 பதங்கள் ஆகும்.

விஷ்ணு பரிவாரங்களை மானுஷ பதத்திலும், கருடனை பைசாச பதத்திலும் வைத்தல் வேண்டும்.

கர்ப்பக்கிருஹம் வட்டவடிமாக இருப்பின் தென்வடலான சோம சூத்திரமும் கீழ் மேலான பிரம்ம சூத்திரமும் வெட்டிக் கொள்ளும் இடமே பிரம்ம ஸ்தானமாகக் கொள்ளப்படும். பிரம்ம ஸ்தானத்தை மையமாகக் கொண்டு எட்டு வட்டங்களை அதற்குள் அமைக்க வேண்டும். அவற்றின் இடைவெளிகள் சமமாக இருத்தல் வேண்டும். கடைசி வட்டத்தை பைசாச பதமாகக் கொள்ள வேண்டும். இதனை 60 பதங்களாகப் பிரித்துக் கொள்ள வேண்டும் அதற்கு உள்ளிருக்கும் வட்டத்தை 52 பதங்களாப் பிரித்துக் கொள்ள வேண்டும். அங்ஙனமே உள் நோக்கிச் சென்று ஒவ்வொரு வட்டத்தையும் முறையே 44, 36, 28, 20, 12 பதங்களாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். கடைசியாக நடுவில் உள்ள வட்டத்தை 4 பதங்களாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். இங்ஙனம் பிரித்தால் பதங்களின் மொத்த எண்ணிக்கை 256 ஆகும். நடுவில் இருக்கும் முதல் வட்டத்தின் 4 பதங்களும் இரண்டாவது வட்டத்தின் 12 பதங்களும் சேர்ந்தமைந்த 16 பதங்கள் பிரம்ம பதத்திற்குள் அடங்கும். மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது வட்டங்களில் அடங்கும் 84 பதங்கள் தெய்விக பதமாகும். ஆறாவது, ஏழாவது வட்டத்தில் அடங்கிய 96 பதங்கள் மானுஷ பதம் என்றும் கடைசி வட்டத்தில் உள்ள 60 பதங்கள் பைசாச பதம் என்றும் கொள்ள வேண்டும். மேற்குறிப்பிட்ட 8 வட்டங்கள் நீண்ட வட்டங்களாக இருப்பினும் இங்ஙனமே வகுத்துக் கொள்ளப்பட வேண்டும். அங்ஙனம் கொண்ட பதங்களில் பிரம்ம பதத்தில் அர்ச்சனா பீடத்தை வைத்தல் வேண்டும். தெய்விக பதத்தில் கௌதுக பிம்பத்திற்கு அகலம் 2 பதங்கள் ஆகும்.

இத்தகைய அமைப்பில் ஸ்தானக, ஆசன, சயனப் படிமங்களுக்கு எங்ஙனம் பதங்களைக் கொள்ளுதல் வேண்டுமென்பதை இனிக் காண்போம். ஸ்தானகப் படிமத்தின் அகலமும் நீளமும் மூன்று பதம் இருத்தல் வேண்டும். கர்ப்பக்கிருஹ வாயிலின் அகலத்தில் 6-ல் 1 பங்கு பீடத்தின் உயரமாகும். தேவி பீட அகலம் 2 பதம். அதன் உயரம் விஷ்ணுவின் பீடத்தில் ¾ பங்காகும். பிரம்ம சூத்திரத்திற்கு வலத்திலும், இடத்திலும் விஷ்ணுவின் பாதங்கள் அமைய வேண்டும். வாசல் அகலத்தை 126 கூறு செய்து, நடுவே 1 கூறளவை வலது பக்கத்தில் விட்டு படிமத்தை இடது பக்கமாக நகர்த்தி அதனை மையமாகக் கொண்டு அமைத்தல் வேண்டும். விஷ்ணுவைச் சேர்ந்த இதரப் படிமங்கள் இந்தப் பொது மையத்திற்கு இடது பக்கத்திலேயே இருத்தல் வேண்டும். இது ஸ்தானக பிம்பத்தைப் பற்றிய விதியாகும்.

அமர்ந்த கோலப் படிமத்திற்கு விதி பின் வருமாறு:

பிரம்ம ஸ்தானத்திற்கு அடுத்திருக்கும் தெய்விக பதத்தின் முதல் இரண்டு பத அகலத்தை அப் படிமத்தின் பீட அகலமாகக் கொள்ள வேண்டும். அல்லது அதற்கடுத்த மானுஷ பதத்தில் 2 பதமும் தெய்விக பதத்தில் 1 பதமும் சேர்ந்த மொத்த அகலம் பீடத்தின் அகலமாக இருத்தல் வேண்டும்.

அதற்குப் பின்னுள்ள பைசாச பதம் வெற்றிடமாகவே இருத்தல் வேண்டும். பீடத்தின் நீளம் 6 பத அளவாகும்.

கிடந்த கோலப் படிமத்தின் நீளம் 12 பத அளவாகும். அதன் அகலம் 4 பதம் ஆகும். படுக்கையின் நீளம் 13 பதங்கள் ஆகும்.

### சைவ வைணவ மரபுகளுக்குப் பொதுவான பதவிந்யாசம்[5]

கர்ப்பக்கிருஹத்திற்குள்ளே, சோம சூத்திரத்திற்கு முன்னுள்ள பத்துப் பதங்களை நீக்கி, பின்னுள்ள 10 பதங்களில் வழிபடு படிமங்களை ஸ்தாபனம் செய்வதில்,சிற்ப நூல்[6] கூறும் பொது விதி பின்வருமாறு:

தெய்விகம், மானுஷம், ஆருஷம், சுயம்பு ஆகிய சிவலிங்கங்களைச் சோம சூத்திரமும், பிரம்ம சூத்திரமும் ஒன்றையொன்று வெட்டிக்கொள்ளு மிடத்தில் ஸ்தாபிக்க வேண்டும். அதாவது, சிவ லிங்கத்தின் மையமும், முன் சொன்ன சூத்திர மையமும் ஒத்திருத்தல் வேண்டும்.

ஒன்பதாவது பதத்தை 2 பாகம் செய்து முதல் பாகத்தில் பிரம்மனைம், 2-வது பாகத்தில் ஹரிஹர மூர்த்தி அல்லது அர்த்தநாரீஸ்வரர் அல்லது கல்யாண சுந்தரர் படிமங்களை ஸ்தாபனம் செய்தல் வேண்டும்.

8-வது பதத்தை 3 பாகம் செய்து முதல் பாகத்தில், தசாவதாரப் படிமங்களையும், 2-வது பாகத்தில், பாஞ்சராத்ர கிருஷ்ணன் படிமங்களையும் 3-வது பாகத்தில் வைகானசப்படிமங்களையும் ஸ்தாபிக்கலாம். இப் பதத்தில் விஷ்ணு சம்பந்தப்பட்ட ஸ்தானக, ஆஸன, சயன பிம்பங்கள் அனைத்தையும் வைக்கலாம்.

7-வது பதத்தை 2 பாகம் செய்து முன் பாகத்தில் ஷண்முகனையும், 2 வது பாகத்தில் கந்தனையும் ஸ்தாபித்தல் வேண்டும்.

தேவிகளுக்குரிய 6-வது பதத்தில் சரஸ்வதி, பாலா, புவனா, லஷ்மி, பூமி, துர்க்கை, காளி ஆகியோர் படிமங்களை ஸ்தாபிக்கலாம்.

5-வது பதத்தில் ஐயனாரை அமர்த்துதல் வேண்டும்.

2-வது பதத்தில் கௌரி, மனோன்மணி ஆகிய பிம்பங்களையும், 1-வது பதத்தில் பௌத்தப் படிமங்களையும் ஸ்தாபனம் செய்தல் வேண்டும்.

1. உத்தரகாரணாகமம்
2. விஸ்வகர்மீயம்
3. பிருகு சம்ஹிதை
4. வாமதேவ பத்ததி ஆசிரியர் ஐந்தாவது பதத்தில் தேவதைகளை வைத்தல் கூடாதென்று கூறுகிறார்.
5. விஸ்வகர்மீயம்
6. விஸ்வகர்மீயம்

